# சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழியே!

(முதலாம் பாகம்)







தி.லெ.சுபாஸ் சந்திர போஸ்

# சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழியே!

(முதலாம் பாகம்)



தி.லெ.சுபாஸ் சந்திர போஸ்

# நூல் குறிப்புகள்


நூலின் பெயர் : சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழியே!

நூலின் தன்மை : மொழி - வரலாறு - பண்பாடு

உரிமை : தி.லெ.சுபாஸ் சந்திர போஸ்

நுஜலின் அளவு : 21 செ.மீ x 30 செ.மீ

எழுத்தும் அளவும் : அகராதி, 12 புள்ளி

பக்கங்கள் : 312

ஐ.எஸ்.பி.என் : 978 -1 -66640 - 665 -8

விலை : உரூபா 1000 /=

அச்சிட்டோர் : தி பிரண்டிங் ஹவுஸ்,
8. ரெஸ் கோர்ஸ் ரோடு,
திருச்சிராப்பள்ளி -620 023.

வெளியீடு : தொ(ல்)லியல் ஆய்வு மையம்,
43.பி. புது ரெட்டித் தெரு, பீமநகர்,
திருச்சிராப்பள்ளி -630 001
தமிழ் நாடு, இந்தியா.





அலைப்பேசி எண் : 91 90806 50420, 97508 94532

மின்னஞ்சல் : archaeosymbolist@gmail.com

அட்டைப்படம் வடிவமைப்பு : தி.லெ.சுபாஸ் சந்திர போஸ்.

2025



'Among the many revelations that Mohenjo-Dara and Harappa have had in store for us, none perhaps is more remarkable than this discovery that Saivism has a history going back to the chalcolithic age or perhaps even further still and it thus takes its place as the most ancient living faith in the world.' – Sir John Marshall in his preface to Mohenjo-Daro and the Indus civilization. vol.1, p.vii.

மொழிபெயர்ப்பு: மோஹென்ஜோ-தாரா மற்றும் அறப்பா நமக்குக் காட்டியிருக்கும் பல வெளிப்பாடுகளில், சைவ சமயம் கல்கோலிதிக் யுகம் ( புதியகற்காலம் (அ) செப்பு யுகம்) அல்லது அதற்கும் மேலான வரலாற்றைக் கொண்டுள்ளது. இதனால் அது உலகின் மிகப்பழமையான வாழும் நம்பிக்கையாக அதன் இடத்தைப் பிடித்துள்ளது என்ற இந்தக் கண்டு பிடிப்பைவிட வேறு எதுவும் இல்லை என்பதும் குறிப்பிடத்தக்கது - சர் ஜான் மார்ஷல் மோஹென்ஜோ-தாரா மற்றும் சிந்து நாகரிகம் முன்னுரை (தொகுதி-01.ப.7.).



# சிறப்புரை

அறிவியல் ஆன்மிக விஞ்ஞானி, மொழிக் காவலர், வாழ்நாள் சாதனையாளர், வாழும் வரலாறு, குலக்குரு அநிருத்தர் ஆகிய பட்டங்களைப் பெற்ற தொன்மைக் குறியீட்டாய்வாளர் தி.லெ.சுபாஸ் சந்திர போஸ் ஐயாவை என் இளம் வயது முதல் நான் நன்கு அறிவேன். தொல்லியல் பரப்பாய்வு பணிகளை நான் அவரோடு இணைந்து செய்துள்ளேன். இந்நூலில் பக்கம் 169இல் பதிவிடபெற்றுள்ள **சிவயநம பெருக** என்ற புதுக்கோட்டை மாவட்டம் மலையடிபட்டிக் கல்லெழுத்துப் பொறிப்பு என்னால் கண்டறியப்பெற்றது.

கிராமாலயாவின் நிறுவனத் தலைவராகிய நான் போஸ் ஐயாவோடு இணைந்து தொல்லியல் களப்பணியாற்றிய அனுபவத்தைக் கொண்டு இந்தியத் திருநாட்டின் பல்வேறு பகுதிகளில் உள்ள தொல்லியல் சான்றுகளின் உட்பொருள் அறியும் கலையைக் கற்றேன். தொல்லியல் பணியில், எதையும் எதிர்பார்க்காமல் திருந்த செய்யவேண்டும். உண்மையை மூடி மறைக்காமல் உள்ளதை உள்ளபடியே சொல்லவேண்டும் ஆகியவை நான் அவரிடமிருந்து தெரிந்து கொண்டவை.

திருச்சிராப்பள்ளித் தமிழ்ச்சங்கத்தில், போஸ் ஐயாவின் சிந்து சமவெளி நாகரிகம் பற்றிக் கானொளிக் காட்சியோடான சிறப்புரை நிகழ்ச்சிக்கு நான் தலைமை வகித்தேன். ஐயாவின் சிறப்புரையின் போது பழந்தமிழர்கள் சரியை, கிரியை, ஞானம், யோகம் ஆகிய நான்கு மார்க்கங்களைக் கடைபிடித்துச் சீவமுக்தர்களாக வாழ்ந்து கருமமுக்தியையும், வீடுபேறும் பெற்றவர்கள் என்ற உண்மையை உணர்த்தினார்.

பழந்தமிழர்கள் யோக மார்க்கத்தைக் கடைபிடித்து விழிப்பு, கனவு, உறக்கம், அமைதி எனும் துரிய நிலை, பேரமைதி எனும் துரியாதீத நிலையில் வாழ்ந்தவர்கள் என்பதற்கான சிந்து சமவெளித் தொல்லியல் சான்றுகள் தமிழகத்தில் பாறை ஓவியங்களாகவும், பானை ஓடு கீறல் குறியீடுகளாகவும், கோட்டுருவங்களாகவும் உள்ளதை எடுத்துக்காட்டியதைக் கண்ட திருச்சிராப்பள்ளித் தமிழறிஞர் பெருமக்களும், தமிழ்த்துறை மாணவர்களும் ஐயாவைப் பாராட்டியதோடு, சிந்து சமவெளி நாகரிகம் பழந்தமிழர் நாகரிகமே என்பதை ஏக மனதாக ஏற்றுகொண்டனர்.

புதுக்கோட்டை மாவட்டம் மலையடிபட்டியில் துரியாதீதம் குறியீட்டை எனக்குக் காட்டிய போஸ் ஐயா அதற்கு விளக்கமளித்தார் என்பதும், 801ஆம் ஆண்டைச் சார்ந்த ஒன்று முதல் பத்து வரையிலான எண்களின் வரிவடிவங்கள் திருச்சிராப்பள்ளி மாவட்டம் திருவெள்ளறை சுவத்திகம் வடிவிலான மார்ப்பிடுகு பெருங்கிணறு வடக்குத் திசைக் கற்படிகளில் பொறிக்கப்பெற்றுள்ளதைப் போஸ் ஐயாவின் உதவியுடன் கண்டேன் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இவ்வாண்டு (2025) சனவரி மாதம் எம் கிராமாலயா ஆண்டு விழாவில் ஐயா கலந்துகொண்டு வழங்கிய கானொளிக் காட்சியுடனான சிறப்புரையில் சிந்து சமவெளி நகர நாகரிகத்தைச் சேர்ந்த இரண்டு முத்திரைகளைப் படித்துக்காட்டி முதலாம் திருஆதிரையான் தரிசனத்தின் காலம் 17,170 ஆண்டுகளுக்கும் முற்பட்டதென அறிவித்தார்.

7,500 ஆண்டுகளுக்கும் முற்பட்டதும், இந்நாள் வரை எவராலும் அறிவிக்கப்படாததும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய மூன்றில் முதல் இரண்டு பொருள்கள் பற்றிய செந்தமிழ் தொல்வாச்சியங்கள் சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழியே (முதலாம் பாகம்) என்ற இந்நூலில் காணமுடிகின்றன.

கடந்ததொரு நூறு ஆண்டுகளுக்கும் மேலாக யாராலும் படிக்க முடியாததாகவும், புரியாத ஒரு புதிராகவும் உள்ள சிந்து சமவெளி நகர நாகரிகக் குறியீடுகள், எழுத்துக்கள் ஆகியவற்றைப் படித்துப் பொருள் கூறும் போஸ் ஐயா வாழும் காலத்தில் நானொரு கிராமாலயா சமூகசேவகனாக வாழ்வது என் பெருமை.

இந்தியக் குடியரசுத் தலைவரின் திருகரத்தால் பத்மஶ்ரீ விருது பெற்ற நான் போஸ் ஐயாவைத் தனிப்பட்ட முறையில் வாழ்த்துவதை விட மத்திய, மாநில அரசுகள் தகுந்த விருதோடு கௌரவிக்க வேண்டுமென வேண்டிக்கொள்கிறேன்.

அன்புடன்

பத்மஶ்ரீ சே.தாமோதரன்,

எண்.12. வெக்காளியம்மன் நகர்,

உறையூர், திருச்சிராப்பள்ளி - 03,

தமிழ் நாடு, இந்தியா.

அலைப்பேசி எண்: 91 94425 70515



# அணிந்துரை

கோடைக் காலத்து வான்மழையாய் வந்து வளம்பல தந்து

மண்ணும் மனித உயிர்களும் மனம் குளிர வைத்தது

சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழியே! என்ற இந்நூல்.

கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் மோஹஞ்சோதாரா, ஹரப்பா நாகரிகம் மிகப் பழமையான நாகரிகம் என்று மட்டுமே படித்த என் போன்றோர்க்குச் சிந்து சமவெளி நகர நாகரிகம் பற்றி இந்நூலில் முழுமையாகக் கற்றுக் கொடுத்திருக்கிறார் பொறியாளர் தி. லெ. சுபாஸ் சந்திர போஸ் ஐயா.

சிந்து சமவெளி, சிந்து சமவெளி நாகரிகம், அந்நாகரிக நகரங்களின் அடையாளக் குறியீடுகள், சிந்து சமவெளி செந்தமிழ் மொழி எழுத்துக்களின் வகை, எண்ணிக்கை ஆகியன பரமாணுவிலிருந்து குறியீடுகளாக வெளிப்பட்டுள்ளன எனவும், அவற்றை ஞானிகள் யோகநிலையில் ஆராய்ந்தறிந்து அறிவித்துள்ளனர் எனவும், சிந்து சமவெளி நாகரிகச் சான்றுகளைத் தமிழகத்தில் காணக்கிடக்கும் தொல்லியல் ஆதாரச் சான்றுகளைக் களாய்வுகள் வழியாக ஒப்பிட்டுக் காட்டி, சிந்து சமவெளி நகர நாகரிகம் பழந்தமிழர் நாகரிகமே என நிலைநிறுத்தியுள்ளார் போஸ் ஐயா.

ஒரு பொறியியல் வல்லுநருக்குத் தமிழ் மொழியின் தொன்மையைப் பற்றிய எண்ணம் ஏன், எப்படி, எதற்காகத் தோன்றியது? என்று நான் பலமுறை சிந்தித்தேன்.

சிந்து சமவெளி நகர நாகரிகக் குறியீடுகளையும், எழுத்துக்களையும், தொல்வாச்சியங்ளையும் வாசிக்கப் படாதபாடு பட்டேன் என்று போஸ் ஐயா குறிப்பிடுகிறார். தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நூற்பா 14 கூறும் **உட்பெறு புள்ளி யுருவாகும்மே** என்பதைக் கருதுகோளாகக் கொண்டு **பகர** உயிர்மெய், **மகர** மெய் ஆகிய இரண்டு எழுத்துக்களை ஒரு தமிழாசிரியர் உதவியுடன் அடையாளம் கண்டதாகக் கூறுகிறார். அவ்விரு எழுத்துக்களைக் கொண்டு, திண்டிவனம் அருகாமையில் அமைந்துள்ள சாணூர் எனும் ஊரில் கண்டெடுக்கப்பட்டதொரு பானை ஓட்டில் கீறப்பெற்றுள்ள சிந்து சமவெளி எழுத்துக்களைப் பரம் எனப் படித்ததாகக் கூறுகிறார்.

அச்சொல்லைத் தொல்காப்பியம், நன்னூல் போன்ற தமிழ் இலக்கண நூல்களின் துணைகொண்டு வல்லின பகர உயிர்மெய் மொழிக்கு முதலாகவும், இடையின ரகர உயிர்மெய் மொழிக்கு இடையிலும், மெல்லின மகரமெய் மொழிக்கு முடிவாகவும், முறைபடி படித்ததை உதாரணமாகச் சுட்டிக்காட்டி உள்ளார். இவை, போஸ் ஐயாவின் தமிழ் மொழியின் தொன்மையைப் பற்றிய எண்ணம் பற்றி நான் ஏன் பலமுறை சிந்தித்தேன் என்பதற்கான விடை சிறப்பாகவே அமைந்திருக்கிறது.

12,000 முதல் 4,000 வரையிலான 8,000 ஆண்டுகளுக்குட்பட்டதாகக் கருதப்படுவது புதிய கற்காலம். அக்காலத்தைச் சேர்ந்ததும், தற்போதைய மயிலாடுதுறை மாவட்டம் செம்பியன் கண்டியூரில் கண்டெடுக்கப்பெற்றதுமான கற்கோடாரி ஒன்றில் ஐந்து எனப் பொருள்படும் **ஐந்து புள்ளிகள், ரு** எனும் தமிழ் எண் எழுத்து, **பஞ்ச** என்ற தமிழ்ச் சொல் ஆகியவற்றைச் சிந்து சமவெளி பன்னவாலி 10எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையோடு ஒப்பிட்டுக் காட்டியுள்ளது மேலும் ஒரு சிறப்பாகவே அமைந்திருக்கிறது.

அதாவது, தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தின் (குறியீடு) எழுத்து, சொல், பொருள் என்பதை ஒப்பிட்டுக் காட்டிச் சிந்து சமவெளி நாகரிகம் பழந்தமிழர் நாகரிகமே என்பதை உறுதிபடுத்தியுள்ள போஸ் ஐயா பாராட்டும், விருதும் பெற வேண்டியவர். அவ்வாறு போற்றிப் பாராட்டுவதோடு நில்லாமல், இந்நூலை வாங்கி அனைவரும் வாசிக்க வேண்டும். அப்போது தான் பொருள் பல புரிந்து நலங்கள் அனைத்தையும் பெறலாம்.

தமிழகப் பாறை ஓவியங்களிலும், பாறைச் செதுக்கு ஓவியங்களிலும் காணப்பெறும் குறியீடுகளை உள்வாங்கி, வாசித்துப் பொருளறிவது என்பது மிகக் கடினம். ஆனால், புதுக்கோட்டை மாவட்டம் குடுமியான் மலை, மலையடிபட்டி, திருமயம், தட்டான் பாறை, மதுரை மாவட்டம் கொங்கர் புளியங்குளம், திருச்சி மாவட்டம் மலைக்கோட்டை கீழ்க் குடவரைக் கோயில், சேலம் மாவட்டம் மேட்டூர் கோட்டையூர், சிந்து சமவெளி பகவன் புரம், காளிபங்கன், பன்னவாலி போன்ற மேலும் பல இடங்களில் கண்ட குறியீடுகளும், எழுத்துக்களும் அவை உணர்த்தும் பொருள் ஆகியவற்றைக் கூறுவது இந்நூலின் சிறப்பு.

மரங்களின் அரசன் என்ற அரசமரத்தின் இலையே சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழியின் உயிரெழுத்து ஈ என்பதும், அதன் வடிவமே இந்தியத் திருநாட்டின் மிக உயர்ந்த விருதான பாரத்ரத்னா விருதின் குறியீடுமாகும் என்று கூறியிருப்பது இந்நூலின் ஒப்பீட்டுத் தன்மைக்கு ஓர் எடுத்துக்காட்டு.

சிந்து சமவெளி நகர நாகரிக வரலாற்றுச் சுவடுகளான பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் பதிவுபெற்றுள்ள பிச்சாடன் பற்றிய குறிப்புகள் அளவில் அதிகம். ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தி, பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடுகளும் அளவில் அதிகம்.

இந்த நூலைப் படித்தால், சிந்து சமவெளி நகர நாகரிகத்திற்கும் பழந்தமிழர் நாகரிகத்திற்கும் இடையிலான தொடர்பு குறித்து ஆதி முதல் அந்தம் வரை (இந்நாள்வரை) நாம் தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

உழைப்பால் உயர்ந்த சிந்தனைகளை வெளிக்கொணர்ந்தோர் சிலர் மட்டுமே உள்ளனர். அவர்களுள் குறிப்பிடத்தக்க சிறப்பிடம் பெறுபவர் பெரியவர் தி.லெ. சுபாஸ் சந்திர போஸ் ஐயா அவர்களே என்று சொன்னாலது மிகையாகாது.

7,500 ஆண்டுகளுக்கும் முன் வாழ்ந்த நம் முன்னோர்கள் பற்றி அறிய உதவும் இந்நூல், நம் ஒவ்வொருவர் இல்லத்திலும் இருக்கவேண்டும். போஸ் ஐயாவின் உழைப்பின் திருவுருவமே இந்நூலென வணங்குகின்றேன்.

அன்புடன்

முனைவர் வீ.கோபால்,

1/349-3 அல்லித் தெரு, வி.ஓ.வி. நகர்,

யாதவர் கல்லூரி எதிர்புறம்,

மதுரை-14. தமிழ் நாடு, இந்தியா.

அலைப்பேசி எண்: 91 80725 25539



# வாழ்த்துரை

சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழியே! (முதலாம் பாகம்) என்ற தலைப்புடைய இந்நூல், தொன்மைக் குறியீட்டாய்வாளர் தி.லெ.சுபாஸ் சந்திர போஸ் என்ற போஸ் ஐயாவின் 19ஆவது நூலாகும்.

இந்நூலில் உலகின் மூத்த நகர நாகரிகமான சிந்து சமவெளி நாகரிகத்தின் சுவடுகளான பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் பதிவிடப்பெற்றுள்ள பதிவுகள் கடந்ததொரு நூறு ஆண்டுகளுக்கும் மேலாகப் படித்துப் பொருளறிய இயலாதபடியும், புரியாத புதிராகவும் இருந்துள்ளன.

அப்புரியாத புதிர்களைப் போஸ் ஐயா, தமது 25 ஆண்டுகளுக்கும் மேலான தொன்மைக் குறியீடுகள், தொல்லெழுத்துக்களைப் படித்து பொருளறியும் அனுபவத்தால் அந்நாகரிகத்தின் மொழி செந்தமிழ் மொழி எனவும், அம்மொழியின் எழுத்துக்கள் குறியீடுகளிலிருந்து முதற்கட்ட வளர்ச்சியைச் சார்ந்தவை எனவும், அவற்றின் வகை, எண்ணிக்கை, வரிவடிவங்கள் ஆகியவற்றின் மூலம் பரமாணு எனத் தகுந்த ஆதாரச் சான்றுகளுடன் எடுத்துக்காட்டியுள்ளது நம்மை வியப்படையச் செய்கிறது.

சிந்து சமவெளி நகர நாகரிகப் பதிவுகளின் எழுதும் முறை இடமிருந்து வலம் எனவும், அப்பதிவுகள் முதற் பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய மூன்று பொருள்களில் முதற் பொருள், கருப்பொருள் ஆகிய இரண்டு பொருள்கள் பற்றிய **‘தொல்வாச்சியப் பதிவுகள்’** எனக் குறிப்பிட்டுள்ளது நம்மைச் சிந்திக்கச் செய்கிறது.

இந்த முதலாம் பாகத்தில் சிந்து சமவெளி நகர நாகரிகத் தொல்வாச்சியப் பதிவுகளில் குறிப்பாக 270ஐ தேர்ந்தெடுத்து அப்பதிவுகளை எவ்வாறு படித்துத் தமிழ் அகராதியின் உதவியுடன் பொருளறியும் விதத்தை எளிதாகவும், இலக்கணமுறைபடி மிகத் தெளிவாகவும் அனைவரும் எளிதல் புரிந்து கொள்ளும் வகையில் விவரித்துள்ளது நமக்கு நல்லதொரு வழிகாட்டியாக உள்ளதென்றாலது மிகையாகாது.

இலண்டன் அரசு அருங்காட்சியத்தில் பாதுகாக்கப் பெற்றுவரும் முதன் முதலாக வெளிக்கொணரப் பெற்ற சிந்து சமவெளி நகர நாகரிக முத்திரையை **‘ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்’** எனக் குறிப்பிட்டுள்ளது இந்நூலின் முதலாம் சிறப்பு.

**'ஆள்வோன் இனம் அரசமரமே'** எனவும், அந்த அரசமரத்தின் இலையின் வடிவமே இந்தியத் திருநாட்டின் மிக உயர்ந்த விருதான பாரத்ரத்னா குறியீடு என்ற செய்தி இரண்டாம் சிறப்பு.

மனித குலத்தின் வாழ்வியல் தத்துவங்களில் ஒன்றான **'இகழ்பவன் நேர்மையற்றவனே'** என்பது மூன்றாம் சிறப்பு. இம்மூன்று சிறப்புகள் போன்று மேலும் சிறப்புக்கள் பல்வேறு தலைப்புக்களில் உள்ளன.

இந்நூல் இந்திய வரலாற்றைத் தென் தமிழகத்திலிருந்து துவங்கவேண்டும் என்பதற்கான தொல்லியல், தொல்பொருள் சான்றுகளைச் சுட்டிக் காட்டியுள்ளது இந்நூலின் பொருண்மைக்கு ஓர் உதாரணம்.

போஸ் ஐயாவின் இம்முயற்சி போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரியது. இந்நூலை ஒரு கருதுகோளாகக் கொண்டு இனிவரும் இளையசமுதாயம் இப்பணியைத் தொடரவேண்டும் என்ற வரிகள், போஸ் ஐயாவின் தன்னலமற்ற முன்னோக்குச் சிந்தனைக்குச் சிறந்ததொரு சான்று.

இந்நூலின் பக்கம் 173இல் எம்-8எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையை **மகான் அன்பே** எனப்படித்துக் காட்டி அதற்குப் பொருள் கூறியதோடு **அன்பு என்ற சொல் உண்மையில் தான் படைத்த உயிர்கள் அனைத்தையும் தானாக்கிக் கொள்ளுதற்கண் இறைவனுக்குள்ள இச்சை மிகுதி என்பனார் ஞானிகள்** என விளக்கமளித்துள்ளது மிகச் சிறந்ததொரு எடுத்துக் காட்டு.

சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழியே! என்ற தலைப்புடைய இந்நூல், இந்தியத் திருநாட்டில் குறிப்பாகத் தமிழ்க் கூறும் நல்லுலகுக்கு மட்டுமின்றிப் புலன்பெயர்ந்து பல்வேறு நாடுகளில் வாழும் அனைத்துத் தமிழ்ச் சொந்தங்களும் படித்துப் படித்ததைப் பிறருக்குப் பகர்ந்து பாதுகாக்கப்பட வேண்டிய மிகச் சிறந்ததொரு நூலாகும்.

போஸ் ஐயாவை வாழ்த்த எனக்கு வயதில்லை என்பதனால் சிந்து சமவெளி நாகரிகத்தின் உரிப்பொருள் பற்றிய இரண்டாம் பாகத்தை விரைவில் வெளியிடவேண்டுமெனப் போஸ் ஐயாவிடம் அன்புடன் வேண்டுகிறேன்.

அன்பன்

ம. சௌரிகரன்.

இங்கிலாந்து.

# நூலாசிரியர் உரை

1992ஆம் ஆண்டு, தஞ்சை சரசுவதி மஹால் நூலகத்தில் கல்வெட்டாய்வாளராகப் பணிபுரிந்த முனைவர் குடவாயில் பாலசுப்ரமணியன் அறிவுரையின்படித் தமிழகத் தொன்மைக் குறியீடுகள் பற்றிய களஆய்வுப் பணியை யாம் மேற்கொள்ளத் துவங்கினோம். அக்களஆய்வின் போது, தமிழகத்தில் குறிப்பாகத் திருச்சிராப்பள்ளி, அரியலூர், புதுக்கோட்டை, தஞ்சாவூர், ஈரோடு, சேலம் போன்ற சில மாவட்டங்களில் தொன்மையான குறியீடுகள் பொறிக்கப் பெற்றுள்ளதைக் கண்டோம். 2004ஆம் ஆண்டு **ஆத்மசோதி குறியீடும் ஆடுபுலி விளையாட்டும்** எனும் எமது முதலாவது நூலைத் திருச்சிராப்பள்ளி மாநகரில் வெளியிட்டோம்.

2004ஆம் ஆண்டில் இந்தியத் திருநாட்டின் தலைநகரான புதுடெல்லியில் சர்க்கரை ஆலை உயர் அழுத்த நீராவி இயந்திரங்களின் ஆலோசகராகப் பணிபுரிந்து 58ஆம் அகவையின் முடிவில் பணி ஓய்வு பெற்றோம். 2010ஆம் ஆண்டு **அகழாய்வுகள் காட்டும் தமிழக வரலாறு** என்ற எமது இரண்டாவது (தொகுப்பு) நூல், கோவை மாநகரில் வெளியிடப்பெற்றது.

2013ஆம் ஆண்டு எமது மூன்றாவது நூலான **உருவதிகாரம்** என்ற தலைப்புடைய நூலில் தமிழ்ப் பிராமி எனும் தமிழி எழுத்துக்கள், சங்குத் தாபனம் எனும் எண்திசைகளை அறியும் முறை, வியாபித்தல் முறை ஆகியவற்றின் வாயிலாக வெளிப்படும் பிரபஞ்சக் குறியீட்டிலிருந்தும், வடிவியல் (Geometry) கணித அடிப்படையிலும் வெளிப்பெற்றுள்ளன என்ற செய்தியைப் பதிவிட்டோம்.

அப்போது, இலக்கியமின்றி இலக்கணமில்லை என்றாலும், செந்தமிழ் மொழியின் இலக்கிய நூல்களும், தொல்காப்பியம் எனும் இலக்கண நூலும் எழுதப்பட்டக் காலம் பொ.ஆ.மு.300 அதாவது 2,300 ஆண்டுகள் எனக் கருதப்பட்டதால், உலகின் மூத்தமொழி எனக் கூறப்படும் செந்தமிழ் மொழியின் இலக்கிய இலக்கண நூல்களின் காலம் 2,300 ஆண்டுகளுக்குப் பிற்பட்டவையா? என்ற ஐயம் எழுந்தது.

அந்த ஐயத்திற்கு விடைகாண நாட்கள் வாரங்களாகவும், வாரங்கள் மாதங்களாகவும், மாதங்கள் வருடங்களுமாயின. அதாவது, ஒரு மூங்கில் விதை மரமாக முளைத்து உயராமாக வளர்வதற்காகத் தன் வேர்களைப் பூமியில் ஆழமாக ஊன்றிக் கொள்ள எவ்வளவு காலம் எடுத்துக் கொள்ளுமோ, அவ்வாறே அந்த ஐயத்திற்கு விடைகாணப் பலகாலம் எடுத்துக்கொண்டது என்பதோர் உண்மை.

எமது நான்காவது நூலாகத் **திருக்குறியீட்டியில்** (திருக்கோயில் திருக்குறியீடுகள் (2014), அதனைத் தொடர்ந்து, ஐந்தாவது நூலாகத் **தொ(ல்)லியல் அந்தரங்கம்** (2015) வெளியிட்டோம். ஆறாவது நூலாக **The Keezhvaalai Rock Art (2016)** என்னும் நூல் வெளியீட்டு விழா நிகழ்ந்தது.

இவ்விழாவில் கலந்து கொண்ட முன்பின் அறிமுகமாகாத நபரொருவர் எம்மை அணுகி வாழ்த்திச் சென்றார். சில நாட்கள் கடந்த பின், அதே நபர் எமது இல்லம் தேடி வந்து, தம் கைப்பட எழுதியதொருப் பாடலைக் கொடுத்து, ஐயா! இப்பாடல் சித்தர் ஒருவர் உங்களுக்கு அறிவித்துள்ள செய்தி எனக் கூறி விடைபெற்றுச் சென்றார்.

## சித்தர் அறிவித்த செய்தி

வளமும் தென்னமும் கொண்ட **திரு ஐயாஆறு**
கோட்டரனுக்கும் நாட்டரசனுக்கும் நடுவில
மணிமுத்தாறு ஊட்டத்திற்குள் உலளி சொரிக்க
அவனி கவனிக்கப்படுதா...... பாடுதா...... படுதா
பாப்பனிய தவத்திற்கும் பாம்பாட்டி பாரம்
பாவுதக்குள் உளட்டுப்பட்டு உவட்டுப்பட்டுக்
கரிசல் மண்ணில் கரைப்பட்டுக் கணப்பட்டு
உண்டு வைத்தனவே
காலத்தைக் காட்டுதடா கவட்குப்போல்
நாளத்தை வைக்க நவட்டுப் பாட்டம்
நானினம் தெரியும் நாநிலம் அறிவும்
நடுக்கு அடுக்கு அவுனியாம் பட்டகம்
பாடணம் பவுத ரவுத அறியுதா- அறிய வந்து
உவட்டுக்கு உரிச்ச பவட்டம் கோட்ட கொக்கரிக்க
நளன் அருச்த அவட்டுக்கு நாமம் சிவ ஹரி சிவ
ஹர ஹர சிவன்.
நமச்சு சுமச்சு கோட்ட கொக்க அவுனியன்
ஆறங்கம் கண்ஆர் சொரியுதே வவுசமே வாட்டமே
நவுத அவுத காட்டு ஆதாலும் அவ்வுடு சொரிச்சேன்
பட்டுபுடலே பவட்டுபுடலே அடே அந்தணா
கோட்டகம் வாண்டு அம்பன் வர்ணத்து வவுச்சம்
ஊணத்து ரவுசும் வீண்டு கோட்டு உள்ளே உள்ளம்

உவட்ட உவட்ட நாமே யாமே ஆமே நமச்ழிச்சோம்
ஊரடே ஊண்டே உடுத்த கொள்ளம் வல்லத்தான்
வவட்டன் அள்ளத்தான் கவட்டம் கல் ஆரமும் கவரிச்சு
சொவரி வந்தனம் அறியும் உஷ்ணம் சொக்க பட்சணம் உண்ட
ஆக்கே பாராம் பார்க்கும் கொட்ட கொட்ட ஞான் அறியும்
விவரிக்க விவரிக்க விடாயுதம் கொக்கும் ஆராதமும்
அவுட்டமும் கோட்டம் காட்டும் அறியும்மோன் அறியும்
கொங்கணம் கொடுத்த இக்கணம் விளச்சு வாண்டான்
**திருஜய்யாறு** ஆறு உஷ்ண கோட்டம் விவரிக்கனுமோ
சிவமே ஓங்கின ஓங்கின தவம் நாமல்லோ நாமே.

இந்நாள் வரை இப்பாடலின் முழுமையான பொருள் அறிய எம்மால் இயலவில்லை என்பது முற்றிலும் உண்மை. நிற்க.

(2016ஆம் ஆண்டு எமது முன்னோர்களால் பன்னெடுங்காலமாகத் தொடரும் பெண் வாரிசுகளுக்குப் பூர்வீக இடத்தில் வீடுகட்டிக் கொடுக்கும் மரபின்படி சின்னப்பிள்ளை (எ) தாயாரம்மாள் எனும் எமது தாய்வழிப் பாட்டியின் கொள்ளுப் பேத்தியும், வாலாம்பாள் அம்மாள் எனும் எமது தாயாரின் பேத்தியும் எமது ஆசை மகளுமான அனிதா போஸ் (எ) அனிதா குமாருக்குப் புதியதொரு வீடுகட்டும் பணியைத் துவங்கினோம்.

திருச்சிராப்பள்ளி மாநகரம், பீமநகர் அருள்மிகு செடல் மாரியம்மன் கோயில் சந்து கதவு எண் 4, 5இல் புதியதொரு வீடுகட்டும் பணி முற்றுப் பெற்றது. புதுமனைப் புகுவிழா நிகழ்ச்சிக்கு எமது மகளுக்கும், அவரது குடும்பத்தாருக்குமான பயண முன்னேற்பாடுகள் போன்ற சில காரணங்களால் 2017ஆம் ஆண்டு வரை தள்ளிவைக்கப்பெற்றது.

அக்காலத்தில், அமெரிக்க நாட்டில் குடியுரிமைப் பெற்றுத் தமது குடும்பத்தோடு வாழும் எமது ஆசை மகளின் இரண்டாம் மகனும், எமது இரண்டாம் பேரனுமான விஜய் குமாரின் 8ஆம் வகுப்பு வரலாற்றுப் பாட நூலில் **அறப்பன் நாகரிகம்** என்ற தலைப்பில் அந்நாகரிகத்தைப் பற்றிய சிறப்புக்கள் பதிவிடப்பெற்றிருப்பதை அறிந்தோம். அப்பதிவில் பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் காணப்படும் குறியீடுகள், எழுத்துக்கள் ஆகியவற்றைப் படித்துப் பொருளறியப்படவில்லை என்ற செய்தி எம்மைச் சிந்திக்கச் செய்தது.) தொடர்க..

முன்கண்ட சித்தர் பாடலில், **திருஜய்யாறு** சிறப்பை வெளிப்படுத்துவாயாக என்ற கட்டளையிட்டதை மட்டும் உணரமுடிந்தது. அவ்வுணர்வால், 7,500 ஆண்டுகளுக்கும் முற்பட்டதாகக் கூறப்படும் சிந்து சமவெளி நாகரிகத்தைச் சேர்ந்த பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் காணப்பெறும் குறியீடுகளையும், எழுத்துக்களையும் படித்துப் பொருளறியும் முயற்சியை மேற்கொள்ளவேண்டுமென முடிவெடுத்தோம்.

அம்முடிவின்படி, இணைதளத்தில் சிந்து சமவெளி நாகரிகத்தைச் சேர்ந்த பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் பதிவிடப்பெற்றுள்ள குறியீடுகள், எழுத்துக்கள் ஆகியவற்றைப் பற்றிய பதிவுகளைத் தேடத்துவங்கினோம். அத்தேடலின் போது M-1356A என்ற அடையாள எண்ணுடையதொரு முத்திரை எமது கண்களுக்குத் தென்பட்டது. அம்முத்திரையில் **சுவத்திக வடிவக் குறியீடும், 9 புள்ளி கோலமும்** பொறிக்கப்பட்டதைக் கண்டோம். அந்த **9 புள்ளிக் கோலம்** தமிழகப் பரப்பாய்வுகளின் போது எம்மால் கண்டுபிடிக்கப்பட்ட குறியீடுகளில் உள்ளது எமது நினைவுக்கு வந்தது.

அதே போன்ற, **9 புள்ளிக் கோலத்தின் வடிவம், ஒரு சக்ர வியூகக் குறியீட்டுடன்** சிந்து சமவெளிப் பகுதியைச் சேர்ந்த **சுவத்** என்னுமிடத்திலுள்ள பாறையின் மேல்பரப்பில், வெள்ளை நிறத்தில் பாறை ஓவியமாக வரையப் பெற்றுள்ளதை அறிஞர் ஒருவர் கண்டுபிடித்துள்ள செய்தியை அறிந்தோம். (மேலும்) சக்ர வியூகக் குறியீடுகள் திருச்சிராப்பள்ளி மாவட்டம் கோப்பு, ஊட்டத்தூர் ஆகிய ஊர்களிலுள்ள ஆலயங்களிலும், பெரியக்கருப்பூரில் ஒரு பாறையின் மீதும் பொறிக்கப்பெற்றுள்ளதையும் கண்டு வியந்தோம்.

**சுவத்திகக் குறியீடு,** தமிழகத்தில் பல்வேறு இடங்களிலும் காணக்கிடந்தாலும் கூட, குறிப்பாகத் திருவண்ணாமலை சிவனாலயம் நந்தி மண்டபத்தில் சுவத்திகம், பிறையுடன் கூடிய மேல் நோக்கு முக்கோணம், பூர்ண கும்பம் ஆகிய மங்களகரமான குறியீடுகள் பொறிக்கப்பெற்றுள்ளதைக் கண்டு வியந்தோம்.

M-350A என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஒன்றுக்கு மேல் ஒன்றாக மூன்று செவ்வகங்களைக் கொண்ட தண்ணுணர்வுக் குறியீட்டைக் கண்டோம். அதே குறியீடு புதுக்கோட்டை மாவட்டம் குண்ணாண்டார் கோயில் பாறையின் மேற்பரப்பில் தொடர்-புள்ளிகளாகப் பொறிக்கப்பெற்றுள்ளதையும், புதுக்கோட்டை மாவட்டம் திருமெய்யம் கோட்டைப் பாறையின் மேற்பரப்பில் **பிரபஞ்சக் குறியீட்டின் வெளிப்பாடாகத்** தொடர்புள்ளிகளாகப் பொறிக்கப் பெற்றுள்ளதையும் கண்டு மேலும் வியந்தோம். இவ்விடத்து, **வியப்பு என்பது மர்மங்களை அறிந்துணர்வதன் துவக்கம்** என்பது குறிப்பிடத்தக்கது.

இந்தியத் தொல்பொருள் துறையினரால் திண்டிவனம் அருகாமையில் அமைந்துள்ள **சானூரில்** மேற்கொள்ளப்பட்ட அகழாய்வின் போது வெளிக்கொணரப்பட்ட **உடைந்த பானை ஓட்டில் கிறப்பட்டுள்ள மூன்று குறியீடுகள்** சிந்து சமவெளி நகர நாகரித்தைச் சார்ந்தவை என ஐயா ஐராவதம் மகாதேவன், பி.பி.இலால் ஆகியோர் அடையாளம் கண்டுள்ளதை அறிந்தோம். நாகப்பட்டினம் மாவட்டம், **செம்பியன் கண்டியூரில்** முன்னாள் பள்ளி ஆசிரியர் சண்முகநாதன் கண்டெடுத்த புதிய கற்காலக் கற்கோடரியில் பொறிக்கப்பெற்றுள்ள **குறியீடுகளும் எழுத்துக்களும்** சிந்து சமவெளி நகர நாகரித்தைச் சார்ந்தவை என ஐயா ஐராவதம் மகாதேவன் அடையாளம் கண்டுள்ளதையும் அறிந்தோம்.

சாணூர் பானை ஓட்டில் கிறப்பட்டுள்ளவையும், **செம்பியன் கண்டியூர்** கற்கோடரியில் பொறிக்கப்பெற்றுள்ளவையும் சிந்து சமவெளி நகர நாகரித்தைச் சார்ந்தவை என ஐராவதம் மகாதேவன் குறிப்பிட்டுள்ளதை ஆதாரமாகக் கொண்டு, அவற்றைப்பற்றிய ஆராய்வுப் பணியை மேற்கொள்ள எண்ணினோம்.

அவ்வாறு யாம் எண்ணிய போது, சிந்து சமவெளி நகர நாகரிகத்தைச் சார்ந்தக் குறியீடுகளும், எழுத்துக்களும் கடந்ததொரு நூறு ஆண்டுகளுக்கும் மேலாக எவராலும் படித்துப் பொருளறியப்படாமல் உள்ளன என்ற செய்தி சட்டென எம் நினைவுக்கு வந்தது.

**'எந்ததொரு நாடு தன் தாய்மொழியையும், பண்பாட்டையும் மறந்து விடுகிறதோ! அந்நாடு தன்னையே மறந்துவிடும்.'**

**' நாம் என்ன செய்கிறோம் என்பதற்கு மட்டும் பொறுப்பாளிகள் அல்லர்! எதையெல்லாம் செய்யாமல் விட்டுச் செல்கிறோமோ அதற்கும் நாமே பொறுப்பாளிகள் '**என்பதை உணர்ந்தோம்.

அந்த உணர்வே **" சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழியே! (முதலாம் பாகம்)"** என்ற தலைப்புடைய இந்நூலை உருவாக்குவதற்கான மூலக்காரணமாகும்.

அன்பன்

தி.லெ.சுபாஸ் சந்திர போஸ

# நன்றியுரை

சிந்து சமவெளி நாகரிக முத்திரைகளை முறையாக ஆய்வு செய்வதற்குப் பெருந்துணைப் புரிந்தவைப் பின்லாந்து நாட்டைச் சேர்ந்த 'அசோகன்' என்ற புனைப் பெயருடைய சர் அஸ்கோ பர்போலா அவர்களின் அரிய படைப்புக்களான சி.ஐ.எஸ்.ஐ தொகுப்புகள் 1, 2, 3.1, 3.2 ஆகிய நான்கு நூல்களாகும். இந்நான்கு நூல்களையும் பின்லாந்து நாட்டிலிருந்து வரவழைத்து என் பிறந்த நாள் பரிசுகளாக அளித்தவர் அமெரிக்கா நாட்டின் குடியுரிமைப் பெற்று வாழ்ந்து வரும் எனது அன்பு மகள் திருமதி அனிதா குமார் என்பவராவர்.

இந்நூல் உருவாவதற்கு ஓர் உந்து சக்தியாகத் திகழ்ந்தவர்களில், சென்னை உலகத் தமிழ் ஆராய்ச்சி மையத்தின் தமிழ்ப் பண்பாடு மற்றும் பதிப்பகப் பிரிவுத் தலைவர் ஐயா முனைவர் ஆ.மணவழகன் அவர்களும், தமிழால் இணைவோம் உலகத்தமிழ்ப் பேரியக்கத்தின் நிறுவனத் தலைவர் ஐயா சத்திய நாராயணன் ராஜ் பாலகுரு அவர்களும், முனைவர். பி.தமிழகன், முனனவர் வீ. கோபால், முனைவர் காசி ஸ்ரீ காளைராஜன், முனைவர் ரெ.சந்திரமோகன், முனைவர் பாகை கண்ணதாசன், முனைவர் எஸ். நாகநாதன் ஆகிய அறிஞர் பெருமக்களாவர். இந்நூல் சிறந்த முறையில் உருவாவதற்கும், இந்நூலைச் செம்மைப்படுத்துவதற்கும் பல்வேறு வகையில் பேருதவி புரிவதற்கு முன்வந்த நல்லுள்ளம் கொண்ட எமது அன்புச் சகோதரரும், நண்பருமான முனைவர் வீ. கோபால் ஐயா ஆவார்.

தமிழகத்தில் மேற்கொள்ளப்பெற்ற அகழாய்வுகள், பரப்பாய்வுகள் ஆகியவற்றின் வாயிலாக அறியப்பெற்ற ஆதாரச் சான்றுகள் எதையும் மூடி மறைக்காமல் அருளிய இந்தியத் தொல்பொருள் துறையினர், தமிழகத் தொல்லியல் துறையினர், இந்து சமய அறநிலைத் துறையினர், முனைவர் கா. இராசன், ஆய்வாளர் இரமேஷ், நாகை மாவட்டம் செம்பியன் கண்டியூர் சண்முகநாதன், பழனி வெ. நாராயணமுர்த்தி, திருச்சி கா. பாலகிருட்டிணன், வே.கண்ணன், அனந்தபுரம் கிருட்டிணமூர்த்தி, இளம் ஆய்வாளர்களான அரியக்குடி அபிசேக், திருச்சி பார்த்திபன், கிருட்டிணகிரி குமரன் போன்ற தொல்லியல் அறிஞர் பெருமக்கள் பலர், ஆவர்.

***"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு"*** எனும் பேராசான் திருவள்ளுவரின் (திருக்குறள் 110) திருவாக்கின் படி இந்நூல் உருவாதற்கு உதவிய அனைத்து நல்லுள்ளங்களுக்கும், சிறப்புரை, அணிந்துரை, வாழ்த்துரை வழங்கியோருக்கும் எமது மனமார்ந்த நன்றியைக் கூற யாம் கடமைப்பட்டுள்ளோம்.

# முன்னுரை

**"சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழியே!"** என்ற தலைப்புடைய இந்நூல் எமது முந்தையப் படைப்புக்களின் வரிசையில் 18ஆவது நூலாகும். இந்நூலுக்கு முற்பட்ட நூல்களில் தமிழகத்தில் வரலாற்றுச் சான்றுகள் நிறைந்த குடைவரைப் பாறை ஓவியங்கள், பாறைகள் மீதும், திருத்தலங்களின் கற்தரைகளின் மீதும் பொறிக்கப்பெற்றுள்ள கோட்டுருவக் குறியீடுகள், தொல்லெழுத்துக்கள் ஆகியவை உள்ளடங்கும்.

இந்நூலிலுள்ள **"தொல்வாச்சியம்"** எனும் சொல் தொன்மைகள் சொல்லப்படத்தக்கவை எனவும், அதில் தொன்மையும், தன்மையும் கொண்ட செந்தமிழ் மொழியின் தொல்லெழுத்துக்களின் வகை, எண்ணிக்கை ஆகியவை எவ்வாறு? வெளிப்பட்டன போன்ற வினாக்களுக்கான ஆராய்ந்தறியப்பெற்ற விடைகளும் உள்ளடங்கும்.

எந்தொரு காலகட்டத்தில் எழுத்துக்கள் தோன்றினவோ அந்தக் காலமே! உலக நாகரிகத்தின் துவக்கக் காலம் என்பதனால், செந்தமிழ் மொழியின் தொல்லெழுத்துக்களும், இலக்கிய இலக்கண நூல்கள் எழுதப்பட்டக் காலம் பற்றியச் செய்திகள் ஆராய்ந்தறியப் பெறுகின்றன. அவ்வாறு ஆராய்ந்தறியப் பெறுவதில், தமிழ் மொழியின் எழுத்துக்கள் குறியீடுகளிலிருந்தே வெளிப்பட்டுச் சிந்து சமவெளி நகர நாகரிகச் செந்தமிழ், தமிழி, தமிழ், தமிழ் வட்டெழுத்துக்களாகப் பரிணாம வளர்ச்சியடைந்துள்ளன எனலாம்.

சிந்து சமவெளி நகர நாகரிகச் செந்தமிழ் மொழியின் எழுத்துக்கள், பொது ஆண்டுக்கு முன் (பொ.ஆ.மு.) 5,500 முதல் பொ.ஆ.மு. 1,500 வரையிலானது என்ற செய்தி சி-14 கரிமப் பகுப்பாய்வின் வாயிலாகத் தெரியவந்துள்ளது. பொ.ஆ.மு. 1,500 முதல் பொ.ஆ.மு. 300 வரையிலான 1200 ஆண்டுகளில் செந்தமிழ் மொழியின் எழுத்துக்கள் பற்றிய ஆதாரச் சான்றுகள் ஏதும் கிடைக்கப் பெறவில்லை என்பர்.

பொ.ஆ.மு.300இல் தமிழி எழுத்துக்கள் உருவாகியுள்ளன என்பர். அத்தமிழி எழுத்துக்கள் பொ.ஆ.மு.300 முதல் பொது ஆண்டுக்குப் பின் (பொ.ஆ.பி.) 300 வரையிலான 600 ஆண்டுகள் எந்தவிதமான பரிணாம வளர்ச்சியின்றியும் பயன்பாட்டில் இருந்துள்ளதாகவும், பொ.ஆ.பி.300 -க்குப் பிற்பட்டதொரு காலத்தில் தமிழி எழுத்துக்கள், தமிழ் எழுத்துக்களாகவும், தமிழ் வட்ட எழுத்துக்களாகவும் பரிணாம வளர்ச்சியடைந்துள்ளதாகக் கூறுவர்.

தேனி மாவட்டம் புளிமான் கோம்பையில் ஆய்வாளர் ரமேஷ் என்பவரால் கண்டுபிக்கப்பட்ட தமிழி எழுத்துக்களில் **அந்துவன்** எனும் பெயர்ச் சொல்லைக் கொண்ட கல்வெட்டின் எழுத்தமைதியின் அடிப்படையில் அதன் காலம் பொ.ஆ.மு. 500-க்கும் முற்பட்டதாகக் கருதப்பெற்றது. தற்காலத்தில் கீழடி போன்ற அகழாய்வுகளின் கரிமப் பகுப்பாய்வு முடிவுகள் பழந்தமிழர் நாகரிகம் பொ.ஆ.மு. 800-க்கும் முற்பட்டதாகக் கொண்டு செல்கின்றன. அதனால், இனிவரும் காலங்களில் தமிழி எழுத்துக்களின் காலம் பொ.ஆ.மு.1,000 ஆண்டுகளுக்கு முன் என அறிவிக்கப்பெறுவதற்கான வாய்ப்புண்டென்பது எமது தனிப்பட்டக் கருத்தாகும்.



அக்கருத்துக்கொரு சான்றாக, நம் இந்தியத் திருநாட்டின் அண்மை நாடான இலங்கை அண்ணக்கோடையில் ஜாபனா பல்கலைக் கழக ஆய்வாளர்கள் மேற்கொண்ட ஈமச்சின்னம் (கைவிரல் மோதிரம்) ஒன்றின் மேல் வரியில் உள்ள இரண்டாவது, மூன்றாவது எழுத்துக்-களைக் குறியீடுகளாகக் கருதி, அவற்றைத் தவிர்த்துக் கீழ்வரியில் உள்ள மூன்று இலங்கை பிராமி எழுத்துக்களை மட்டும் **'தீவுக்கோ'** எனப்படித்துள்ளனர்.

மேல் வரியிலுள்ள ஒரு மன்னன் (அ) போர்ப்படைத் தளபதியின் உருவம் போன்ற முதலாவது எழுத்துரு **'தி'** எனவும், அதனையடுத்துள்ள இரண்டு எழுத்துக்கள் சிந்து சமவெளி செந்தமிழ் உயிர்மெய் எழுத்துக்களான **'ர, ரா'** என எம்மால் அடையாளம் காணப்பெற்றுத் **'திரரா'** எனவும், கீழ்வரியில் உள்ள மூன்று (இலங்கை) தமிழி எழுத்துக்களைத் **'திவாகா'** எனவும் எம்மால் படிக்கப்பெற்றன. (திரரா(ராசி) - சிம்மராசி (அ) சிங்கராசி. திவாகா - சூரியன் / ஆதித்தன்).

**'திரரா திவாகா'** என்பது செந்தமிழ் மொழியில் **' சிங்களாதித்தன்'**என்பதும் வடமொழியில் **' சிங்கள சூரியன்'**எனப் பொருளுடைய சொற்கள் என்பதும் தெரியவந்தன. இந்த எழுத்துப் பொறிப்புக்களில் சிந்து சமவெளி செந்தமிழ் எழுத்துக்களும், (இலங்கை) பிராமி எழுத்துக்களும் பொறிக்கப்பட்டுள்ளதால் இதன் காலம் பொ.ஆ.மு.1,500 முதல் பொ.ஆ.மு.300 வரையிலான இடைப்பட்டதொரு காலம் என்பதும் தெரியவந்துள்ளது.

சிந்து சமவெளிச் செந்தமிழ் எழுத்துக்கள், எம்மால் முதல் முதலாக அடையாளம் காணமுடிந்தமையால், இனிவரும் காலங்களில் இதுபோன்ற எழுத்துப் பொறிப்புக்கள் ஏதேனும் தமிழக அகழாய்வுகளின் போது வெளிக்கொணரப்படுவதற்கான வாய்ப்புகள் அதிகமுண்டு என்பது எமது தனிப்பட்ட கருத்து. அக்கருத்தைத் தமிழகத் தொல்லியல் துறை மேற்கொள்ளும் அகழாய்வுகளின் போது வெளிக்கொணரப்பெறுபவை உறுதிசெய்கின்றன.

# எமது ஆய்வுப் பணியும் அனுபவங்களும்

**"எமது ஆய்வுப் பணியும் அனுபவங்களும்"** என்ற தலைப்பில் குறிப்பாகத் தமிழகக் குறியீடுகளைப்பற்றியும், சிந்து சமவெளி நகர நாகரிகக் குறியீடுகளையும், எழுத்துக்களைப் பற்றிய ஆய்வுப் பணியின் போது எமக்கு ஏற்பட்ட அனுபவங்களைப் பகிர்ந்துக் கொள்வது நல்லது.

முதல் முதலாக, M-304A அடையாள என்னுடைய சிந்து சமவெளி நாகரிக முத்திரையைப் **'பசுபதியோன்'** எனப் படித்தவுடன் கண்கலங்கி அழுது அன்று இரவு முழுவதும் உறங்காமலிருந்தோம். மறுநாள் மாலை எமது (திருச்சிராப்பள்ளி தினமலர்) ஊடக நண்பர்களான ஐயா சந்திரசேகரன், ஐயா முருகேசன் ஆகிய இருவரை நேரில் சந்தித்து அழுதுகொண்டே விபரத்தைக் கூறினோம். ஐயா! நீங்கள் ஒரு நீரூற்றுக் கண்கலங்காதீர்கள் என்றார் ஐயா சந்திரசேகரன். நீங்கள் சிந்து சமவெளி நாகரிகக் குறியீடுகள் எழுத்துக்களையும் படிப்பீர்கள் தொடர்ந்து முயற்சி செய்யுங்கள் என ஆறுதல் கூறினார் ஐயா முருகேசன்.

ஐயா ஐராவதம் மகாதேவன் அவர்களுக்கு மின்னஞ்சல் வாயிலாக அறிவித்தோம். சிந்து சமவெளி நாகரிகக் குறியீடுகளையும், எழுத்துக்களையும் படிப்பது மிகக் கடினமான செயல், இந்நாள் வரை யாராலும் படிக்கப்பெறவில்லை. தொடர்ந்து முயற்சி செய்யுங்கள் எனத் தமது வாழ்த்துக்களை மின்னஞ்சல் வாயிலாக வழங்கினார்.

என் ஆசை மகளான அனிதா குமாருக்கான புதுமனைப் புகுவிழா நிகழ்ச்சிக்குத் திருச்சி மாநகரம் வந்திருந்தபோது தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் துணைவேந்தராகப் பதவி வகித்த முனைவர் பாஸ்கரன் ஐயாவை என் மகள் அனிதா குமாரும், எமது இரண்டாம் பேரன் விஜய் குமாருடன் நேரடியாகச் சந்தித்தோம். சிந்து சமவெளி நாகரிகக் குறியீடுகளும், எழுத்துக்களும் செந்தமிழ் மொழியைச் சார்ந்தவை, அவற்றைத் தமிழர்களால் படிக்க முடியும் என்றோம். தமது வாழ்த்துக்களை வழங்கியதோடு, தொல்லியல் துறைக் கல்வெட்டுப் பிரிவு முனைவர்களைச் சந்தித்து விபரங்களை அவர்களிடமும் கூறுங்கள் என்றார்.

அப்பல்கலைக் கழகத்தின் கல்வெட்டுத் துறை முனைவர்களைச் சந்தித்த போது, அத்துறைத் தலைவர் தமது பாராட்டைத் தெரிவித்தார். அத்துறையின் பேராசிரியை ஒருவர் ஐயா! நீங்கள் சிந்து சமவெளி நாகரிகப் பகுதிக்குப் சென்றீர்களா? எனக் கேட்டார்.

இல்லை அம்மா என்றோம். எந்த அடிப்படையில் கொண்டு சிந்து சமவெளி நாகரிக முத்திரைகளைப் படிக்கிறீர்கள்? என்றார். இணையதளத்தில் உள்ளவற்றைக் கொண்டு படிக்கிறோம் என்றோம். ஐயா! அவ்வாறு படிப்பதை ஆய்வுலகம் ஏற்றுக்கொள்ளாது அதற்கான நூல்களை மேற்கோள் காட்டவேண்டுமென்றார் அப்பேராசிரியை. நிற்க...

(சில ஆண்டுகளுக்கு முன் கோட்டையூரில் நிகழ்ந்த தமிழகத் தொல்லியல் கழகம் நடத்தும் வருடந்திரக் கருத்தரங்கத்தில் முதன் முதலில் யாம் கலந்துக் கொண்டு தமிழகக் குறியீடுகளைப் பற்றிய கட்டுரை ஒன்றைப் படித்தோம். அத்தொல்லியல் கழகத்தில் முக்கியப் பதவி வகித்த பேராசிரியர் ஒருவர் குறியீடுகளைப் பற்றிய ஆய்வுகளைத் தமிழகத் தொல்லியல் கழகம் ஏற்றுக்கொள்ளாது என்றார், அதனால் யாமடைந்த பெரும் அதிர்ச்சியைச் சொற்களால் விவரிக்க இயலாது.

சில ஆண்டுகளுக்குப் பின் அப்பேராசிரியரே குறியீடுகளிலிருந்தே தமிழ் மொழி எழுத்துக்கள் தோன்றியுள்ளன என ஒரு பத்திரிகையில் பேட்டி அளித்திருந்ததை அறிந்த போது எமது உதடுகளில் புன்னகை பூத்தது.) தொடர்க...

எங்களது உரையாடலை எமது மகளும், பேரனும் கேட்டுக் கொணடிருந்தனர். அப்பா! சிந்து சமவெளி நாகரிக முத்திரைகள் பற்றிய நூல்கள் எங்கே கிடைக்கும் என்றார் எமது மகள். சர் அஸ்கோ பர்போலாவின் படைப்புகளான அந்நூல்கள் பின்லாந்து நாட்டில் கிடைக்கும், அவற்றின் விலை அதிகம் என்றோம். எம்மகளோ, அப்பா அந்நூல்களைப்பற்றிய விவரங்களைச் கூறுங்கள், அவற்றை விரைவில் வரவழைத்து உங்களுக்குத் தருகிறேன் எனக் கூறினார்.

சிந்து சமவெளி நாகரிகக் குறியீடுகள், எழுத்துக்கள் பற்றிய விவரங்கள், பின்லாந்து நாட்டைச் சேர்ந்த அஸ்கோ பர்போலாவின் முதலாம், இரண்டாம் படைப்புக்களான Corpus of Indus scripts and inscription Volume -1 (Collections in India). Corpus of Indus scripts and inscription Volume -2 (Collections in Pakistan) ஆகிய இரண்டு நூல்களிலும், ஐயா ஐராவதம் மகாதேவன் படைப்பான The Indus Script (Texts, concordance and tables) எனும் நூலில் 417 குறியீடுகள், எழுத்துக்களும் அட்டவணைப்படுத்தப் பெற்றுள்ளன என்பதை அறிந்தோம். அந்நூல்களுள்ள நூலகங்களைக் காண முயற்சித்தோம்.

அம்முயற்சியின் போது, சென்னை தரமணியில் உள்ள திரு. ரோசா (ரோஜா) முத்தையா நூலகத்தில் அம்மூன்று நூல்கள் உள்ளன என்ற செய்தி தெரியவந்தது. அங்குள்ள நூல்களைக் காண விரும்புவதை முன்னறிவிப்புச் செய்தும், முறைப்படி அனுமதி பெற்றும் அங்குச் சென்றும் திரு. சுப்பு என்பவரின் உதவியுடன் அந்த நூல்களைக் கண்டோம். புகைப்படம் எடுக்க அனுமதியில்லை என்பதனால் குறியீடுகள், எழுத்துக்கள் ஆகியவற்றை வரைந்தும் சில குறிப்புக்களை மட்டும் எடுத்துக் கொண்டோம்.

ஐயா ஐராவதம் மகாதேவன் படைப்பான The Indus Script (Texts, concordance and tables) எனும் நூலில் அட்டவணைப்படுத்தப்பட்டுள்ள 417 குறியீடுகள், எழுத்துக்கள் கொண்ட அட்டவணையைப் பக்கம் ஒன்றுக்கு உருபாய் பத்து என நான்கு பக்கங்களுக்கு நாற்பது உருபாய் கட்டணத் தொகையைச் செழுத்தி அவற்றின் நகல்களைப் பெற்றுக் கொண்டோம்.

அந்நூலகத்தின் உயர்பதவி வகிக்கும் (Director) ஐயா சுந்தர் அவர்களைச் சந்தித்துச் சிந்து சமவெளி நாகரிகக் குறியீடுகளையும், எழுத்துக்களையும் படிக்க முடியும் என உறுதிக் கூறியும், எமது இரண்டு நூல்களை நூலகத்திற்கு வழங்கியும் இல்லம் திரும்பினோம்.

Corpus of Indus Scripts and Inscription (CISI) volume 01, Collections in India பற்றிய தகவலை எமது ஆசை மகளுக்கு அறிவித்தோம். அவர் கூறியபடியே ஒரு மாதத்திற்குள் அந்நூலை வரவழைத்துக் கொடுத்தார். பின்னர், CISI volumes 01, 02, 3.1, 3.2 ஆகிய மூன்று நூல்களை ஒன்றன்பின் ஒன்றாக வரவழைத்து எமது பிறந்த நாள் பரிசுகளாகக் கொடுத்துதவினார்.

பல மாதங்கள் பெரும் முயற்சி செய்து சோதனை மற்றும் பிழை முறையில் 12 உயிர் எழுத்துக்களில் **'ஐ,ஔ'** நீங்களாக 10 உயிரெழுத்துக்களையும், 18 மெய்யெழுத்துக்களையும் அடையாளம் கண்டு அட்டவனைப்படுத்தினோம்.

M-304A என்ற அடையாள எண்ணுடைய முத்திரையைப் பசுபதியோன் எனப் படித்தோம் என முன் கூறியது நினைவுக் கொள்ளத்தக்கது. பின்னர் அதையே **பசு இட்ட பதியான்** எனச் சரியாகப் படித்தோம். **பசு - பாசம் - பதி** எனும் முப்பொருள் உண்மை என்பதுடனான அதன் தொடர்பை உணர்ந்தோம்.

பசு இட்ட பதியான் என்பதற்குப் பசுக்களைப் (சிற்றுயுயிர்களைப்) படைத்த பதி (தலைவன்) என்பது தன்மை ஒருமைப் பெயர் என்பதைத் தமிழகராதியின் வாயிலாக எம்மால் பொருளறிய முடிந்தது. அதனைத் தொடர்ந்து 50-க்கும் மேற்பட்ட பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் பதிவு செய்யப்பெற்றுள்ள குறியீடுகளையும், எழுத்துக்களையும் படித்துத் தமிழ் அகராதியின் துணையுடன் பொருளறிய முடிந்தன.

Ancient Thamizh - The Faculty of Harappan Symbols and Scripts (2018), சிந்து சமவெளி முத்திரைகள் கூறும் சிவபெருமான் மகிமைகள் *(2018)*, திருவெள்ளறை மார்ப்பிடுகு பெருங்கிணறு காட்டும் அறிவியிலும் ஆன்மிகமும் *(2019)*, சிந்து சமவெளி முத்திரைகளும் பழந்தமிழ்க் குறியீடுகளும் எழுத்துக்களும் *(2020)* ஆகிய நான்கு நூல்களை வெளியிட்டோம். இதனையறிந்த அருண்பிரசாத் நடராசன் என்பவர் தமது Sunday Disturbers எனும் வலையொலியில் அதனைப் பற்றிய செய்தியை வெளியிட்டு உதவினார்.

தமிழன்பர்களின் விருப்பத்திற்கிணங்க Proto -Thamizh எனும் Whatsup group வாயிலாகச் சிந்து சமவெளி நகர நாகரிகப் பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் காணப்படுவதைப் படித்துப் பொருள் அறியும் இரண்டு மாதப் பயிற்சியை அளித்தோம்.

அருள்மிகு செடல் மாரியம்மன் திருக்கோயில் சிறப்புக்கள் (2020), உள்ளுரையாடல் (2021), திருவானைக்கா ஆத்ம சோதி குறியீடும் ஆடு புலி விளையாட்டும் (2021), முத்தரையர்க் கல்வெட்டுக்கள் (2022) ஆகிய நான்கு நூல்களை வெளியிட்டோம்.

தொல்காப்பியர் அருளியத் தொல்காப்பியத்தின் காலம் பொ.ஆ.மு. 5,500 என எமது 16ஆவது நூலான **சிந்து சமவெளி முத்திரைகளில் செந்தமிழ்த் தொல்லிலணக்க இலக்கியச் சுவடுகள்** என்ற தலைப்பில் 2022ஆம் ஆண்டு தமிழால் இணைவோம் வாயிலாக வெளியிட்டோம்.

அப்போது, செந்தமிழ் மொழியின் எழுத்துக்களின் வகை, எண்ணிக்கையைப் பற்றிய செய்திகள் ஏதேனும் அறிவிக்கப்பெற்றுள்ளதா? என்ற வினா என் ஆழ்மனதிலிருந்து மேலெழுந்தன.

முதலாவதாக, ஐந்திறம் (7) கூறும், **'குறிகுறி யீடே வரைவென வாகி அறிநிலை எழுதலின் எழுத்தெனப் படுமே'** எனவும், **'மூலம், காலம், கோலம், சீலம், ஞாலம்'** என ஐந்தியல் முறைப்படியும், தொல்காப்பியம் கூறும் **'எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி** எனத் தொல்காப்பியம் கூறும் ஐந்திலக்கணம் முறைபடியும் செந்தமிழ்மொழியின் எழுத்துக்கள் குறியீடுகளிருந்து வெளிப்பட்டுள்ளன என்பதும் தெரியவந்தன.

இரண்டாவதாக, செந்தமிழ்மொழியின் எழுத்துக்கள் **'வட்டம், சதுரம், முப்ப:.து இரண்டில் ஒன்றிலிருந்து தோன்றின'** என்ற சிறு குறிப்பு மட்டும் நச்சினார்க்கினியரின் தொல்காப்பியம் உரை நூலில் காணமுடிந்தது.

மூன்றாவதாக, தொல்குடி மக்களே முதலில் பாறை ஓவியங்களாகவும், சிந்து சமவெளி நாகரிகப் பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் படச்சொற்களாக அதாவது குறியீடுகளாகவும், குறியீடுகளும் ஒலி எழுத்துக்களும் கலந்துள்ளவையாகவும், ஒளிஒலியுடை எழுத்துக்களாக ஓலைச் சுவடிகளிலும், பின்னர் கல்லெழுத்துக்கள் எனும் கல்வெட்டுக்களாலும், செப்புப் பட்டயங்களாலும் என ஒன்றையடுத்து மற்றொன்றாகப் பதிவிட்டுள்ள செய்திகளும் எம்மால் அறியமுடிந்தன.

உண்மையில் தொல்குடி மக்கள் செந்தமிழ் மொழியின் எழுத்துக்களின் வெளிப்பாட்டைப் பற்றி அறிவிக்கவில்லையா? அல்லது அவை மறைக்கப்பட்டதா? அல்லது அழிக்கப்பட்டதா? என்ற ஐயமும் எழுந்தன. **'உள்ளுவது எல்லாம் உயர்வுள்ளல்: மற்றது தள்ளினும் தள்ளாமை தீர்த்து'** எனும் திருக்குறளின் (595) படி, தொல்குறியீடுகள், எழுத்துக்கள் பற்றிய எமது 33 ஆண்டுகள் காலத் தொல்லியல் பரப்பாய்வு, நூலாய்வு ஆகியவற்றின் வாயிலாக அவ்வினாக்களுக்கான விடைகாணும் முயற்சி மேற்கொள்ளப்பெற்றது.

அம்முயற்சியின் வெளிப்பாடாக, **ஏ! செந்தமிழ் எழுத்தே!** (2023), **தொல்லியல் தமிழ்த்துறை மாணவர்களுக்கான பயிற்சிக் கையேடு** (2023) ஆகிய நூல்களை வெளியிட்டோம். பல்வேறு கருத்தரங்கங்களிலும், தமிழால் இணைவோம் (Whatsup group ) வாயிலாகவும், தமிழகக் கல்லூரிகளில் வரலாறு, தமிழ்த் துறை மாணவர்களுக்குத் தமிழ் மொழியைப் பற்றிய செய்திகளைக் காணொளிக் காட்சியாக நேர்முகப் பயிற்சியளிக்கும் பணியைத் தொடர்ந்தோம்.

2023ஆம் ஆண்டு வடஅமெரிக்கா தமிழ்ச் சங்கம் நடத்திய (FETNA ) நிகழ்ச்சியில் கலந்து கொண்டு சிந்து சமவெளி முத்திரைகளில் செந்தமிழ்த் தொல்லிலக்கண இலக்கியச் சுவடுகள் என்ற தலைப்பில் காணொளி காட்சியாகச் சிந்து சமவெளி நாகரிகம் பழந்தமிழர் நாகரிகமே என்பதை அறிவித்தோம். The American TVஇன் நிருபரான அன்புடன் ஆனந்தி சிந்து சமவெளி நாகரிகம் பற்றிப் பேட்டி எடுத்து ஒளிப்பரப்பினார்.

இந்தியத் தொல்பொருள் துறை, தமிழகத் தொல்லியல் துறை ஆகிய இரண்டு துறையினராலும், முனைவர் இராசனாலும் தமிழகத்தில் மேற்கொள்ளப்பட்டு வரும் அகழாய்வுகளில் வெளிக் கொணரப்பெற்ற பானை ஓடுகளில் சிந்து சமவெளி நாகரிகக் குறியீடுகள், எழுத்துக்கள் பொறிக்கப் பெற்றுள்ளதையும், அவற்றைப்பற்றி முழுமையான செய்திகள் அறிவிக்கப்படாததையும் கண்டு வியந்தோம்.

2024ஆம் ஆண்டு எமது 78ஆவது அகவை மூப்பின் காரணமாக ஏற்படும் சில அறிகுறிகளை உணர்ந்தோம். **எந்ததொரு நாடு தன் தாய்மொழியையும், தன் வரலாறு மற்றும் கலாச்சாரத்தையும் மறந்து விடுகிறதோ அது தன்னையே மறந்துவிடும்** என்ற உண்மையின் அடிப்படையில் சிந்து சமவெளி மக்களும், பழந்தமிழக மக்களும் அறிந்து அறிவித்துச் சென்றுள்ள செந்தமிழ் மொழியின் சிறப்புக்கள் அழிந்துவிடாமல் பாதுகாக்கும் பொருட்டு, **சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழியே!** எனும் தலைப்புடைய இந்நூலில், செந்தமிழ் மொழி எழுத்துக்களின் வகை, எண்ணிக்கை, வெளிப்பட்ட முறை, சிந்து சமவெளி நகர நாகரிகத்திற்கும் பழந்தமிழக நாகரிகத்திற்குமான தொடர்பு ஆகியவற்றைத் தொல்லிலக்கிய இலக்கணச் சான்றுகளுடனும், பல்வேறு வரலாற்றுச் சான்றாதாரங்களுடனும் அனைவரும் படித்துப்பொருள் அறியும் முறையைத் தமிழ்க் கூறும் நல்லுலகுக்குச் சமர்ப்பிக்க முடிவெடுத்தோம். 2024ஆம் ஆண்டு சிந்து சமவெளி குறியீடுகள், எழுத்துக்களைப் படித்துப் பொருள் கூறுவோருக்குப் பாராட்டும், சன்மானமும் வழங்கப்பெறும் என மாண்புமிகு தமிழக முதல்வர் மு.க.ஸ்டாலின் அறிவித்தார்.

எமது ஆய்வுப் பணியைப் பாராட்டும் வகையில் தொன்மைக் குறியீட்டாய்வாளனாகிய எமக்கு, இந்நாள் வரை வழங்கப் பெற்ற அறிவியல் ஆன்மிக விஞ்ஞானி, மொழிக் காவலர், வாழ்நாள் சாதனையாளர், வாழும் வரலாறு, அநிருத்தர் போன்ற விருதுகளை விட யாம் மேற்கொண்ட இப்பணியின் முடிவை எமது வாழ்நாளின் இறுதிக்கு முன்பாகவோ அல்லது பின்னரோ தமிழ்க் கூறும் நல்லுலகம் ஏற்றுக் கொள்ள முன்வருமேயானால், அதுவே எமக்கு வழங்கப்பெறும் மிகப் பெரிய, பாராட்டும் சன்மானமும் ஆகும்.

# பொருளடக்கம்

# சிந்து சமவெளி நகர நாகரிகம்

'சிந்து சமவெளி நகர நாகரிகம்' என்ற தலைப்பில் சிந்து சமவெளி, சிந்து சமவெளி நகர நாகரிகம், பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள், குறியீடுகள், எழுத்துக்கள் ஆகியவற்றைப் பற்றி மிகச்சுருக்கமாக ஆராந்தறியப் பெறுகின்றன.

## சிந்து சமவெளி

சிந்து சமவெளி என்பது முற்காலத்தில் இந்தியத் துணைக் கண்டத்தின் வடமேற்கு எல்லையில் அமைந்திருந்ததொரு பெரும் நிலப்பரப்பாகும். அந்நிலப்பரப்பு, தற்போதைய பாகிஸ்தான் நாட்டின் முழு நிலப்பகுதியும், இந்தியா, ஆப்கானிஸ்தான், ஈரான் ஆகிய நாடுகளின் எல்லைப்பகுதிகளும் உள்ளடங்கிய 12, 60, 000 சதுர கிலோ மீட்டர் பரப்பளவைக் கொண்டதொரு பரந்த நிலப்பரப்பாகும். வடதிசையில் அமைந்துள்ள இமயமலைப் பகுதியிலிருந்து உற்பத்தியாகும் சிந்து நதியானது, **பகவ(ா)ன்புரம்** எனும் பகுதியைச் சூழ்ந்துள்ள அதன் கிளை நதிகளான சீலம், சீனாப், சட்லச், இரவி ஆகிய நதிகள் ஒருங்கிணையவே **'பஞ்சநதம்'** என்னும் ஒரு சீவநதியாகி அந்நிலப்பகுதியில் பாய்ந்தோடியதால், நீர்வளம் நிறைந்த அப்பகுதி '**சிந்து சமவெளி** (Indus Valley)' என்று அழைக்கப்பெற்றுள்ளது.

அந்தச் சிந்து சமவெளியில் குறிப்பாகச் சிந்து நதியானது **பஞ்சநதமாகத்** தன் பயணத்தைத் துவங்கும் பகுதிக்குப் '**பஞ்சநாடு**' என்ற பெயர் பெற்று, மேல்திசையிலுள்ள சிந்து சாகர் என்னும் அரபிக்கடலில் கலந்து தனது நெடுந்தூரப் பயணத்தை முடித்துக் கொள்ளுகிறது. அவ்வாறு முடித்துக்கொள்ளும் இடத்தினருகே '**பாதாளா**' எனும் ஒன்றும் இருந்துள்ளது. **பாதாளலோகம் (எ) நாகநாடு** பற்றியதொரு குறிப்பு '**செவ்வந்திப் புராணம்**' எனும் நூலில் **பாடல் எண்-289இல்** குறிப்பிடப்பெற்றுள்ளது.

## சிந்து சமவெளி நகர நாகரிகம்

பொ.ஆ.மு.326 ஆம் ஆண்டு மாவீரன் அலெக்ஸாண்டர் இந்திய மீது படையெடுத்து வந்தபோது, அவனின் படைத்தளபதி ஒருவர் சிந்து சமவெளிப் பகுதியில் நகரங்கள் புதைந்திருந்துள்ளதை அறிவித்தும், அலெக்ஸாண்டர் அதற்கு முக்கியத்துவம் கொடுக்கவில்லை. 1826 ஆண்டு சார்லஸ் மேசன் என்ற ஆங்கிலேயர் தமது நெடுந்தூரப் பயணக் குறிப்புக்களில் சிந்து சமவெளி நகர நாகரிகப் பகுதிகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் கராச்சி முதல் லாகூர் வரை தொடர் வண்டிப் பாதை அமைப்பதற்கு இறந்தவர் மேடு எனும் மோஹெஞ்சொ-தரோவில் புதைந்து கிடந்த சுட்ட செங்கற்களின் சிறப்பை அறியாமல் அவற்றைத் தோண்டி எடுத்துப் பயன்படுத்தியுள்ளனர்.

சர் ஜான் மார்ஷல், இந்தியத் தொல்பொருள் துறையில் பொது ஆளுனராகப் பதவி வகித்த போது, சிந்து சமவெளியில் அகழாய்வுகள் மேற்கொள்ளப்பெற்றன. அப்போது வெளிக்கொணரப்பெற்றுள்ள தொல்பொருட்களின் அடிப்படையில் சிந்து மற்றும் அதன் உபநதிக்கரைகளில் தலைத்தோங்கிய நாகரிகத்தைச் சிந்து சமவெளி நகர நாகரிகம் என 20.09.1924இல் சர் ஜான் மார்ஷல் இலண்டன் மாநகரில் அறிவித்துள்ளார். சிந்து சமவெளி நகர நாகரிகம் என்பதற்கு **அறப்பன் நாகரிகம்** எனும் மற்றொரு பெயருமுண்டு.

கடந்ததொரு நூறு ஆண்டுகளுக்கும் முன்பாக இந்தியத் தொல்பொருள் துறையினர் சிந்து சமவெளி பகுதியிலுள்ள மோஹெஞ்சொ-தரோ, அறப்பா போன்ற பல்வேறு இடங்களில் தொல்பொருள் அகழாய்வுப் பணிகளை மேற்கொண்டுள்ளனர்.

அந்த அகழாய்வுப் பணியின் போது சுட்டச் செங்கற்களால் கட்டப்பட்ட குடியிருப்பு வீடுகள், தானியச் சேமிப்புக் கிடங்குகள், நீர் சேமிப்புக் குளங்கள், குளியல் மற்றும் கழிவு அறைகள், கழிவுநீர் வெளியேறும் பாதாள சாக்கடைக் குழாய்கள், யானைத் தந்தத்திலான நீட்டல் அளவுகோல்கள், உலோகங்களான நிறுத்தல் அளவுகோலின் எடைகள், தாய விளையாட்டுக் கட்டைகள், பல வண்ணங்களுடைய பாசி மணிகள், சுடுமண் பொம்மைகள், சிற்பங்கள் போன்ற ஏராளமான தொல்பொருட்கள் வெளிக்கொணரப்பெற்றுள்ளன.

அத்தொல்பொருட்களின் சி-14 கரிமப் பகுப்பாய்வு முடிவுகளின்படி அவற்றின் காலம் பொ.ஆ.மு. 3,500 முதல் பொ.ஆ.மு. 1,500 வரையிலான இடைப்பட்ட காலகட்டத்தைச் சார்ந்ததாக முதலில் கணக்கிடப்பெற்றுள்ளன.

பின்னர், சிந்து சமவெளி பகுதியிலுள்ள மெஹராவில் மேற்கொண்ட அகழாய்வின் போது வெளிக்கொணரப்பட்ட தொல்பொருட்களின் சி -14 கரிமப் பகுப்பாய்வு முடிவுகளின் படி அவற்றின் காலம் பொ.ஆ.மு. 5,500 முதல் - பொ.ஆ.மு. - 1,500 வரையிலானது என்பது அறியப்பெற்றுள்ளது. சிந்து சமவெளி நாகரிகத்தின் காலம் அதற்கும் முற்பட்டதாக இருக்கக் வாய்ப்புண்டு என்பது எமது தனிப்பட்ட கருத்து.

சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் எச்சங்களான தொல்பொருட்களில் குறிப்பாக வண்ணங்களும் சித்திர வேலைப்பாடுகளும் கொண்ட வீட்டு உபயோகப் பானைகள், உடைந்த பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் குறியீடுகளும், எழுத்துக்களும் பொறிக்கப்பட்டுள்ளவை அனைத்தும் ஒரு நகர நாகரிகத்தின் அடையாளச் சின்னங்களாக ஏற்றுக்கொள்ளப்பெற்றுள்ளன.

வெறும் படச்சொற்களைக் (Pictographic words) கொண்டவையான நைல் நதிக்கரை எகிப்து நாகரிகம், மஞ்சள் நதிக்கரை சீன நாகரிகம், இப்ரட்டஸ், டிகிரிஸ் ஆகிய இரண்டு நதிக்கரைகளின் மொசப்பட்டோமா நாகரிகம் ஆகிய மூன்று நாகரிகங்களை விடச் சிந்து சமவெளி நகர நாகரிகம் மூத்த நாகரிகம் எனவும், பொ.ஆ.மு. 5,500ஆம் வருடம் உலக வரலாற்றின் துவக்கக் காலம் என 20. 09. 1924ஆம் ஆண்டு சர் ஜான் மார்ஷெல் அறிவித்துள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

அவரது அறிவிப்பின் முடிவில் அந்நாகரிகம் பற்றிய இரண்டு கேள்விகளுக்கு, முதலாம் கேள்விக்கு அந்நாகரிகம் மௌரியர் பேரரசு ஆட்சிக்காலத்துக்கும் முற்பட்டதென்றும், இரண்டாம் கேள்விக்கு அம்மக்கள் (மத்திய ஆசியாவிலிருந்து வந்த) திராவிடர்களாக இருக்கக் கூடுமெனப் பதிவிட்டுள்ளார்.

அறிந்தோ அறியாமலோ அவரது இரண்டாம் கேள்விக்கான விடை சிந்து சமவெளி நகர நாகரிக மக்கள் ஆரியரா? திராவிடரா? தமிழரா? என்ற வாத விவாதங்களுக்கும் கருத்து வேறுபாடுகளுக்கும் வித்திட்டுள்ளது என்றாலது தவறாகாது.

## பானைகளும், பானை ஓடுகளும்

சிந்து சமவெளி நகர நாகரிகத் தொல்பொருட்களில் முதலாம் வகை பானை ஓடுகள். அவற்றுள் முழுமையான வீட்டு உபயோக மண்பாண்டங்கள். அவற்றில் வண்ணம் தீட்டப்பட்ட அலங்கார வேலைப்பாடுகளுடன் மீன், எருது போன்ற மேலும் பல உருவங்களைக் கொண்டவை உள்ளடங்கும். பொதுவாக அவற்றில் எழுத்துக்கள் காணப்பெறுவதில்லை. உடைந்த பானை ஓடுகள் பெரும்பாலும் முதுமக்கட்டாழி எனும் ஈமச்சின்னங்களின் உடைந்த பாகங்கள்.

அப்பாகங்களில் திருஉருவங்கள், வரைப்படக் கணிதக் குறியீடுகள், ஒளிரேகைகள், ஐந்து முனைநட்சத்திரம், அறுகோணம், புள்ளிகளை இணைக்கும் செங்குத்து மற்றும் படுக்கைக் கோடுகள், எண்கள், எழுத்துக்கள், எழுத்துக்களைக் கொண்ட தொல்வாச்சியங்கள் உள்ளடங்கும். அந்தத் தொல்வாச்சியங்கள் இடமிருந்து வலமாகப் படித்துப் பொருளறியும் படியாகக் கீறப்பெற்றுள்ளன.

## வில்லைகள்

சிந்து சமவெளி நகர நாகரிகத் தொல்பொருட்களில் இரண்டாம் வகை வில்லைகள். அவை, மிருதுவான மாவுக்கல்லாலும், சில உலோகங்களாலுமானவை. சதுரம், செவ்வகம் போன்ற மேலும் பல வடிவங்களுடன் ஒன்று முதல் இரண்டு சதுர அங்குல அளவுகளுடையவை. உருக்குக் கம்பிகள் போன்றவையும், முப்பட்டை முகமுடைய கம்பிகளும் உள்ளடங்கும். அவற்றில் கீறல் மற்றும் புடைப்பு வகையைச் சேர்ந்த குறியீடுகள், குறியீடுகளுடன் கூடிய எழுத்துக்கள், அரைவட்ட வடிவ அடைப்புக் குறிகளில் உள்ள எழுத்துக்களைக் கொண்ட சொற்றொடர்கள் உள்ளன. அவை, இடமிருந்து வலமாகப் படிக்கும் படியாகவும் உள்ளன.

## முத்திரைகள்

சிந்து சமவெளி நகர நாகரிகத் தொல்பொருட்களில் மூன்றாம் வகை முத்திரைகள். அவற்றின் எண்ணிக்கை சற்றே அதிகம். அம்முத்திரைகள் மிருதுவான மாவுக்கல்லாலும், சில உலோகங்களாலும் ஆனவை. சதுரம், செவ்வகம் போன்ற பல்வேறு வடிவங்களுடன் ஒன்று முதல் இரண்டு சதுர அங்குல அளவுகளுடையவை.

அவற்றில் புடைப்பு வகையைச் சார்ந்த குறியீடுகள், குறியீடுகளுடன் கூடிய எழுத்துக்கள் ஆகியவற்றைக் கொண்ட சொற்றொடர்கள் பொறிக்கப்பெற்றுள்ளன. அம்முத்திரைகளில் உடைந்து போன (அ) சிதைந்துபோன பகுதிகளில் குறியீடுகள், எழுத்துக்கள், மிருகங்களின் உருவங்களும் உள்ளன.

பெரும்பான்மையான முத்திரைகளின் பின்புறம் துளையிடப்பெற்ற குமிழ் போன்ற அமைப்புடையவை. அம்முத்திரைகளில் பொறிக்கப்பட்டுள்ள குறியீடுகளும் எழுத்துக்களும் வலமிருந்து இடமாகப் பொறிக்கப்பட்டுள்ளன. அம்முத்திரைகளை மிருதுவான துணி, தோல், மரப்பட்டைப் போன்றவற்றின் மீது அச்சிட்டு இடமிருந்து வலமாகப் படிக்கும்படியாக உள்ளன.

1872ஆம் ஆண்டு அறப்பாவில் மேற்கொண்ட அகழாய்வின் போது சர் மேஜர் கிளர்க் என்பவரால் வெளிக் கொணரப்பெற்றுள்ளதே முதல் முதலாவதாக வெளிக்கொணரப்பட்ட முத்திரை என்பது சிறப்புச் செய்தியாகும். அவர், இம்முத்திரையை 1886ஆம் ஆண்டு இங்கிலாந்து அரசு அருங்காட்சியகத்திற்கு ஒப்படைத்துள்ளார்.



சதுர வடிவிலான அந்த முத்திரை, கருமை நிறமுடையதாகவும், வழவழப்பாகவும், எட்டு எழுத்துக்களையும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

இம்முத்திரையைப் பிறதேசத்தைச் சேர்ந்தப் படிக்க இயலாத முத்திரை எனச் சர் அலக்சாண்டர் கண்ணிஹாம் குறிப்பிட்டுள்ளார். அவர் குறிப்பிட்டதைச் சர் நெயில் மாக்கிரிகோர் மறுத்து இம்முத்திரையே இந்திய வரலாற்றைப் பற்றித் தூண்டுவது எனப் பதிவிட்டுள்ளார். அவரது அப்பதிவு **"ஒரு பானைச் சோற்றுக்கு ஒருசோறு பதம்"** என்பதற்கோர் உதாரணமாகும்.

இந்த முத்திரையை மிருதுவான துணி, தோல் மீது அச்சிட்டு இடமிருந்து வலமாகப், பா + ந + ள் + ளு + உ +ச + ட் + ட +ஆ. **பா நள்ளு உ சட்ட ஆ** எனப்படிக்கப்பெறுகிறது. (பா-தூய்மை(யான). நள்ளு - நட்பு, உ - செய்(து)தல் . சட்ட- செய்வதாக (அ) நன்றாக. ஆ -சிற்றுயிர் /ஆகுக /ஆகுகை) தொல்வாச்சியம் :**தூய்மையான நட்பு செய்தல் நன்றானதாகுக.**

இந்த முத்திரையை மிருதுவான துணி, தோல் மீது அச்சிட்டு இடமிருந்து வலமாகப், பா + ந + ள் + ளு + உ +சா + (அ)ட ் + ட +ஆ. **பா நள்ளு உசா இட்ட ஆ** எனவும் ப்படிக்கப்பெறுகிறது. (பா-தூய்மை(யான). நள்ளு - நட்பு, உசா - ஆய்வு / ஆராய்ச்சி. இட்ட- கொடுத்த, வைத்த, படைத்த. ஆ -சிற்றுயிர் /ஆகுக /ஆகுகை) தொல்வாச்சியம். **தூய்மையான நட்பு ஆய்வுக்கு இட்டதாகுக** எனவும் படித்துப் பொருளறியலாம்.

பேராசான் திருவள்ளுவர் **நட்பு (79), தீ நட்பு (82), நட்பாராய்தல் (80)** ஆகிய மூன்று தலைப்புகளில் குறிப்பாக **நட்பாராய்தல் (80)** என்பதில் **"நாடாது நட்டலின் கேடில்லை, நட்டபின் வீடில்லை நட்பாள் பவர்க்கு**" என முதலாவது குறளின் வாயிலாக அறிவித்துள்ளார்.

எனவே, பேராசான் திருவள்ளுவர் சிந்து சமவெளி நகர நாகரிகத் தொல்வாச்சியங்களைப் பற்றி நன்கு அறிந்திருக்கக் கூடும் என்பதும், இம்முத்திரைக் கூறும் செய்தியைச் சர் நெயில் மாக்கிரிகோர் உணர்ந்துள்ளார் என்பதும் இம்முத்திரையின் சிறப்புச் செய்திகளாகும்.

சர் அஸ்கோ பர்போலா தொகுப்புகளான *01, 02, 3.1, 3.2* ஆகிவற்றில் அடையாள எண்களுடன் அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ள பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றின் எண்ணிக்கை 5,500-க்கும் மேற்பட்டவை. அவற்றுள் படித்துப் பொருளறியக் கூடியவை 2,500-க்குள் உட்பட்டவை. அடையாள எண்களில்லாதவை சில முத்திரைகள் உலக நாடுகளின் அரசு அருங்காட்சியகங்களில் பாதுகாக்கப்பெறுகின்றன.

சிந்து சமவெளி நகர நாகரிகக் குறியீடுகள், எழுத்துக்கள், கூட்டெழுத்துக்கள் ஆகியவை அட்டவணையிட்டு இந்நூலில் காட்டப்பெறுகின்றன. அவற்றைப்பற்றி விரிவாகவும், தொல்வாச்சியங்களைப் படித்துப் பொருள் அறியும் முறையையும் இந்நூலில் காணலாம். சிந்து சமவெளி நகர நாகரிக மொழியைப் பற்றிய பல்வேறு கருத்து வேறுபாடுகளுண்டு. எனவே அக்கருத்து வேறுபாடுகளைக் காண்போம்.

# சிந்து சமவெளி நகர நாகரிக மொழியைப் பற்றிய கருத்து வேறுபாடுகள்

சர் ஜான் மார்ஷல் 1924 ஆம் ஆண்டு சிந்து சமவெளி நாகரிகம் உலகின் மூத்த நாகரிகமென அறிவித்த நாள் முதல், உலக மொழி ஆராய்ச்சியாளர்கள் குறியீடுகளையும், எழுத்துக்களையும் கொண்ட சிந்து சமவெளி நகர நாகரிக மொழியைப்பற்றி (1924 முதல் 2024 வரையிலான) ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக ஆய்வுப் பணியை மேற்கொண்டுள்ளனர்.

அவை புரியாத புதிராகவும், அதிசயமாக உள்ளதாகவும், இரண்டு அல்லது மூன்று மொழிகளின் எழுத்துக்களையும், சொற்களையும் கொண்ட "**Rosetta Stone** (ரோசட்ட ஸ்டோன்)" போன்ற தொல்லியல் ஆதாரச்சான்று ஏதேனும் ஒன்று கிடைத்தால் மட்டுமே அவற்றைப் படித்தறிய முடியும் என்ற ஒருமித்த முடிவுக்கு வந்துள்ளனர்.

இருப்பினும், சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் மொழி, பழந்திராவிட மொழிக் குடும்பத்தைச் சார்ந்ததொரு மொழியாக இருக்கக்கூடும் என்பது பின்லாந்து நாட்டைச் சேர்ந்த சர் அஸ்கோ பர்போலா, உருசிய நாட்டைச் சேர்ந்த சர் அலெக்சாண்டர் டுபினஸ்கை, தமிழகத்தைச் சேர்ந்த ஐயா ஐராவதம் மகாதேவன் ஆகியோரின் கருத்தாகும்.

அந்நாகரிகம், சரசுவதி நதி நாகரிகம் அல்லது வேத நாகரித்தைச் சேர்ந்த சமசுகிருதம் மொழியைச் சார்ந்ததென்பது சில மேலைநாட்டுச் சமசுகிருதம் மொழி பண்டிதர்கள், இந்திய நாட்டின் சமசுகிருதம் மொழிப் பற்றாளர்கள் ஆகியோரின் கருத்தாகும்.

சிந்து சமவெளி நாகரிகம் பழந்தமிழ் நாகரிகம், அதன் மொழி செந்தமிழ் மொழி என்பது பேராசிரியர் மதிவாணன், ஐயா பூரண சந்திர ஜீவா, யாம் ஆகிய மூவரின் கருத்தாகும்.

இந்தியத் துணைக்கண்டம் முழுவதையும் அரசாண்ட ஆங்கிலேயர்கள் பிறர் சொல் கேட்டு வடபகுதியின் மொழி சமசுகிருதம் என்றும், தென்பகுதியின் மொழி திராவிட மொழிக் குடும்பம் என்றும் பிரித்துக் கூறியதே இக்கருத்து வேறுபாடுகளுக்கான மூலக்காரணம் எனலாம்.

ஒரு மொழியின் சொற்களைப் படித்துப் பொருள் அறிவதற்கு முதலில் அம்மொழியின் (உயிர், மெய், உயிர்மெய்) எழுத்துக்களை அடையாளம் காணப்பெறவேண்டும். அவ்வாறு அடையாளம் காணப்பெறா விட்டால், அம்மொழியின் சொற்களைப் படித்துப் பொருள் அறிய இயலாது என்பது யாராலும் மறுக்க முடியாத உண்மை.

ஆனால், இந்தியத் துணைக்கண்டத்தில் குறிப்பாகத் தமிழகத்தில் பிறந்து வளர்ந்த சில சமசுகிருத மொழிப் பற்றாளர்கள் அம்மொழியின் எழுத்துக்களை அடையாளப்படுத்தாமல், சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் முத்திரைகளை உலோக வார்ப்புக் கட்டிகள் (Ingots) எனவும், அவற்றைக் கொண்டு பல்வேறு பொருட்களை உற்பத்தி செய்தவர்களே உலோகத் தட்டர்கள். அத்தட்டர்களே படைப்புக் கடவுளராகிய பிரம்ம தேவனின் சந்ததியர் எனவும், பிரம்மத் தேவனின் நாவில் குடிகொண்டிருக்கும் சாரா எனும் சரசுவதி என்ற பெயரில் ஒரு நதி பாய்ந்தோடியதாகவும், அதனால் சிந்து சமவெளி நகர நாகரிகம் சரசுவதி நதி நகர நாகரிகம் எனும் வேத நாகரிகம், அதன் மொழி சமசுகிருதம் என உறுதிபடுத்தப் பல்வேறு வகையில் முயற்சி செய்கின்றனர். தற்போது சிந்து - சரசுவதி நாகரிகம் எனவும் கூறத்துவங்கியுள்ளனர்.

அலகாபாத்தில் கங்கை, யமுனை, அந்தர்வாணி (பூமிக்கடியில் பாய்ந்தோடும் நதி) எனும் சரசுவதி ஆகிய மூன்றும் சங்கமிக்கும் இடத்தைத் திரிவேணி சங்கமம் என்பர். இந்தியத் துணைக்கண்டத்தில் **இரண்டு பெரு நதிகளுக்கு ஒரே ஒரு பெயர்** இருந்துள்ளதாக வரலாற்றுப் பதிவுகள் ஏதும் இருப்பதாகத் தெரியவரவில்லை.

சிந்து நதிக்கு **சிந்து** என்ற பெயர்ச் சொல் என ஈரானியர்களுக்கு அவெட்தாவில் குறிப்பிடப்பெற்றுள்ளது. அசிரியர்கள் **சிந்தா** எனவும், பாரசீகர்கள் **அப் - இ - சிந்த்** எனவும், கிரேக்கர்கள் **இந்தோசு** எனவும், பட்தூனியர் **அபாசிந்த்** எனவும் அரேபியர்கள் **அல் - சிந்து,** எனவும், சீனர்கள் **சின்டோவை**, ஜாவனியர் **சாத்திரி** எனவும், பாலி மொழியில் ஆறு, ஓடை எனப்படும் **சிந்து** எனவும், ஆங்கிலேயர்கள் கிரேக்கர்களின் **இந்தோசு** என்பதிலிருந்து **இந்தசு (Indus)** எனப் பெயரிட்டுள்ளது போன்றவை பல்வேறு செய்திக் குறிப்புக்களின் வாயிலாகத் தெரியவருகின்றன. வேதநூல்களைத் தவிர **சரசுவதி** நதியைப்பற்றிய குறிப்புக்கள் ஏதுமில்லை என்பது குறிப்பிடத்தக்கது. சமசுகிருத மொழியில் **சிந்து நதியை ஒரு வலிமை மிகுந்த வீரனாகவும் (ஆண்பாலாகவும்), சரசுவதி நதியை (பெண்பாலாகவும்)** மறைமுகமாகக் குறிப்பிடப்பெற்றுள்ளன.

சமசுகிருத மொழியில் கூறப்படும் பிரம்மபுத்ரா எனும் ஆண்பால் பெயருடைய நதி கைலாயமலையில் **சாங்-போ** என்ற பெயரில் துவங்கி அருணாசலம் பிரதேசத்தில் **சியாங்** எனப் பெயர் பெற்றும், அசாம் மாநிலத்திலுள்ள துப்ரியில் **சந்தோசு** எனும் ஆறுடன் இணைந்தும் வங்கதேசத்தில் **ஜமுனா** என்ற பெண்பால் பெயர் பெற்றுள்ளது.

பொதுவாக நிலவுலகை நிலமகள் என்பர். அந்நிலமகளின் மேடான மலைகளில் உற்பத்தியாகி அதன் நிலப்பரப்பில் பாய்ந்தோடும் நதிகளின் பெயர்களும் பெண்பால் பெயர்களுடையதாகவே இருக்கக்கூடும் என்பதனால் சிந்து நதியும், பிரம்மபுத்திராவும் சமசுகிருத மொழியில் கூறப்பட்டுள்ளதன்படி ஆண்பால் பெயருடைய நதிகளல்ல எனலாம்.

சிந்து சமவெளியில் கட்கர - கக்ரா எனும் ஒரு நதி பாய்ந்தோடியதற்கான சுவடுகள் உள்ளன என்றும் அதுவே சரசுவதி நதி என்பர். கட்கர (கட்கம் அரா) என்பது அநேகமாகக் கட்கம் எனும் கல்யானை அதாவது காண்டாமிருகத்தையும், அரா என்பது பாம்பு ஆகிய சொற்களைக் குறிக்கும் சொற்கள் எனலாம்.

கட்கர என்பது காண்டாமிருகத்தின் கொம்பு போன்ற வடிவம் எனலாம். பொதுவாக நதிகள் வளைந்தோடுவதால் அவற்றைப் பாம்போடு ஒப்பிட்டுச் சர்ப்பநதி என்பர். சிந்து சமவெளிப் பெருங்குடி மக்களின் அடையாளச் சின்னம் காண்டாமிருகம் என்பதை M-304A என்ற அடையாள எண்ணுடைய முத்திரை பற்றிய ஆய்வில் காணலாம். எனவே, கட்கர-கக்ரா என்பது சரசுவதி நதியாக இருப்பதற்கான வாய்ப்பில்லை எனலாம்.

சமசுகிருத மொழியில் சிந்து என்ற பெயரைச் சிந்து எனவும், சீனாப் நதியை **அசுக்கினி,** இரவி நதியை **புருசினி,** சீலம் நதியை **விட்ராச**, பியாஸ் நதியை **விப்ராச**, சட்லசு நதியைச் **சதுத்துரி** எனப் பெயர் மாற்றம் செய்யப்பெற்றுள்ளன.

ஆனால், அடையாள எண்ணில்லாத முத்திரை ஒன்று ஒரு கோட்டையின் பாதுகாப்புக்காகப் பரந்த அகழிக்கான நீரைக் கொடுத்த **சீனாப்** (ப.298) என்றே கூறுகிறது.

கங்கை நதியை **வானதி** என H-2151A&B எனும் அடையாள எண்ணுடைய முத்திரை கூறுகிறது (ப.296). எனவே சிந்து சமவெளி நகர நாகரிக மொழி சமசுகிருதமாக இருப்பதற்கான வாய்ப்பில்லை எனலாம்.

இந்தியத் திருநாட்டிலுள்ள ஊர்களின் பெயர்களும், தமிழகத் திருக்கோயில்களின் பெயர்களும், திருக்கோயில்களில் எழுந்தருளியுள்ள இறைவன், இறைவியரின் திருப்பெயர்களும் சமசுகிருத மொழியில் மாற்றமடைந்துள்ளன.

அவ்வாறு மாற்றமடையாத ஊர்களின் பெயர்களில் குறிப்பாகத் தமிழகத்திலுள்ள **திருவாரூர்** என்பது சிந்து சமவெளி நகர முத்திரை எண் K-22A ***சீ ஆரூர் பிச்சாடனன்*** எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது (ப.204). (சீ ஆரூர் - திரு ஆரூர் அதாவது திருவாரூர்).

**'சீ '** என்பதற்குத் **'திரு'** எனும் சிறப்பைக் குறிக்குமொரு அடைமொழிச் சொல். அச் சொல் பிற்காலத்தில் 'சீரி' எனவும் பொ.ஆ.பி. 6ஆம் நூற்றாண்டில் **'ஶ்ரீ'** எனவும் மாற்றமடைந்துள்ளது. **'ஶ்ரீ'** அச்சொல்லிலுள்ள **'ரீ'** எனும் உயிர்மெய் எழுத்துச் செந்தமிழ் மொழி எழுத்தாகும்.

ஆயினும் சமசுகிருதம் மொழிச் சொற்கள் ஊடுருவாமல் பன்னெடுங்காலமாகத் தன் தனித்தன்மையை இழக்காமல் இருந்துள்ளது செந்தமிழ் மொழியே என்பது மொழி ஆய்வாளர்களின் பொதுவான ஆய்வு முடிவுகள் கூறுகின்றன.

கீர்வானம் என்பது சமசுகிருதம் மொழியின் பழமையான பெயரெனச் சிவத்தியாநாதந்த மகரிசி, தமது ரிக்வேத சம்ஹிதையில் குறிப்பிட்டுள்ளார். சமசுகிருதம் என்பதற்குச் சமம் செய்யப்பட்டது எனப்பொருள்படும். சமசுகிருதம் எந்த மொழியோடு சமம் செய்யப்பட்டது என்பது தெளிவாகக் கூறப்படாததால் அம்மொழி சிந்து சமவெளி நாகரிகச் செந்தமிழ் மொழியோடு சமம் செய்யப்பட்டதற்கான வாய்ப்பு அதிகமுண்டு எனலாம்.

அதனை உறுதி செய்யும் பொருட்டுச் சிந்து சமவெளி செந்தமிழ் சமசுகிருதம் ஆகிய இரண்டின் உயிர், மெய் எழுத்துக்களோடும், அவற்றின் எண்ணிக்கையோடும் ஒப்பீடு செய்து காண்பது அவசியமாகிறது.

# செந்தமிழ் எழுத்துக்களும் சமசுகிருதம் எழுத்துக்களும் ஒப்பீடு

செந்தமிழ் எழுத்துக்களின் எண்ணிக்கை, **"எழுத்தெனப் படுப அகரமுத னகர விறுவாய் முப்ப∴தென்ப சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே"** எனத் தொல்காப்பியம் எழுத்ததிகாரம், நூன்மரபு முதலாம் நூற்பா கூறுகிறது. (தொல்காப்பியத்தின் காலத்தைப்பற்றி விரிவாகப் பிற்பகுதியில் காணலாம்.)

அந்நூற்பா கூறுவதை அடிப்படையாகக் கொண்டு **சிந்து சமவெளி பழந்தமிழ் எனும் செந்தமிழ் மற்றும் சங்கதம் எனும் சமசுகிருதம்** ஆகிய இரண்டின் உயிரெழுத்துக்களின் எண்ணிக்கை, மெய்யெழுத்துக்களின் எண்ணிக்கை ஆகியவைப் பற்றி ஆராய்ந்தறியப் பெறுகின்றன.

**உயிரெழுத்துக்கள்**

செந்தமிழ் மொழியின் உயிரெழுத்துக்களின் எண்ணிக்கை 12. சமசுகிருதம் மொழியின் உயிரெழுத்துக்களின் எண்ணிக்கை 14. செந்தமிழ் மொழியின் உயிரெழுத்துக்களில் **'எ, ஏ,' 'ஒ, ஓ'** ஆகிய நான்கு உயிரெழுத்துக்களுண்டு. சிந்து சமவெளி உயிரெழுத்துக்களிலும் அந்நான்குமுண்டு. ஆனால், சமசுகிருத மொழியின் உயிர்ரெழுத்துக்களில் **'எ** எனும் குறிலுக்கும், **'ஏ'** எனும் நெடிலுக்கும், **'ஒ'** எனும் குறிலுக்கும், **'ஓ'** எனும் நெடிலுக்கும், தனித்தனி வரிவடிவங்களில்லை. அவ்விரண்டுக்கும் **'ஏ, ஓ'** ஆகிய இரண்டு நெடிலெழுத்துக்கள் பொதுவானவை.

அதனால் சமசுகிருதம் மொழியின் உயிரெழுத்துக்களின் எண்ணிக்கை 10ஆகக் குறைகிறது. அவ்வாறு, உயிர்ரெழுத்துக்களின் எண்ணிக்கை **10ஆகக்** குறைவதனால் 'ரு' உயிர்மெய் எழுத்தும் **அம், அஹ** ஆகிய இரண்டெழுத்துச் சொல்லும் சேர்க்கப் பெற்று அதன் எண்ணிக்கை **13ஆகி** பின்னர் **'லு'** ஆகியவற்றுடன் 14 உயிரெழுத்துக்களும் உண்டென்பர்.

சிந்து சமவெளி நாகரிகச் சொற்களில் பாதுகாவல், கோட்டை, **வேலாயுதம்** எனப் பொருள்படுவதை **(அ)ரண்** எனவும், **சிவன்** எனப் பொருள்படுவதை **(அ)ரன்** எனவும் எழுதப்பெற்றுள்ளன அதனால் **ரகரம்** சமசுகிருதத்தில் உயிரெழுத்தாகி உள்ளன எனலாம்.

**அவன்** என்பதைக் குறிக்கும் தீக்குச்சி வடிவ மனிதக் குறியீடு **அன்** என்பது இரண்டெழுத்துப் படச் சொல். இப்படச் சொல் **அன்பன், அன்புள்ள பாசனருள்** போன்ற சிந்து சமவெளி சொற்றொடர்களில் (மொழிகளில்) **அன்** என்ற படச்சொல் முதலாக வருவதால் அதனையும், **ஸ்ரீ** என்ற சொல்லையும் சமசுகிருத மொழியின் உயிரெழுத்துக்களோடு பிற்காலத்தில் சேர்க்கப்பட்டுள்ளதும் தெரியவருகிறது.

## மெய்யெழுத்துக்கள்

செந்தமிழ் மொழியின் மெய்யெழுத்துக்களின் எண்ணிக்கை 18. சிந்து சமவெளி மெய்யெழுத்துக்களின் எண்ணிக்கையும் 18.

சமசுகிருத மொழியின் அனுசுவர (எ) உயிர்ரெழுத்துக்களில் **ககர** மெய்யுடன் அதன் வருக்கமாக **மூன்று** எழுத்துக்களும், **சகர** மெய்யுடன் அதன் வருக்கமாக **மூன்று** எழுத்துக்களும், **டகர** மெய்யுடன் அதன் வருக்கமாக **மூன்று** எழுத்துக்களும், **தகர** மெய்யுடன் அதன் வருக்கமாக **மூன்று** எழுத்துக்களும், **பகர** மெய்யுடன் அதன் வருக்கமாக **மூன்று** எழுத்துக்களாக்கப்பெற்றுள்ளன.

**(உப, அன்ப, அன்பு** போன்ற சில சிந்து சமவெளி சொற்களில் **பகர** உயிர்மெய்யின் வடிவம் **செவ்வக வடிவமாகவும்,** அந்த வடிவத்தில் ஒன்று, இரண்டு, மூன்று எழுத்துக்கள் உள்ளடங்கி உள்ளதாலும் அதுவும் **பகர மெய்யோடு** சேர்க்கப்பட்டுள்ளது தெரியவருகிறது.)

**ககர** மெய்கள் **4, சகர** மெய்கள் **4, டகர** மெய்கள் **4, தகர** மெய்கள் **4, பகர** மெய்கள் **4** என **20** எழுத்துக்களாக்கப்பெற்றும், அவற்றுடன் **ட்ட, ங்க, ந்த, ண, ந, ம, ய, ர, ல வ, ள, ன, ஸ, ஷ, ஐ, ஹ, க்ஷ** ஆகிய **17** எழுத்துக்களைக் கூட்டி மெய்யெழுத்துக்களின் எண்ணிக்கை **37** என ஆக்கப்பெற்றுள்ளன. அந்த 37 எழுத்துக்களில் சிந்து சமவெளி எழுத்துக்களில் உள்ள **றகரமும், சிறப்பு ழகரம்** இல்லை என்பது நோக்கத்தக்கது. மேற்கண்ட **14** உயிரெழுத்துக்களுடன் **37** மெய்யெழுத்துக்களையும் கூட்டிச் சமசுகிருத மொழியின் எழுத்துக்களின் எண்ணிக்கை முதலில் **51** ஆகியுள்ளன எனலாம்.

(அவற்றுள், இரட்டை எழுத்துக்களான **ட்ட, ங்க, ந்த** ஆகிய இனச்சார்புள்ள வேற்றுநிலை, உடனிலை, மெய்ம்மயக்கம் பிராகிருத மொழியில் உள்ளன. இதனால் (சிந்து சமவெளிச் செந்)தமிழுக்குப் பின்னும், சமசுகிருதத்துக்கு முன்னும் பிராகிருத மொழி தோன்றியிருக்க வேண்டும் என்பது புலனாகிறது. **ரு,லு** என்பதையும் பிறபட்ட வடிவங்களாகப் பிறப்பட்ட வடிவினமாக சமசுகிருதத்தில் சேர்க்கப்பட்டிருக்கவேண்டும் என்ற கருத்தும் நிழவுகிறது. ச,ஸ,ஷ, ஹ எழுத்துக்களும் வருக்க எழுத்துக்களும் வழக்கத்திற்கு வந்தபின் தோன்றியிருக்க வேண்டும். அதன் பின்னர் **ஊஷ்ம** எழுத்துக்களையும் அடுத்து ஐந்து வருக்க எழுத்துக்களையும் **ய, ர, ல,வ** எழுத்துக்களையும் சேர்த்திருக்கவேண்டுமென **ஆதிமொழி, 2015, ஸ்ரீ வித்தியாதிராஜா சட்டம்பி சுவாமிகள் (1853-1924) மொழிபெயர்ப்பு நூல் பக்.27இல்** குறிப்பிடபெற்றுள்ளன.)

பொ.ஆ.மு. 600 - 500 ஆண்டில் சமசுகிருதம் மொழிக்கு முதல் முதலாக அட்டதயாயி (Ashtadhyayi) எனும் இலக்கணம் எழுதியவரும் காந்தாரம் நாட்டைச் சேர்ந்தவருமான பாணினி எனும் முனிவர் அதன் எண்ணிக்கை **51** ஆக உயர்த்தியுள்ளார் என்பர்.

சிந்து சமவெளி முத்திரை எண் எம்-482எ **சுவத்திசி பொருள்** (ப.134)என்ற சொற்றொடரில் உள்ள **'சுவ'** என்ற சொல் சுவத்திகம் வடிவக் குறியீடாகும். அதனால் அவர் அக் குறியீட்டையும் ஓரெழுத்தாக எடுத்துக்கொண்டுள்ளார். ஒரு சொல் ஒரு மொழியின் ஓர் எழுத்தாகாது.

சிந்து சமவெளி எழுத்துக்களில் சீப்பு வடிவிலான **சீ** என்பது **திரு**, சிரீ என்பதைக் குறிக்குமொரு எழுத்து. அந்த எழுத்து பொ.ஆ.பி. 5 - 6ஆம் நூற்றாண்டளவில் **ஶ்ரீ** என்பதையும் இணைத்து சமசுகிருதம் மொழியின் எழுத்துக்களின் எண்ணிக்கை **52ஆக** உயர்த்தப்பட்டுள்ளது. ஶ்ரீ என்ற இரண்டுடெழுத்துச் சொல் **சிரீ** எனும் செந்தமிழ்ச் சொல்லைச் சார்ந்தது. அதிலுள்ள **ரீ** என்ற எழுத்து செந்தமிழ் எழுத்தென்பது குறிப்பிடத்தக்கது.

ஆரியம் (எ) சமசுகிருதம் மொழியின் உயிரெழுத்துக்கள் (அச்) 16ஆம், மெய்யெழுத்துக்கள (ஹல்) 37ஆம். அதன் எண்ணிக்கை 53ஆம், நன்னூல் கூறுகிறது.

மேற்கண்டவற்றின் வாயிலாகச் சிந்து சமவெளி நகர நாகரிகச் செந்தமிழ் எழுத்துக்களை அடிப்படையாகக் கொண்டே பிராகிருதம் அதனையடுத்து சமசுகிருதம் என அவ்விரண்டு மொழி எழுத்துக்களின் எண்ணிக்கை அவ்வப்போது உயர்த்திக் காட்டப்பெற்றுள்ளது தெரியவருகிறது.

எந்தவொரு மொழி அதன் உயிரெழுத்துக்கள், மெய்யெழுத்துகள் ஆகியவற்றின் வகை, எண்ணிக்கை குறையாமலும், பிற மொழி எழுத்துக்களைக் கொண்டு அதிகரிக்காமலும் பன்னெடுங்காலமாகத் தொடர்ந்திருந்துள்ளதோ அம்மொழியே பழமையான, தூய்மையான, மொழி (எ) செம்மொழியாகும்.

## உயிர்மெய் எழுத்துக்கள்

**சிந்து சமவெளி செந்தமிழ் மொழி எழுத்துமுறை முதலாம் கட்ட வளர்ச்சியைச் சார்ந்தது.** அதனால் 216 உயிர்மெய்யெழுத்துக்களில் சில எழுத்துக்கள் மட்டுமே சிந்து சமவெளி எழுத்துக்களிலுண்டு என்பதனால் சமசுகிருதம் மொழியில் அவை எடுத்துக்கொள்ளப் பெறவில்லை என்பதும் தெரியவருகிறது.

## செந்தமிழ் மொழிக் கல்வெட்டுக்களின் காலம்

செந்தமிழ் மொழியின் தமிழி எழுத்துக்களைக் கொண்ட மிகப் பழமையான கல்வெட்டுக்களின் காலம் பொ.ஆ.மு. 600 - 500 ஆண்டைச் சார்ந்தவை. இந்தியத் திருநாட்டின் கல்வெட்டுக்களில் 60 சதமானம் தமிழி, தமிழ், வட்டெழுத்துக்களைக் கொண்டவை.

## சமசுகிருதம் மொழிக் கல்வெட்டுக்களின் காலம்

முதலாம் நூற்றாண்டில் முதலாவதாகச் சமசுகிருதம் மொழியில் பிராமி எழுத்துக்களைக் கொண்டு எழுதப்பட்ட மிகப்பழமையான கல்வெட்டு இராஜஸ்தான் மாநிலத்தில் ஹதிபாடா கல்வெட்டு நகரி என்ற கிராமத்திலும், மற்றொரு கல்வெட்டுக் கோசுண்டி என்ற கிராமத்திலும் (1900இல்) கண்டுபிடிக்கப்பெற்றுள்ளன. வைணவப் பிரிவைச் சார்ந்ததொரு கல்வெட்டுத் தற்போது உதைப்பூர் அரசு அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்பெறுகிறது. விஜயன் எனும் சதவாகண மன்னன் காலத்தைச் சேர்ந்த பிராமி எழுத்துப் பொறிப்புக்களைக் கொண்ட சமசுகிருதம் மொழிக் (பொ.ஆ.பி. 2 ஆம் நூற்றாண்டு) கல்வெட்டு ஒன்று தென்னகத்தில் கண்டுபிடிக்கப்பெற்றுள்ளது.

பிராமி எழுத்துப் பொறிப்புக்களைக் கொண்ட சமசுகிருதம் மொழிக் கல்வெட்டு ஒன்று தெலுங்கானா மாநிலத்திலுள்ள சூரியாபேட் மாவட்டம் பானிகிரி என்னுமிடத்தில் 2003-2006இல் மேற்கொண்ட அகழாய்வின் போது கண்டுபிடிக்கப்பெற்றுள்ளது. உருத்ரதாமன் எனும் சக மன்னன் காலத்தில் அதாவது பொ.ஆ.பி. 2ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சமசுகிருதம் மொழியில் பொறிக்கப்பட்ட நீண்டதொரு கிர்னர் கல்வெட்டொன்று மிகப்பழமையானதாகக் கூறப்படுகிறது.

மேற்கண்ட கல்வெட்டுச் சான்றுகளின் அடிப்படையில் பொ.ஆ.பி.முதலாம் நூற்றாண்டுக்குப் பின்னரே பிராமி எழுத்துக்களைக் கொண்டே சமசுகிருதம் மொழி கல்வெட்டுக்கள் பொறிக்கப்பெற்றுள்ளன என்பது தெரியவருகின்றன.

பொ.ஆ.பி. 2ஆம் நூற்றாண்டு வரை சமசுகிருத மொழிக்கான எழுத்துக்கள் ஏதுமில்லை. பொ.ஆ.பி. 6-8ஆம் நூற்றாண்டில் உருக்கு வேதத்தை எழுதுவதற்குக் கிரந்த எழுத்துக்களை உருவாக்கிக் கொடையாக வழங்கியவர்கள் பழந்தமிழர்களாவர். பின்னர் சமசுகிருதம் மொழியின் வேதங்கள் தேவநாகிரி எனும் வர்ணமாலை (வர்ணமாலா) என்ற தொங்கு எழுத்துக்களைக் கொண்டு எழுதப்பெற்றுள்ளன.

பஞ்சாப் மக்களின் மொழி **பஞ்சாபி**, குஜராத் மக்களின் மொழி **குஜராத்தி,** வங்காள் மக்களின் மொழி **வங்காளி**, பீகார் மக்களின் மொழி **பீகாரி,** தமிழ் மக்களின் மொழி **தமிழி** என்பவை போல நாகர் மக்களின் மொழி **நாகரி**. இச்சொற்களில் முடிவாக உள்ள **வில்வ மரத்தின் மூவிலை வடிவிலான 'இ'** எனும் சிந்து சமவெளி உயிரெழுத்து அண்மைச் சுட்டெழுத்தும் வினைமுதல் பொருள் விகுதியுமாகும்.

சிந்து சமவெளி பகுதியிலிருந்த **பாதாளம்** என்ற இடத்தில் வாழ்ந்த **நாகர்** எனும் மக்கள் பேசிய மொழியே **நாகரி** என்பதும், அதிலிருந்தே **தேவநாகரி** ஏன்ற பெயர்ச் சொல் எடுத்துக்கொள்ளப்பெற்றுள்ளதும் தெரியவருகிறது.

சிந்து சமவெளி நகர நாகரிகத்தை வேத நாகரிகத்துடன் ஒப்பிட்டு அம்மொழி சமசுகிருத மொழி என முயற்சி செய்பவர்கள், அம்மொழி எழுத்துக்களை அடையாளப்படுத்தி அட்டவணையிட்டோ, படித்தோ இந்நாள்வரை காட்டப்படவில்லை.

எனவே, பொ.ஆ.மு.5,500 முதல் பொ.ஆ.மு.1,500 வரையிலான 4,000 ஆண்டுகளாக எழுத்துக்களைக் கொண்டதாகவும், உலக நாகரிகங்களை விட மூத்த நகர நாகரிகமாகவும் இருந்துள்ள சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் செந்தமிழ் மொழியின் எழுத்துக்களை அடிப்படையாகக் கொண்டு **சமம் செய்யப்பெற்றதே சமசுகிருதம் மொழி** என்றாலது தவறாகாது. அம்மொழி எவ்வாறு சமம் செய்யப்பெற்றுள்ளது என்பதைப் பிற்பகுதியில் விரிவாகக் காணலாம்.

## திராவிடமா? திருவிடமா ?

**திராவிடம்** என்பது விந்திய மலைக்கு, தெற்கே உள்ள நிலப்பகுதியில் அமைந்துள்ள தற்போதைய கர்நாடகம், துளு, ஆந்திரம், கேரளம், தமிழ் நாடு ஆகிய ஐந்து நிலப்பரப்புகளுக்கு முதலில் பிறதேசத்திலிருந்து வந்தவர்களின் தூண்டுதலாலும், பின்னர் ஆங்கிலேயர்களின் பிரித்தாளும் நோக்கத்தோடும், தென்னகத்திற்குச் சூட்டப்பெற்றதொரு பொதுவான பெயர்ச் சொல்.

விந்திய மலைக்கு, வடக்கே பேசப்பெற்ற மொழி வட மொழி எனும் சமசுகிருதம் என்றும், தெற்கே பேசப்பெற்ற மொழி **திராவிட மொழிக் குடும்பம்** என முதலில் பிறதேசத்தவர்களின் சூழ்ச்சி, அதையே ஆங்கிலேயர்களாளும் கையாண்டுள்ளனர்.

திராவிடம் பற்றியச் செய்திகள் தமிழ்ச் சங்கால நூல்கள் எதிலும் குறிப்பிடப்பெறவில்லை. திராவிடம் என்ற பெயரில் தனியாக நாடோ, ஒரு மொழியோ, அதற்கான தனிப்பட்ட எழுத்துக்களோ இருந்ததற்கான தொல்லியல் சான்றுகள் ஏதும் கிடைக்கப்பெறவில்லை.

1,000 ஆண்டுகளுக்கு முன்பாகக் கன்னடம், தெலுங்கு ஆகிய இரண்டு மொழிகளிலும், 500 ஆண்டுகளுக்கு முன்பாகக் கேரள மாநிலத்தின் மொழியான மலையாளத்திலும் சமசுகிருதம் மொழி ஊடுருவியுள்ளதால், அவற்றுள் வடமொழிச் (திசைச்) சொற்கள் அதிக அளவில் உள்ளதை அறியமுடிகிறது. எனவே கர்நாடகம், துளு, ஆந்திரம், கேரளம், தமிழ் நாடு ஆகிய ஐந்து நிலப்பரப்பிற்குப் பொதுவான ஒரு மொழி இருந்திருக்கக் கூடும். அம்மொழி செந்தமிழ் மொழியாகவும் இருந்திருக்கக் கூடும் எனலாம். செந்தமிழ்மொழிக் கல்லெழுத்துக்கள் கர்நாடகம்,ஆந்திரம் ஆகிய இரண்டு மாநிலங்களில் கிடைக்கப்பெற்றுள்ளதை அதற்கான சான்றுகளாகக் கருதலாம்.

பொ.ஆ.மு.5ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சமயதங்கதாரா எனும் பௌத்த சமய நூலில் **த்ரவிடி** என்ற சொல்லுள்ளது. **'த்'** எனும் மெய்யோடு துவங்கும் **த்ரவிடி** என்ற சொல் சமசுகிருதமொழியின் தாக்கம். **த்ரவிட் என்பது திராவிட்** எனத் தென்னிந்திய அந்தணர்களைக் குறிக்குமொரு சொல்லாகியது. **திராவிட்** என்பது **திராவிடம்** ஆகியுள்ளது எனலாம்.

மனுசாத்திரத்தில் **திராவிடர்** என்றதொரு சொல்லுள்ளது. வீராத்திய சத்திரியனுக்கும் அவ்வித ஸ்திரியிடத்தில் சல்லன் பிறப்பவன். அவனுக்கு மல்லன், நீர்சுவிகடன், கசன், திராவிடன் என அந்தந்த தேசத்தில் வெவ்வேறு பெயர்களாம் (மனு. 10.22). அந்த மனு சாத்திரம் திராவிடன் என்றால் பாவி பரம்பரையில் பிறந்தவன் எனவும் கூறுகிறது.

இவ்வாறு கூறியது அவர்களது உச்சக்கட்ட பொறாமையின் வெளிப்பாடாகும். அப்பொறாமைக்கான முக்கிய காரணம் மொழி மற்றும் கலாச்சாரம் (எ) பண்பாட்டின் வேறுபாடாகும். இவ்விடத்து நாகரிகம் என்பது வேறு, கலாச்சாரம் என்பது வேறு என்ற புரிதல் அவசியம்.

மனுசாத்திரத்தை அடிப்படையாகக் கொண்டு கால்டுவெல் எனும் கிருத்துவப் பாதிரியார் தென்னிந்திய மொழிகளின் ஒப்பிலக்கணம் எனும் தமது நூலில் திராவிடம், திராவிட மொழி போன்ற சொல்லைப் பயன்படுத்தியும், பின்னர் அவரே தமது கருத்தையும் மாற்றியும் உள்ளார்.

அவரைத் தொடர்ந்து, சர் ஜான் மார்ஷல் 1924 ஆம் ஆண்டு சிந்து சமவெளி நகர நாகரிகத்தைத் திராவிடர் நாகரிகமாக இருக்கக் கூடும் எனக் கருதினார்.

இவ்விரு ஆங்கிலேயர்கள் கூறியதை அப்படியே ஏற்று அஸ்கோ பர்போலாவும், ஐராவதம் மகாதேவனும் சிந்து சமவெளி நாகரிகம் **பழந்திராவிட** மொழிக் குடும்பத்தைச் சார்ந்த நாகரிகமாக இருக்கக் கூடும் எனக் கருதினர். அக்கருத்து, இந்நாள் வரை கருத்தாகவே உள்ளது. எனவே திராவிடம் என்ற சொல் ஆய்வுக்குரியதாகிறது.

சிந்து சமவெளி நாகரிகக் காலத்தில் இமயம் முதல் குமரிவரை வாழ்ந்த பெருங்குடி மக்களின் கலாச்சாரம் என்பது சரியை, கிரியை, ஞானம், யோகம் ஆகிய நான்கைக் கடைபிடித்து வாழ்ந்து முடித்து இறைநிலையடைந்த சிறந்ததொரு கலாச்சாரம்.



அந்நான்கில் சிந்து சமவெளி நாகரிக மக்கள் ஞானம், யோகம் ஆகிய இரண்டில் நன்கு தேர்ச்சி பெற்றவர்கள். அதற்கான ஆதாரச் சான்றுகளாக மூலபந்த யோகாசனத்தில் அமர்ந்துள்ள ஆண், பெண் திருவுருவங்களையும், அவர்களை வணங்கும் மனித திருவுருவங்களையும், பாம்பின் உருவங்களையும் கொண்டதொரு சிந்து சமவெளி முத்திரையைச் சுட்டிக்காட்டலாம். மூலபந்த யோகாசனத்தில் நல்லடக்கம் செய்யப்பெற்ற ஒரு யோகியின் எலும்புக்கூடு ஒன்று இராஜஸ்தான் மாநிலத்தில் மேற்கொண்ட அகழாய்வின் போது அறியப்பெற்றுள்ளது.



கீழடியில் வெளிக்கொணரப்பெற்ற மூன்று அட்டாங்கம் குறியீடுகள்.

தமிழகத்தில் கீழடியில் மேற்கொண்ட அகழாய்வின் போது மூன்று வில்லைகள் வெளிக்கொணரப் பெற்றுள்ளன. இம்மூன்று திருவுருவங்களை ஆமைக் குறியீடுகள் என அடையாளம் காட்டுவர்.



ஆதிச்சநல்லூர்

இம்மூன்று வில்லைகளில் உள்ளவை அட்டாங்கம் என்பதைக் குறிக்கும் குறியீடுகள். இரண்டு கரங்கள், இரண்டு கால்கள், இரண்டு தோல் பட்டைகள், மார்பு, **இருபுருவ மத்தி** ஆகிய எட்டு அங்கங்களை அட்டாங்கம் என்பர். யோகமார்க்கத்தில், இருபுருவ மத்தியானது 6ஆவது யோக மய்யம். அம்மய்யத்தை **ஆஞ்யா சக்கரம்** என்பர். அதனை இட, பிங்கலை, சூக்கும நாடிகள் எனும் மூன்று நாடிகள் கூடுமிடம் என்பர். அச்சக்கரத்திற்கு **திரிக்குடி (எ) திருவிடம்**, அவிநாசி, வாரணாசி போன்ற பெயர்களுண்டு.

அந்தத் **திரிக்குடி** (எ) **திருவிடம்** என்பது இட, பிங்கலை ஆகிய இரண்டு நாடிகளைக் குறிக்கும் இரண்டு சாய்வுக் கோடுகள், சூக்குமநாடி என்பதைக் குறிக்குமொரு ஒரு செங்குத்துக் கோட்டின் மேல் முனையை தொடும் இடம் (அ) **குடிகொள்ளும் இடம்.** அவ்விடத்தின் சிறப்பைக் குறிக்கும் வகையில் **திரு** என்ற அடைமொழிச் சொல்லோடு **திருவிடம்** என்பர். அந்தத் திருவிடம் என்பதே **இருபுருவ மத்தி.** அந்த **இருபுருவ மத்தி** குறியீட்டை அதிக அளவில் பானைகளின் வாய்பகுதியிலும் அதன் மூடிகளிலும் கீறப்பெற்றதைக் காணலாம்.

அந்தத் திருவிடம் (எ) 6ஆவது யோக மையமான ஆஞ்யா சக்கரத்தில் கவனஞ்செலுத்திக் கடந்த கால கர்மாக்கள் அனைத்தையும் அழித்துக் கொண்டவர் **திருவிடர்** என்பர். இந்த மையத்தில் (திருவிடத்தில்) தியானம் செய்தால், அவர்களடைந்த நற்பலன்களை வார்த்தைகளால் விவரிக்க இயலாது என்பர். இம்மையத்தில் யோகப்பயிற்சி செய்பவர் ஒரு சீவமுக்தர் அதாவது ஒரு மனிதனாக வாழும் போதே பிறப்பு - இறப்பு என்ற இரட்டையிலிருந்து விடுவிக்கப்பெற்றதொரு மனிதன் ஆகிறான். அம்மனிதன் 8 பெரிய 32 சிறிய சித்திகளையும் பெறுகிறான். ஞானிகள் ஓம் எனும் மந்திரத்தை உச்சரித்து இம்மையத்தில் கவனம் செலுத்தி உள்ளனர் என்பர்.

**ஆஞ்யா சக்கரம் எனும்** இருபுருவ மத்தியில் அதாவது திருவிடத்தில் தியானம் செய்து கடந்த கால கர்மாக்கள் அனைத்தையும் அழித்துக் கொண்டவர்கள் சீவமுக்தி அடைந்தவர்கள் (எ) **ஆஞ்ஞயார்.** இந்த ஆஞ்ஞயார் ஏன்போரை **மரியாதை நிமித்தமாக ஆஞ்ஞான்** எனறழைப்பது பழந்தமிழர் மரபு.



தற்போதைய ஈரோடு மாவட்டம், கரூர் குடிவண்டை சிவன் மலையில் சிதலமடைந்த நிலையில் சிவனாலயம் ஒன்றுள்ளது. அதன் முன் புறமாகப் பாறையின் மேற்ப்பரப்பில் பொறிக்கப் பெற்றுள்ளன பொ.ஆ.பி. 7-8ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தக் கல்லெழுத்துப் பொறிப்பில் **ஆஞ்ஞயார்** என்ற சொல்லைக் காணலாம்.



'உபவாசம்' என்பது உண்ணாநோன்பு (எ) உணவின்றி வடக்கு நோக்கித் தவமிருந்து உயிர் துறக்கும் மரபைக் குறிக்குமொரு சொல். **'உபவாசன்'** என்ற தொல்வாச்சியம் கொண்டதொரு சிந்து சமவெளி நகர நாகரிக முத்திரை ஒன்றில் உண்டு.

மேற்கண்ட **இருபுருவ மத்தி திரிகுடி (எ) திருவிடம்** என்பதைக் குறிக்கும் குறியீட்டையும், சிந்து சமவெளி எழுத்துக்களைக் கொண்ட **உபவா(சன்)** என்ற சொல்லையும் இராய வேலூர் அருகே கணியம்பாடி காட்டிலுள்ள பாறையின் மீது பொறிக்கப்பெற்றுள்ளதொரு செதுக்குக் கோட்டுருவக் குறியீடுகளோடு காணலாம்.

**திரிகுடி (எ) திருவிடம் என்ற சொல் திராவிடம் என்றும், ஆஞ்ஞயார் என்ற சொல் திருவிடர் என்றும், அச்சொல் திராவிடர் என மாறி இருக்கக் கூடும் என்பது எமது தனிப்பட்டக் கருத்தாகும்.**

அக்கருத்துக்கான தொல்லியல் ஆதாரச்சான்றுகள் அதாவது திரிக்குடி (எ) திருவிடம் என்பதைக் குறியீடுகள் சிந்து வெளியிலும், தமிழகத்திலும் ஏராளமாகக் கிடைக்கப்பெற்றுள்ளன. அவற்றை **'தன்னுணர்தல் (எ) "உணர்தல் மையம்" குறியீடுகள்** என்ற தலைப்பில் இந்நூலின் பிற்பகுதியில் காணலாம்.

அப்பகுதியை விருப்பும், வெறுப்புமின்றிப் பொறுப்புடன் படித்து உண்மையை உள்ளபடி அறியவேண்டும். அவ்வாறு அறியாதவர்க்குப் புரிதல் வருமா? என்றால் நிச்சயமாக வராது. வாத விவாதங்களும், சிந்து சமவெளியின் மொழி செந்தமிழா? சமசுகிருதமா? என்ற குழப்பம் தொடரும். அக்குழப்பத்திற்கு முற்றுபுள்ளி வைப்பவை சிந்து சமவெளிப் பானை ஓடுகளிலும், வில்லைகளிலும், முத்திரைகளிலும் உள்ள **தொல்வாச்சியங்கள்.** அத்தொல்வாச்சியங்களின் தொடர்ச்சியே திருக்குறள், திருமந்திரம் போன்ற நூல்கள் என்பதை ஆராய்ந்தறிதல் அவசியமாகும்.

# தொல்வாச்சியம்

**தொல்வாச்சியம்** என்பதற்குத் **தொன்மைகள் சொல்லப்படத்தக்கவை (அ) தொன்மைகள் வெளிப்படையாகச் சொல்லப்படத்தக்கவை** எனப்பொருளாகும். அதில் தொன்மைகள் என்பது பிற்போக்குச் சிந்தனையல்ல என முற்போக்குச் சிந்தனையாளர்கள் நன்குணர்க.

7,500 ஆண்டுகளுக்கும் முன் வடக்கே பஞ்சநதம், இடையே பஞ்சநதி, தெற்கே பொருநை நதி எனவும், கிழக்கு - மேற்குத் திசைகளில் கடல்களுக்குட்பட்ட பரந்த நிலப்பரப்பில் வாழ்ந்த தொல்பெருங்குடி மக்களின் மொழி, நாகரிகம், கலாச்சாரம், வாழ்வியல் முறை ஆகியவற்றைப் பற்றித் தொல்காப்பியம் எழுத்ததிகாரம், சிறப்புப்பாயிரம் போன்றவற்றின் வாயிலாக உணரமுடிகிறது.

அந்தத் தொல்பெருங்குடி மக்களைப் பற்றி மற்றுமோர் உதாரணமாக ஐயனாதாரினார் அருளிய புறப்பொருள் வெண்பா மாலையில் (13) குடிநிலை என்ற தலைப்பில் பாடப்பட்டுள்ள பாடல் அடிகளைக் குறிப்பிடலாம்.

மண்திணி ஞாலத்துத் தொன்மையும் மறனும்
கொண்டுபிறர் அறியும் குடிவர வுரைத்தன்று
பொய்யகல நாளும் புகழ்விளைத்தல் என்வியப்பாம்
வையகம் போர்த்த வயங்கொலிநீர் - **கையகலக்**
கல்றோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு
முற்றோன்றிய மூத்த குடி - (35)

**பொருள்:** மண்செறிந்த இந்நிலவுலகினிடத்தே, பழமையும் தறுகண்மையும் கொண்டு, அவற்றின் சிறப்பைப் பிறர் எல்லோரும் அறியும்படியாக மறக்குடியினர் பற்றிய உண்மையை உரைப்பது, குடிநிலையாகும். பொய்யானவை அழிய எந்நாளும் குடிநிலையின் புகழைப் புரிந்துகொள்ளச் செயதல் என் நற்செயலாம்.

பண்ணெடுங்காலமாக, இந்த வையகத்தினைச் சூழ்ந்து கொண்டு ஆரவாரித்த ஊழிக்கடல் வெள்ளமானது அதனை விட்டு நீங்கியதால், வெளிபட்ட மலைகள் தோன்றி, அவை கையகல கல் எனும் (இரண்டு முதல் எட்டு அங்குல நீள அளவிலான) கற்கோடாரிக் கற்களாகின.

பின்னர் அவையே மண்ணாகத் தோன்றாத பழங்காலத்திலேயே புகழோடு முன்தோன்றிய மூத்தகுடி என்பதை அறியத்தக்கவர்கள் முறைப்படி அறியவேண்டியதாகுமே.

"கையகலக் கல்றோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு முற்றோன்றி மூத்த குடி" என்பதைக் "கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு முன்தோன்றிய மூத்த குடி" எனச் சுருக்கியும், வாளோடு என்பதற்குப் போர்வாளோடு எனப் பொருள் கூறுவோருமுண்டு. அத்தொல்பெருங்குடி மக்களின் சிறப்புக்கு மற்றுமோர் உதாரணமாக, கடியலூர் உருத்திரகண்ணனார் அருளிய பெரும்பாணாற்றுப்படையில் **நாவலந் தண்பொழில் வீவின்று விளங்க நில்லா வுலகத்து நிலைமை தூக்கி யந் நிலை ணணுகல் வேண்டி**... எனக் குறிப்பிடுகிறது.

பொருள்: சொல்லின் வலிமையும் தனது பெருமையும் அழிவின்றிப் புகழ் பெற வேண்டும். நிலையற்ற உலகத்து நிலைமை உயர்த்தி அதன் இயல்பான நிலை கிடைக்கவும் குறைநீக்கவும் வேண்டி... ('நாவலந்' என்ற சொல்லுக்கு நாவலந்தீவு எனச் சிலர் பொருள் கூறுவோருமுண்டு).

**என்னை நன்றாக இறைவன் படைத்தனன் தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே** - திருமந்திரம் (81) பாடல் அடிகளையும், மற்றுமோர் உதாரணமாக, **யாதும் ஊரே யாவரும் கேளிர் ! நன்மையும், தீமையும் பிறர் தர வாரா!** என்ற கணியன் பூங்குன்றனாரின் அரியச் சொற்றொடர்களையும் (அ) தொல்வாச்சியங்களையும் சுட்டிக்காட்டலாம்.

மேற்கண்ட உதாரணங்களின் வாயிலாக இந்தியத் திருநாட்டில் வாழ்ந்த பூர்வக் குடிமக்களின் குடிமரபும், செந்தமிழ் மொழியின் சிறப்பும், அம்மக்களின் பரந்த மனப் பான்மையையும், ஒற்றுமை உணர்வையும் நன்றாக அறியமுடிகின்றன.

இந்தியத் திருநாட்டில் வாழ்ந்த பூர்வக் குடிமக்களின் ஒற்றுமை உணர்வுக்குக்கோர் உதாரணமாக எண்: எம்-1103எ என்ற அடையாள எண்ணுடைய சிந்து சமவெளி நகர நாகரிக முத்திரை, ஒரு ஆழி ஐந்து மேருருபம் பத்து(ப்) பா. **ஒற்றுமை மண்டலம் ஐந்தும் மேருமலை வடிவினன் பத்துப்பா** (ப.300) எனக் கூறுகிறது.

இந்த முத்திரை இந்தியப் பெருங்குடி மக்கள் ஐந்துப் பிரிவினர் மட்டுமே என்பதும், அவர்கள் கர்மபூமிக்குரிய **உழவு, தொழில், வரைவு (திருமணம்), வாணிகம், விச்சை (கல்வி), சிற்பம்** ஆகிய ஆறுவகையான கர்மாக்களைக் (நற்செயல்களைக்) கர்மசுத்தியாகச் (குற்றமற) செய்து முடித்து அவர்கள் ஒற்றுமையோடு வாழ்ந்து வந்துள்ளனர் என்பதை ஆறு ஆரங்களைக் கொண்ட ஒரு சக்கரமே **ஆழி** என்பதும் தெரியவருகிறது.

உருக்குவேதமும் (புருடசுத்தமும்), நாராயண சுத்தமும் கூறும் வாயிலிருந்து பிறந்தவன் பிராமணன் (பார்பனன்), கரங்களிலிருந்து பிறந்தவன் சத்திரியன், தொடையிலிருந்து பிறந்தவன் வைசியன், கால்களிலிருந்து பிறந்தவன் சூத்திரன் எனும் நான்கு வகையான பிரிவினர். 7,500 ஆண்டுகளுக்கு முன் இந்தியத் திருநாட்டில் அந்நான்கு பிரிவுகள் இல்லை என்பதோர் உண்மை.

மேற்கண்டபடி உழவு, தொழில், வரைவு (திருமணம்), வாணிகம், விச்சை (கல்வி), சிற்பம் ஆகிய ஆறுவகையான கர்மாக்களைக் (செயல்களைக்) கர்மசுத்தியாக அதாவது எவ்விதமான குற்றம் குறைகள் ஏதுமின்றிச் செய்து முடித்து ஒற்றுமையோடு வாழ்ந்து வந்த **ஒற்றுமை மண்டலத்தில்** ஊறு விளைவிக்கும் ஒரு நிகழ்வு நிகழ்ந்துள்ளது.

## ஊறும் ஊறின் விளைவும்

அநேகமாக பொ.ஆ.மு. 1,500 முதல் பொ.ஆ.மு. 1,200 வரையிலான இடைப்பட்டதொரு காலத்தில் இந்தியத் திருநாட்டில் வாழ்ந்த பூர்வக் குடிமக்களின் பரந்த மனப்பான்மைக்கும் ஒற்றுமைக்கும் ஊறு விளைவிக்கும் ஒரு நிகழ்வு நிகழ்ந்துள்ளது எனலாம்.

அந்த ஊறு விளைவிக்கும் நிகழ்வால் பசு - பாசம் - பதி எனும் முப்பொருள் உண்மைக்குத் தொடர்புடைய சீவான்மா எனும் ஆத்மாவும், சிவன் எனும் பரமாத்மாவும் ஒன்றே எனும் **அத்துவைதம் கோட்பாடும்,** ஆன்மா, உலகம், இறைவன் ஆகிய மூன்றும் நித்தியமானவை என்றும், ஆத்மா (எ) உயிரைச் சார்ந்தது உடல் இருப்பது போல உயிர்களும் உலகமும் இறைவனைச் சார்ந்தே இருக்கும் எனும் **விசிட்டாத்துவைதம் கோட்பாடும்**, இறைவனும் உயிரும் வேறு எனும் **துவைதம் கோட்பாடும்** ஆகிய மூன்றில் எது உண்மையானது என்பதைப் பற்றிய வாத விவாதங்கள் நிகழ்ந்துள்ளன என்பது **பிரம்ம சூத்திரம்** என்னும் நூலின் வாயிலாக அறியமுடிகிறது.

உண்மையில், சிந்து சமவெளி நகர நாகரிக மக்கள் சீவான்மா எனும் உயிரும், பரமான்மா எனும் இறைவனும் ஒன்றே எனும் அத்துவைதம் கோட்பாட்டைக் கொண்டவர்கள் என்பதைப் **பதிதாசோகம்** எனச் சிந்து சமவெளி நகர நாகரிகச் சொற்றொடர்கள் கூறுகின்றன. அவற்றை விரிவாகப் பிற்பகுதியில் **பதிதாசோகம்** என்ற தலைப்பில் காணலாம்.

யாகக் குண்டங்களில் அக்கினியை (தீயை) வளர்த்து, மந்திரங்களை ஓதி தேவர்களை வழிப்பட்டால் இறைநிலை அடைய இயலாது. யோக மார்க்கத்தைக் கடைபிடித்துத் தன்னுணர்ந்தால் மட்டுமே இறைநிலை அடைய இயலும் என அகத்திய மாமுனிவர் குறிப்பிட்டதன் வாயிலாக, இந்தியத் திருநாட்டில் வாழ்ந்த பூர்வக் குடிமக்களின் பரந்த மனப்பான்மைக்கும் ஒற்றுமைக்கும் ஊறு விளைவித்த செயல் **புதியதொரு கலாச்சாரம்** என்பது தெரியவருகிறது. அகத்திய மாமுனிவர் பற்றிய கருத்துவேறுபாடுகளுண்டு.

அந்தப் புதியதொரு கலாச்சாரத்தை அறிமுகப்படுத்தியவர்கள் எழுத்துக்கள் ஏதுமில்லாத வெறும் பேச்சு மொழியை மட்டுமே பேசும் மத்திய ஆசியாவில் இருந்து வந்தவர்கள் எனலாம்.

இவ்விடத்து உயர்ந்த கண்ணோட்டம், நகரவொழுக்கம், பாரம்பரிய மதிப்புகள், எழுத்தறிவு எனும் நாகரிகம் என்பது வேறு. கலாச்சாரம் என்பது வேறு என்பது குறிப்பிடத்தக்கது.

மத்திய ஆசியா பிரதேசத்திலிருந்து (குளிர்தேசத்திலிருந்து) வந்தவர்களின் பேச்சு மொழிக்கு முற்றிலும் மாறுபட்டதொரு மொழி ஒன்று, இந்தியத் திருநாட்டில் முன்பாகவே இருந்துள்ளது என்பதையும், அம்மொழி பேசியப் பூர்வக் குடிமக்களின் தோற்றம், மொழி ஆகியவை பற்றியச் செய்திகள் இருக்கு வேத மந்திரங்களில் பதிவிடப்பெற்றுள்ளன.

அதுவானது, **தசுயுக்களும், தாசாக்களும் கொலைக் குற்றம் புரிபவர்கள், கருமை நிறத்தவர்கள், புரியாததொரு கீழ்த்தரமான மொழியைப் பேசுபவர்கள். ஏ! இந்திரா! தசுயுக்களின் நூறு கோட்டைகளை அழித்து அவர்களையும் கொல்வாயாக** எனப் பொ.ஆ.மு. 1ஆம் நூற்றாண்டுக்கும் பின் எழுதப்பட்டதுமான இருக்கு வேதம் நூலில் காணமுடிகிறது.

சிந்து சமவெளி நகர நாகரிகப் பகுதியிலிருந்த கோட்டை ஒன்றுக்கு அகலமாகவும், ஆழமாகவும் உடைய அகழியைக் கொடுத்த சீனாப் எனச் சிந்து சமவெளி நகர நாகரிக முத்திரை ஒன்று உறுதிசெய்கிறது. **தசுயு** என்ற சொல்லுக்கு **ஆரியர் அல்லாததொரு பிரிவினர்** எனத் தமிழ் அகராதி பொருள் கூறுகிறது. **தசுயு** என்ற சொல் **தசுயா** என மாற்றமடைந்துள்ளதற்கான சான்றாகத் **தசுயா** என்ற பெயருடைய பகுதி தற்போதைய பஞ்சாப் மாநிலத்தில் இன்றும் உள்ளது. இதனால், முன்கண்ட பொ.ஆ.மு. 1,500 முதல் பொ.ஆ.மு. 1,200 வரையிலான காலத்தில் இந்தியத் திருநாட்டிற்குள் வந்த பிறதேசத்தவர் ஆரியர் எனக் கருதத்தோன்றுகிறது.

**தாசா** என்பது **தாசன், நேசன், பக்தன்** என்பதைக் குறிக்குமொரு சொல் என்பதைத் தமிழ் அகராதியின் வாயிலாக அறியமுடிகிறது. **தாசா** என்பது சதாசேவை எனும் இறை சேவை புரியும் பக்தரே தாசர் என்பதும் குறிப்பிடத்தக்கது. அன்னை காளிதேவியின் பக்தனைக் காளிதாசன் என்றும், கண்ணனின் பக்தனைக் கண்ணதாசன் என்றும், சிவனின் பக்தனைச் சிவநேசன் என்றும், இறைவன் மீது கொள்ளும் பக்தனை இறையன்பன் என்றும் கூறுவர்.

எனவே, ஆரியர் (மன்னிக்கவும்) என்பவரின் புதியதொரு கலாச்சாரத்தின் விளைவால் **சங்கியை, ஈசுவர சாங்கியம், நிரீசுவர சாங்கியம்** தோன்றி உள்ளன.

முன்கண்ட **அத்துவைதம், விசிட்டாத்துவைதம், துவைதம்** ஆகிய மூன்று கோட்பாடுகளும், அவற்றைத் தொடர்ந்து **சமணம், பௌத்தம், ஆசீவகம், சிவனை வழிபடும் சைவம், விட்டுணுவை வழிபடும் வைணவம், சக்தியை வழிபடும் சாக்தம், கணபதியை வழிபடும் காணபத்தியம் (கணபதிசம்), முருகனை வழிபடும் கௌமாரம் போன்ற பல்வேறு புதிய சமயங்களும் தோன்றி உள்ளன என்பர்.**

மொகலாயர்களின் ஆட்சிக்காலத்தில் **இசுலாம் சமயமும்,** அதனால் **சீக்கிய மதமும்,** ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் **கிருத்துவ சமயமும்** இந்தியத்திருநாட்டில் பரவியுள்ளன என்பதும் தெரியவருகிறது.

இதனால், இந்தியத் திருநாட்டில் வாழ்ந்த பூர்வக் குடிமக்களின் இயற்கை வழிபாடும், முன்னோர் (நடுகல்) வழிபாடும், பெண் தெய்வ வழிபாடும், யோகமார்க்கத்தைக் கடைபிடித்து வாழ்ந்த வாழ்வியல் முறையும் மெல்ல மெல்ல மறையத்துவங்கியுள்ளதும் தெரியவருகிறது. பொ.ஆ.மு. 1,500 முதல் பொ.ஆ.பி. 500 வரையிலான 2,000 ஆண்டுகளில் இந்தியத் திருநாட்டில் என்ன நிகழ்ந்துள்ளதென்பது ஒரு புரியாத புதிர். சிலர் அக்காலத்தை இருண்ட காலம் என்பர்.

பொ.ஆ.பி. 500-க்கும் பின்னர் இந்தியத் திருநாட்டில் ஒரு சமயப் புரட்சி நிகழ்ந்துள்ளது. அதற்கான சான்றாகத் தமிழகத்தின் சில பாறை ஓவியங்களில் 6ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த எழுத்துப் பொறிப்புக்களால் **முழுவதும் (அ) முழுமையும்** எனப் பொருள்படும் **'எல்லாம்'** என எழுதப்பெற்றுள்ளதை எமது தேடலில் கண்டறிந்தோம்.

அந்த **எல்லாம்** என்ற சொல் தாண்டவராயர் பிள்ளையின் கைவல்லிய நவநீதம் (4) பாடலில் உள்ளதைக் கண்டோம். அப்பாடலைச் சிந்து சமவெளி முத்திரைகளில் அருள்மிகு சிவபெருமான் மகிமைகள் எனும் எமது நூலில் இறைவணக்கமாகப் பதிவிட்டுள்ளோம்.

என்னுடைய மனது புத்தி இந்திரீய சரீரம் **எல்லாம்**

என்னுடைய அறிவினாலே இரவிமுன் இமமே ஆக்கி

என்னுடைய நீயும் நானும் ஏகம் என ஐக்கியம் செய்ய

என்னுடைக் குருவாய்த் தோன்றும் ஈசனை இறைஞ்சினேனே.

சூக்கும சரீரம், தூல சரீரம் ஆகிய இவ்விரண்டிற்கும் மூலகாரணமான காரண சரீரம். இவற்றினால் ஏற்படும் அவத்தைகள் அனைத்தும் நீங்கும் மனோ நாசமே நித்திய மோட்சமாகும். அந்த நித்திய மோட்சம் கிடைப்பதற்கானது காரணஞானம். எனவே ஞான ஆற்றலை வணங்கினேன்.

மேற்கண்டவாறு கூறப்பட்டுள்ளவை பிறதேசத்தவரின் மொழி, அவர்களின் கலாச்சாரம் ஆகியவற்றைக் குறை கூறுவதற்காக அல்ல. 7,500 ஆண்டுகளுக்கும் முன் உயர்ந்த கண்ணோட்டம், நகரவொழுக்கம், பாரம்பரிய மதிப்புகள் எனும் நாகரிகமும் கொண்ட இந்தியத் திருநாட்டில் வாழ்ந்த தொல்குடியினரின் தொன்மையான மொழியையும், அதன் எழுத்துக்களைப் பற்றியும், உண்மையான வரலாற்றையும், ஆராய்வுக்கான மேற்கோள்களாக எடுத்துக் காட்டப்பட்டவை என்பதைத் தவிர வேறு எந்தவொரு தவறான உள்நோக்கமில்லை என்பதை மிகத் தெளிவாகக் குறிப்பிடக் கடமைப்பட்டுள்ளோம்.

இந்தியத் திருநாட்டின் உண்மையான வரலாறு, கலாச்சாரம் ஆகிய இரண்டைப் பற்றி முழுமையாக அறிவதற்குச் சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழி எழுத்துக்களின் வகையும் எண்ணிக்கையும் பற்றி ஆராய்தறிவோம்.

# சிந்து சமவெளிச் செந்தமிழ் எழுத்துக்களின் வகையும் எண்ணிக்கையும்

உலக மொழிகள் அனைத்திற்கும் தனிச்சிறப்புக்களுண்டு. அவற்றை ஆராய்ந்தறிவதும், அறிந்தவற்றை அறிவிப்பதுமே சிறந்த செயலாகும். எனவே சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழி எழுத்துக்களின் வகையும் எண்ணிக்கையும் என்ற தலைப்பில் ஆராய்ந்தறியப்பெறுகின்றன.

உலகில் தோன்றியவை அழியும். அழிந்தவை மீண்டும் தோன்றுவதில்லை. ஆனால், வெளிப்பட்டவை ஒடுங்கும். ஒடுங்கியவை மீண்டும் வெளிப்படும் என்பதனால் வெளிப்பாடு என்ற சொல் பயன்படுத்தப்பெறுகிறது.

மழைக் காலங்களில், அண்டம் எனும் விண்வெளியில் மின்னலும் (ஒளியும்), இடியும் (ஒலியும்) எவ்வாறு வெளிப்பட்டு ஒடுங்கி மீண்டும் வெளிப்படுவது போல, எந்தொரு மொழி ஒலியும், ஒளியுமுடைய எழுத்துக்களுடையதாக வெளிப்படுகிதோ, அதுவே மிகப்பழமையானதும் அழிவற்றதுமாகும். அம்மொழியின் எழுத்துக்கள் வெளிப்பட்ட காலமே உலக வரலாற்றுக் காலமாகும். அவ்வாறு எழுத்துக்களுடன் வெளிப்பட்டதே சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழி.

சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழிக்குப் பல காரணப் பெயர்களுண்டு. அவற்றுள் **விண்மொழி (வான்மொழி)** என்பது குறிப்பிடத்தக்கது. **விண்** எனும் அண்டத்திலுள்ளது **காற்று மண்டலம். அதன், வடிவம் அறுகோணம், நிறம் கருமை. அது முதலாம் அறிவான தொடுஉணர்வோடு தொடர்புடையது.** இவ்விடத்து **'அண்டத்திலுள்ளது பிண்டத்திலுள்ளது, பிண்டத்திலுள்ளது அண்டத்திலுள்ளது'** என்ற உண்மைக் குறிப்பிடத்தக்கது.

பிண்டம் எனும் உடலின் உந்தி எனும் நாபியிலிருந்து வெளிப்படுவது காற்று. அக்காற்று மார்பு, கழுத்து, தலை, அண்ணம், நாக்கு, பல், உதடுகளால் வழியாக வெளிப்படும் போது எழுகின்ற ஓசையே சிந்து சமவெளி செந்தமிழ் மொழியின் எழுத்துக்களின் ஒலி எனும் ஓசை.

அண்டம் எனும் வானமண்டலத்தில் நிறைந்திருப்பவை ஏராளம். அவற்றுள் ஒன்று கரு (Atom) எனும் நுண்ணிய பரமாணு. **உலகிலுள்ள அனைத்தின் உருவங்களும் அணுத்திரள்களின் வடிவங்கள் என்பர்.**

**'பரமாணுவின்றி இவ்வுலகில் ஏதும் அசையாது (இயங்காது) என்ப'**

அசையும் அவ்வணுக்களின் சேர்க்கையால் உருவாகும் நீர்த்துளிகள் நிறைந்த கருமேகக் கூட்டங்கள் ஒன்றோடொன்று உராய்வதால் வானமண்டலத்தில் ஒளியும், ஒலியுமாக அதாவது மின்னலும், இடியுமாக வெளிப்படுவதும், ஒடுங்குவதும் மீண்டும் வெளிப்படுவதுமாகும்.

மின்னலும், இடியும் மழைபொழிவதற்கான அறிகுறி. மழை நீரின் **சுவை இரண்டாம் அறிவோடும்,** மழை நீர் நிலத்தில் விழவே அதனால் வெளிப்படும் **மண்வாசனை மூன்றாம் அறிவோடும்** தொடர்புடையவை.

மின்னலின் ஒளி என்பது **கட்புலனுக்குத் தொடர்புடைய நான்காம் அறிவு.** இடியின் ஒலி என்பது **செவிப்புலனுக்குத் தொடர்புடைய ஐந்தாம் அறிவு.** ஒளி கட்புலனாலும், ஒலி செவிப்புலனாலும் அறிவது **ஆறாம் அறிவான மனம்.** இத்தகைய ஆறு அறிவுகளைப் பற்றியும், அந்த ஆறு அறிவுகளைக் கொண்ட உயிரினங்களைப் பற்றியும் தொல்காப்பியம் மரபியல் (27) கூறுகிறது.

முதலாம் அறிவு முதல் ஐந்தாம் அறிவு வரையிலானவை நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகியவை ஐம்பூதங்களுடன் நெருங்கியத் தொடர்புடையவை. அந்த ஐம்பூதங்களுக்கு வடிவங்களுண்டு என்பதை,

நாற்கோணம் பூமி புனல்நண்ணும் மதியின் பாதி
ஏற்கும் அனல் முக்கோணம் எப்போதும் ஆக்கும்
அறுகோணம் கால்வட்டம் ஆகாயம் ஆன்மா

உறுகாயம் ஆம் இவற்றால் உற்று - எனத் திருவதிகை மனவாசங்கடந்தாரின் உண்மைத் தத்துவப் பாடல் (4) கூறுகிறது. (மதியின் பாதி - அரை வட்டம்). ஆறாம் அறிவான மனதுக்கும், ஏழாம் அறிவான புத்திக்கும் வரிவடிவமில்லை. புத்தி ஆன்மாவுடன் பிறந்தது. புத்தியை ஆன்மாவின் நிழல் எனக் குறிப்பிடுவோருமுண்டு.

மேற்கண்டவற்றின் வாயிலாக ஐம்பூதங்கள், ஐந்தறிவுகள் அவற்றின் வடிவங்கள் ஆகியவற்றோடு பழந்தமிழ் எனும் செந்தமிழ் மொழி எழுத்துக்களுக்குத் தொடர்புண்டு. அத்தொடர்பைப் பற்றிய விபரங்கள் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியர் மூலமும் உரையும் என்ற நூலில் கூறப்பெற்றுள்ளன.

அவையாவன, 'உயிருக்கு வடிவவின்மையி னெகர ஒகரத் தியற்கையு மற்றேயெனச் சிறுபான்மை உயிருக்கு வடிவு கூறினார். எல்லா மெய்யும் உருவருவாகின. **உட்பெறு புள்ளி யுருவாகும்மே** (14) எனவும், மெய்யின் இயற்கை புள்ளியோடு நிலையல் எனவுஞ் சிறுபான்மை வடிவங்கூறினார்'.

'அது, **வட்டஞ்சதுர முதலான முப்பத்திரண்டினுனொன்றை உணர்த்துமனத்தான் உணரும் நுண்ணுணர்வில் லோருமுணர்தற் கெழுத்துக் கட்புலனாகிய வரிவடிவமுடையதாயிற்று. பெறுபான்மை மெய்க்கே வடிவம் கூறினார்**'எனத் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியர் மூலமும் உரையும் கூறுகிறது.

'முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே நுவலும் காலை முறை சிறந்தனவே பாடலுள் பயின்றவை நாடும் காலை'- எனத் தொல்காப்பியம் பொருளதிகாரம்-949 கூறுகிறது.

**முதல்பொருள்** காலமும் **(வட்டமும்)**, இடமும் **(சதுரமும்)**, **கருபொருள்** பரமாணு எனும் கடவுள் முதல் அனைத்து உயிரினங்களையும், **உரிப்பொருள்** மொழி, அம்மொழி அகப்புற ஒழுக்கங்கள் பற்றிவை யாம்.

மேற்கண்ட திருவதிகை மனவாசங்கடந்தாரின் உண்மைத்தத்துவப் பாடலையும், தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியர் மூலமும் உரையும், தொல்காப்பியம் பொருளதிகாரம் (949) ஆகிய மூன்றையும் கருதுகோள்களாகக் கொண்டு செந்தமிழ் எழுத்துக்களின் வகையும் எண்ணிக்கை ஆகியவைப் பற்றி முதற்பொருளான காலம், இடம் 7,500 ஆண்டுகளுக்கும் முற்பட்ட சிந்து சமவெளி நாகரிகம், அதனையடுத்தது கருப்பொருள், அதனையடுத்துள்ளது உரிப்பொருள். அந்த உரிப்பொருளில் சிந்து சமவெளி செந்தமிழ் மொழியின் எழுத்துக்களின் வகை எண்ணிக்கை ஆகியவைப் பற்றி ஆராய்ந்தறியப்பெறுகின்றன.



வானமண்டலத்தில் நிறைந்திருக்கும் மிக நுண்ணிய அணுக்களில் கரு எனும் பரமாணுவும் (நியூக்கிளியஸ்) ஒன்று. அதில் ஆண் அணுக்கள் (புரோட்டான் எனும் வெள்ளை நிற நேர்-மின்னணிகள் அல்லது வலிமை மின்னணிகள்) 6. பெண் அணுக்கள் (நியூட்ரான் எனும் சிவப்பு நிற நொதுமின்னணிகள் அல்லது மென்மை மின்னணிகள்) 6 என 12 மின்னணிகளுண்டு. அவை 30 புள்ளிகளை மேல் ஓடாகக் கொண்டதொரு வட்டத்தினுள்ளடங்கும்.

12 மின்னணிகளே (அணுக்களே) 12 தத்துவங்களாக (உண்மைகளாக) உள்ளன. அந்ததொரு வட்டத்தினுள்ளே உள்ள 12 அணுக்களைச் சுற்றி 3 நீல நிற எதிர் மின்னணிகள் (இடை மின்னணிகள் எனும் இலந்திறன்கள்) சுற்றிச் சுழன்று கொண்டிருப்பதாக விஞ்ஞானம் கூறுகிறது.

அவ்வுண்மையான 12 அணுக்களைச் சுற்றிச் சுழலும் மூன்று எதிர் மின்னணிகளே **மூல முக்குணங்கள்**. அதாவது, **சாத்வீகம்** எனும் சாந்தமானக் குணம், **இராசசம்** எனும் மத்தியமான குணம், **தாமசம்** எனும் காமம், வெகுளி, மயக்கங்களுக்குக் காரணமான மென்மையான குணம். (குணம் - காப்பியத்தைச் சிறப்பிக்கும் செறிவு)

அம்மூலமுக்குணங்களின் சுழற்சியால் **கரு எனும் பரமாணுவும்** (நியூக்கிளியஸ்) அதைச் சுற்றியுள்ளதொரு வட்டமான காலமும் **ஓர் அறுகோணத்தில்** உள்ளடங்குகின்றன. அந்த அறுகோணமே காற்று மண்டலத்தின் வடிவம் எனத் திருவதிகை மனவாசங்கடந்தாரின் உண்மைத்தத்துவப் பாடல் (4) கூறுவது நினைவுக் கொள்ளத்தக்கது.

ஓர் அறுகோணமானது, ஒரு மேல்நோக்கும் முக்கோணமும் ஒரு கீழ்நோக்கும் முக்கோணமும் இணைந்ததொரு வடிவம். அவ்வடிவத்தில் மேல்நோக்கும் முக்கோணம் சிவம் எனும் ஆண் சக்தியையும், கீழ்நோக்கும் முக்கோணம் சக்தி எனும் பெண் சக்தியைக் குறிக்கும் வடிவங்கள். சிவமும் சக்தியும் இணைவதாலும் உருவாகும் அறுமுனை நட்சத்திரத்தினுள்ளே உருவாதோர் அறுகோணம்.

ஆண் (புருடன்), பெண் (பிரகிருத்தி) ஆகிய இரண்டு சக்திகளைக் குறிக்கும் இரண்டு முக்கோணங்களின் ஒவ்வொன்றின் மூன்று பக்கங்களைச் **சாத்வீகம், இராசசம், தாமசம்** ஆகிய மூன்று பொதுவான மூலமுக்குணங்களோடும் (மூன்று எதிர் மின்னணிகளோடும்) ஒப்பிடலாம். அவ்விரு முக்கோணங்கள் பின்னிப்பிணைந்துள்ள சிவன் சக்தியோடு கூடி வானமண்டலத்தில் (அண்டத்தில்) நிறைந்துள்ளதாகச் சாக்தமும், யூதசமயமும் தனது அடையாளச் சின்னமாகவும் கொண்டுள்ளன.


Rjd-103A

ஆறு முனை நட்சத்திரவடிவம் ஒன்றைச் சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் எச்சங்களில் ஒன்றான, ஆர்.ஜே.டி.-103எ என்ற அடையாள எண்ணுடைய பானை ஓட்டிலும், தமிழக நெடுங்கூர், துளுக்கர்பட்டி போன்ற பானை ஓடுகளிலும் காணலாம்.

சிவமும் (வெண்ணிறமான சுக்கிலமும்), சக்தியும் (சிவப்பு நிறமான சுரோணிதமும்) ஆகாயமண்டத்தில் நிறைந்துள்ளன எனக் கோவை ஸ்ரீ லலிதாம்பிகை பீடம் தவத்திரு ஸ்ரீ ஜெகநாத சுவாமிகள் குறிப்பிடுகிறார்.



கோவை ஸ்ரீ லலிதாம்பிகை பீடம் தவத்திரு சுவாமி ஸ்ரீ ஜெகநாத சுவாமிகள் கூறுவதையே ஆறு முனை நட்சத்திரத்தின் நடுநாயகமாக உள்ளதொரு அறுகோணமும், அதில் ஒரு சிவப்பு நிறப் புள்ளியும், மையத்திலுள்ளதோர் அறுகோணத்தைச் சுற்றி (6+12)18 அறுகோணங்களும், 54 நீல நிறப் புள்ளிகளும், அவற்றின் வெளிப்புறமாக 18 மஞ்சள் நிறப் புள்ளிகளும் கொண்டதொரு வடிவத்தை ஆகாயமண்டத்தில் நிறைந்துள்ள உயிரணுக்களின் வடிவங்கள் என அமெரிக்கா நாட்டின் நாசா வானியல் ஆராய்ச்சிக் கூடம் தொலை நோக்கும் கருவியின் வாயிலாகக் கண்டறிந்து அறிவித்துள்ளது. (நன்றி)

அண்டத்திலுள்ளது பிண்டத்திலும் உள்ளது என்ற தத்துவத்தை மற்றொரு விதமாக உணர்த்தும் வகையில் சிவத்தை வெண்ணிறச் செங்குத்துக் கோடுகளாகவும், சக்தியைச் செந்நிறச் செங்குத்துக் கோடுகளாகவும், திருக்கோயில்களின் திருச்சுற்றுச் சுவர்களில் அடையாளப்படுத்திக் காட்டுவது பழந்தமிழர் மரபு.

திருக்கோயில்களின் நுழைவாயிலாக விண்ணைத் தொடும் அளவுக்கு உயர்ந்து நிற்கும் தமிழகத் திருக்கோபுரங்களில் மேற்கண்ட மூன்று குணங்களுடைய கருப்பொருள்களான கடவுள் முதல் அனைத்து உயிரினங்களைச் சுதைச் சிற்பங்களாக வடிவமைத்துக் காட்டுவது தமிழகச் சிற்ப சாத்திர மரபு.

அம்மரபை, மறுதலை இருமைகட்கும் (Pairs of opposites), பெயர், உருவம் (Name and Form) மனோ, வாக்கு, காயம் (Thought, word, Deed) அனைத்திற்கும் அப்பாற்பட்ட அவ்யக்தன் (unmanifested) எனும் சிவன் உயிர்களின் பொருட்டு வியக்தமாகி (Manifested) மேற்கொண்ட அவதாரமும் சச்சிதானந்த சொரூபமும் சிவனே! எனவும், அந்தச் சசசிதானந்த சொரூபம் சிவனே! (ஏகனே) சக்தியோடு கூடி அனைத்து உயிரினங்களாக அதாவது **அநேகனாக ஆனார்** எனவும் சைவசித்தாந்தம் கூறுகிறது.

அந்த **அநேகன்** என்பதை எச்-62எ எனும் அடையாள எண்ணுடைய சிந்து சமவெளி நகர நாகரிக முத்திரை **பா அன் நேகன்** எனக் கூறுகிறது. **பா** என்பதற்குப் பாட்டு, பாம்பு, **தூய்மை,** அழகு எனவும், தீக்குச்சி வடிவிலான மனித உருவமான **அன்** என்ற சொல்லுக்கு **அவன்** எனும் சிவனையும், **நேக(ன்)** என்பதற்கு மிகப் பொடியானவன் (மிகச் சிறியதானவன்)

எனவும் தமிழ் அகராதி பொருள் கூறுகிறது. **பா அன் நேகன்** என்ற தொல்வாச்சியம் **தூய்மையான சிவன் மிகச் சிறியதானவன்** எனப் பொருளாகும். **சிவபெருமானை அணுவுக்குள் அணுவானவனே!** என்பதன் உட்பொருளும் அஃதே. இந்தத் தொல்வாச்சியத்தில் உள்ள **பா** என்பது **தூய்மை** என்பதைக் குறிப்பதற்கு முக்கியமானதொரு காரணமுண்டு.

அக்காரணமானது, ஆகாயமண்டலத்தில் நிறைந்துள்ள உயிரணுக்கள் ஒரு குறிப்பட்ட காலத்தில் கருமேகங்களோடு கலந்து சிலகாலம் தங்கியிருந்து **முதலாவதாக** ஆகாயத்தில் தூய்மைப்படுத்தப் பெறுகின்றன. **இரண்டாவதாக** மேலடுக்குக் காற்றால் தூய்மைப்படுத்தப் பெறுகின்றன. **மூன்றாவதாக** மின்னலின் வெப்பத்தால் (நெருப்பால்) தூய்மைப்படுத்தப் பெறுகின்றன. **நான்காவதாக** மழைநீரால் தூய்மைப்படுத்தப்பெற்று மழை நீரோடு கலந்து விடுகின்றன. மழைகாலங்களில் வானிலிருந்து மழை நீரோடு கலந்த உயிரணுக்கள் பூமியின் நிலத்தில் விழுந்த உடன் **ஐந்தாவதாக** நிலத்தால் தூய்மைப்படுத்தப்பெறுகின்றன.

இவ்வாறு உயிரணுக்கள் ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலம் ஆகிய பஞ்ச பூதங்களால் தூய்மைப்படுத்தப் பெறுவதைப் **பஞ்சாக்கினி வித்தை** (அறிவு) என்பர். அவ்வாறு தூய்மைப்படுத்தப்பட்ட உயிரணுக்கள் மழை நீராக நிலத்தையும், கடல் நீரையும் வந்தடைகின்றன. அவ்வாறு வந்தடைந்த உயிரணுக்களே (விதைகளே) செடி, கொடி, மரங்களாகிப் பூத்துக் காய்த்து, பழங்களாகி நிலத்திலும், கடல் நீரில் வாழும் பல்வேறு உயிரினங்களுக்கான உண்ணும் உணவாகின்றன.



ஆணினம் உண்ணும் உணவு விந்து எனும் வெண்ணிறமான சுக்லமாகவும், பெண்ணினம் உண்ணும் உணவு செந்நிறமான சுரோணிதமாகவும் (கருமுட்டையாகவும்) மாறுகின்றன. ஓர் ஆணும் ஒரு பெண்ணும் தம் இனப்பெருக்கத்திற்காக மனமுவந்து கூடும் போது ஆணின் விந்து பெண்ணின் கருமுட்டையை அடைந்து சினையாகி, கருவாகி, சிசுவாகி எட்டாவது மாதத்தில் உயிர் எனும் ஆன்மா சிசுவின் உச்சந்தலையிலுள்ள பிளக்கப்பட்ட எனும் விக்ருதி அதாவது இறைவழி வாயிலாகச் சிசுவின் உடலில் உட்புகுந்து பத்தாவது மாதத்தில் ஒரு குழந்தையாக இப்பூமியில் பிறக்கிறது என்பர். ( படம்: மெக்சிகோ நாட்டிலுள்ள **'எல்ரே ரிலிக்ஸ்'** எனும் புடைப்புச் சிற்பம். திருக்குறியீட்டியல் ப.60).

குழந்தைப் பிறந்தவுடன் தாய்க்கும், சேய்க்கும் (சிசுவுக்கும்) இடையிலான தொப்புழ் கொடி துண்டிக்கப்பெறும் போது, பிராணவாயு குழந்தையின் கால்கட்டை விரலின் வாயிலாக அதன் உடலில் உட்புகவே குழந்தைத் தானாகவே சுவாசித்து வாழத்துவங்கும் தருணத்தில் அழுகிறது எனச் சித்தர்கள் கண்ட மானுடர் இரகசியம் எனும் நூல் கூறுகிறது.

மேற்கண்டவற்றின் வாயிலாகப் பிரபஞ்சத்தில் நிறைந்துள்ள பரமாணு ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலம் ஆகிய ஐம்பூதங்களால் தூய்மையடைந்ததொரு உடலாகி, உயிர் எனும் ஆன்மா உடலில் உட்புகுவதால் உடலமாகி (உயிர்மெய்யாகி), பிராணவாயுவை சுவாசித்து நிலத்திலும், நீரிலும் காற்றிலும் வாழும் அனைத்துச் சீவராசிகளாக (சீவிக்கின்றன) வாழ்கின்றன.

அவ்வாறு சீவிக்கும் சீவராசிகளில் குறிப்பாக ஆறறிவு கொண்ட மானுடர் இனம் முன்கண்ட மூலமுக்குணங்களின் தாக்கத்தால் **சாத்வீகம்** எனும் சாந்தமான குணமுடையவராகவும், **இராசசம்** எனும் மத்தியமான குணமுடையவராகவும், **தாமசம்** எனும் காமம், வெகுளி, மயக்கங்களுக்குக் காரணமான மென்மையான குணமுடையவராகவும் வாழ்கின்றனர். அவ்வாறு வாழும் மானுடர் இனம் ஒரு நிர்ணயிக்கப்பட்டதொரு காலம் வரை இக்கர்மபூமியில் உடலமாக வாழ்ந்து முதலில் உயிர் எனும் ஆன்மாவும், பின்னர் பிராணனும் உடலைவிட்டுப் பிரியவே சடலமாகின்றன.

அவ்வாறு நிர்ணயிக்கப்பட்டதொரு காலம் வரை இக்கர்மபூமியில் உடலமாக வாழும் காலத்தில் செய்து முடிக்கவேண்டியவை முற்பகுதியில் கண்ட உழவு, தொழில், வரைவு (திருமணம்), வாணிகம், விச்சை (கல்வி), சிற்பம் ஆகிய ஆறுவகையான கர்மாக்களை (நற்செயல்களை) அகவொழுக்கம், புறவொழுக்கம் ஆகிய இரண்டு ஒழுக்கங்களைக் கடைபிடித்தும், குற்றமும், குறையுமில்லாமலும் செய்து முடிக்கப்பெறவேண்டும் என்பதே மானுடர் வாழ்க்கையின் குறிக்கோள்.

அத்தகைய அகவொழுக்கம், புறவொழுக்கம் ஆகிய இரண்டு ஒழுக்கங்களைப் பற்றி அறிவிப்பதற்காக வெளிப்பட்டதே எழுத்துக்களைக் கொண்ட உலக மொழிகள். அம்மொழிகளில் மூத்தமொழியே உயரெழுத்துக்களும், மெய்யெழுத்துக்களும், உயிர்மெய்யெழுத்துக்களும் கொண்ட **'சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழியின் தொல்வாச்சியங்கள்'** என்றாலது மிகையாகாது.

மேற்கண்ட சிறப்புக்களுடைய செந்தமிழ் மொழியின் எழுத்துக்களின் வகை மற்றும் அவற்றின் எண்ணிக்கை ஆகியவைப்பற்றி, **"எழுத்தெனப் படுப அகரமுத னகர விறுவாய் முப்ப:.தென்ப சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே"** எனத் தொல்காப்பியம் எழுத்ததிகாரம், நூன்மரபு, நூற்பா-1 கூறுவதும், **உயிரும் உடம்புமாம் முப்பதும் முதலே -என நன்னூல் (59)** கூறுவதும் நினைவுக் கொள்ளத்தக்கவை.

அதாவது, செந்தமிழ் மொழியின் உயிரெழுத்துக்கள் 12, மெய்யெழுத்துக்கள் 18 என ஆக மொத்தம் 30 எழுத்துக்கள் என்பதும், குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆயுதம் எனும் முப்பாற்புள்ளி ஆகிய மூன்றும் சார்பு எழுத்துக்களுடன் அதன் எண்ணிக்கை 33 என்பதும் தெரியவருகிறது.



## பன்னிரண்டு உயிர் எழுத்துக்கள்

கரு எனும் பரமாணுவில் (நியூக்கிளியஸில்) உள்ள 12 (புரோட்டான் மற்றும் நியூட்ரான்) அணுக்களே விஞ்ஞானம், மெய்ஞ்ஞானம் ஆகிய இரண்டின் அடிப்படையில் மானுடர் இனத்தில் **ஆண், பெண், ஆணும் பெண்ணும் அல்லாத அலி (போலி)** எனும் மூன்று இனமென்னும் (முப்பாலாகும்).

அவற்றில் ஆண் (குறில்) எழுத்துக்கள் **'அ, இ, உ, எ, ஒ'** ஆகிய **ஐந்தும்,** பெண் (நெடில்) எழுத்துக்கள் **'ஆ. ஈ, ஊ, ஏ, ஓ'** ஆகிய **ஐந்தும்,** (அ + இ) **ஐ,** (அ + உ) **ஔ** ஆகிய **இரண்டும்** அலி எனும் போலி எழுத்துக்கள் என மூவகையாகிப் பன்னிரண்டு உயிர் எழுத்துக்களாயின எனலாம்.



## பதினெட்டு மெய்யெழுத்துக்கள்

ஒரு வட்டத்திலுள்ள 12 அணுக்களைச் சுற்றி அதாவது 12 உயிர் எழுத்துக்களைச்சுற்றி 3 எதிர் மின்னணிகள் **(இடை மின்னணிகள்)** எனும் இலந்திறன்கள் சுற்றிச் சுழல்கின்றன என்பதும், அம்மூன்று எதிர் மின்னணிகள் **சாத்வீகம்** எனும் சாந்த குணம், **இராசசம்** எனும் மத்தியமான அறிவு, **தாமசம்** எனும் காமம், வெகுளி, மயக்கங்களுக்குக் காரணமான **தமோகுணம்** ஆகிய **மூலமுக்குணங்கள்** என்பதுமென முன்கண்டது சிந்திக்கத்தக்கது.



மூலக்கருவைச் சுற்றியுள்ள **30 புள்ளிகளே! 12 உயிரெழுத்துக்களாகவும்,** வன்மையானக் குணம், மென்மையானக் குணம், இரண்டுக்கும் இடையிலான தன்மையான குணம் ஆகிய மூன்று குணங்களே இனங்களாகி **வல்லினம் 6, மெல்லினம் 6, இடையினம் 6 என 18 மெய்யெழுத்துக்களாயின** எனலாம்.

அதாவது, **க், ச், ட், த், ப், ற்** ஆகியவை **வன்குணம் (எ) வல்லினமாகவும், ங், ஞ், ண், ந், ம், ன்** ஆகியவை **மென்குணம் (எ) மெல்லினமாகவும், ய், ர், ல், வ், ழ், ள்** ஆகியவை **இடைகுணம் (எ) இடையினமாகவும்** என மூவகையான 18 மெய்யெழுத்துக்களாயின எனலாம்.

அவ்வாறு உயிரெழுத்துக்கள் 12, மெய்யெழுத்துக்கள் 18 என 30 ஆயின என்பதை **எழுத்தெனப்படுப அகர முத னகர விறுவாய் முப்ப∴. தென்ப** எனத் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் முதலாம் நூற்பா கூறுவதை ஆண், பெண் அணுக்களின் 30 புள்ளிகளைக் கொண்ட வட்டவடிவ கரு முட்டை ஓட்டுடன் ஒப்பிடலாம்.

பொதுவாக இந்நிலவுலகில் மெய் எனும் மானுடர் உடலில் உயிர் எனும் ஆன்மா ஓர் உடலமாக வாழும் காலத்தில் விழிப்பு நிலை, கனவு நிலை, உறக்கநிலை ஆகிய **மூன்று அவத்தைகள்** எனும் மூன்று நிலைப்பாடுகளில் இருக்குமென்பது குறிப்பிடத்தக்கது.

ஆனால், யோகியர் இராச யோகத்தில் நிலைத்திருக்கும் போது, குந்தலினி சக்தியானது இட, பிங்கலை நாடிகளின் சுழற்சியால் முதுகுத் தண்டுவடத்திலுள்ள 33 கணுக்களுக்கு நடுவே உள்ள சூக்கும நாடி எனும் சுழு முனையின் வழியாக மேலெழுந்து, விழிப்பு நிலை, கனவு நிலை, உறக்கநிலை, அமைதி நிலை (துரிய நிலை), பேரமைதி நிலை (துரியாதீத நிலை) ஆகிய 5 நிலைப்பாடுகளில் இருக்குமென்பர். அவ்வைந்து நிலைப்பாடுகளைப் படிப்படியாகக் கடந்து இந்நிலவுலகில் உயிர்வாழும் காலத்தில் சீவமுக்தி நிலையை அடைவர் என்பர்.

இந்நூலில், பேரமைதி நிலை (எ) துரியாதீத நிலை என்ற தலைப்பில் சிந்து சமவெளி குறியீடுகள், தமிழகப் பாறை ஓவியங்கள், பானை ஓடு கீறல் குறியீடுகள், செதுக்குக் கோட்டுருவங்கள் ஆகியவற்றுடன் ஒப்பிட்டு, தொல்வாச்சியங்களாகப் படித்து அவற்றின் பொருள் அறியலாம்.



## 33 எழுத்துக்கள்

சீவமுக்தி நிலையை அடைவதற்கான சூக்கும நாடியைக் கொண்ட முதுகுத் தண்டிலுள்ள 33 கணுக்களுக்களே! உயிரெழுத்துக்கள் 12, மெய்யெழுத்துக்கள் 18, சார்பு எழுத்துக்கள் 3 என 33 எழுத்துக்களாயின எனலாம்.

சக்தி சிவனோடு கூடுமிடம் எனக் கூறப்படும் இருபுருவமத்தியிலுள்ள 6ஆவது ஆஞ்யா சக்கரம் என்பர். அந்த ஆஞ்யா அச்சக்கரத்தில் ஞானம் பெற்ற நம்முன்னோர்களான யோகிகள் 33 எழுத்துக்களின் ஒலி, ஒளி ஆகிய இரண்டையும் கண்டறிந்துள்ளனர். அந்த ஆஞ்யா அச்சக்கரமே முன்கண்ட **திரிகுடி (எ) திருவிடம்.**

அத்திருகுடி (எ) திருவிடம் குறியீட்டை, பாறை செதுக்கு ஓவியம் ஒன்றை இராயவேலூர் அருகே தொல்லியல் ஆய்வாளர் கதிரவன் கண்டறிந்து Youtubeஇல் பதிவிட்டுள்ளார் என்பதும், திருச்சிராப்பள்ளி மாவட்டம், சமயபுரம் அருகே அக்கரைப்பட்டியில் உள்ளதொரு பாறையின் மேற்பரப்பில் கோட்டுருவமாகப் பொறிக்கப்பெற்றுள்ளதை யாம் கண்டறிந்தோம் என்பதும் சிறப்புச் செய்திகளாகும்.

பொதுவாக, சராசரி மனிதர்களுக்கு ஒளியின் அளவு ஒரு குறிப்பட்ட அளவுக்குள் இருந்தால் மட்டுமே நான்காம் அறிவான கட்புலனால் காணமுடியும். அந்த ஒளி குறிப்பட்ட ஒளி அளவை விடக் குறைவாகவோ, கூடுதலாகவோ இருந்தால் எதையும் காண இயலாது.

அதுபோலவே, ஓர் ஒலியின் அளவு ஒரு குறிப்பட்ட அளவுக்குள் இருந்தால் மட்டுமே ஐந்தாம் அறிவான செவிப்புலனால் கேட்க முடியும். அந்த ஒலி குறிப்பட்ட அளவை விடக் குறைவாகவோ, கூடுதலாகவோ இருந்தால் எதையும் கேட்க இயலாது. ஆனால், யோகிகள் ஒளி, ஒலி ஆகிய இரண்டின் அளவுகள் சராசரி அளவைவிடக் குறைவாகவும், கூடுதலாகவும் இருந்தாலும் கூட அவர்களால் காணவும், கேட்கவும் இயலும்.

யோகிகளால் இராசயோகத்தில் துரியாதீதம் எனும் பேரமைதி நிலையில், அதாவது **திரிகுடி (எ) திருவிடம்** எனும் இருபுருவமத்தியில் தியானம் செய்து ஒளியும் ஒலியுமாக அறியப்பட்டதே விண்மொழி எனும் செந்தமிழ் மொழியின் எழுத்துக்கள் எனலாம். சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழி விண்மொழி என்பதனால் விண்ணோர்கள் எனும் தேவர்களை வழிப்படுவதற்கான சமசுகிருதம் மொழியை தேவநாகரி (எ) தேவமொழி எனப் பெயரிட்டுள்ளனர்.

## 216 உயிர்மெய் எழுத்துக்கள்

12 உயிர்கள் 18 மெய்களோடு கூடி 216 உயிர்மெய்களாயின. அதாவது, உயிர்மெய் எழுத்துக்களாயின எனலாம். மேற்கண்டவற்றையே தொல்காப்பியர் பெருமகனார், தமது சிறப்புப்பாயிரத்தில் யோக சாத்திர நூல்கள் போன்ற **முந்து நூல்கண்டு முறைப்பட எண்ணிப் புலந்தொகுத் தோனே** என்று அறித்துள்ளார் எனலாம்.

மேற்கண்டவற்றின் வாயிலாகப் பழந்தமிழ் எனும் செந்தமிழ் மொழியின் எழுத்துக்களின் வெளிப்பாடுகள் வகை, எண்ணிக்கை ஆகியவை பிரபஞ்சத்தில் நிறைந்துள்ள கரு எனும் பரமாணுவின் அமைப்பை அடிப்படையாகக் கொண்டே நிர்ணயிக்கப்பட்டுள்ளன எனவும், நம் தமிழ் முன்னோர்களால் அறிவியல், மெய்யியல் ரீதியில் ஆராய்ந்தறியப்பட்டுள்ளன எனலாம்.

செந்தமிழ் மொழியின் 33 எழுத்துக்களின் வகை, எண்ணிக்கை ஆகியவை ஒரு பரமாணுவை அடிப்படையாகக் கொண்டு நிர்ணயிக்கப்பெற்றுள்ளதை அறிந்ததன் தொடர்ச்சியாகச் சிந்து வெளிச் செந்தமிழ் எழுத்துக்கள், எதனை அடிப்படையாகக் கொண்டு வடிவங்கள் பெற்றுள்ளன என்பதைச் **சிந்து சமவெளிச் செந்தமிழ் எழுத்துக்களின் வரிவடிவங்கள்** என்ற தலைப்பில் காணலாம்.

# சிந்து சமவெளிச் செந்தமிழ் எழுத்துக்களின் வரிவடிவங்கள்

''எழுதப்படுவதினால் எழுத்தெனப் பெயர் பெறுவனவாயின'' எனவும், **''எழுத்துக்கள் எல்லாம் ஒலிவடிவினையும், வரிவடிவினையும் பெற்று வழங்கும்** '' எனவும், **''ஒலி எழுத்துக்கள் அநாதி (முந்திய) எழுத்துக்கள்** '' எனவும், **''வடிவெழுத்துக்கள் ஆதி எழுத்துக்கள்''** எனவும், அவற்றிற்கு **''இரேகை எழுத்துக்கள், வரி எழுத்துக்கள், பொறி எழுத்துக்கள், இலேகை எழுத்துக்கள் போன்ற பெயர்களுண்டு''** எனவும் பல்வேறு தமிழ் மொழி நூல்கள் கூறுகின்றன.

முன் கண்ட, **உட்பெறு புள்ளி யுருவாகுமே** என மெய்யின் இயற்கை புள்ளியோடு நிலையல் (தொல். எழுத்து நுற்பா-14) கூறுவதும், **உயிருக்கு வடிவவின்மையி னெகர ஒகரத் தியற்கையு மற்றேயெனச் சிறுபான்மை உயிருக்கும் வடிவம் கூறினார்** என்பதும், அவை **வட்டம், சதுரம், முப்பத்திரண்டில் ஒன்று** எனச் சூட்சுமமாக நச்சினர்க்கினியர் உரை நூல் கூறுகிறதென்பதும் நினைவுக் கொள்ளத்தக்கது.

**வட்டம்** காலத்தையும், **சதுரம்** இடத்தையும் குறிப்பிடுவது வரைபடக் கணிதத்தைச் சார்ந்தவை என்பதையும், **முப்பத்திரண்டில் ஒன்று** என்பது **சகளம்** எனும் 1 கட்டம் முதல் **இயந்திரக் காந்தம்** எனும் (32 x 32) 1024 கட்டங்களைக் கொண்ட முப்பத்திரண்டு வகையான வரைபடங்களில் ஏதோ ஒன்று என்பதையும் அறியமுடிகிறது.

அந்த முப்பத்திரண்டில் ஒன்று எது? என்பதை, **எட்டெட் டுருநில நாற்புறத்து இயலால் எட்டுறும் கலையாய் மூலப்பொருளாய்ப் புள்ளி நுட்பம் பொருந்த அறிவார் துள்ளும் உணர்வால் நுண்ணியல் அறிவாரே!** என ஐந்திறம் பா. எண். 135 கூறுகிறது.

பொருள்: அறுபத்து நான்கு கூறுகளாக அமையும் **மண்டுகம் மண்டலம்** நாற்புறத்து இயலாகவும், (சதுர அமைப்பாகவும்) எட்டெட்டாகப் பொருந்தும் கலைகளாகவும் மூலப்பொருளை நடுவிடத்து அடக்கியதாகவும் விளங்கும்.

இத்தகைய மண்டலத்தின் மையப் புள்ளியின் நுட்பத்தைப் பொருத்தமான வகையில் அறியவேண்டிய முறைப்படி அறிபவர்கள் **மின்னல் போன்று விரைந்து எழும் ஓர் ஆன்மத் துடிப்பால், அதன் நுண்ணியமான நிலைகளை மேலும் விளக்கமாகக் காண்பார்கள்** எனக் கூறுகிறது.

இப்பாடலின் வாயிலாக, **அறுபத்து நான்கு கூறுகளாக அமையும் மண்டலமானது** முப்பத்திரண்டு வரைபடங்களில் 8-ஆவதான **மண்டுகம் வரைபடம்** என்பது தெரியவருகிறது.

**நாற்புறத்து இயலால்** என்பது சதுரம் என்ற இடம் என்பதும், அது **நான்கு திசைகளை எல்லைகளைப் பற்றிய இயல்** என்பதும் தெரியவருகிறது.

**புள்ளிப் பொருளே எழுத்துரு சிவனும்** - ஐந்திறம் *129*

பொருள்: மூலப்புள்ளி எனும் பரம்பொருளே எழுந்து நிறைபெறும் எழுத்துருவாகிறது.

இப்பாடலில் புள்ளி, பொருள், எழுத்துரு ஆகிய மூன்று சொற்கள் தமிழ் மொழி எழுத்துக்கள் மூலப்புள்ளியிலிருந்தே எழுத்துக்கள் பரம்பொருளால் அறிவிக்கப்பெற்றுள்ளன என்பதும் புலனாகிறது. (புள்ளி, எழுத்து, சொல், பொருள் ஆகியவற்றைப் பற்றிச் செம்பியன் கண்டியூர் புதியகற்காலக் கற்கோடாரி என்ற தலைப்பில் காணலாம்.)

**காலமும் பொழுதும் கணக்கியல் நெறியாய் மூலமும் பொருளும், மெய்ப்பொருள் இயலால் கோலமும், சீலமும் குறித்துக் காட்டும் ஞாலத்து இயலின் நுண்ணுணர் கலையே**- ஐந்திறம் *129*

பொருள்: **காலம்** என்பதும், பொழுது என்பதும் கணக்கியல் நெறியாய் அமைய, **மூலம்** என்பதும், மூலத்தைத் தன் இருப்பினால் புலப்படுத்தும் மெய்ப்பொருளைப் புலப்படுத்தும் நெறியாய் அமையும். இவ்வாறே **கோலம்** என்பதும், கோலம் அமைவதற்கு ஓர் உறுதுணையாக உள்ள **சீலம்** என்பதும், **ஞாலத்து** இயல்பின் நுட்பங்களை உணர்விக்கும் கலைக் கூறுகளாக விளங்கும்.

இப்பாடலில் உள்ள **மூலம், காலம், கோலம், சீலம், ஞாலம்** ஆகிய ஐந்து சொற்களை ஞாலத்து இயல் (உலகத்து இயல் அதாவது உலகியற்கை எனும் உலகியல்) என்பதுடன் தொடர்புப்படுத்தி அவற்றை ஐந்தியலாக வரிசைப்படுத்தி உலகின் அனைத்து மெய்ப்பொருள்களின் வெளிப்பாட்டைப் பற்றிக் கூறுவதும் தெரியவருகிறது.

**மொழிமுதல் ஓமென் றுரைத்தல் வழக்கே** - ஐந்திறம் 4

பொருள்: எல்லா மொழிகளுக்கும் மூலஒலியாக ஓம் என்பது விளங்கும். ஓம் என்னும் தீர்க்கப் பிரணவ மந்திரம் மெய்ப்பொருள் ரீதியில் **உன் உலகம் இதுவல்ல** என்பதை உணர்த்தும் என்பது குறிப்பிடத்தக்கது.

**அணுத்திரள் ஒலியே எழுத்தொலிச் சிறப்பாம்** - ஐந்திறம் 5

பொருள்: மிகநுண்ணிய நிலையில் எழுந்த ஒலியே **அணுக்களால்** உந்தப்பட்டு எழுத்தின் சிறப்போசையாகவும் பலவாகவும் பரிணமிக்கிறது என்பது தெரியவருகிறது.

**எண்ணில் பல் கோடி சேவடி முடிகள், எண்ணில் பல் கோடி திண் தோள்கள், எண்ணில் பல் கோடி திருவுருப் பெயர்கள், ஏர்கொண்ட முக்கண் முகம் இயல்பும் எண்ணில் பல் கோடி எல்லைக்குப்பாலாய் நின்றைஞ்நூற்றந்தணரேத்தும் எண்ணில் பல் கோடி குணத்தர்ஏர் வீழி இவர்நம்மை ஆளுடையாரே** என்கிறது திருவீழிமிழலை (5) திருவிசைப்பா (9).

இறைவனை நேகன் (மிகச்சிறியவன்), அணுவுக்கு அணுவானவன் என்றும் அநேகன் (எ) மிகப்பலவானவன் என்றும் சைவசித்தாந்தம் கூறுகிறது. **ஏகன் அநேகன்** என்றார் மாணிக்கவாசகர். மிகப்பலவானவன் என்பதைப் **பன்** எனும் ஈரெழுத்துச் சொல்லால் அரிவாட்பல் எனச் சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் தொல்வாச்சியங்கள் குறிப்பிடுகின்றன.

**முக்கண்ணன்** எனும் சிவனைச் சிந்து சமவெளி நகர நாகரிகத் தொல்வாசகங்கள் **பா அநேகன்** தூய்மையான மிகப்பலவானவன் என மேலும் சிறப்பித்துக் கூறுகின்றன.

**வானியல் ஒலியே ஓசை மொழியாய்த் தானியல் வடிவுறும் குறியெழுத் தென்ப** - ஐந்திறம் 6

பொருள்: மிகத் தூய்மையான வெளியிலிருந்து இயல்பாகத் திரண்டு எழுந்த நாதமே தன் இயல்பாக உலகில் அந்தந்த இடங்களுக்கு ஏற்ற வகையில் பல்வேறு மொழிகளாகப் பரிணமித்து ஒன்றைக் குறித்து எழும் **வடிவெழுத்தாக அதாவது குறியீடு என்ற குறியெழுத்தாக** உருக்கொள்கிறது.

(தூய்மையான வெளியிலிருந்து என்பது முன்கண்ட **ஆகாய மண்டலத்தில் பரமாணுக்கள் தூய்மைப் படுத்தப்படுவதைப் பஞ்சாக்கினி வித்தை** எனக் குறிப்பிடுகிறது என்பது நினைவுக் கொள்ளத்தக்கது.)

**குறிகுறி யீடே வரைவென வாகி அறிநிலை எழுதலின் எழுத்தெனப் படுமே** - ஐந்திறம் 7

பொருள்: ஒன்றைக் குறித்து எழ்தல், அடையாளமாக எழுதல், வரையப்படும் நிலையில் உருப்பெறுதல் என மூன்று நிலைகளில் புலனாகும் வண்ணம் எழுகின்ற காரணத்தால் எழுத்து என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிறது. (எழுதல் - எழுத்து)

**ஒலியியல் வரிவியல் வடிவியல் உருவியில் ஒளியியல் ஐந்தாய் உரைக்கப்படுமே**- ஐந்திறம் 8

பொருள்: ஒலிக்கும் இயலாகவும், குறித்த பயனை உளதாக்கும் வரிவியல் இயலாகவும், வடிவத்தின் இயலாகவும், உருவத்தின் இயலாகவும், ஒளியின் இயலாகவும் ஆக ஐந்து நிலைகளில் எழுத்தின் இயல்பு விரித்துச் சொல்லப்படும். (ஒலி செவியாலும், ஒளி கட்புலனாலும் அறியக் கூடியவை)

**எழுத்தே சொல்லே பொருள்கட் டணியென வழுத்தும் ஐந்தியல் முறைநெறி வழக்கே-** ஐந்திறம் 9

பொருள்: எழுத்து. எழுத்துக்களால் ஆகும் சொல், சொல்லால் அறிந்துணரப்படும் பொருள், உருவாக்கப்படும் வடிவம் (கட்டு), அதற்கு அமைய வேண்டிய அலங்காரம் (அணி) எனப்படும் ஐந்தியல்களும் போற்றப்படும் நிலையில் முறையாகவும், நெறியாகவும் தொன்று தொட்டு வழங்கப்பட்டு வருகின்றன.

ஒரு மூலம் எனும் (பரமாணு) முதலில் ஒரு குறியீடாகவும், அதனையடுத்து எழுத்துருவாகவும், பின்னர் எழுத்துக்களின் தொகுப்பானதொரு சொல்லாகவும் வடிவம் கொள்வதற்குரிய காலம், கட்டுப்பாடுகளின் அடிப்படையில் வரையப்படுவது கோலம், அச்சொல் முறையாக அமைந்து பொருள் விளங்கச் செய்வது சீலம், கோலங்களின் குவியலாகத் திகழ்ந்து அணியாக அழகுள்ளதாகச் செய்வது ஞாலம் (பிரபஞ்சம்) என்பது ஐந்தியல்களின் விரிவாகும்.

**ஓண்தமிழ் ஐங்குறியில் ஏழ்நெடில் தெரிந்து வல்லின மெல்லின இடையினம் தோன்றி தொல்மரபு இயலுரை விளக்குறும் நெறியே-** ஐந்திறம் 181.

பொருள்: இயல்பாகவே அமையும் ஆற்றலுக்குரிய (செந்தமிழ் மொழி) எழுத்துக்களை அறுபத்து நான்கு கூறுகளுடைய **மண்டுகம் வரைபடத்தை அமைத்து,** அதில் **விண்னொளியின்** நிலையையும், அறுபத்து நான்கு கலையையும் நெறிமுறைப்படி அதில் காட்டி, செந்தமிழ் நெறியாம் ஐந்தியல், (ஐந்திலக்கணம்) முறையில் மூலத்தினை விளக்கி, ஒலியும் ஒளியுமாக வெளிப்பட்ட செந்தமிழ் மொழிக்கே உரிய ஐந்து குறில் ஏழு நெடில் ஆகிய (12) உயிர் எழுத்துக்களையும் நன்கு புலப்படும் படியாக இணைத்து, வல்லினம், மெல்லினம், இடையினம் ஆகிய (18) மெய் எழுத்துக்களையும் பொருத்தமுற அமைத்துத் தொன்மை வாய்ந்த (மொழி) மரபு வழிப்பட்ட இந்நூலானது மண்டல நெறியை நன்கு விளக்கும்.

குறிப்பு: ஐந்திறம் எனும் நூல் மயன் அருளியது, இந்திரன் அருளிய ஐந்திரம் அல்ல.

மேற்கண்டவற்றின் வாயிலாக முப்பத்திரண்டில் ஒன்று என்பது தமிழ்ச் சிற்பி மயன் அருளிய ஐந்திறம் எனும் நூலில் குறிப்பிடப்பட்டுள்ள 64 கட்டங்களுடைய மண்டுகம் எனும் தாவித்தாவிச் செல்லும் ஒரு தவளையின் வரைபடம் என்பது தெரியவருகிறது.

முதலாவதாக அந்த வரைபடம் ஞாலம் எனும் உலகத்தின் காலம் (வட்டம்) இடம் (சதுரம்) ஆகிய இரண்டும் உள்ளடங்கியதொரு வரைபடம் என்பதும் அது ஒரு மூலம் எனும் ஒரு புள்ளியிலிருந்து வெளிப்பட்டுள்ளது என்பதையும் அறியமுடிகிறது.

**இரண்டாவதாக** அந்த மண்டுகம் வரைபடம் அணுக்களின் தொகுப்பு என்பதும், அந்த அணுக்களின் ஓசையே அக்கரம் எனும் அழியாத இரண்டெழுத்து ஓம் எனும் தீர்க்கப் பிரணவ மந்திரத்தின் ஒலி என்பது சிந்து சமவெளிச் சான்றுகளின் வாயிலாக அறியமுடிகிறது.

அவ்வொலியே **அக்கரன்** எனும் எங்கும் நிறைபொருளான **பகவன்** எனும் இறைவன் அறிவித்த ஓசை எழுத்துக்களாகும். அதாவது **எழுத்தறிவித்தவன் இறைவனாகும்** என்பதும், அந்த இறைவனால் அறிவிக்கப்பட்டவையே ஒலிஒளி வரிவடிமுடைய குறியீடுகளின் வடிவங்கள் என்பதும் அறியமுடிகிறது.

**மூன்றாவதாக** அந்தக் குறியீடுகளின் வடிவங்களில் இருந்தே தமிழ் மொழியின் வடிவவெழுத்துக்கள் அதாவது உருவெழுத்துக்களாயின என்பதையும் அறியமுடிகிறது. (உரு-கட்புலனுக்கு நன்கு புலனாகும் உருவம்).

**நான்காவதாக** வடிவவெழுத்துக்களாக உருவாகியவையே ஒன்றைக்குறித்து எழுதல், அடையாளமாக எழுதல், வரையப்படும் நிலையில் உருப்பெறுதல் ஆகிய மூன்று நிலைகளில் எழுத்துக்களாக உருபெறுகின்றன என்பதும் தெரியவருகிறது.

**ஐந்தாவதாக** எழுத்துக்களாக உருபெற்றவை, **மூலம், காலம், சீலம், கோலம், ஞாலம்** எனும் **ஐந்தியல்** முறைப்படியும், எழுத்து, சொல், பொருள், யாப்பு (கட்டு) அணி எனும் ஐந்திலக்கண முறைப்படியும் வெளிப்பட்ட செந்தமிழ் மொழி எழுத்துக்களுக்கு உரிய குறில் எழுத்துக்கள் 5, நெடில் எழுத்துக்கள் 5, போலி எழுத்துக்கள் 2 என மொத்தம் 12 உயிர் எழுத்துக்களும், வல்லினம் 6, மெல்லினம் 6, இடையினம் 6 என மெய் எழுத்துக்கள் 18 என மொத்தம் 30 எழுத்துக்கள் நன்கு புலப்படும் படியாக வெளிப்பட்டுள்ளன என்பதையும் மிகத் தெளிவாக அறிந்துணர முடிகிறது.

மேற்கண்டவாறு செந்தமிழ் எழுத்துக்கள் எட்டெட்டு 64 கட்டங்களுடைய மண்டுகம் வரைபடத்திலிருந்து வெளிப்பட்டன என்பதைத் தெளிவாக அறிந்துணரமுடிகிறது என்றாலும், அந்த எட்டெட்டு 64 கட்டங்களுடைய மண்டுகம் வரைபடம் எவ்வாறு வெளிப்படுகிறது என்பதை அறிந்தால் மட்டுமே தமிழ் மொழியின் 30 எழுத்துக்கள் கட்புலனுக்கு நன்கு புலப்படுவதைக் காணமுடியும்.

எனவே 32 வரைபடங்களில் 8ஆவதான **மண்டுகம் வரைபடத்தின் வெளிப்பாட்டைப்** பற்றி மனம் எனும் ஆறாம் அறிவை **அந்தக்கரணத்தோடு** ஒருநிலைப்படுத்தி அகப்பொருள் சிந்தனையோடு உறுதிப்படுத்துவது நன்றே! எனப் பொ.ஆ.பி. 6-7 நூற்றாண்டைச் சேர்ந்த புதுக்கோட்டை மாவட்டம், மேல்மலைப் **பரிவாதிநித** கல்வெட்டு **கற்கப்படுவது கரணஞ் சொல்லிய புகிற்பருக்கு முக்கட் நிருவத்தும் உரித்து** என உணர்த்துவது குறிப்பிடத்தக்கது.

**முக்கட்நிருவத்தும் உரித்து** என்பதற்கு உருவமற்றவன், திரயம்பகன் எனும் முக்கண்களையுடைய பகவன் எனும் சிவபெருமானுக்கு உரித்தாகும் எனப்பொருளாகும்.

திரயம் பகன் எனும் சிவபெருமானைக் குறிக்கும் சிந்து சமவெளி குறியீடுகளைத் தமிழகக் குறியீடுகளுடன் ஒப்பிட்டுப் பிற்பகுதியில் காணலாம்.



சிந்து சமவெளி நகர நாகரிக வில்லை ஒன்றில் **பகவன்** என்ற சொல் கூட்டெழுத்துக்களாகவும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தி, பரமஞானக் குறியீடு ஆகிய இரண்டு வடிவங்களோடு காட்சியளிக்கிறது.

இந்த வில்லையில் நான்கு எழுத்துக்களுக்குப் போதிய இடமுள்ள போதும் கூட்டெழுத்துக்-களாகக் காட்டப்பட்டுள்ளது. பகவன் பகுத்து அறிய இயலாத ஒருவன் என்பதைக் குறிப்பிடுவதாகக் கருதலாம்.

திருவள்ளுவர் பெருமான் அருளிய திருக்குறள் கடவுள் வாழ்த்து முதலாம் பாடல், **அகரமுதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு** எனக் கூறுவது குறிப்பிடத்தக்கது. சிந்து சமவெளி தாதிரி அருகே பகவ(ா)ன் என்றோரிடம் இருந்துள்ளதென்பதும், அவ்விடம் தற்போதும் உள்ளதென்பதும் குறிப்பிடத்தக்கது.



# மண்டுகம் வரைபடத்தின் வெளிப்பாடு

எட்டெட்டு அறுபத்தி நான்கு கட்டங்களைக் கொண்ட மண்டுகம் வரைபடத்தின் வெளிப்பாட்டைக் காண்பதற்கு முன்பாகத் தமிழகத்தின் மிகத் தொன்மையான நீட்டல் அளவுகளைப் பற்றிக் காண்பது நன்று.

இக்காலத்தில் சாதி, இனம், மதம், மொழி வேற்றுமையால் செந்தமிழ் மொழியின் தொன்மைகள் அழிக்கப்படுவதால் அம்மொழியின் தொன்மை (வரலாறு) மற்றுமின்றி அதன் புகழும் அழிக்கப்படுகின்றன என்பதற்கான ஆதாரங்கள் பல உள்ளன.

அந்த ஆதாரங்களில் ஒன்றே **எட்டெட்டு அறுபத்தி நான்கு** எனும் **எண்கணித வாய்ப்பாடு.** அந்த எண்கணித வாய்ப்பாடுகள் தற்காலப் பாடத்திட்டத்தில் இல்லாததால் அவற்றை ஆரம்ப (துவக்க) நிலை கல்விச் சாலைகளில் போதிக்கப்படுவதில்லை.

அவ்வாறு போதிக்கப்படாததன் விளைவாக எண் கணிதத்தின் கூட்டல், பெருக்கல், வகுத்தல் முறையை இளம் மாணவச் செல்வங்கள் அறிவாரில்லை. அதனால் அலைப்பேசிகளில் உள்ள கணிப்பியின் உதவியுடன் அறிகின்றனர் என்பது வருந்த தக்கதொரு செய்தியாகச் சுட்டிக் காட்டலாம்.

செந்தமிழ் மொழியின் தொன்மையையும், பெருமையையும் அழிக்கப்படாமல் பாதுகாப்பது பிற்போக்குச் சிந்தனையல்ல என்பதை இன்றைய முற்போக்குச் சிந்தனையாளர்கள் மிக நன்றாகவும், தெளிவாகவும் உணரவேண்டும் என மீண்டும் நினைவு கூறுவது பிழையாகாது.

எனவே தமிழ் மொழியின் தொன்மையான நீட்டல் அளவுகளைக் காண்போமாக.

## தமிழ் மொழியின் தொன்மையான நீட்டல் அளவுகள்

இன்றைய விஞ்ஞான உலகில் கண்களால் காணமுடியாதவற்றை மிக நுட்பமாக நுண்ணோக்கும் கருவிகளைக் கொண்டு அவற்றின் அளவுகளை மிகத் துல்லியமாக அறிய-முடிகிறது.

ஆனால் இத்தகைய நுண்ணோக்கும் கருவிகள் ஏதுமில்லாத முற்காலத்தில் யோகிகள் புறக்கண்களால் காணமுடியாதவற்றை அதாவது **பரமாணுக்களின்** அளவை அதாவது ஆதித்தனின் கதிரில் படரும் துகளில் **முப்பதில் ஒரு பாகமான** மிகச்சிறிய் அளவை ஞானக்கண் எனும் அகக்கண்களால் கண்டுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

| | |
|---|---|
| 8 பரமாணுக்களைக் கொண்டது | ஒரு தேர்த்துகள் |
| 8 தேர்த்துகள்கள் கொண்டது | ஒரு மயிர் நுனியின் அகலம். (இம்மி) |
| 8 மயிர்நுனிகள் கொண்டது | ஒரு ஈர் |
| 8 ஈர்கள் கொண்டது | ஒரு பேன் |
| 8 பேன்கள் கொண்டது | ஒரு நெல் |
| 8 நெல்கள் கொண்டது | ஒரு விரல் எனும் அங்குலி (0.75 அங்குலம்-19.05 மி.மீ.) |

மேற்கண்டவற்றை, எட்டணு தேர்த்துகிள் நெறியென தாகி, எட்டுத் தேர்த்துகிள்களே இம்மி நிலையாய், எட்டுறும் இம்மி எள்ளென் றாகி, எட்டென் யொருநெல் அளவை குறித்தே, எட்டுறும் நெல்கை விரலெனக் கண்டே, அளவை ஆக்கம் அறிதல் கலையாய் உளவுறும் நுட்பம் உண்மை கண்டே, உண்டுறும் அளவை கருதி விருத்தி, வின்டுறும்நெறி முறை விளம்பற் பாற்றே – என ஐந்திறம் 676 கூறுகிறது.

அதன் தொடர்ச்சியாக, தி ஏன்சியண்ட ஜீயோமெட்ரி ஆப் இந்தியா எனும் நூல் கீழ்க்கண்டவாறு ஒரு சாரசரி மனித உயர அளவைக் கூறுகிறது.

| | |
|---|---|
| 12 விரல்கள் கொண்டது | ஒரு சான் (ஒரு சராசரி மனிதத் தலையின் உயரம்) |
| 2 சான்கள் கொண்டது | ஒரு முழம் (24 அங்குலி அல்லது 18 அங்குலம்) |
| 4 முழங்கள் கொண்டது | ஒரு தண்டா (தண்டம் - 96 அங்குலி அல்லது ஒரு சராசரி மனித உயரம் 72 அங்குலம் அல்லது 6 அடி) |

உயரமானதொரு மனிதரை **'அஞ்சானபாவு'** ( அ சான் பாவு) உடையவர் என்பது ஒரு தொல்வாச்சியம். (அ - எட்டு, சான் - 12 விரல்கள் (அ) 9 அங்குலம். பாவு - பாக அளவு) எட்டு சான் கொண்ட ஒரு மனிதனின் உயர அளவு. அதாவது 72 அங்குலம் (அ) 6 அடி உயரமுடைய பருத்த மனித உருவத்தைக் குறிக்குமோர் அளவு.)

மேற்கண்ட பழங்கால நீட்டல் அளவுகளில் **பரமாணு** முதல் அங்குலி (விரல்) வரை எட்டெட்டாக விரிவடைந்ததைக் காணலாம். (**எண்சான் உடம்புக்குத் தலையே பிரதானம்** என்பதும் **ஆறடி நிலமே சொந்தமடா** என்பதும் தமிழ் மொழிச் சொல் வழக்கு.) **குழிக்கோல், நிலமளந்த கோல், உலகளந்தகோல், மனைக்கோல், நஞ்சைக் கோல், புஞ்சைக்கோல், தலைக்கோல், சிற்பாங்கக் கோல்** போன்ற பல்வேறு வகையான அளவுக்கோல்கள் உலகளவில் தமிழகத்தில் மட்டுமே உள்ளன என்பதோர் சிறப்புச் செய்தியாகும்.

இனி எட்டெட்டாக 64 கட்டங்களாகும் மண்டுகம் வரைபடத்தின் வெளிப்பாட்டைப் பற்றிக் காண்போம்.



Fig. 1 Orientation (6.3b-11a)

மயன் இயற்றிய மயமதம் எனும் நூலில், மண்டுகம் வரைபடத்தின் வெளிப்பாட்டைப்பற்றி நேரிடையாகக் கூறப்படவில்லை என்றாலும், அதற்கான முதற்பகுதியாகச் **சங்குத் தாபனம்** என்ற பெயரில் புவியின் திசைகளான வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு ஆகிய நான்கும், சோதியின் திசைகளான வடகிழக்கு, தென் கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு ஆகிய நான்கும் என எண்திசைகளைச் சாத்திரமும், வழக்கமும் பற்றிய முறையைக் கொண்ட செயல் முறை கூறப்பெற்றுள்ளது.

அந்தச் செயல்முறையைப் பற்றி மயமதம் அத்தியாயம் 6, சூ.எண் 6.3பி-5 முதல் 6.8பி வரையில் சங்குத் தாபனம் என்ற தலைப்பில் காணமுடிகிறது. அதில், மேற்கணட ஒரே ஒரு வரைபடத்தைத் தவிர அதற்கான அனைத்து வரைபடங்களை அந்நூலில் காட்டப்படவில்லை என்றாலும், அந்த வரைபடங்கள் எம்மால் அறியப்பட்டு **உருவதிகாரம்** என்ற தலைப்புடைய எமது நூலில் 2013 ஆம் ஆண்டு பதிவு செய்துள்ளோம் என்பதும், அந்த வரைபடங்கள் இந்நூலில் தொல்லியல் சான்றுகளுடன் சங்குத் தாபனம் எனும் தலைப்பில் மறுபதிவு செய்யப்பெறுகின்றன.

## சங்குத்தாபனம்

சங்குத்தாபனம் என்பதிலுள்ள சங்கு என்பது கூம்பு போன்ற வடிவிலானதொரு குச்சி. அக்குச்சி கருங்காலி, தேக்கு போன்ற வலிமையான மரங்களாலும், யானையின் தந்தத்தாலும் (தரநிலை எனும் சரி திட்டமான) ஒரு முழம் உயரமுடையதாகவும், அதன் கீழ் முனையின் அளவு 4 அங்குலி அகலமுடையதாகவும், மேல் முனையின் அளவு 1 அங்குலி அகலமுடையதாகவும் அதாவது வட்ட வடிவமுடைய முனைகள் உடையதாகத் தயாரிக்கப்படுவதாகும். தாபனம் என்பது எண்திசைகளைத் தாபித்தல் அல்லது நிர்ணயித்தலாகும்.

அந்த எண்திசைகளை நிர்ணயிப்பதற்கு ஒரு புனிதமான நிலத்தைத் தேர்ந்தெடுப்பதும், அந்நிலத்தை மேடு பள்ளம் இல்லாமல் சமப்படுத்தப்பட்ட ஒரு சமநிலமாக நீர் மட்டம் பார்த்துச் சதுர வடிவமுடையதாக அமைக்கப்படவேண்டும் என்பது விதிமுறையாகும். தற்காலத்தில் உள்ள இரசமட்டம் பார்க்கும் கருவி அக்காலத்தில் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

மேற்கண்டவாறு நீர் மட்டம் பார்த்துச் சமநிலமாக்கப்பட்ட நிலத்தின் மையத்தில் ஒரு புள்ளி இடவேண்டும். அப்புள்ளியே **ஆகாயத்தின்** மையமான **மூலமும்,** மெய்ப்பொருள் ரீதியில் **மூலப் பொருளுமாகும்.**




அப்புள்ளியை மையமாகக் கொண்டு 2 அங்குலி ஆரம் ( 4 அங்குலி விட்டம்) அளவுடைய அதாவது சங்கின் அடிப்பகுதிக்கு இணையான ஒரு சிறிய வட்டவடிவத்தை வரையவேண்டும்.

அந்த மையப்புள்ளியை மையமாகக் கொண்டு ஒரு முழம் (24 அங்குலி) விட்டம் அளவுடைய **முதல் பொருளில் ஒன்றான காலத்தைக் குறிக்குமொரு வட்டம்** வரைய வேண்டும்.

அந்த வட்டத்தைச் சுற்றி 4 முழம் (ஒரு சராசரி மனித உயரமான 96 அங்குலி (எ) 6 அடி) பக்க அளவிலான **முதல் பொருளில் மற்றொன்றான இடத்தைக் குறிக்குமொரு சமபக்கச் சதுரம்** வரையவேண்டும்.

வானம் மேகக்கூட்டங்கள் ஏதும் இல்லாமல் மிகத்தெளிவாக உள்ளதொரு **நன்னாளில்** அனைத்து நற்பண்புகளும், அனைத்து இயல்புகளையும் நன்கு அறிந்துணர்ந்ததொரு தபதியின் (சிற்பியின்) திருக்கரத்தால் ஆதவன் எனும் ஆதித்தன் அதிகாலையில் சரியான கிழக்குத் திசையில் தோன்றுவதற்கு முன்பாக ஏற்கனவே தயாரித்து வைக்கப்பெற்ற சங்கை மய்யத்திலுள்ள சிறிய வட்டத்தில் தாபிக்க வேண்டும்.

**அதிகாலையில்** ஆதித்தனின் ஒளிக்கதிர்கள் அச்சங்கின் மீது படர்வதால் சங்கின் நிழல் சாய்ந்து வட்டத்தின் மேல் திசையில் ஓரிடத்தைத் தொடும். அந்த இடத்தை ஒருபுள்ளியாகக் குறித்துக் கொள்ள வேண்டும். **நடுப்பகலில்** சங்கின் நிழல் சாயாது. **தஞ்சைப் பெரிய கோயில் நிழல் சாயாது என்பதன் உட்பொருள் இஃதே.**

**மாலையில்** ஆதித்தனின் ஒளிக்கதிர் சங்கின் மீது படர்வதால் சங்கின் நிழல் சாய்ந்து வட்டத்தில் கீழத்திசையில் ஓரிடத்தைத் தொடும். அந்த இடத்தை மற்றொருப் புள்ளியாகக் குறித்துக் கொள்ள வேண்டும்.அம்மூன்று புள்ளிகளே! ஆதித்தன் தென்திசையில் பயணிக்கும் காலத்தில் வரையப்பட்ட ஒரு முழம் (24 அங்குலி) விட்டம் அளவுடைய **வட்டத்தைச் சங்கின் நிழல் தொடுமிடங்கள்.**

அப்புள்ளிகளை ஒரு படுக்கைக் கோடாக வட்டத்திற்குள் வரைய வேண்டும். இவ்வாறு வரையப்பெறும் படுக்கைக் கோடு கிழக்கு, மேற்கு ஆகிய இரண்டு புவியின் சரியான திசைகளைக் குறிக்கும்.



அப்புள்ளிகளை ஒரு படுக்கைக் கோடாக வட்டத்திற்குள் வரைய வேண்டும். இவ்வாறு வரையப்பெறும் படுக்கைக் கோடு கிழக்கு, மேற்கு ஆகிய இரண்டு புவியின் சரியான திசைகளைக் குறிக்கும்.

இந்தப் படுக்கைக் கோடு பூமியின் சுழற்சியால் (அ) சலனத்தால் உட்படும் **காரியம்.** அப்புள்ளிகளை மையமாக கொண்டு வரையப்படும் வட்டங்களின் வெட்டு புள்ளிகளை இணைத்து அந்த வட்டத்தின் உள்ளே வரையப்படும் ஒரு செங்குத்கோடும், ஒரு படுக்கைக்கோடும் இணைவதால் வெளிப்படுவது ஒரு கூட்டல் குறியீடு.

இக்குறியீடு **காலத்தில் காரணகாரியம். காலத்தில் காரணகாரியம்** என்பது யோக மார்க்கத்தில் **விழிப்பு நிலையைக்** குறிக்கும்.

இக்குறியீட்டைத் தமிழகத்தில் கீழ்வாலை பாறை ஓவியத்திலும், கர்னாடகா மாநிலம் ரெய்பூர், ராம்பூர் ஒன்கி மலையில் வரையப்-பட்டுள்ள பாறை ஓவியத்திலும், சிந்து சமவெளி முத்திரை எண்: எம்-272ல் வரையாட்டுடன் உள்ள **சிறப்பு** என்பதைக் குறிக்கும் 'ந' என்ற எழுத்துடன் காணலாம்.



இந்த வட்டத்தை வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு ஆகிய நான்கு திசைக் கோடுகளின் முனைகளை மையமாகக் கொண்டு 4 வட்டங்களை வரைந்தும், அவை வெட்டும் இடங்களில் புள்ளிகளை இட்டும், அப்புள்ளிகளை இணைத்தும் ஒரு சதுரவடிவமாக்க வேண்டும்.

அந்தச் சதுரத்தில் உள்ள செங்குத்கோடும், படுக்கைக்கோடும் இணைவதால் வெளிப்படும் கூட்டல் குறியீடு **இடத்தில் காரணகாரியம்.**

**இடத்தில் காரணக்காரியம்** எனும் குறியீடு வியோமம், பரம், தலைவன், பதி, கோன், இறைவன் என்பதையும் குறிக்கும் குறியீடு. இக்குறியீடு 32 வரைபடங்களில் நான்கு சதுரங்களைக் கொண்ட **பிகாகா** வரைபடமாகும். பிகாகா எனும் வரைபடக் குறியீட்டின் கோட்டுருவத்தைத் தமிழகத்தில் புதுக்கோட்டை மாவட்டம் குண்ணாண்டார் கோயில் முன்மண்டபத்திலும், சிந்து சமவெளி நாகரிக முத்திரை எண்: எல்-39 இல் இரண்டில் நான்கு புள்ளியைக் கொண்டுள்ளதையும் காணலாம். இந்த முத்திரையை வழி இட்ட ஆ பரம். **நெறியிட்ட ஆன்மா பரம்** எனப் படித்துப் பொருளறியலாம்.

இக்குறியீட்டைக் புதுக்கோட்டை மாவட்டம் குடுமியான்மலை அன்னையின் கருவறை களிற்றுப்படி யானையின் நெற்றியிலும், தஞ்சை மாவட்டம் திருக்காட்டுப்பள்ளி அருகிலுள்ள செந்தலை சிவலாயத்தின் ஒரு கற்தூணிலும், திருச்சி மாவட்டம், திருவெள்ளறை சுவத்திக வடிவ கிணற்றின் வடமேற்குத் திசை களிற்றுப்படி யானையின் நெற்றியிலும், செந்தலைக் கற்தூணிலும், திருவரங்கம் ஆயிரங்கால் மண்டபம் தெற்குத் திசை களிற்றுப்படி யானையின் நெற்றியிலும், மதுரை மாவட்டம் கொங்கர் புளியங்குளம் தமிழி எழுத்துக்களைக் கொண்ட இரண்டு கல்வெட்டுக்களிலும், கொடுமணல் பானை ஓட்டிலும் கீறப்பெற்றுள்ளதையும் காணலாம்.

மேற்கண்ட சதுரத்தின் (இடத்தின்) வடிவத்தில், உள்ள வட்டமும் (காலமும்), காரண காரியமான செங்குத்துக் கோடும். படுக்கைக் கோடும் ஆகியவை உள்ளடங்கி இருப்பதையே **காலம், இடம், காரணகாரியம்** எனக் கூறுவர்.

இந்தச் சதுர வடிவத்தின் நான்கு முனைகளை மையமாகக் கொண்டு இரண்டு சாய்வுக் கோடுகள் வரையவேண்டும். அவ்விரு சாய்வுக் கோடுகளின் நான்கு முனைகள் முறையே **வடகிழக்கு** (நீர்), **தென்கிழக்கு** (நெருப்பு), **தென்மேற்கு** (நிலம்), **வடமேற்கு** (காற்று) ஆகிய நான்கு சோதியின் திசைகளைக் குறிக்கும். அந்த இரண்டு சாய்வுக் கோடுகள் வெட்டும் இடம் மையப்புள்ளி **ஆகாயம்** ஆகும்.

ஆகாயத்தை மையமாகக் கொண்ட நான்கு சோதியின் திசைகளைக் குறியீடுகளைத் திருச்சிராப்பள்ளி மாவட்டம் ஊட்டத்தூர், சிந்து சமவெளி நாகரிக முத்திரை எண்: B-31Bஇல் காணலாம்.

மேற்கண்ட வடக்குத் தெற்குத் திசைகளைக் குறிக்கும் செங்குத்துக் கோட்டைக் **காரணம்** எனும் **சிவம்** என்றும், **பிரகாசம்** என்றும் கூறுவர். கிழக்கு - மேற்குத் திசைகளைக் குறிக்கும் படுக்கைக் கோட்டைக் **காரியம்** எனும் **சக்தி** என்றும், **விமர்சனம்** என்றும் கூறுவர். இவ்விரு கோடுகள் இணைந்து உருவாகும் ஒரு கூட்டல் குறியீட்டைச் **சிவசக்தியின் காரணகாரியம், பிரகாச விமர்சன ரூபம்** எனச் சிறப்பித்துக் கூறுவர்.

இந்தக் கூட்டல் குறியீடே தமிழ் பிராமி எனும் தமிழி எழுத்துக்களில் **'க''** என்னும் **முதலாவது உயிர்மெய் எழுத்து** என்பதும், தமிழ் எண்களில் முதன்மை எண் **ஒன்று** என்பதைக் குறிப்பிடும் **'க''** என்னும் எண்ணெழுத்து என்பதும் குறிப்பிடத்தக்கது.

இந்தக் காரணகாரியம் என்பதைக் குறிக்கும் குறியீட்டின் நான்கு முனைகளான வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு ஆகிய முனைகளிலிருந்து (புள்ளிகளிருந்து) முறையே வடகிழக்கு, தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு ஆகிய திசைகளைக் குறிக்கும் புள்ளிகளை இணைக்கும் கோடுகளைக் கொண்ட வடிவம் வலது புறமாகச் சுழலும் நான்கு கரங்களுடைய **இயக்கத்தைத் குறிக்கும் சுவத்திகம்** எனும் குறியீடு.

இந்தக் காரணகாரியம் என்பதைக் குறிக்கும் குறியீட்டின் நான்கு முனைகளான வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு ஆகிய புள்ளிகளிருந்து முறையே வடமேற்கு, வடகிழக்கு தென்கிழக்கு, தென்மேற்கு ஆகிய திசைகளைக் குறிக்கும் புள்ளிகளை இணைக்கும் கோடுகளைக் கொண்ட வடிவம் இடது புறமாகச் சுழலும் நான்கு கரங்களுடைய **ஒடுக்கத்தைக் குறிக்கும் சுவத்திகம்** எனும் குறியீடு.

இத்தகைய இயக்கத்தையும், ஒடுக்கத்தையும் குறிக்கும் இருவகையான சுவத்திகக் குறியீடுகளைப் பல்வேறு வகையிலான குறியீடுகளாகவும், அதிக அளவிலும் சிந்து சமவெளி முத்திரைகளில் காணலாம்.

ஒரு காரணம், ஒரு காரியமாவதற்குத் துணைக் காரணமாக நின்று காரணகாரியமான பின்னர் விலகிக் கொள்ளும் **சங்கு** ஒரு **துணைக்காரணம்.** அத்துணைக்காரணமே (∴) முப்பாற் புள்ளி. (க் + அ) **'க'** எனும் உயிர்மெய்யானபின் விலகிக் கொள்ளும் ஆயுதவெழுத்தும், காரணவன் எனும் மூலக்காரணனானக் கடவுள் எனலாம்.



ஆகாயத்தை மையப் புள்ளியாகக் கொண்டு சோதியின் திசைகளை இணைக்கும் இரண்டு சாய்வுக்கோடுகளும், வடகிழக்கு, தென்கிழக்கு ஆகிய இரண்டு திசைகளை இணைக்கும் ஒரு செங்குத்துக் கோடும் கொண்ட வடிவம் யோகமார்க்கத்தில் பஞ்சசீரணம் எனும் (ஆன்மாவாகிய உயிர் தன்னறிவு இழந்து அறிவு வடிவாய சிவனை அடைந்து பற்றற்று நிற்கும் நிலையான) **நிராதாரயோகம்** குறியீடு.

இந்த **நிராதாரயோகம்** குறியீட்டைப் பற்றித் தொல்காப்பியர் தொல்காப்பியத்தில் குறிப்பிட்டுள்ளார் என்பதும், இந்தக் குறியீடு சிந்து சமவெளி நாகரிகப் பானை ஓடுகளிலும், தமிழகப் பாறை ஓவியங்களிலும், ஆதிச்சநல்லூர் பானை ஓடு கீறல் குறியீடாகும். செந்தமிழ் எழுத்துக்களில் **யகரம்** எனும் உயிர்மெய் எழுத்தும், **எண் பத்து** என்பதையும் குறிக்கும்.



மேற்கண்ட சங்குத் தாபனம் எனும் எண்திசைகளைத் தாபித்தலின் வாயிலாகப் புள்ளி, வட்டம், சதுரம், காரணம், காரியம், காலத்தில் காரண காரியம், விழிப்பு நிலை, இடத்தில் காரண காரியம், கூட்டல் குறி, பிரகாச விமர்சன ரூபம், **க** எனும் தமிழி எழுத்துரு, முதன்மை எண் ஒன்று, நிராதாரயோகம், **ய** எனும் சிந்து சமவெளி நாகரிக எழுத்துரு, எண் பத்து ஆகியவற்றை ஆராய்ந்தறிந்தோம்.

அதனைத் தொடர்ந்து நான்கு கட்டங்களைக் கொண்ட பிகாகா எனும் வரைபடத்தின் பரப்பளவு எவ்வாறு சுழன்று பரந்து விரிந்து அதன் பரப்பளவு பிரபஞ்சம் முழுதும் நிறைகிறது என்பதைக் குறிப்பிடும் சுகவனமுருகன் கண்டுபிடித்த தமிழகப்பாறை ஓவியம் ஒன்றின் வாயிலாக **வியாபித்தல்** எனும் முறையில் காண்போம்.



## வியாபித்தல்

வியாபித்தல் எனும் முறையைப் பற்றிய பட விளக்கம் எந்தொரு நூலிலும் காண இயலாது. ஆனால் அந்த வியாபித்தல் முறை எம்மால் அறியப்பட்டு 2013ஆம் ஆண்டு **உருவதிகாரம்** என்ற தலைப்புடைய நூலில் பக்கம் 125இல் படவிளக்கத்துடன் யாம் பதிவிட்டுள்ளோம்.




ஒரு மூலப்புள்ளியையும் ஒரு வட்டத்தையும் மையமாகக் கொண்டு எண்திசைகள் அறியப்பட்ட முதல் சதுரத்தின் ஒரு பக்க அளவு 48 அங்குலி. அந்த முதல் சதுரத்தின் பரப்பள்வு 2304 சதுர அங்குலி. அந்தப் பரப்பளவு இரட்டிக்கப்படுகிறது.

இரட்டிக்கப்பட்ட பரப்பளவு 4608 சதுர அங்குலி. இரட்டிக்கப்பட்ட சதுரத்தின் மூலை விட்டம் 67.662250 அங்குலி. அச்சதுரத்தின் மூலை விட்டத்தின் அளவே இரண்டாவது சதுரத்தின் பக்க அளவுகள். இரண்டாவது சதுரத்தின் பரப்பளவு 4608. இந்தச் சதுரம் இரட்டிக்கப்படுகிறது. இரட்டிக்கப்பட்ட பரப்பளவு 9216. இரட்டிக்கப்பட்ட இரண்டாம் சதுரத்தின் மூலை விட்டத்தின் அளவு 96 அங்குலி. அச் சதுரத்தின் மூலை விட்டத்தின் அளவே மூன்றாவது சதுரத்தின் பக்க அளவு.

அந்தப் பக்க அளவே முதன்முதலில் வட்டத்தைச் சுற்றி வரையப்பட்ட சதுரத்தின் பக்க அளவாகும் (அந்த ஒருபக்க அளவே ஒரு சராசரி மனித 6 அடி உயர அளவாகும்). இவ்வாறாகக் கணக்கியலின் வரைபடக் கணித முறையில் மேற்கண்டவாறு இரட்டிக்கப்படும் சதுரங்களின் பரப்பளவு எல்லையற்ற பிரபஞ்சத்தின் பரப்பளவாக விரிவடைகிறது என்பதை உலகுக்கு அறிவித்த பெருமை தமிழக முன்னோர்களையே சாரும் என்றாலது மிகையாகாது.

மேற்கண்டவற்றைக் கணக்கீடு முறையை அட்டவணைப்படுத்தியும், அதனைத் தொடந்து படவிளக்கத்துடனும், செயல் முறை பரிசோதனையின் வாயிலாகவும் காணலாம்.

**எண் வடிவ கணக்கீடு முறை**

| ச.ப.அளவு | சு.பரப்பளவு | இ.ச.பரப்பளவு | இ.ச.விட்டம் |
|---|---|---|---|
| 24 | 576 | 1152 | 33.941125 |
| 33.941125 | 1152 | 2,304 | 48 |
| 48 | 2,304 | 4608 | 2,304 |
| 2,304 | 4608 | 9216 | 9அங்குலி |

குறிப்பு: ச.ப.அளவு (சதுரத்தின் பக்க அளவு). ச.பரப்பளவு (சதுரத்தின் பரப்பளவு). இ.ச.பரப்பளவு (இரட்டிக்கப்பட்டச் சதுரத்தின் பரப்பளவு). இ.ச.விட்டம் (இரட்டிக்கப்பட்டச் சதுரத்தின் விட்டம்).

வியாபித்தல் முறையைத் திருச்சிராப்பள்ளி மாவட்டம் ஊட்டத்தூர் அன்னையின் திருக்கோயில் கற்தூண் ஒன்றில் காணலாம்.

**செயல் முறை பரிசோதனை**

ஒரு சமபக்கச் சதுரமுடையதும், கோடுகள் ஏதுமில்லாததும், மிக மெல்லிய ஒரு வெள்ளைத் தாளை எடுத்துக் கொள்வோம். அதன் மையத்தில் ஒருபுள்ளியை இடுவோம்.

அத்தாளின் நான்கு முனைகளையும், மையத்தில் இட்ட புள்ளியைத் தொடுமாறு ஐந்து முறை மடிப்போம். அவ்வாறு மடிக்கும் போது ஐந்தாவது முறை மடிப்பதுக் கடினம் என்பதை உணரலாம். ஐந்து முறை மடிக்கப்பட்ட வெள்ளைத் தாளைப் பிரித்துப் பார்த்தால் அதிலுள்ள மடிப்புக்களின் சுவடுகள் 64 கட்டங்களை உடையதாகக் காணலாம். இதுவே 64 கட்டங்கள் கொண்ட மாண்டுகம் வரைபடத்தின் வடிவம்.


பிரபஞ்ச குறியீட்டின் வெளிப்பாடு




சேந்தமங்கலம்


Rhd.157

மேற்கண்டவாறு அறியப்பட்ட சதுரங்களில் மையப் புள்ளியைக் கொண்டு, இரண்டு சதுரங்களுக்குள் இரண்டு வட்டங்களை வரைந்து கொள்வோம். இப்போது அந்த மூன்று சதுரங்களும், மூன்று வட்டங்கள் கொண்டதொரு வரைபடமாகிறது. இந்த மூன்று சதுரங்கள் **ஆகாயத்தின் பரப்பளவையும்**, மூன்று வட்டங்கள் **ஆகாயத்தின் ஒலியின் வியாபித்தல்** என்பதைக் குறிக்கும். ஒரு மூலப்புள்ளியிருந்து புவியின் எண்திசைக் கோடுகளை வியாபிக்கப்பட்ட இரண்டு சதுரங்களின் நான்கு பக்க மையங்களையும், அவற்றின் நான்கு முனைகளையும் இணைக்கும் எட்டுக் கோடுகளாக வரைவோம். இந்த எட்டுக் கோடுகள் **ஆகாயத்தின் ஒளியின் வியாபித்தல்** என்பதைக் குறிக்கும். அதாவது ஒரு மூலப்புள்ளியிருந்து ஆகாயத்தின் பரப்பளவில் **ஒலியும் ஒளியும்** எவ்வாறு வியாபிக்கின்றன என்பதை வரைபடக் கணிதம் வாயிலாகக் காணலாம்.

இந்த வியாபித்தலையே! எங்கும் இருப்பவனாக அறியப்பட்ட **வியாபகன்** என்னும் இறைவன், எங்கும் வியாபிக்கும் **வியாபகி** என்னும் சிவசக்தியாகி, எங்கும் நிறைந்திருக்கும் **வியாபகமாகி** அதாவது ஒளியும், ஒலியும் உடையவனாக எண் திசையிலும் விரிந்தும், பரந்தும் நீக்கமற நிறைந்துள்ளான் எனும் **வியாபகத்தத்துவம்** என மெய்யியல் கூறுகிறது. அதாவது வியாபகத்தத்துவத்தைத் தெளிவாக விளக்கிக் கூறுவதற்கு அறிவியலில் குறிப்பாகக் கணக்கியலும், அதன் ஒரு பிரிவான வரைபடக் கணிதமும் உதவுகின்றன என்பது தெரியவருகின்றது. அதனையடுத்து 16 கட்டங்களைக் கொண்ட பிரபஞ்சக் குறியீட்டின் (மகாபிதா வரைபடத்தின்) வெளிப்பாட்டைக் காண்போம்.

## மகாபிதா வரைபடத்தின் வெளிப்பாடு

மேற்கண்ட வரைபடத்தில் காரணகாரியம் எனும் கூட்டல் குறியையும், முதலாவது சதுரத்தின் நான்கு பக்கவசக் கோடுகளையும், இரண்டாவது சாய்ந்த சதுரத்தின் நான்கு முனைகளையும் கொண்டு மூன்றாவது சதுரத்தின் நான்கு பக்கங்களைத் தொடும் வரை


திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டைக் கீழ்க் குடவரைக் கோயில்


புதுக்கோட்டை மாவட்டம் திருமெய்யம் கோட்டை



தட்டான் பாறை

நீட்டினால் அவை 16 (பதினாறு) கட்டங்களாகும், அவற்றின் நான்கு சாய்வுக் கோடுகள் புவியின் நான்கு திசைகளில் நான்கு கால் வட்டங்களையும் கொண்டதொரு மகாபிதா வரைபடமாகிறது. இந்த மகாபிதா வரைபடக் குறியீட்டைத் தமிழகத்திலுள்ள மிகப்பழமையான கோயில்களில் குறிப்பாகக் கும்பகோணம் மாவட்டம் தாராசுரம், நாமக்கல் மாவட்டம் சேந்தமங்கலம் பெருமாள் கோயில் ஆகிய-வற்றிலும், மதுரை மாவட்டம் கொங்கர் புளியங்குளம் குடவரையிலும், குடுமியான் மலை குடைவரைக் கோயிலிலும், சிந்து சமவெளி நாகரிக முத்திரை **ஆர்எச்.டி.-157**லிலும் காணலாம்.

திருச்சி மாவட்டம், திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை கீழ்க் குடைவரைக் கோயில் கற்தரையில் வியாபித்தல் முறையை விளக்கும் வரைபடக் கணிதக் கோட்டுருவக் குறியீடு ஒன்றும், அதன் தொடர்ச்சியாகத் தன்னுணர்தல் என்பதைக் குறிக்கும் புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் கோட்டை பரமதரிசனக் குறியீடும் மிகவும் சிறப்பு வாய்ந்தவை என்பது குறிப்பிடத்தக்கது.

இத்தகைய சிறப்புடைய மகாபிதா வரைபடம் முன்கண்ட 32 வரைபடங்களில் 4-ஆவது வரைபடமாகும். மகாபிதா வரைபடத்தின் ஒரு வரலாற்றுச் சான்றாகத் திருச்சிராப்பள்ளி மாவட்டம், வடச்சேரி தட்டான் பாறையில் பொறிக்கப பெற்றுள்ள பழம்தின்னாப் பறவையையும், பிரமாண்டமானதொரு மனிதஉருவத்தையும், அந்த மனித உருவத்தின் ஒரு கரம் 16 கட்டங்களைக் கொண்டதொரு மகாபிதா வரைபடத்தைச் சுட்டிக்காட்டுவதையும் காணலாம். 16 கட்டங்களைச் சிந்து சமவெளி நாகரிக முத்திரை எண்: M-351A உடன் ஒப்பிடலாம்.

அந்த 16 கட்டங்கள் கொண்ட மகாபிதா வரைபடத்தில் 5 செங்குத்துக் கோடுகள், 5 படுக்கைக் கோடுகள் என மொத்தம் 10 கோடுகள் உள்ளதை காணலாம்.

அந்தப் பத்துக் கோடுகளே பிராணன் (மேல் நோக்கிய இயக்கம்), அபானன் (கீழ் நோக்கிய இயக்கம்),கருகலன் (பசி), தேவதத்தன் (கொட்டாவி), தனஞ்ஜயன் (உடலுக்கு ஆரோக்கியம் அளித்தல்) வியானன் (எல்லாப் பக்க இயக்கம்), உதானன் (மரண வேளையில் உயிர் வெளியேற உதவுதல்), அபானன் (உணவை சீரணித்தல்) நாகன் (வாந்தி, ஏப்பம்), கூருமன் (கண்ணிமைத்தல்), ஆகிய பத்துப் பிராணங்கள் என்பது தெரியவருகின்றன.


மகாபிதா வரைப்படம்


மண்டுகம் வரைப்படம்

இரண்டாவதாக, ஆன்மாவாகிய உயிரிலிருந்தே பதினாறு பகுதிகள் தோன்றின. அந்தப் பதினாறு பகுதிகள் பிராணன்கள், புத்தி, மனம், ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலம், புலன்கள், உணவு, ஆற்றல், தவம், மந்திரம், சரிகை, கிரிகை, உலகம், பெயர் ஆகிய 16 படைப்பின் அம்சங்கள் எனப் பிரச்சனம் மறையில் ஈறு கூறுகிறது.

மூன்றாவதாக, **பதினாறும் பெற்றுப் பெரு வாழ்வு வாழ்க** என மூத்தோர்கள் இளைய தலைமுறையினரை வாழ்த்துவது பழந்தமிழர் மரபு. அந்தப் பதினாறும் என்பது புகழ், கல்வி, வலிமை, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள் ஆகிய பேறுகள் எனத் தமிழ் அகராதி கூறுகிறது.

அதனைத் தொடர்ந்து 16 கட்டங்கள் ஒவ்வொன்றையும் 4 கட்டங்களாக்கினால் அது 64 (அறுபத்து நான்கு) கட்டங்களைக் கொண்ட மண்டுகம் எனும் வரைபடமாகிறது. இந்த மண்டுகம் வரைபடம் முன்கண்ட 32 வரைபடங்களில் 6ஆவது வரைப்படமாகும்.

மண்டுகம் என்பது தவளையைக் குறிக்கும் சொல். மண்டுகம் வரைபடம் என்பது தவளைப் பாய்த்து எனும் சூத்திரநிலை நான்கனுள் இடைவிட்டு (தாவித்தாவி) செல்லும் ஒரு நிலை. ஆயக்கலைகள் 64 என்பதனால் 64 கட்டங்களைக் கொண்ட மண்டுகம் வரைபடத்தின் மையத்திலுள்ள 16 (பதினாறு) கட்டங்களைக் கொண்ட மகாபிதா வரைபடமே சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழி எழுத்துக்களின் வெளிப்பாட்டின் மூல வரைபடமாகும்.

16 கட்டங்களைக் கொண்ட மகாபிதா வரைபடத்தின் நடுநாயமாக உள்ள 4 கட்டங்கள் **க** எனும் பரமனுக்கு (இறைவனுக்கு) உரியது என மயமதம் சூ.7.57 கூறுகிறது.

அதனடிப்படையில் 64 கட்டங்களைக் கொண்ட மண்டுகம் வரைபடத்தின் நடுநாயமாக உள்ள 16 கட்டங்களைக் கொண்ட மகாபிதா வரைபடம் **'க'** எனும் பரம் எனும் மேலானதான இறைவனுக்கு உரியது என மயமதம் சூ.7-57 கூறுகிறது.

மகாபிதாவாகிய சிவன் தன்னைச் சுகாசனன், விவாகன், உமாகண்டன், விருக்கருத்திரன், புராரி, நிருத்தன், சந்திரசேகரன், அர்த்தநாரீசுவரன், விசனவர்த்தன், சண்டேசன், காமாரி, காலநாசன், தெட்சணாமுர்த்தி, பிச்சாடன், முகலிங்கன், இலிங்கசம்பூதன் என 16 திருவுருவமுடையவராக வெளிப்படுத்திக் கொண்டதாக மயமதம் சூ.36.43பி-46எ கூறுகிறது.







சோதிட சாத்திரத்தில் சாதகக் கட்டங்கள் 16 என்பதும், அதன் மையத்திலுள்ள 4 கட்டங்களை **இராசி** (உடல்), **அம்சம்** (உயிர்) கட்டங்கள் எனவும் அதில் மஞ்சள், குங்குமம் இடுவது (இந்நிலவுலகில் வாழ்ந்து ஆறுவிதமான கர்மாக்களைக் கர்மசுத்தியாகச் செய்து முடித்துத் தன்னுணர்வால் பரமான்மாவும், ஆன்மாவாகிய உயிரும் ஒன்றே! ஒன்றைத்தவிர மற்றொன்று இல்லை என்பதையும், பரமான்மாவால் படைக்கப்பட்ட உடலுக்கும், பரமான்மாவின் ஒருசிறு துளியாக உடலில் இருக்கும் உயிருக்கும் தரும் நன்றிக் கடமைப் பழந்தமிழர் மரபு என்பது குறிப்பிடத்தக்கது.) (அம்சம் - அன்னப்பறவை.) சோதிட சாத்திரத்தின் சாதகக் கட்டங்களை புதுக்கோட்டை மாவட்டம் திருக்கோகர்ணம் தாயார் சன்னதியின் முன் காணலாம்.



பழம் தின்னா பறவை



பழம் தின்னும் பறவை

அந்த அன்னப்பறவையை வானியல் ரீதியில் வடதுருவத்திலுள்ள **சிக்னசு** எனும் அன்னப்பறவை பத்துக்கோடுகள், பதினாறு கட்டங்கள் கொண்ட இரண்டு பறவையுடன் ஒப்பிட்டும், மெய்யியலில் அவற்றில் ஒன்று பழந்தின்னாப் பறவை எனும் சிவனுடனும், மற்றொன்று பழந்தின்னும் பறவை எனும் சீவனுடனும் ஒப்பிட்டுச் சோகம் எனும் சிவனும் (பரமாத்மாவும்) சீவனும் (சீவாத்மாவும்) ஒன்றே! ஒன்றைத்தவிர மற்றொன்று இல்லை! என்றதொரு தத்துவமாகும்.

அந்தத் தத்துவத்தை **அச்சுவத்த மென்றொரு மரத்திலிரண்டு அரும் பறவைகள் வாழும் நச்சுமங்கொரு பறவையும் மரக்கனி நன்று நன்றெனத் தின்னும் மெச்சுமங் கொரு பறவைதின்னாதென வியங்கியப் பொருளாக வைச்சு மாமறை சீவனை யீசனை வகுத்தவா றறிவாயே** – எனக் கைவல்லிய நவநீதம் சந்தேகம் தெளிதல் கவி 58 கூறுகிறது.

பொருள்: அடுத்த நிமிடத்திற்கு நிலையில்லாத அரசு எனும் மாயா மரத்தில் அருமையான இரண்டு பறவைகள் வாழ்ந்து கொண்டிருக்கும். போகங்களை விரும்புகிற அம்மரத்தில் வசிக்கும் ஒரு பறவை அம்மரத்திலுள்ள பழங்களை நன்றாக இருக்கின்றன, நன்றாக இருக்கின்றன எனத்தின்னும்.

அதன்கண் துதிக்கப்பெற்ற அம்மரத்திலுள்ள மற்றதொரு பறவை அம்மரத்திலுள்ள பழங்களை நுகராது. மகத்துவமான அப்பறவையைக் குறிப்புப் பொருளாக வைத்து, பெருமை தங்கிய நூலானது சீவனையும், சிவனையும் பகுத்துக் கூறிய மார்க்கத்தை நீ ஆராய்ந்து அறிந்துகொள்வாய் என்பது சிவனும் (பரமாத்மாவும்) சீவனும் (சீவாத்மாவும்) ஒன்றே! என்பது அத்துவைதத் தத்துவம். இத்தத்துவத்தையே **நிஜமும் நிழலும்** என்ற தலைப்பில் முண்டகா மறையில் ஈறும் கூறுகிறது. (**அச்சுவத்தம்** - தலைகீழான மாயா மரம், **மரம்** - பஞ்சபுதங்களின் கூட்டுக்கலையான உடம்பு, மனம், பிராணன் ஆகியவற்றின் தொகுப்பு, **பழம்** - உலகப்பற்று, **பழம் தின்னும் பறவை**- மனமும், ஞான இந்திரியங்களுடன் கூடிய சீவாத்மா (நிழல்), **பழம் தின்னாப் பறவை** - ஈசன் எனும் சிவப் பரம்பொருள் (நிஜம்).

மேற்கண்டவற்றின் அடிப்படையில் 64 கட்டங்களைக் கொண்ட மண்டுகம் வரைபடத்தின் நடுநாயகமாக உள்ள மகாபிதா வரைபடத்தின் 16 கட்டங்கள் சிவபெருமானின் 16 வெளிப்பாடுகள் என்பதும், சோதிட சாத்திரத்தின் 16 கட்டங்கள் என்பதும், பத்துக்கோடுகள் பத்துப் பிராணங்கள் என்பதும், அப்பத்துக் கோடுகளால் உருவாவதும், 16 கட்டங்களைக் கொண்டதும் சிவனும் (பரமாத்மாவும்) சீவனும் (சீவாத்மாவும்) ஒன்றே! என்பது அத்துவைதத் தத்துவத்தை உணர்த்தும் **இரண்டு பறவையின் வடிவங்கள்** என்பதும் தெரியவருகின்றன.

அந்த எண்திசைகளைச் சுட்டுவதும், வட்டம், சதுரம் எனும் ஒலியும் ஒளியுமாக வெளிப்படுவதும், 32இல் ஒன்றானதுமான 16 கட்டங்களைக் கொண்ட மகாபிதா வரைபடத்திலுள்ள 41 புள்ளிகளை (அணுத்திரள்களை) இணைக்கும் செங்குத்து, படுக்கை, சாய்வு, வளைவு ஆகிய கோடுகளால் செந்தமிழ் மொழியின் 12 உயிரெழுத்துக்களும், 18 மெய்யெழுத்துக்களும் ஒலியும் ஒளியும் உடையவையாக வெளிப்பெற்றுள்ளன என்பதும் தெரியவருகின்றன.




தொல்காப்பியம் எழுத்ததிகாரம் பிறப்பியல் நூற்பா 83, செந்தமிழ் மொழியின் எழுத்துக்கள் எல்லாம் ஒருவன் முறைப்படி ஆராய்ந்து அதன் தன்மைச் சொல்லும் காலத்து, கொப்பூழ் அடியாக மேலே கிளர்கின்ற உதானன் என்னும் பெயருடைய வாயுத்தோன்றி, தலையின் கண்ணும், மிடற்றின் கண்ணும், நெஞ்சின் கண்ணும், நிலைப்பெற்று, பல்லும், இதழும், நாவும், மூக்கும், அண்ணமும் உளப்பட எட்டாகிய முறைமையுடைய இடங்களின் ஓர் உறுப்போடு ஓர் உறுப்புத் தம்மிற் பொருந்தி அமைதிபெற பிறப்பினது ஆக்கம் வேறு வேறு புலப்பட்டு வழங்குதலுடைய கூறுபாடுகளாக ஆராயும் அறிவிடத்து எனக் கூறுகிறது.

## சிந்து சமவெளிச் செந்தமிழ் உயிரெழுத்துக்கள்



அ ஆ

அ,ஆ ஆயிரண் டங்காந்து (வாய்த் திறக்க) இயலும்–85



இ ஈ எ ஏ ஐ

இ, ஈ, எ, ஏ, ஐயென இசைக்கும் அப்பால் ஐந்தும்
அவற்றோ ரன்ன அவைதாம் அண்பல் முதல்நா
விளிம்புறல் உடையம்–86



உ ஊ ஒ ஓ ஔ

உ,ஊ, ஒ,ஓ, ஔ என இசைக்கும் அப்பால் ஐந்தும்
இதழ்குவியந் தியமும் –87

# சிந்து சமவெளிச் செந்தமிழ் மெய்யெழுத்துக்கள்



க் ச் ட் த் ப் ற்

வல்லினம் எனும் வன்மை எழுத்துக்கள்



ய் ர் ல் வ் ழ் ள்

இடையினம் எனும் இடைமை எழுத்துக்கள்



ங் ஞ் ண் ந் ம் ன்

மெல்லினம் எனும் மென்மை எழுத்துக்கள்

## சிந்து சமவெளிச் செந்தமிழ் எண்கள்





M-2047a


H-2582A



1 முதல் 10 வரையிலான எண்களுக்கும்
ட, உ, ந, ன, ண ஆகிய ஐந்து எழுத்துக்களுக்கும் உள்ள வேறுபாடுகள்



1 2 3 4 5 6 7 8 9 10 ட உ ந ன ண

# சிந்து சமவெளிச் செந்தமிழ்க் குறியீடுகளும், எழுத்துக்களும், கூட்டெழுத்துக்களும்

| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 000 | | | | | | | | | | |
| 010 | | | | | | | | | | |
| 020 | | | | | | | | | | |
| 030 | | | | | | | | | | |
| 040 | | | | | | | | | | |
| 050 | | | | | | | | | | |
| 060 | | | | | | | | | | |
| 070 | | | | | | | | | | |
| 080 | | | | | | | | | | |
| 090 | | | | | | | | | | |
| 100 | அ | | | | | | | | | ஆ |
| 110 | | | | | | | | | | |
| 120 | இ | | | | | | | ஈ | | |
| 130 | | | | | | | | | | |
| 140 | உ | | | | | | | | ஊ | |

## சிந்து சமவெளி செந்தமிழ் குறியீடுகளும், எழுத்துக்களும், கூட்டெழுத்துக்களும்

| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 300 | | | | | | | | | | |
| 310 | | | | | | | | | | |
| 320 | | | | | | | | | | |
| 330 | | | | | | | | | | |
| 340 | | | | | | | | | | |
| 350 | | | | | | | | | | |
| 360 | | | | | | | | | | |
| 370 | | | | | | | | | | |
| 380 | | | | | | | | | | |
| 390 | | | | | | | | | | |

**Thamizh to English letters**

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| அ<br>a | ஆ<br>ā | இ<br>c | ஈ<br>c̄ | உ<br>u | ஊ<br>ū | எ<br>ea | ஏ<br>ēa | ஐ<br>i | ஒ<br>o |
| ஓ<br>ō | ஔ<br>au | க<br>ka | ங<br>inga | ச<br>sa | ஞ<br>gna | ட<br>ta | ண<br>ṇa | த<br>tha | ந<br>na |
| ப<br>pa | ம<br>ma | ய<br>ya | ர<br>ra | ல<br>la | வ<br>va | ழ<br>zha | ள<br>ḷa | ற<br>ṛa | ன<br>ṇa |

364 - 400 கூடுதல் குறியீடுகளும் எழுத்துக்களும், கூட்டெழுத்துக்களும்

ஐயா ஐராவதம் மகாதேவன் சிந்து சமவெளி நகர நாகரிகக் குறியீடுகள் எழுத்துக்களின் எண்ணிக்கையை (சைன் லிஸ்ட் ஆப் இன்டஸ் ஸ்கிரிப்ட்) 417 எனவும், சர் அஸ்கோ பர்போலா (எம்-எப்-எம் லிஸ்ட்) 1839 எனவும் அட்டவணையிட்டுள்ளனர். குறியீடுகளையும், எழுத்துக்களையும் முழுமையாக அடையாளப்படுத்தப்படவில்லை. சிந்து சமவெளி நாகரிகத்தின் சில முக்கிய குறியீடுகளும், எழுத்துக்களும், கூட்டெழுத்துக்களும் 400 என யாம் அட்டவணையிட்டுக் காட்டியுள்ளோம்.

சிந்து சமவெளி நகர நாகரிகக் குறியீடுகள் அனைத்தும் **படச்சொற்கள்,** எழுத்துக்கள் **ஓசை எழுத்துக்கள்.** வில்லைகள் மற்றும் முத்திரைகள் ஆகியவற்றின் நீள, அகல அளவுகள் மிகக் குறைவாக உள்ளதன் காரணமாக ஓரெழுத்துச் சொற்கள் அதிக அளவில் உள்ளன. இரண்டுக்கும் மேற்பட்ட எழுத்துக்கள் இணைந்துள்ளன. சில முக்கிய குறியீடுகள் பற்றியும் கூட்டெழுத்துக்கள் பற்றியும் பிற்பகுதிகள் காணலாம்.

செந்தமிழ் எழுத்துக்களும், எண்களும் பெரும்பாலும் சிறிய, நடுத்தர, பெரிய செங்குத்துக் கோடுகளாகவும், சற்றுச் சாய்ந்த, வளைந்த கோடுகளாகவும், முக்கோணம், சதுரம், வட்டம், அரைவட்டம் போன்ற மேலும் சில வடிவியல் கணிதவியலைச் சார்ந்த வடிவியல் (Geometrical) வடிவங்களாகக் காட்சியளிப்பது நோக்கத்தக்கவை.

அவை, செந்தமிழ் மொழியின் உயிரெழுத்துக்கள் 12, மெய்யெழுத்துக்கள் 18 என ஆக மொத்தம் 30 எழுத்துக்கள் என்பது தெரியவருகிறது. சார்பு எழுத்துக்கள் மூன்றில் புள்ளியைக் கொண்ட குற்றியலுகரம், குற்றியலிகரம் ஆகிய இரண்டையும் காண இயலவில்லை. ஆயுதம் எனும் முப்பாற்புள்ளி எனும் எழுத்து சிந்து சமவெளி நகர நாகரிக எழுத்துக்களில் உண்டு என்பதை ஒரு முத்திரையில் காண முடிகிறது. **ஔ** என்ற எழுத்தின் வடிவத்தை ஒரு முத்திரையில் காணமுடிகிறது.

உலகின் எல்லா மொழிகளுக்கும் உயிரெழுத்துக்கள், மெய்யெழுத்துக்களுண்டு. அவற்றின் வடிவங்கள் அனைத்துக்கும் சிறப்புண்டு. எனவே அவற்றை ஏற்ற தாழ்வின்றி பாதுகாப்பது அவசியம். உலக நாகரிகங்களில் மூத்த நாகரிகமான சிந்து சமவெளி நாகரிகத்தின் செந்தமிழ் மொழிக்குத் தனிச் சிறப்புக்களுண்டு. எனவே அதனைப் பாதுகாப்பது மிகவும் அவசியம் என்றாலது மிகையாகாது.

தமிழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் மதிவாணன், (மறைந்த) பூர்ண சந்திர சீவா, சுபாஸ் சந்திர போஸ் எனும் யாம் ஆகிய மூவரும் மேற்கொண்ட முயற்சியில் 12 உயிரெழுத்துக்கள், 18 மெய்யெழுத்துக்கள் என 30 எழுத்துக்கள் அடையாளப்படுத்தியுள்ளோம். அவற்றைத் தமிழி, தமிழ், ஆங்கில எழுத்துக்களோடு ஒப்பிட்டும் காட்டியுள்ளோம்.

சிந்து சமவெளி நாகரிக உயிர் எழுத்துக்கள் — Indus Valley Civilization Vowels

| | A | Aa | E | Ee | U | Vu | Ea | Eaa | I | O | Oo | Au | Ik |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ | ஃ |
| திரு இரா. மதிவாணன் Sri. R.Madivanan | | | | | | | | | | | | | |
| திரு பூர்ண சந்திர ஜீவா Sri. Poorna Chandra Jiva | | | | | | | | | | | | | |
| திரு தி.லெ. சுபாஷ் சந்திர போஸ் Sri. T.L.Subash Chandra Bose | | | | | | | | | | | | | |
| தமிழி Thamizhi | | | | | | | | | | | | | |

சிந்து சமவெளி நாகரிக உயிர் மெய் எழுத்துக்கள் — Indus Valley Civilization Consonents

| | Ka | Inga | Sa | Gna | Ta | Na | Tha | Na | Pa | Ma | Ya | Ra | La | Va | Zha | La | Ra | Na |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | க | ங | ச | ஞ | ட | ண | த | ந | ப | ம | ய | ர | ல | வ | ழ | ள | ற | ன |
| திரு இரா. மதிவாணன் Sri. R.Madivanan | | | | | | | | | | | | | | | | | | |
| திரு பூர்ண சந்திர ஜீவா Sri. Poorna Chandra Jiva | | | | | | | | | | | | | | | | | | |
| திரு தி.லெ. சுபாஷ் சந்திர போஸ் Sri. T.L.Subash Chandra Bose | | | | | | | | | | | | | | | | | | |
| தமிழி Thamizhi | | | | | | | | | | | | | | | | | | |

எம்மூவரைத் தவிர, சிந்து சமவெளி நகர நாகரிகத்தை வேத நாகரிகம் எனக் கூறும் சமசுகிருத மொழியாளர்களோ, திராவிட நாகரிகம் என்பவர்களோ, பிறமொழி ஆய்வாளர்களோ இந்நாள் வரை எவரும் சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் எழுத்துக்களை அடையாளப்படுத்திக் காட்டியுள்ளதாகத் தெரியவரவில்லை என்றாலது தவறாகாது.

குறிப்பிட்டதொரு எழுத்துருவின் ஒலி எப்போதும் மாறாது. ஆனால் பரிணாம வளர்ச்சியால் அதன் வரிவடிவமும் சற்று மாறுபடும். ஆனால் ஓர் எழுத்துருவுக்கு இரண்டு அல்லது மூன்று மாறுபட்ட வரிவடிவங்களுடையதாக இருப்பதில்லை.

எனவே, எம்மூவரில் யாரொருவர் அடையாளம் கண்டுள்ள எழுத்துக்களின் வரிவடிவங்கள் ஏற்புடையது என்பதைத் தமிழ்மொழி ஆய்வுலகம் எடுக்கும் நல்லதொரு முடிவிற்கு விட்டுவிடுகிறோம்.

இந்தியத் தொல்பொருள்துறை, தமிழகத் தொல்லியல்துறை, பல அறிஞர் பெருமக்களும், எம்மாலும் அறியப்பட்டவற்றில் குறிப்பாகத் தமிழகத்தில் காணப்படும் சிந்து சமவெளி நகர நாகரிகக் குறியீடுகள், எழுத்துக்கள் ஆகியவற்றைச் சற்று விரிவாகக் காண்போம்.

அதற்கு முன், தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நூற்பா 14 கூறுவதனுடன் ஒப்பிட்டுச் சிந்து சமவெளி எழுத்துக்கள் செந்தமிழ் மொழியைச் சார்ந்தது என்பதை உறுதிசெய்வோம்.

# உட்பெறு புள்ளி உருவாகும்மே

ஒருமொழியைப் படித்துப் பொருளறிவதற்கு அம்மொழியின் எழுத்துக்களை முதலில் அடையாளம் காணவேண்டும் என்பதன் அடிப்படையில் எமது ஆய்வுப்பணியின் முதல் கட்டமாக எமது நண்பரும், சகஆய்வாளருமான திருச்சிராப்பள்ளி காசாமலை முனைவர் பி. தமிழகன் ஐயா அவர்களை அணுகி, ஐயா! செந்தமிழ் எழுத்துக்களின் வரிவடிவங்களைப் பற்றித் தமிழ் இலக்கண நூல்கள் ஏதேனும் ஒன்றில் கூறப்பெற்றுள்ளதா? என வினவினோம்.

தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நூற்பா 14இல் **'உட்பெறு புள்ளி உருவா கும்மே'** எனக் கூறப்பட்டுள்ளது. அதற்குப் **'ப'** என்னும் எழுத்துருவின் நடுவே **'புள்ளி '** இட்டாலது **'ம (ம்)'** மகரமெய் என்னும் எழுத்துருவாகும் எனக் கூறிதோடு இந்நூற்பாவைத் தவிர வேறு எந்த நூலிலும் செந்தமிழ் எழுத்துக்களைப் பற்றிக் குறிப்பிடப்படவில்லை என்றார்.




'ப, ம (ம்)' ஆகிய இரண்டு எழுத்துக்களின் வரிவடிவங்களைப் பொ.ஆ.மு. 300 முதல் பொ.ஆ.பி 300 வரையிலான 'தமிழி என்னும் தமிழ்ப் பிராமி' எழுத்துக்களோடும் சமசுகிருதம் மொழியோடும் ஒப்பிட்டுப் பார்த்த போது அவை முற்றிலுமாக மாறுபடுவதைக் காணமுடிந்தன.

ஆனால், சிந்து சமவெளி நாகரிக எழுத்துக்களில் **'ப, ம் '** ஆகிய இரண்டும் தற்காலத் தமிழ் எழுத்துக்களில் சற்று மாறுபடுவதைக் காணமுடிந்தன.

மேற்கண்டதை ஒரு சான்றாகக் கொண்டு, இந்தியத் தொல்பொருள் துறையினரால் வெளிக்கொணரப் பெற்ற **சாணூர் பானை ஓடு** ஒன்றில் கீறப்பட்டுள்ள மூன்றும் குறியீடுகளா? அல்லது எழுத்துக்களா? என்ற வினாவுக்கு விடைகாண யாம் முயற்சித்தோம்.





சாணூர் பரம்

தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நூற்பா 14 கூறுவதன் படி **'ப, ம (ம்)'** ஆகிய இரண்டு எழுத்துக்களின் வரிவடிவங்கள் சிந்து சமவெளி எழுத்துக்கள் என்பது உறுதியாவதால் அவ்விரண்டையும், சாணூர் பானை ஓட்டில் கீறப்பட்டுள்ளவை மூன்றும் குறியீடுகளில், இடமிருந்து வலமாக முதலாவது எழுத்தைப் **பகர உயிர்மெய்யெழுத்து** என்பதும், மூன்றாவது எழுத்தை **மகர மெய்யெழுத்து** எனப் படித்தோம். நிற்க.

(தொல்காப்பியம் எழுத்ததிகாரம் இளம்பூரணனார் உரை, தொல்காப்பியம் பொருளதிகாரம் தொகுதி-1 (தமிழண்ணல்) ஆகிய இரண்டு நூல்களை விலைகொடுத்து வாங்கிப் படித்தோம். பேரகத்தியத்திரட்டு எனும் நூலை இணையதளத்திலிருந்து பதிவிறக்கம் செய்து அதனையும் படிக்கத்துவங்கினோம்.) தொடர்க.

இவ்விரண்டு எழுத்துக்களுக்கிடையே உள்ள எழுத்து எதுவாக இருக்கக் கூடுமெனச் சிந்தித்தோம். மூன்று எழுத்துக்களைக் கொண்ட தமிழ்ச் சொற்களைத் தமிழ் அகராதியில் தேடினோம். அத்தேடலில் **பகம், படம், பணம், பதம், பயம், பரம், பலம், பழம், பனம்** ஆகிய ஒன்பது சொற்களைக் காணமுடிந்தன. அவற்றுள் எந்த எழுத்தைக்கொண்ட சொல் சரியான சொல் என்பதை அறிவதில் சற்றுத் தடுமாறினோம். அத்தடுமாற்றத்தைத் தவிர்க்கச் சற்றுச் ஆழ்ந்து சிந்தித்தோம்.

அச்சிந்தனையில் எந்த எழுத்து முதலாக வரும், எந்த எழுத்து இடையில் வரும், எந்த எழுத்து முடிவாக (ஈறாக) வரும் என்பதைப் பற்றித் தொல்காப்பியத்திலும், பேரகத்தியத்திரட்டிலும், கூறப்பட்டுள்ளவை நினைவுக்கு வந்தன.

க, ச, த, **ப,** ஆகிய நான்கும் மொழிக்கு முதலாக ஒலிக்கும் எழுத்துக்கள் (பேரகத்தியத்திரட்டு - 83). ய ர ல வ ழ ள ஆகிய ஆறும் மொழிக்கு இடையெழுத்தென்ப (தொல்காப்பியம் எழுத்ததிகாரம் 21). ங ஞ ண ந **ம** ன ஆகிய ஆறும் மொழிக்கு அந்தமாம் அதாவது முடிவாம் (பேரகத்தியத்திரட்டு-107) என்பதன் அடிப்படையில், மேற்கண்ட ஒன்பது சொற்களில் **ய, ர, ல, ழ** ஆகிய நான்கு இடையின எழுத்துக்களைக் கொண்ட **பயம், பரம், பலம், பழம்** ஆகிய நான்கு சொற்களில் ஏதாவது ஒன்றாக இருக்கக்கூடும் என்பதை எம்மால் உணர முடிந்தது.

**பயம்** என்பதற்கு அச்சம் எனவும், **பரம்** என்பதற்கு மேலானது எனவும், **பலம்** என்பதற்கு வலிமை எனவும், **பழம்** என்பது உண்ணக் கூடிய கனிவகை எனத் தமிழ் அகராதியின் உதவியுடன் பொருளறிய முடிந்தது. அவற்றுள் மேலானது எனும் **பரம்** என்ற சொல்லாக இருக்கக் கூடும் என யாம் கருதினோம்.



H-1411A

சிந்து சமவெளி H-1411A பானை ஓட்டில் **பரமன்** என்ற நான்கெழுத்துச் சொல்லை **பரம் அன்** எனப் படித்து **மேலானவன் அவன்** என அதன் பொருளறிந்த போது, மேலானது எனப் பொருள்படும் **பரம்** எனும் மூன்றெழுத்துக்களில் **ப** எனும் உயிர்மெய் முதலாவதாகவும், **ர** எனும் இடையினம், **ம்** எனும் மெய்யெழுத்தின் நடுவே கீறப்பெற்றுள்ளதைக் காணமுடிந்தது. அவன் எனப் பொருள்படும் **அன்** என்ற இரண்டெழுத்துச் சொல்லிலுள்ள **ன்** என்ற மெல்லின மெய் எழுத்தையும் அறியமுடிந்தது.

**பரமன்** என்ற சொல் முதல் கடவுள் என்பதும், அச்சொல் முதற்பொருள், கருபொருள், உரிப்பொருள் ஆகிய மூன்று பொருட்களில் கருப்பொருளைச் சார்ந்த கடவுளைக் குறிக்கும் சொல் என்பதையும் அறியமுடிந்தது.



பொருந்தல்

கொடு மணல்
துணை எழுத்து

முனைவர் இராசன் பொருந்தலிலும் மேற்கொண்ட அகழாய்வுகளின் போது வெளிக்கொணரப்பட்ட ஒரு பானை ஒன்றில் கீறப்பட்டுள்ள துணையெழுத்தோடு கூடிய மூன்று எழுத்துக்களைப் **பன்னீரு உயிரும்** மொழிக்கு முதலாம் எனத் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் (59) கூறுவதன் படி **அகர** குறிலெழுத்தை மொழிக்கு முதலாகவும், **துணையெழுத்தோடு னகரம்** வருக்க எழுத்தான **னா** எனும் உயிர்மெய் எழுத்தை இடையிரும், முன்கண்ட இடையினமான **மகரமெய்** மொழிக்கு அந்தமாக, **அனாம்** எனப் படித்தோம். தமிழ் அகராதியிலுள்ள **அனாமத்து** என்ற சொல் யாருக்கும் சொந்தமில்லாது எனப் பொருள்படுவதை அறிந்தோம்.

தமிழகத்தில் சாணூர், பொருந்தல் ஆகிய இரண்டு இடங்களில் இந்தியத் தொல்துறையினராலும், முனைவர் இராசன் அவர்களாலும் மேற்கொள்ளப் பெற்ற அகழாய்வுகளின் போது வெளிக்கொணரப்பெற்ற பானை ஓடுகளில் உள்ள **'அ, ப, ம், ர, னா'** ஆகிய ஐந்து எழுத்துக்களை அடையாளம் கண்டவுடன் மற்ற எழுத்துக்களையும் ஆராய்ந்தறிய முயன்றோம்.

அப்போது, நாகப்பட்டினம் (தற்போது-மயிலாடுதுறை) மாவட்டம் செம்பியன் கண்டியூரில் ஐயா சண்முகநாதன் கண்டெடுத்த புதியகற்காலக் கற்கோடரி ஒன்று எமது நினைவுக்கு வந்தது.

# செம்பியன் கண்டியூர் புதியகற்காலக் கற்கோடாரி


செம்பியன் கண்டியூர் கற்கோடாரி


M-301a
பஞ்ச

தமிழகத்தின் நாகப்பட்டினம் (தற்போது மயிலாடுதுறை) மாவட்டம் செம்பியன் கண்டியூரில் ஐயா சண்முகநாதன் கண்டெடுத்த புதியகற்காலக் கற்கோடாரியில் பொறிக்கப் பெற்றுள்ளவற்றை இடமிருந்து வலமாக ஐந்து என்ற எண்ணைக் குறிக்கும் **ஐந்து புள்ளிகளையும்,** எண் ஐந்து என்பதைக் குறிக்கும் **ரகரத்தின்** வருக்க எழுத்துருவமான ரு என்பதையும், **பஞ்ச** என்ற மூன்றெழுத்துச் சொல்லை எம்-301எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பொறிக்கப்பெற்றுள்ள **பஞ்ச** மூன்றெழுத்துச் சொல்லோடு ஒப்பிட்டுப் படித்து ஐந்து என்பதைக் குறியீடாகவும், எழுத்தாகவும், சொல்லாகவும் உள்ளதை அறியமுடிந்தது.

(பஞ்ச என்ற சொல்லுடைய முத்திரையில் இடம் பெற்றுள்ள புருடாமிருகம் பற்றிப் பிற்பகுதியில் காண்போம்).

பி-10எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **'ரு'** என்ற எழுத்தும், **'பஞ்ச'** என்ற சொல்லும், **'ஐந்து'** என்ற எண்ணைக் குறிக்கும் ஐந்து நடுத்தர உயரமான கோடுகளும் உள்ளன. இம்முத்திரை ஐந்து என்பதை எழுத்தாலும், சொல்லாலும், குறியீடாகவும் சுட்டிக்காட்டப் பெற்றுள்ளன.


B-10a

செம்பியன் கண்டியூர் கற்கோடாரி போல ஐந்து என்பதை வரிசைப்படுத்துவதில் சிறிய வேறுபாடுகள் இருந்தாலும் தொல்காப்பியம் கூறும் (குறியீடு) எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்றின் அடிப்படையில், தமிழகத்திற்கும் சிந்து சமவெளிக்கும் இடையிலான இலக்கணத் தொடர்பை அறியமுடிந்தது.

தொல்காப்பியம் எழுத்ததிகாரம் இலக்கண விதிமுறைப்படி **ஞ்** என்ற மெய்எழுத்தோடு **ச, சா, சி, சீ , சு, சூ, சை** போன்ற உயிர்மெய்கள் தொடரும் என்பதனால், **பஞ்ச** என்ற சொல்லில் **'ஞ், ச'** ஆகிய இரண்டு எழுத்துக்கள் இணைந்துள்ளதையும் காணமுடிந்தது.

பண்டைய இந்தியாவில் புதிய கற்காலத்தின் துவக்க காலம் 14,000 முதல் .4,000 ஆண்டுகள் வரை என்பர். சிந்து சமவெளி நகர நாகரிகம் 7,500 (அ) .5,500 முதல் 3,500 ஆண்டுகள் வரை என்பர். அதனால், செம்பியன் கண்டியூர் புதியகற்காலக் கற்கோடாரியின் காலம் சிந்து சமவெளி நகர நாகரிகத்தைச் சார்ந்ததென்பது தொல்காப்பியத்தின் வாயிலாகத் தெரியவந்ததுள்ளது **செம்பியன் கண்டியூர் புதியகற்காலக் கற்கோடாரியின் சிறப்பாகும்.**



வட்டவடிவ புள்ளிகளைக் கொண்டு தொலை தூரத்தைக் (எண்ணிக்கையைக்) குறிப்பிடுவது பழந்தமிழர் மரபு என்பதைக் கிருட்டிணகிரி மாவட்டம், அதியமான் பெருவழி நாவற் தாவளத்துக்குக் காதம் 29 என்றும் குறிப்பிடும் கல்தூண் ஒன்று அதனை உறுதிசெய்கிறது. (ஒரு காதம் - 10 மைல் - 16.09 கிலோ மீட்டர்)

சிந்து சமவெளி நகர நாகரிகத்தைப் போலவே வட்டவடிவ புள்ளிகளாலும், நடுத்தர உயரமுடைய செங்குத்துக் கோடுகளைக் கொண்டு எண்களைக் குறிப்பிடும் முறை சிவகங்கை மாவட்டம் திருமலைப் பாறையின் மேற்பரப்பில் பொறிக்கப் பெற்றுள்ளதைக் காணமுடிகிறது.

திருவண்ணாமலை ஆடையூர் செக்குக் கல்வெட்டின் காலத்தைச் சகரயாண்டு **எண்ணூற்றெழுப்பத்தெழு (877)** எனப் பதிவிட்டுள்ளது.

தமிழ் எண்களைக் கொண்டு திருச்சி காந்தி மார்க்கட் நாற்சந்திச் சாலையில் நிறுவப்பட்டுள்ள ஒரு கல்தூணில் தென்புறமாகத் தஞ்சாவூர் தொலை தூரத்தைத் தமிழ் எழுத்துக்களைக் கொண்டு குறிப்பிடப்பட்டுள்ளது.

மேற்கண்டவற்றின் வாயிலாக எண்ணிக்கை, ஆண்டுகள், தொலை தூரம், ஆகியவற்றை அறிவிப்பதில் உள்ள பரிணாம வளர்ச்சியைப் பற்றிச் செய்திகள் தெரியவருகின்றன.

# சிறப்பு ழகரம்



V H III பழனி

பழநி அருகே சண்கா நதியில் தொல்லியல் அறிஞர் நாராயணமூர்த்தி கண்டுபிடிக்கப்பட்ட-தொரு கற்கோடாரியில் **பழனி** என்ற சிந்து நதிக்கரை நகர நாகரிக எழுத்துக்கள் கீறப்பட்டுள்ளதை எம்மால் படித்துப்பொருளறிய முடிந்தது.



KDL-G-112
Sign No:9.0

எமது சகஆய்வாளரும், பள்ளித் தலைமை ஆசிரியருமான பாலகிருட்டிணன் முனைவர் இராசன் அவர்களின் படைப்பான (Early writing system) எனும் அரிய நூல் ஒன்றைக் கொடுத்துதவினார். அந்நூலில், பொன்னி எனும் காவேரி நதியின் உபநதியான நொய்யல் நதிக்கரையில் அமைந்துள்ள கொடுமணலில் மேற்கொள்ளப்-பெற்ற அகழாய்வுகளின் போது வெளிக்கொணரப்பட்ட பானை ஓடுகளில் கீறப்பெற்றுள்ள ஏராளமான குறியீடுகளும், எழுத்துக்களும் பதிவிடப்பட்டிருந்தன. **சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழி எழுத்துக்களில் குறிப்பாகச் சிறப்பு ழகரம் ஏணி மரத்தின் வடிவிலானது என்பதும் தெரியவந்தது.**

7,500 ஆண்டுகளுக்கும் முற்பட்ட சிந்து நதிக்கரை நகர நாகரிகத்திற்கும், பழந்தமிழக நதிக்கரை நகர நாகரித்திற்கும் இடையிலான தொடர்பு பற்றிய ஆராய்வுப் பணியை மேற்கொள்ள விரும்புவோருக்கு முனைவர் இராசனின் நூல் மட்டுமே உதவிக்கரம் நீட்டும் என்றாலது மிகையாகாது. எனவே, முனைவர் இராசனுக்குத் தமிழ்க் கூறும் நல்லுலகம் என்றென்றும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளது எனக் குறிப்பிடுவதில் யாம் பெருமையடைகிறோம்.

# சிந்து சமவெளிக்கும் தமிழகத்திற்கும் இடையிலான நாகரிகத்தின் தொல்லியல் சான்றுகள்

சிந்து சமவெளிக்கும், தமிழகத்திற்கும் இடையிலான நாகரிகத்தின் தொல்லியல் சான்றுகள் என்ற தலைப்பில் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் இந்தியத் தொல் பொருள் துறை, தமிழகத் தொல்லியில் துறை, முனைவர் கா. இராசன் ஆகியோரால் மேற்கொண்ட அகழாய்வுகளின் போது வெளிக்கொணரப்பெற்றுள்ளவை எடுத்துக் காட்டப்பெறுகின்றன..

அவற்றுள், தொல்லியல் அறிஞர்களான அனந்தபுரம் கிருட்டிணமூர்த்தி, பழனி நாராயணமுர்த்தி, திருச்சி பார்த்திபன், அரசனக்குடி அபிசேக், எம்மாலும் கண்டுபிடிக்கப்பட்டவை உள்ளடங்கும். மேலும் பல தொல்லியல் சான்றுகள் தமிழகப் பரப்பாய்வுகள் மற்றும் அகழாய்வுகளின் போது தொடர்ந்து அறியப்பெறுகின்றன.


அரசனக்குடி
பாவூர்


இராசசிங்கமங்களம்
திறன்

இராமநாதபுரம் மாவட்டம், அரசனக்குடி, இராசசிங்கமங்கலம் ஆகிய இரண்டு இடங்களின் பரப்பாய்வின் போது இளம் தொல்லியல் ஆய்வாளர் அபிசேக் கண்டெடுத்தப் பானை ஓடுகளில் **திறன், பாவூர்** ஆகிய இரண்டு சொற்கள் சிந்து நதிக்கரை நகர நாகரிக எழுத்துக்கள் கீறப்பெற்றுள்ளன.


கீழடி


கீழ்வாலை
H-2084A&B

சிவகங்கை மாவட்டம், கீழடியில் இந்தியத் தொல்பொருள் துறை, தமிழகத் தொல்லியல் துறை மேற்கொண்ட அகழாய்வின் போது பானை ஓடு ஒன்றில் ஒரு செங்குத்துக் கோடும், நான்கு படுக்கைக் கோடுகளும் கொண்ட காலத்தால் முற்பட்ட குறியீடு ஒன்று கீறப்பட்டுள்ளது. அதே மாதிரியான குறியீடு 8,000 ஆண்டுகளுக்கும் முற்பட்ட விழுப்புரம் மாவட்டம் கீழ்வாலையில் பாறை ஓவியமாகக் கருஞ்சிவப்பு நிறத்தில் வரையப்பெற்றுள்ளதும், புதுக்கோட்டை மாவட்டம் மலையடிப்பட்டி, திருமெய்யம் கோட்டையில் கோட்டுருவக் குறியீடுகளாகப் பொறிக்கப்பெற்றுள்ளதும் குறிப்பிடத்தக்கவை.

7,500 ஆண்டுகளுக்கும் முற்பட்டதுமான சிந்து சமவெளி முத்திரை எண்: எச்-2064எ,பிலும் பொறிக்கப்பட்டுள்ளது. அக்குறியீடு, யோக மார்க்கத்தில் விழிப்பு, கனவு, உறக்கம், அமைதி (துரியம்), பேரமைதி (துரியாதீதம்) ஆகிய உயிரின் ஐந்து நிலைப்பாடுகளில் **துரியாதீதம்** எனும் நிலையைக் குறிப்பிடுவது தெரியவருகிறது. சிந்து சமவெளி முத்திரை எண்: எச்-2064எ,பி பற்றியும் மற்றும் சில முத்திரைகள் பற்றியும் பிற்பகுதியில் **துரியாதீதம்** என்ற தலைப்பில் காணலாம்.



M-507A&B


**ஐயனார் குளம்**


**கொங்கர் புளயங்குளம்**

திருச்சியைச் சேர்ந்த பார்த்திபனால் திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரம், ஐயனார் குளம், மதுரை மாவட்டம் கொங்கர் புளியங்குளம் ஆகிய இரண்டு இடங்களிலுள்ள பாறைகளின் மேற்பரப்பில் வெள்ளை நிறத்தில் பாறை ஓவியங்களாக வரையப்பட்டுள்ள குறியீடுகள், சிந்து சமவெளி முத்திரை எண்: எம்-507எ,பி -யின் 'பி' புறத்தில் ஒரு குறியீடு போலவே உள்ளன.


கோலம்


முத்திரை எண்: எம்-1356எ


சுவத் பாறை ஓவியம்


இராச்சாண்டார் திருமலை


திருவெள்ளறை

எம்-1356எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையிலும், சுவத் பள்ளத்தாக்கில் பாறை ஓவியமாக வரையப்பெற்றுள்ள 9 புள்ளிக் கோலத்தின் வடிவங்கள், திருச்சிராப்பள்ளி மாவட்டம், இராசாண்டார் திருமலை, திருவெள்ளறை (திரயம் (எ) திரயம்பகன்- முக்கண்ணுடைய சிவன்) ஆகிய சிவாலயங்களில் கோட்டுருவமாகவும் பொறிக்கப்பட்டுள்ளது எம்மால் கண்டுபிடிக்கப் பெற்றுள்ளன.


M-350A


குண்ணான்டார் கோயில்

புதுக்கோட்டை மாவட்டம், குன்னாண்டார் கோவில் அமைந்துள்ள மலையில் சிந்து சமவெளி முத்திரை எம்-350எ-யின் குறியீட்டின் வடிவம் பொறிக்கப்பட்டுள்ளது எம்மால் கண்டுபிடிக்கப்பெற்றுள்ளது.


H-165A


திருநெடுங்குளம்

திருச்சிராப்பள்ளி மாவட்டம் திருநெடுங்குளம் சிவாலயத்தின் கல்தூண் ஒன்றில் சிந்து சமவெளி முத்திரை(எச்-165எ) சுவத்திகம் குறியீட்டின் வடிவம் பொறிக்கப் பெற்றுள்ளது எம் முயற்சியால் அடையாளம் காணப்பெற்றுள்ளது.


ஒ


திருச்செந்துறை

திருச்சிராப்பள்ளி மாவட்டம், திருச்செந்துறை சிவாலயத்தின் ஒரு மண்டபத்தின் தரையில் பதிக்கப்பட்டுள்ள பலகைக் கல்லின் மேல் புறத்தில் 'பொறிக்கப்பட்டுள்ள '**ஒ**' என்ற சிந்து சமவெளி கோட்டுருவ உயிர் எழுத்துரு எம்மால் கண்டறியப்பெற்று'ள்ளது.


ச


கீழடி


கொடுமணல்

கீழடி மற்றும் கொடுமணல் அகழாய்வுகளில் தமிழகத் தொல்லியல் துறை மற்றும் கொடுமணலில் முனைவர் கா.இராஜனால் கண்டுபிடிக்கப்பட்ட பானை ஓடுகளில் 'ச' என்ற சிந்து சமவெளி உயிர்மெய் எழுத்துரு உள்ளன.


ய


ஆதிச்சநல்லூர்


கொடுமணல்

கொடுமணல் மற்றும் ஆதிச்சநல்லூர் அகழாய்வுகளில் கா.இராஜன், தமிழகத் தொல்லியல் துறை மற்றும் இந்தியத் தொல்பொருள்துறையினரால் கண்டெடுக்கப் பெற்றப் பானை ஓடுகளில் 'அமனாயா (அமன் ஆயா), ய' என்ற சிந்து சமவெளி உயிர்மெய் எழுத்துக்கள் உள்ளன.


துலாம்


கொடுமணல்


கொடுமணல்

கொடுமணல் அகழாய்வுகளில் கா.இராஜனால் கண்டுபிடிக்கப்பட்ட பானை ஓடுகளில் **'துலாம்** (சமாதி நிலை)' என்பதைக் குறிக்கும் சிந்து சமவெளிக் குறியீடுகள் இடம்பெற்றுள்ளன.


M-312A


Bannavali 335A

சிந்து சமவெளி முத்திரை எண்கள் எம்-312எ, பன்னவாலி 335 ஆகிய இரண்டில் பழந்தமிழர்களின் வீர விளையாட்டான ஏறுதழுவுதல் என்பதைக் குறிக்கும் உருவங்கள் **வடு** என்ற சொல்லுடன் சுட்டிக்காட்டபட்டுள்ளன. பன்னவாளி (அ) பண்ணவாளி 336எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் சிந்து சமவெளி இரண்டு எழுத்துக்கள் (வலமிருந்து இடமாக) **'வடு என்பது வடுக் கொள்ளுதல்'** எனும் வீரத்தழும்பைப் பெறுதலைக் குறிப்பதாகும்.

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் மேற்கொள்ளப்பட்ட, வருங்காலத்தில் மேற்கொள்ளப்பட உள்ள பரப்பாய்வுகள் மற்றும் அகழாய்வுகளின் முழுமையான ஆய்வு அறிக்கைகளில் குறியீடுகள், எழுத்துக்கள் ஆகியவற்றின் நிழல் படங்கள் முழுமையாக வெளியிடப்பட்டால் மேலும் பல ஆதாரச் சுவடுகள் அறியப்படுவதற்கான வாய்ப்புக்கள் அதிகம் உண்டு எனலாம்.

மேற்கண்ட தமிழகத்தின் அகழாய்வுகள், பரப்பாய்வுகள் ஆகியவற்றின் வாயிலாக அறியப்பட்டவற்றின் அடிப்படையில் சிந்து சமவெளி நாகரிகத்திற்கும் தமிழக நாகரிகத்திற்கும் இடையிலான நெருங்கிய தொடர்பு தெரியவருகிறது.

மேற்கண்ட வரலாற்றுச் சான்றுகளின் அடிப்படையிலும், முன் கண்ட சாணூர், பொருந்தல் பானை ஓடுகள், செம்பியன் கண்டியூர் கற்கோடாரி, பழனி கற்கோடாரி எழுத்துப்பொறிப்புகள் தொல்லிலக்கணம் முறைப்படி உள்ளதாலும் **தொல்காப்பியத்தின் காலம் யாதென்று** ஆராய்ந்தறியப் பெறுகிறது.

# தொல்காப்பியத்தின் காலம்

தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நூற்பா 14 **'உட்பெறு புள்ளி உருவா கும்மே'** எனக் கூறுவதாலும், வட்டம், சதுரம் முப்ப..து இரண்டில் ஒன்று என அதன் உரையாசியர் குறிப்பிடுவதாலும், பரம், அனாம், பஞ்ச போன்ற சிந்து சமவெளி நகர நாகரிகத் தொல்வாச்சியங்கள் தொல்காப்பியம் இலக்கண முறைப்படி உள்ளதாலும், தொல்காப்பியத்தின் காலம் மிகப்பழமையானதெனலாம். அக்காலம், சிந்து சமவெளி நகர நாகரிகக் காலமாக இருக்கக் கூடுமெனலாம். ஆனால், தொல்காப்பியத்தின் காலம் பற்றித் தமிழறிஞர்களுக்கிடையே பல்வேறு கருத்துவேறுபாடுகளுள்ளன. எனவே அக்கருத்து வேறுபாடுகளைக் களைந்து இலக்கியம், இலக்கணம், தொல்லியல், அறிவியல் சான்றுகளின் வாயிலாக அதன் காலத்தை ஆராய்வு செய்தறிவது மிகவும் அவசியமாகிறது.

## தொல்காப்பியத்தின் காலம்

| | |
|---|---|
| பொள்ளாச்சி நா.மகாலிங்கம் | : கி.மு. 7000 அல்லது 10,676 ஆண்டுகள் |
| பேராசிரியர் மு. இராமலிங்கம் | : கி.மு. 7,000 அல்லது 10,676 ஆண்டுகள் |
| பேராசிரியர் பகீதரன் | : கி.மு. 7,000 அல்லது 10,676 ஆண்டுகள் |
| வெள்ளை வாரணனார் | : கி.மு. 5,000 (7,000 ஆண்டுகள்) |
| பா.வே. மாணிக்க நாயக்கர் | : கி.மு. 3,000 (5,000 ஆண்டுகள்) |
| தனித்தமிழ் இயக்கத் தந்தை மறைமலை அடிகளார் | : கி.மு. 3,000 (5,000 ஆண்டுகள்) |
| கா.சு. பிள்ளை | : கி.மு. 2,000 (4,000 ஆண்டுகள்) |
| நாவலர் சோமசுந்தர பாரதியார் | : கி.மு. 1,000 (3,000 ஆண்டுகள்) |
| வி.ஆர்.ஆர் தீட்சிதர் | : கி.மு. 500 (2,500 ஆண்டுகள்) |
| எம். சீனிவாச ஐங்கார் | : கி.மு. 400 (2,400 ஆண்டுகள்) |
| பி.டி. சீனிவாச ஐங்கார் | : கி.மு. 200 (2,200 ஆண்டுகள்) |
| தேவநேய பாவாணர் | : கி.மு. 200 (2,200 ஆண்டுகள்) |
| பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை | : கி.பி. 400 – 500 (1,600 - 1,500 ஆண்டுகள்) |

மேற்கண்ட அறிஞர் பெருமக்களின் தொல்காப்பியத்தின் காலத்தைப் பற்றிய வேறுபட்ட கருத்துக்களில் எது ஏற்புடையது, எது ஏற்புடையதல்ல என்பதை உறுதிப்படுத்தும் வகையில் பாண்டிய மன்னர்களால் வளர்க்கப்பெற்ற முதல், இடை, கடை ஆகிய முத்தமிழ்ச்சங்கங்களின் காலங்கள் ஆராய்ந்தறிப்பெறுகின்றன,

ஏழு சித்தர்களில் ஒருவரும், முத்தமிழுக்குரியோன் என்பவரும், தொல்காப்பியரின் ஆசிரியரும், தமிழ் முனிவருமான அகத்தியர் இமயமலைச் சாரலிருந்து தமிழகத்திலுள்ள பொதிகை மலையை வந்தடைந்தார் என்றும், அவர் வாழ்ந்த அந்தப் பொதிகை மலையிலேயே முதலிலொரு தமிழவையை (தமிழ்ச் சங்கத்தை) நிறுவியுள்ளார் என இறையனார் அகப்பொருள் என்னும் நூல் கூறுகிறது.

அந்நூலின் வாயிலாக அகத்தியர் முனிவர் சிவபெருமான், முருகப்பெருமான் ஆகிய இருவரை முன்னிலைப்படுத்தி நிறுவிய அத்தமிழவையில் தமிழ்ப்புலவர்கள் எண்ணிக்கை நாளடைவில் பெருகியதாகவும், அதனால், அத்தமிழவையைப் பொதிகை மலையில் இருந்து தென்மதுரை அரண்மனையில் நிறுவப்பட்ட செய்தியும் அறியமுடிகிறது.

"தென்தமிழ் நாட்டகன் பொதியில் திருமுனிவன் தமிழ்ச்சங்கம் சேர்கிற்பீரேல்

என்றும் அவன் உறைவிடமாம் ஆதலால் அம்மனையை இடத்திலிட்டு ஏகில்

பொன்றிணிந்த புனல்பெரும் பொருநையெனும் திருநதியின் பின்பொழிய நாகக்

குன்று வளர் குடஞ்சாரல் மகேந்திமா நெடுவரையும் கடலும் காண்பீர்"- எனக் கூறுகிறது கம்பராமாயணம், கிட்கிந்தா, நாடுவிட்ட படலம்- 31. கம்பராமாயணம் குறிப்பிடும் அகத்தியர் முனிவர் பொதிகை மலையில் நிறுவிய அத்தமிழவையே முதலாம் தமிழ்ச்சங்கம் என்ற வரலாற்றுச் செய்தி தெரியவருகிறது.

## இறையனார் அகப்பொருள் பதிவுகள்

இறையனார் அகப்பொருள் என்னும் நூலில், தமிழ் மொழி **முதல், இடை, கடை ஆகிய மூன்று தமிழவைகள் (தமிழ்ச்சங்கங்கள்)** வளர்க்கப்பட்டதாகவும், அச்சங்கங்கள் 9990 ஆண்டுகள் தொடர்ந்து நடைபெற்றதாகவும் பதிவுசெய்யப்பட்டுள்ளன. 9990 ஆண்டுகள் என்பது சற்று மிகைப்படுத்திக் குறிப்பிடப்பெற்றுள்ளதாகக் கருதுவோருமுண்டு.

சங்கம் என்ற சொல் சமசுகிருதம் மொழியைச் சார்ந்தது. எனவே தமிழ்ச் சங்கங்களின் காலங்கள் முற்பட்டவை அல்ல எனக் கூறுவோருமுண்டு. உண்மையில் மூன்று தமிழ்ச் சங்ககாலத்தைச் சேர்ந்த சிற்றிலக்கியத்தின் **'உஞ்சல் பாடல்கள்'** பற்றியும், முதலாம் தமிழ்சங்கத்தில் முன்னிலைப்படுத்தப்பெற்ற **'அரன்'** எனும் சிவபெருமான் பற்றியும், **'அரண்'** எனும் முருகப்பெருமான் பற்றியும் பிற்பகுதியில் காணலாம்.

**முதலாம் தமிழ்ச் சங்கம் 6440** ஆண்டுகளுக்கு முன் கடல்கொண்ட தென்மதுரையில், **சிவபெருமான், முருகப்பெருமான்** ஆகிய இருவரை வணங்கியும் அதாவது அவர்களை முன்னிலைப்படுத்தியும், அகத்தியமுனிவர் தலைமையில் 4449 புலவர்களுடன் வளர்க்கப்பட்டதாகவும், அத்தமிழ்ச் சங்ககாலத்தில் 'பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை ஆகிய நூல்கள் இயற்றப்பட்டுள்ளதாகவும், அந்நூல்கள் கடல்கோளால் அழிந்துவிட்டதாவும் குறிப்பிடப்பெற்றுள்ளன.

**இடைச் சங்கம் என்னும் இரண்டாம் தமிழ்ச் சங்கம் 5700** ஆண்டுகளுக்கு முன் கடல் கொண்ட கபாடபுரத்தில் தொல்காப்பியர் தலைமையில் 3700 புலவர்களுடன் நிகழ்ந்துள்ளதாகவும் அக்காலத்தில் கலியும், குருகும், வெண்டாளியும், வியாழமாலை அகவலும் எனத் தொடர்ந்தன என்ப. அகத்தியமும், தொல்காப்பியம் எனும் தமிழிலணக்கண நூலும், மாபுராணமும், இசை நுணுக்கங்களும், பூத புராணமும் என இவையாகும் எனக் கூறப்பட்டுள்ளது. இரண்டாம் தமிழ்ச் சங்கமும் கடல்கோளால் அழிந்ததாகவும் பதிவிடப்பெற்றுள்ளது.

**கடைச் சங்கம் என்னும் மூன்றாம் தமிழ்ச் சங்கம் 3850** ஆண்டுகளுக்கு முன் மதுரை மாநகரில் 449 புலவர்களுடன் நிகழ்ந்துள்ளதாகவும் அக்காலத்தில் **பத்துப்பாட்டு,** எட்டுத்தொகை போன்ற நூல்கள் எழுதப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது.

இறையனார் அகப்பொருள் என்னும் நூலில் **சங்கம்** என்ற சொல் சமண, பௌத்த மதங்களைச் சார்ந்த வடமொழிச் சொல் பதிவிடப்பட்டுள்ளதால், அந்நூல் காலத்தால் பிற்பட்டது என வடமொழியைக் கற்றறிந்த தமிழ் மொழியைப் பேசும் ஓர் அறிஞர் பெருமகன் தமது நூலில் பதிவிட்டுள்ளார்.

இறையனார் அகப்பொருள் எனும் நூலுக்கான உரையில் இடைச்செருகலே அச்சொல் என்பதே உண்மை. (ஆய்வு அறத்தைக் கருதி அவரின் பெயர் குறிப்பிடப்பெறவில்லை)

## மூன்று தமிழ்ச் சங்கங்களின் காலங்கள்

முன்னாள் தமிழகத் தொல்லியல் துறை இயக்குநர், மா.இராசமாணிக்கனார் (புதிய தமிழகம், மே 1958, பக்கம் 24-25) முதலாவது கடல்கோளின் காலம் 4300 ஆண்டுகள் என்றும், இரண்டாவது கடல்கோளின் காலம் 2504 ஆண்டுகள் என்றும் குறிப்பிட்டுள்ளார். இவ்விரண்டு கடல்கோள்களின் காலத்தைப்பற்றித் தமிழறிஞர் பெருமக்களுக்கிடையே கருத்து வேறுபாடுகளுமுண்டு.

இறையனார் அகப்பொருள் கூறியதன் அடிப்படையிலும், மா.இராசமாணிக்கனார் கூறியதன் அடிப்படையிலும் முதலாம் தமிழ்ச் சங்கத்தின் துவக்கக் காலம் (6440 + 4300) **10,740** ஆண்டுகளாகிறது. இடைச்சங்கம் என்னும் இரண்டாம் தமிழ்ச் சங்கத்தின் துவக்கக் காலம் (5700 + 2504) **8204** ஆண்டுகளாகிறது.

இடைச்சங்கத்தார்களில் அகத்தியனாரும், **தொல்காப்பியரும்**, இருந்தையூர்க் கருங்கோழி மோசியும், வெள்ளூர்க் காப்பியனும், சிறு பாண்டரங்கனும், திரையன் மாறனும், துவரைக் கோமானும், கீரந்தையும் என இத்தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மர் என்ப என இறையனார் அகப்பொருள் குறிப்பிடுவதால் **தொல்காப்பியரின் காலம் 8204 ஆண்டுகள்** என்பது தெரியவருகிறது. கடைச் சங்கம் என்னும் மூன்றாம் தமிழ்ச் சங்கம் 3850 ஆண்டுகளுக்கு முன் என்பதனால் அத்தமிழ்ச்சங்கம் (8204-3850) **4354** ஆண்டுகள் தொடர்ந்து நிகழ்ந்துள்ளது.

முதலாம் தமிழ்ச் சங்கத்தின் துவக்க காலம் (6440 + 4300) 10,740 ஆண்டுகளுக்கு முன் நிறுவப்பட்டுள்ளதாலும், முதல், இடை, கடை ஆகிய மூன்று தமிழ்ச்சங்கங்கள் 9990 ஆண்டுகள் தொடர்ந்து நிகழ்ந்துள்ளதாலும், தமிழ்ச் சங்கம் முடிவடைந்த காலம் பொ.ஆ.பி (பொது ஆண்டுக்குப் பின்) (10,740-9990) **750**ஆம் ஆண்டெனக் கணக்கிட முடிகிறது.

சிந்து சமவெளி நாகரிகத்தின் ஆரம்ப காலம் சி -14 கரிமப் பகுப்பாய்வின் அடிப்படையில் 7500 ஆண்டுகள் என்பதாலும், மேற்கண்ட காலக்கணக்கிடுதல் முறையில் முதலாம் தமிழ்ச் சங்கத்தின் தொடக்க காலம் 10,740 ஆண்டுகள் என்பதாலும், அவ்விரண்டுக்கும் உள்ள கால இடைவெளி (10,740 - 7500) 3240 ஆண்டுகள் என்பதும் அறியமுடிகிறது.

அதாவது சிந்து சமவெளி நாகரிகக் காலத்தை விட முதலாம் தமிழ்ச் சங்கத்தின் காலம் **3,240** ஆண்டுகள் முற்பட்டதென்பது தெரியவருகிறது. அதனை உறுதி செய்வதற்கான சில தமிழகக் கல்வெட்டு ஆதாரச் சான்றுகளை வரிசைப்படுத்திக் காண்போம்.

# தமிழகக் கல்வெட்டுச் சாசனச் சான்றுகள்



தமிழகத்தில் மேற்கொள்ளப் பெற்றுள்ளப் பரப்பாய்வுகளின் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டுச் சாசனங்களில் முதலாவதாகத் திருச்சிராப்பள்ளி மாவட்டம், திருச்சி- துறையூர் செல்லும் மாநில நெடுஞ்சாலையின் 18 கிலோ மீட்டர் தொலைவிலுள்ள கரட்டாம்பட்டியில் பொ.ஆ.பி. 942ஆம் ஆண்டைச் சார்ந்த வீரக்கல் ஒன்று எம்மால் கண்டுபிடிக்கப்பெற்றுள்ளது.

அதனைப் பற்றிய செய்தியைத் தமிழ், ஆங்கிலம் நாளிதழ்களிலும், **உருவதிகாரம்** எனும் எமது நூலிலும் பதிவிட்டுள்ளோம்.

அக்கல்வெட்டில் தமிழ் எழுத்துக்களால் **'மதிரை கொண்ட பர்மருக்கு யாண்டு 35ஆவது. இவ்வாண்டு மியமானாட்டு வள்ளுவப்பாடி விரியூர் ஆட்டை ஊட்டத்தூர் நாட்டுப் பாடாவூர் ஐஞ்சுருமான்கள் நிரை கொண்டு போக, நிரை பின்பு சென்று, ஆடுஊடு கொண்டு பட்ட நாகன் வீரன் மகளுக்கு ஓர்ரோரால் இறையிலி வைத்து குடுத்தோம் விரியூர் ஊராரோம்'** – என்ற செய்தி பதிவிடப்பெற்றுள்ளது. இச்சாசனத்தில் தொல்காப்பியத்தின் பொருளதிகாரம் கூறும் சொற்கள் நோக்கத்தக்கவை.

**நிரை கொண்டு போக** - வெட்சித்திணை

**நிரை பின்பு சென்று** - கரந்தைத் திணை

**ஆடுஊடு கொண்டு பட்ட** - இருதிணை ஒழுக்கங்கள்

**ஓர்ரோரால்** என்பதிலுள்ள ஏரோர்கள் உழுவர் அறுவடை செய்து கொண்டாடும் விழா களவழி, தேரோர் ஆகியயோரும் வெற்றி விழா எடுக்கும் பழந்தமிழர் மரபைக் குறிப்பிடுவதாகும்.

இச்சாசனத்தின் காலம் 1080 ஆண்டுகள் முற்பட்டது என்றாலும் கூட, இதில் தொல்காப்பியத்தின் சுவடுகள் இருப்பதை ஓர் உதாரணமாக எடுத்துக்காட்டப்பெறுகின்றது.



இரண்டாவதாக, ஈரோடு மாவட்டம் தாமரைப்பட்டி காட்டில் **பொ.ஆ.மு. 3 - ஆம் நூற்றாண்டைச் சார்ந்த அதாவது 2300 ஆண்டுகளுக்கும் முற்பட்ட தமிழ்ப் பிராமி** எனும் தமிழி எழுத்துக்களும் இரண்டு தமிழ் எழுத்துக்களும் கொண்ட கோடாரி கல் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அக்கோடாரிக் கல் தற்போது மதுரை நாயக்கர் மகால் அருங்காட்சியகத்தில் கண்ணாடிப் பேழையில் பாதுகாக்கப்பெறுகிறது.

அதில் '**தரிகய் ஏராளராரிதை கல்**' (தரிகய் ஏராளரார் இதைக் கல்) என எம்மால் படிக்கப்பெறுகிறது. **தறிகய்** என்ற சொல் தமிழ் இலக்கண முறைப்படி '**தறிகை**' என்பதாகும். **தறிகை** என்பதற்குக் **கோடாரி**, வெட்டப்படுகை, உளி என்றும், **ஏராளரார்** என்பதற்கு **ஏர் உழவர்கள்** என்றும், **இதை** என்பதற்குக் கப்பற்பாய், காராமணி, **கலப்பை**, புதுக்கொல்லை எனத் தமிழ் அகராதி பொருள் கூறுகிறது. இறுதியாக உள்ள **கல்** பிற்காலத் தமிழ் எழுத்துக்களாகும். கோடாரி – ஏர் உழவர்களின் கலப்பைக் கல் என்று குறிப்பிடுவதும் தெரியவருகிறது. **ஏராளரார்** என்பதை **ஏரோர்கள்** எனவும் அது உழவர்கள் அறுவடை செய்து கொண்டாடும் விழா களவழி, தேரோர் ஆகியோரும் வெற்றி விழா எடுக்கும் பழந்தமிழர் மரபைக் குறிப்பிடுவதாகக் கருதலாம்.



மூன்றாவதாக, தேனி மாவட்டம் ஆண்டிப்பட்டியிலிருந்து 15 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள புளிமான் கோம்பை என்னும் கிராமத்தில் 2006ஆம் ஆண்டு சுரேஷ் என்பவரால் கண்டுபிடிக்கப்பட்ட பொ.ஆ.மு. 6 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த நடுகல் ஒன்றில் தமிழ்ப் பிராமி எனும் தமிழி எழுத்துக்களால் '**கல் பேடுதீயன் அந்தவான் கூடல் ஊர் ஆகோள்**' என்ற செய்தி பதிவிடப்பெற்றுள்ளது.

அப்பதிவில் உள்ள **ஆகோள்** என்பது ஒரு பகைவனைப் போருக்கு அழைப்பதற்கு முன்னர், அவனது நாட்டிலுள்ள ஆநிரைகளை **வெட்சிப்பூ சூடி** கவர்ந்து வரும் பழந்தமிழர் மரபையும், அவ்வாறு ஆநிரைகள் களவு போவதை அறிந்து அவற்றை மீட்கக் **கரந்தைப்பூ சூடிப்** போர் புரிந்தனர் என்ற தொல்காப்பியம் பொருளதிகாரம் கூறும் செய்திகள் பதிவுசெய்யப்பெற்றுள்ளன.

இந்த வீரக்கல் எனும் நடுகல்லின் காலம் பொ.ஆ.மு. 700 முதல் பொ.ஆ.மு. 500 வரை எனப் பல்வேறு அறிஞர்கள் கருதுவதால், இதன் காலத்தைப் பொ.ஆ.மு. 6ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதலாம்.

இம்மூன்று தொல்லியல் கல்வெட்டுச் சான்றுகளில் புளிமான் கோம்பை கல்வெட்டுச் சான்றின் வாயிலாகத் தொல்காப்பியத்தின் காலம் 2,600 ஆண்டுகளுக்கும் முற்பட்டது என்பது தெரியவருகிறது. மேற்கண்ட மூன்று கல்வெட்டுச் சாசனங்களில் தொல்காப்பியத்தின் பொருளதிகாரத்தின் சொற்கள் இருப்பதனால்-

| | |
|---|---|
| வி.ஆர்.ஆர் தீட்சிதர் | : கி.மு. 500 (2,500 ஆண்டுகள்) |
| எம். சீனிவாச ஐங்கார் | : கி.மு. 400 (2,400 ஆண்டுகள்) |
| பி.டி. சீனிவாச ஐங்கார் | : கி.மு. 200 (2,200 ஆண்டுகள்) |
| தேவநேய பாவாணர் | : கி.மு. 200 (2,200 ஆண்டுகள்) |
| பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை | : கி.பி. 400 – 500 (1,600 - 1,500 ஆண்டுகள்) |

மேற்கண்ட ஐந்து தமிழறிஞர்கள் தொல்காப்பியத்தின் காலத்தைக் குறைத்துக் கூறியுள்ளனர் என்பது தெரியவருகிறது.


செம்பியன் கண்டியூர் கற்கோடாரி

நான்காவதாக, மயிலாடுதுறை மாவட்டம், நாகப்பட்டினம் அருகாமையில் உள்ள செம்பியன் கண்டியூரில் பள்ளி ஆசிரியர் ஐயா சண்முக நாதன் ஒரு புதிய கற்காலக் கோடாரி கல்லைக் கண்டுபிடித்துள்ளார் என முன்கண்டது இவ்விடத்து மீண்டும் மறுபதிவு செய்யப் பெறுகிறது. 14,000 முதல் 4,000 ஆண்டுகள் வரையிலான இந்தப் புதிய கற்காலக் கோடாரி கல்லில் **ஐந்து புள்ளிகளும்**, பொ.ஆ. மு. 5,500 ஆண்டைச் சார்ந்த சிந்து சமவெளி நாகரிக முத்திரைகளில் பொறிக்கப்பட்டுள்ள எண் ஐந்து என்பதைச் சுட்டும் 'ரு' என்ற உயிர்மெய்யும்,

**பஞ்ச** என்ற சொல்லும் பதிவு செய்யப்பெற்றுள்ளன. (குறியீடு) எழுத்து - சொல் - பொருள் ஆகியவை ஐந்திலக்கண முறையில் பதிவிடப்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

அப்பதிவில் குறிப்பாகப் **பஞ்ச** எனும் மூன்று எழுத்துக்களில் **ப** என்பது க, ச, த, ந, ப, ம உயிர்மெய் எல்லாம் மொழியின் முதலில் வரும் எனத் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் கூறுகிறது. மேலும் **ஞ்ச** என்பதில் ஞகர மெய்யுடன் சகர, யகர உயிர்மெய்கள் வந்து கூடும் எனத் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் கூறுகிறது. இக்கல்வெட்டுச் சாசனத்தின் அடிப்படையில்-

| | |
|---|---|
| **வெள்ளை வாரணனார்** | **: கி.மு. 5,000 (7,000 ஆண்டுகள்)** |
| பா.வே. மாணிக்க நாயக்கர் | : கி.மு. 3,000 (5,000 ஆண்டுகள்) |
| தனித்தமிழ் தந்தை மறைமலை அடிகளார் | : கி.மு. 3,000 (5,000 ஆண்டுகள்) |
| கா.சு. பிள்ளை | : கி.மு. 2,000 (4,000 ஆண்டுகள்) |
| நாவலர் சோமசுந்தர பாரதியார் | : கி.மு. 1,000 (3,000 ஆண்டுகள்) |

மேற்கண்ட ஐவரில் பா.வே. மாணிக்க நாயக்கர், தனித்தமிழ் இயக்கத் தலைவர் தந்தை மறைமலை அடிகளார், கா.சு. பிள்ளை, நாவலர் சோமசுந்தர பாரதியார ஆகிய நான்கு அறிஞர் பெருமக்கள் தொல்காப்பியத்தின் காலத்தைக் குறைத்துக் கூறியுள்ளனர் என்பது தெரியவருகிறது. **வெள்ளை வாரணனார் கூறும் கி.மு. 5,000 (7,000 ஆண்டுகள்) என்பது ஏற்புடையதாகிறது.**

மேற்கண்ட தமிழகத்தில் கண்டறியப்பட்ட நான்கு கல்வெட்டுச் சாசனங்களின் அடிப்படையில் தொல்காப்பியத்தின் காலம் பொ.ஆ.மு 5,000 ஆண்டுகள் அதாவது 7,000 ஆண்டுகளுக்கும் முற்பட்டதாகத் தெரியவருகிறது. எனினும் தொல்காப்பியத்தின் காலத்தை அறிவியல் ரீதியில் அதாவது இரண்டு தமிழ்ச் சங்கங்களைக் குமரிக்கண்டம் கடல் கொண்ட (கடல்கோள்) காலத்தின் அடிப்படையில் மேலும் ஆராய்ந்தறிந்து உறுதி செய்யப்பெறுகிறது.

# குமரிக் கண்டத்தைக் கடல்கோள் கொண்ட காலம்



Sumilinteriorsblog.wordpress.com.
2017/09/23 Kumari Kandam lost -world - lost - word.

குமரிக்கண்டம் கடல் கொண்டதைப் பற்றி விளக்கப்படும் சுமிலின் இன்டிரியர் பிளாக் வேல்டு பிரஸ் காம் என்பதில் பதிவிடப்பெற்றுள்ளது.

**குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள**

– எனச் சிலப்பதிகாரம் எண்-11.3 மொழிகிறது.

குமரிக்கோடு என்பதற்கு உதாரணமாகக் குமரி மாவட்டத்தில் உள்ள அதங்கோடு, அண்டுகோடு, ஆலங்கோடு, இடைக்கோடு, ஈஞ்சைக்கோடு, உத்தரங்கோடு, மாங்கோடு, மேக்கோடு, மருதங்கோடு, மாலைக்கோடு ஆகியவற்றைப் பற்றிப் புலவர் கு.இரவீந்திரன் குறிப்பிட்டுள்ளார்.

சோதிட சாத்திரத்தின் அடிப்படையில் கடல் கோள்கள் ஒன்பது கிரகங்களில் ஒன்றான சனிக் கிரகம் கடகராசியில் நிகழும் எனவும், அதற்கு உதாரணமாகப் பொ.ஆ.பி. 2004, பொ.ஆ.பி. 2012 ஆகிய இரண்டு வருடங்களில் நிகழ்ந்த சுனாமிகளைப் பற்றி டாக்டர் நெல்லை வசந்தன் குறிப்பிட்டுள்ளார்.

குமரிக்கண்டத்தைக் கடல்கோள் கொண்ட காலம் பொ.ஆ.மு. 8,000 முதல் 10,000 ஆண்டுகள் என்பது அறிஞர்பெருமக்களின் பொதுவான கருத்தாகும்.

குமரிக்கண்டம் பொ.ஆ.மு. 15,000 -10,000 ஆண்டுகளில் ஏற்பட்ட கடல் கோள்களாலும், பெருவெள்ளத்தாலும் கடலில் மூழ்கிவிட்டது என்பது அ.பிரான்சிஸ் அவர்களின் கருத்து.

முதலாவது, இரண்டாவது கடல்கோள்களின் காலங்கள் ஓரளவு துல்லியமாக அறிவியல் ரீதியில் அறியப்படுமேயானால் அம் மூன்று தமிழ்ச்சங்கங்களின் காலங்களும், தொல்காப்பியரின் காலமும் ஓரளவு துல்லியமாக அறியமுடியும் என்பதை அறிவியல் ரீதியிலான விளக்கப்படங்களின் வாயிலாக அறியலாம்.




(Hashimi,N.H.Nigam, R.Nair, R.R and Rajagopal, G.Holocene Sea level fluctuation in Western Indian continental magin: An update Jour.Geo.Soc. of India, Bangalore, Vol.46.1995)

'Post-Glacial Sea Level Rise' என்ற தலைப்பில் Holocene sea level fluctuation in western Indian continental magin: An update jour. Geo.Soc. of India, Bangalore. vol.46.1995. என்றதொரு அடிக்குறிப்போடு பதிவிடப்பட்டுள்ள விளக்கப்படம் உதவிபுரிகிறது.

அதில் 'எக்ஸ்' அச்சில் (படுக்கை வசத்தில்) பொ.ஆ.மு. என்ற கால அளவுகளும் 'ஒய்' அச்சில் (செங்குத்து வசத்தில்) கடல் மட்டம் உயர்ந்த (மீட்டர்) அளவுகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. (ஒரு மீட்டர் என்பது 3.28 அடிகளாகும்).




(Hashimi, N.H. Nigam, R. Nair, R.R and Rajagopal, G. Holocene Sea level fluctuation in Western Indian continental margin: An update Jour. Geo. Soc. of India, Bangalore, Vol.46 1995)

இவ்விளக்கப்படத்தின்படி குமரிக்கண்டம் பொ.ஆ.மு. 15,000 -10,000 ஆண்டுகளில் ஏற்பட்ட கடல் கோள்களாலும், பெருவெள்ளத்தாலும் கடலில் மூழ்கிவிட்டது என முன்கண்ட அ.பிரான்சிஸ் என்பவரின் கருத்து ஏற்புடையதாகிறது.

குமரிக்கண்டத்தைக் கடல் (கோள்) கொண்ட காலம் பொ.ஆ.மு. 8,000 முதல் 10,000 ஆண்டுகள் என்பது அறிஞர்பெருமக்களின் பொதுவான கருத்தும் ஏற்புடையதாகிறது.




(Hashimi, N.H. Nigam, R. Nair, R.R and Rajagopal, G. Holocene Sea level fluctuation in Western Indian continental magin: An update Jour.Geo.Soc. of India, Bangalore, Vol.46.1995)

குமரிக்கண்டம் பொ.ஆ.மு. 15,000 -10,000 ஆண்டுகளில் ஏற்பட்ட கடல் கோள்களாலும், பெருவெள்ளத்தாலும் கடலில் மூழ்கிவிட்டதை அடுத்துப் பொ.ஆ.மு.6,000 ஆண்டுக்குப் பின் கடல்மட்டத்தின் அளவு சற்று ஏற்றமும் தாழ்வும் உடையதாக இருந்துள்ளது தெரியவருகிறது.




(Hashimi, N.H. Nigam, R. Nair, R.R and Rajagopal, G. Holocene Sea level fluctuation in Western Indian continental margin: An update Jour. Geo. Soc. of India, Bangalore, Vol 46, 1995)

இறையனார் அகப்பொருள் கூறும் முதலாம் கடல்கோள் ஏற்பட்ட காலம் பொ.ஆ.மு. 6,440 என்பதும், இரண்டாம் கடல்கோள் பொ.ஆ.மு. 5,700 ஆண்டுகள் என்பதனாலும், தொல்காப்பியர் இரண்டாம் தமிழ்ச் சங்கத்தில் அங்கம் வகித்தார் என்பதனாலும், அவர் அருளிய **தொல்காப்பியத்தின் காலம்** பொ.ஆ.மு. 5,700 - க்கும் பொ.ஆ.மு. 5,500 - க்கும் இடைப்பட்ட காலமான **பொ.ஆ.மு. 5,600** அதாவது 7,600 ஆண்டுகளுக்கும் முற்பட்டதென்பது உறுதியாகிறது. **வெள்ளை வாரணனார் கூறும் தொல்காப்பித்தின் காலம் பொ.ஆ.மு. 5,000 ஆண்டுகளுக்கும் முன் (7,000 ஆண்டுகளுக்கும் முன்) என்பதும் ஏற்புடையதாகிறது.**

# ஹறப்பன் என்பது ஐயாறப்பன்

இந்தியத் திருநாட்டின், வடமேற்கு எல்லைப் பகுதிக்குச் சிந்து சமவெளி என்பர். சிந்து சமவெளி நாகரிகத்திற்கு ஹறப்பன் நாகரிகம் எனும் மற்றொரு பெயருண்டு. அப்பெயரில் ஓர் உண்மை மறைக்கப்பட்டுள்ளது.




இந்தியத் திருநாட்டின் வடதிசையிலுள்ள இமயமலையில் உற்பத்தியாகும் சிந்து நதியானது அதன் உபநதிகளான சீலம், சீனாப், இரவி, சட்லச் ஆகியவற்றுடன் இணைந்து சிந்து சமவெளி வழியாகத் தென்மேற்குத் திசை நோக்கிப் பாய்ந்தோடி மேற்குத் திசையிலுள்ள சிந்து சாகர் எனும் அரபிக்கடலில் சங்கமிக்கிறது. அவ்வாறு ஐந்து நதிகள் இணையும் பகுதிக்குப் **பஞ்சநதம்** எனப் பெயராம். அப்பெயரைப் பொ.ஆ.மு. 100 ஆண்டைச் சார்ந்த இந்தோ-கிரீக் வரைபடமொன்று உறுதிசெய்கிறது.




**பஞ்சநதம்** என்ற பெயருடைய நிலப்பரப்புக்கு அருகாமையில் தற்போதைய உத்தரகாண்ட் மாநிலத்தில் பகவன்பூர் **(பகவன் புரா** (எ) பகவன்புரம்) எனும் ஓர் ஊர் இன்றுமுள்ளது. அதிலுள்ள பகவன் என்பது பகம் என்பதனால் குறிக்கப்படும் ஆறு குணங்களை உடைய அருள்மிகு சிவபெருமானைக் குறிப்பிடுவதனால் அவ்வூரில் சிவபெருமான் வழிபாட்டுத்தலம் ஒன்று இருந்திருப்பதற்கான வாய்ப்பு இருக்கக் கூடுமெனக் கருதலாம்.



அக்கருத்திற்குச் சான்றுகளாகத் தொல்பொருள் அறிஞர் வாட்ஸ் என்பவர் அறப்பாவில் மூன்று சிவலிங்களைக் கண்டெடுத்துள்ளார். இந்தியத் தொல்பொருள் துறையினர் **காளிபங்கன்** என்னுமிடத்தில் சிவலிங்கம் ஒன்றையும் கண்டெடுத்துள்ளனர். காளிபங்கன் என்பதிலுள்ள **காளி** என்பதற்குத் துர்க்கை, கரியவள், பார்வதி எனும் உமையம்மை எனவும், **பங்கன்** என்பதற்குப் பாகமுடையவன் (உமையொருபாகன்) எனவும் தமிழ் அகராதி பொருள் கூறுகிறது.


Fig 10.10. Lingas found at Harappa (left) and Kalibangan. (© ASI)

சிந்து சமவெளிப் பானை ஓடு எண்: எம்-1601எ இடமிருந்து வலமாகப் **பங்(க)னாழி** (பங்கன் ஆழி) எனப் படிக்கப் பெறுகிறது.

**'ழி'** என்னும் உயிர்மெய் எழுத்தினுள்ளே **'னா'** எனும் உயிர்மெய் எழுத்துள்ளது நோக்கத்தக்கது. **ஆழி** என்பதற்குக் கட்டளை அல்லது வட்டம் எனப் பொருள்படுவதால் **பங்கனாழி** என்பதற்குப் **பாகமுடையவன் எனும் உமையொருபாகனின் கட்டளை அல்லது வட்டம்** எனப் பொருளறியலாம்.


M-1601A

செந்தமிழ்த் திருநாட்டின், மேல் திசையிலுள்ள மேற்குத் தொடர்ச்சி மலையின் அங்கமான குடகு மலையில் உற்பத்தியாகி சோழ வளநாட்டின் வழியாகக் கிழக்குத் திசை நோக்கிப் பாய்ந்தோடி காவிரி, வடவாறு, வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டியாறு என ஐந்து கிளை நதிகளாகப் பிரிந்து கீழ்த் திசையில் உள்ள கலிங்கசாகர் எனும் வங்கக்கடலில் சங்கமிக்கும் பொன்னி நதி எனும் காவிரி நதிக்குப் **பஞ்சநதி** என்ற பெயராம்.




அந்தப் பஞ்சநதி எனும் காவிரி நதியின் ஆற்றங்கரையில் அமைந்துள்ள திருவையாற்றில் தென்கயிலாயம் எனும் **திரு. ஐயாறப்பன் கோயிலில்** எழுந்தருளியுள்ள ஈசனின் திருப்பெயர் **பஞ்சநதீச்சுவரர்**, அன்னையின் திருப்பெயர் **அறம் வளர்த்த நாயகி** யாம். அத்திருத்தலத்திற்கு ஒரு தனிச் சிறப்புப்பற்றிய நூலொன்று உண்டு.

திருவையாற்றுப் புராணம்



0327

தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூல் நிலையம், அரண்மனை
தஞ்சாவூர்.

தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு அரசாட்சி புரிந்த நாயக்கர் மன்னரின் அரசவையில் மதிமந்திரியாகப் பதவி வகித்த கோவிந்தன் என்பவரின் வேண்டுகோளுக்கு இணங்க பொ.ஆ.பி. 1700 – யில் சிரவண மன்னன் என்பவரால் **பஞ்சநதமான்மியம்** எனும் வடமொழி நூல் திருவையாற்றுத் தலபுராணமாகப் **பஞ்சநதி-மான்மியம்** எனும் பெயரில் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ள செய்தி 26.10.1991-யில் தஞ்சை சரசுவதி மஹால் அச்சிட்டு வெளியிட்டுள்ள ஒரு நூலின் வாயிலாக அறியமுடிகிறது.

**பஞ்சநதமான்மியம், பஞ்சநதிமான்மியம்** என்ற இரண்டு சொற்களில் பொதுவாக உள்ள **மான்மியம்** என்பதற்குத் திருத்தலப் பெருமையைக் கூறும் நூல் எனப் பொருளாகும். **பஞ்சநதமான்மியம்** என்பது சிந்து சமவெளி நாகரிகப்பகுதிகளில் ஒன்றான பஞ்சநதம் என்பதிலுள்ள பகவன்புரத்தின் திருக்கோயிலின் திருத்தலப் பெருமையைக் கூறுமொரும் நூலாகும்.

**பஞ்சநதிமான்மியம்** என்பது தமிழகத்தில் பஞ்சநதி என்பதிலிலுள்ள திருவையாற்றின் திருக்கோயிலுக்குமான திருத்தலப் பெருமையைக் கூறுமொரும் நூல் என்பதும் தெரியவருகிறது.

சிந்து சமவெளி நாகரிகம் என்பதற்கு ஹறப்பன் நாகரிகம் என்ற மற்றுமொரு பெயருண்டு என முன்கண்டது நினைவு கொள்ளத்தக்கது. அந்த ஹறப்பன் என்ற சொல்லின் வரலாற்றை ஆராய்தறிவோமாயின் ஒருண்மை வெளிப்படுகிறது. **பஞ்சநதம்** என்ற சொல்லைப் பஞ்ச + நதம் என இரண்டு சொற்களாகவும், **பஞ்சநதி** என்ற சொல்லைப் பஞ்ச + நதி என இரண்டு சொற்களாகவும் பகுத்து அதன் பொருள் அறியும் போது அவ்வுண்மை வெளிப்படுகிறது.

இவ்விரண்டு சொற்களிலுள்ள உள்ள **பஞ்ச** என்ற பொதுவான சொல் **ஐந்து** என்பதையும் அதன் சுருக்கம் **'ஐ'** எனும் உயிரெழுத்துமாகும். அதனையடுத்துள்ள நதம், நதி ஆகிய இரண்டு சொற்களுக்கும் பொதுவாக **ஆறு** எனப் பொருளாகும்.

**'ஐ'** எனும் **உயிர் ஆறு** எனும் சொல்லோடு கூடுமேயானல் அது **ஐஆறு** அதாவது தொல்லிணக்கன முறைப்படி எழுத்துக்களின் புணர்ச்சியால் **'ஆ'** என்பது **'யா'** என மயங்கி **ஐயாறு** என்ற சொல்லாகிறது.

சிந்து சமவெளியில் அமைந்துள்ள பஞ்சநதம் என்னும் பகுதியிலுள்ள பகவன் புரத்தில் எழுந்தருளியுள்ள இறைவனின் (ஈசனின்) திருப்பெயர் **பஞ்சநதமீச்சுவரர்.**

தமிழகத்தில் பஞ்சநதி எனும் காவிரி நதிக் கரையில் அமைந்துள்ள திரு. ஐயாறு என்னும் திருவையாற்றில் எழுந்தருளியுள்ள இறைவனின் (ஈசனின்) திருப்பெயர் **பஞ்சநதீச்சுவரர்** எனும் **செம்பொற்சோதி யாம்.** பன்னிரு திருமுறையில் குறிப்பாகத் திருவையாற்றுத் திருத்தலபுராணப் பாடல்கள் எண்: *2456, 2459* ஆகிய இரண்டும் ஈச்சுவரனை **ஐயாறனே! ஐயாற்றுப் பெருமானே!** எனப் போற்றிப் புகழ்கின்றன.

**பாசன் பரஞ்சோதி** எனும் ஈச்சுவரனாகிய சிவபெருமானை **அத்தன்** என்னும் **அப்பன்** (தலைவன், தகப்பன், கடவுள்) என அன்புடன் அழைப்பது தமிழ் மொழி மரபாம்.

அதனடிப்படையில் திருவையாற்றில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை **ஐயாறப்பனே!** எனக் குழைந்து கொஞ்சிக் குலாவி அன்பு பாராட்டி ஈசுவரனின் அருளைப் பெறுவர் என நம்முன்னோர்கள் முழங்கியுள்ளனர்.

**ஐயாறப்பனே** என்பதிலுள்ள ஐயா என்பதற்கு **'வியங்கோள்'** எனும் வியக்கத்தக்க, வியப்புக்குறிப்பு விளிச்சொல் எனவும், **ஐயா** என்பதன் முன்னுள்ள **எண் ஐந்து** என்பதைக் குறிக்கும் **'ஐ'** எனும் உயிரெழுத்துத் தலைவன், ஆசான், அரசன், **கடவுள்,** முன்னிலை யொருமை விகுதி, பண்புப் பெயர் எனத் தமிழ் அகராதி பொருள் கூறுகிறது.

**'யா'** எனும் உயிர்மெய் எழுத்து **யாவை** எனும் வினாச் சொல்லும், **ஐம்பாலையும் குறிக்கும்** ஓரெழுத்துச் சொல்லாகும். **ஐயாறப்பா** என்பதிலுள்ள **ஐயா** எனும் **வியங்கோள், கடவுள் ஆகிய இரண்டு சொற்களும், 'அ'** எனும் மூல எழுத்துக்களின் முதன்மையான உயிரெழுத்தாகி, **அறப்பா** என்பதாகிறது.

ஈசுவரனைக் குழைந்து கொஞ்சிக் குலாவி அன்பு பாராட்டும் **ஐயாறப்பனே!** (ஐயாறு +அப்பன் + ஏ) என்பதில் முடிவாக உள்ள **'ஏ'** எனும் பெருக்கம், உழையிசையின் எழுத்து. **அறப்பன் என்பது அறப்பனே** எனும் சிறப்புத் தமிழ்மொழிச் சொற்களாம். சமசுகிருதம் மொழியின் மெய்யெழுத்துக்களில் **றகரம்** இல்லை என்பதனால், தமிழ் மொழியில் **அறப்பன்** எனும் சிவபெருமானின் சிறப்புப் பெயரை மறைக்கும் பொருட்டு வடமொழியாளர்களின் தூண்டுதலால் ஆங்கில தேசத்தைச் சேர்ந்தவர்கள் வடமொழி எழுத்தான **'ஹ'** என்பதைப் புகுத்தி **'ர'** எனும் இடையின எழுத்தோடு **ஹரப்பா** என உச்சரித்துத் தவறாகப் பதிவிட்டுள்ளனர்.

மேற்கண்ட ஆய்வின் வாயிலாக **'ஹறப்பா அல்லது ஹறப்பன்'** என்ற சொற்களில் **'ஐயாறப்பா (எ) உமையம்மை, ஐயாறப்பன் (எ) ஈசனைக்** குறிக்கும் தூய செந்தமிழ் மொழியின் சிறப்புப் பெயர்ச் சொற்கள் எனலாம்.



தற்போதைய அரபு நாடுகளில் ஒன்றான ஏமன் (ஓமன்) நாட்டின் அரசு அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்படும் சிந்து சமவெளி நகர நாகரிக முத்திரை ஒன்றில் பொறிக்கப்பட்டுள்ள சொற்றொடர் உ ண(இ)ட்ட ஆதீனமே எனப் படிக்கப்பெறுகிறது. (உண - உணவு. இட்ட - இட்ட. ஆதீனமே - சைவமடமே) **உணவிட்ட சைவமடமே** என்று பொருள்பெறும்.

**தானத்தில் சிறந்தது அன்னதானம்** என்பதனால், ஈசுவரனை வணங்கி வழிபடும் மரபுடைய சைவமடத்தில் அனைத்துச் சீவராசிகளுக்கும் அன்னதானம் வழங்கும் மரபு சிந்து சமவெளி நகர நாகரிக மரபு என்பதும், அம்மரபு தமிழகத்தில் இன்றும் தொடர்கிறது என்பதும் குறிப்பிடத்தக்கது.

**குறிப்பு:** இம்முத்திரையிலுள்ள **'தீ'** என்ற சிந்து சமவெளி நகர நாகரிக எழுத்துப்பொறிப்பு நாகப்பட்டினம் தமிழக அரசு அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப் பெறும் வட்டவடிவ சிக்கிமுக்கிக் கல் எனும் **தீக்கல்** ஒன்றிலும் பொறிக்கப்பெற்றுள்ளது. ஒரு சிறப்புச் செய்தியாகும். (நன்றி)

# சிந்து சமவெளி நகரங்களின் அடையாளக் குறிகள்

சிந்து சமவெளி நகர நாகரிகப் பகுதியில் வெளிக்கொணரப் பெற்றவற்றில் குறிப்பாகக் குறியீடுகள், எழுத்துக்கள் ஆகியவற்றைக் கொண்ட பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றின் நிழல் படங்களைக் கீழ்க்கண்ட 28 நகர அடையாளக் குறிகளுடன் சர் அஸ்கோ பர்போலாவின் படைப்புக்களான (Corpus of Indus Seals and Inscriptions) சி.ஐ.எஸ்,ஐ. தொகுப்பு *01, 02, 3.1, 3.2* ஆகிய நான்கு நூல்களில் காணலாம்.

| | | | |
|---|---|---|---|
| Agr | - அலம்கிர்பூர் | Amri | - அம்ரி |
| B | - பண்ணவாலி | Ch | - சண்டிகர் |
| Dlv | - தொல்லவிரா | Dlp | - தேசல்பூர் |
| Dmd | - டைமாபாத் | H | - அரப்பா |
| Hls | - குலாஸ் | Jk | - சுக்கர் |
| Krs | - கிரஸ்தாரா | K | - காளிபங்கன் |
| L | - லோத்தல் | Lh | - லோகஞ்சொ-தரோ |
| M | - மோஹெஞ்சொ-தரோ | Mehi | - மேகி |
| Msk | - மஸ்கி | Pbm | - பபுநாத் |
| Pbs | - பிரபஸ்த்தன் | Rgr | - இரக்கிஹாரி |
| Rhd | - ரெகுமான் தகரி | Rhr | - ரோகிரா |
| Rgp | - இரங்கப்பூர் | Rjd | -இரசோடி |
| Rpr | - ருப்பூர் | Sht | - சகிடம்ப் |
| Sktd | - சர்கோட்டா | Tkwd | - தர்கனிவாலா |

# சிந்து சமவெளி நகர நாகரிகக் குறியீடுகள்

முற்பகுதியில், சிந்து சமவெளி நகர நாகரிகக் குறியீடுகள், எழுத்துக்கள், கூட்டெழுத்துக்கள் என்ற தலைப்பில் அட்டவணையிட்டுக் காட்டப்பெற்றுள்ளவை நினைவு கொள்ளத்தக்கது. அந்நாகரிகக் குறியீடுகளில், சில தெய்வத் திருவுருவங்கள், யோக நிலையில் மூலபந்த ஆசானத்தில் அமர்ந்துள்ள ஆண், பெண் திருவுருவங்கள், அவர்களை வணங்கி வழிபடும் ஆண், பெண் உருவங்கள், இராக்தர்கள், வீரர்கள், விவசாயப் பெருங்குடிமக்கள் போன்றோரையும் காணமுடிகிறது.

மிருகங்களில் **சிங்கம், குதிரை** ஆகிய இரண்டும் நீங்கலாக வரிப்புலி, காண்டாமிருகம், புருடாமிருகம், யானை, எருது, ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தி, எருமை, ஒட்டகம், மலையாடு எனும் வரையாடு, நாய், முயல் போன்றவையும், மீன், முதலை போன்றவையும் காணமுடிகின்றன. குக்குடம் எனும் சேவல், குக்குடி எனும் பெட்டைக் கோழி, சோகம் என்ற சொல்லைக் குறிக்குமொரு பறவையின் உருவம் போன்ற பல்வேறு வகையான பறவைகளையும் காணமுடிகின்றன. வியாபித்தல், ஒடுங்குதல் எனும் இருவகையான சுவத்திகம் குறியீடுகள், பல்வேறு எண்ணிக்கை கொண்ட வடிவியல் கட்டங்கள், கோலங்கள், ஆறு ஆரங்களைக் கொண்டதொரு சக்கர வடிவம், பரம்மஞானக் குறியீடுகள், இரண்டுக்கும் மேற்பட்ட எழுத்துக்கள் குறியீடுகள் போன்று காட்சியளிப்பவையும் உள்ளன.

மேற்கண்டவை, ஒன்று முதல் இரண்டு சதுர அங்குலம் அளவுடையவையும், முக்கோணம், வட்டம், சதுரம், செவ்வகம் போன்ற வரைபடக் கணித வடிவங்கள், மீன், வேல், முயல், முத்துச் சிப்பி போன்ற வடிவங்கள் கொண்ட வில்லைகள், முத்திரைகளில் உள்ளன. அவை சிற்பிகளின் கலைத்திறனையும், கைத்திறனையும் வெளிபடுத்தும் என்றாலது மிகையாகாது.

மேற்கண்டவற்றுள், அதிக அளவில் காணப்பெறும் எருது, ஆறு ஆரங்களைக் கொண்டதொரு சக்கர வடிவம், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரம்மஞானக் குறியீடும், புருடாமிருகம் ஆகியவை பற்றியும் ஆராய்தறியப் பெறுகின்றன. மற்ற குறியீடுகளைப்பற்றித் தொல்வாச்சியங்களைப் படித்துப் பொருளறியும் பகுதியில் காணலாம்.

# ஆழி



ஆழி





ஆ ழி



சிந்து சமவெளி நகர நாகரிகத்தைச் சார்ந்தக் குறியீடுகளில் குறிப்பாக ஆறு ஆரங்கள் கொண்ட சக்கர வடிவம் அதிக அளவில் காணமுடிகிறது. இக்குறியீடு **ஆழி** எனும் இரண்டெழுத்துச் சொல் என எம்-1273எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையைப் **பண்ணணிட்ட ஆழி** எனப் பதிவிடப் பெற்றுள்ளது.

**ஆழி** என்ற சொல் '**ஆ**' என்ற உயிர் எழுத்தும் '**ழி**' சிறப்பு ழகாரத்தைக் குறிக்கும் ஏணியின் வடிவமும் இணைந்து **ஆழி** எனப் படிக்கும்படியாக உள்ளது. ஆழி என்பதற்கு ஆணைச்சக்கரம், சக்கரப்படை, கட்டளை, வட்டம், மோதிரம், **ஆளி** எனும் ஆள்வோன் எனத் தமிழ் அகராதியின் வாயிலாகப் பொருளறியலாம்.

ஆறு ஆரங்கள் கொண்ட இச்சக்கரம், கர்ம பூமிக்குரிய **உழவு, தொழில், வரைவு, வாணிகம்,விச்சை, சிற்பம்** ஆகிய அறுவகையான கர்மாக்களைக் கர்மசுத்தியாக வாழ்நாள் முடிவுக்குள் செய்து முடிக்கவேண்டும் என்பதை உணர்த்துமொரு **'கர்மசக்கரமும், யோகச் சக்கரமுமாகும்'.** எனவே இதனை ஒரு தேர்ச் சக்கரமென்றோ! குயவன் சக்கரமென்றோ! கருதலாகாது. ஆழிக்குறியீடு சொற்றொடர்களின் முதலிலோ, இடையிலோ, முடிவிலோ காணமுடிகிறது. இக்குறியீடு குஜராத் டொல்லவரா அறிவிப்புப் பலகையில் அதிக அளவில் உள்ளதென்பது குறிப்பிடத்தக்கது. '**ழி**' சிறப்பு ழகாரத்தைக் குறிக்கும் ஏணிப்படிகளின் எண்ணிக்கை படிகள் ஏதுமில்லாமலும், ஒன்று, இரண்டு, மூன்று, ஐந்து, ஏழு வரையில் உள்ளன.

# எருது



சிந்து சமவெளி நகர நாகரிகத்தைச் சார்ந்த குறியீடுகளில் அதிகமாகக் காணப்பெறும் மிருகங்களில் ஆகாயத்தை நோக்கும் வளைந்த கொம்புகளுடைய எருது எனும் காளையும் ஒன்று. அவ்வாறு ஆகாயத்தை நோக்கும் வளைந்த கொம்புகளுடைய எருது வகையைத் தர்மத்தின் அடையாளம் என்பர். இடபம் எனும் எருது ஈசனின் வாகனமாகும்.

எருது என்ற சொல் இடபம், காளைமாடு, இடபராசி, இளவெருது, கட்டிளமைப் பருவத்தினன், ஆண் மகன், வீரன், பாலை நிலத்தலைவன், சிவகணநாதனாகிய நந்தி, உபபுராணத்திலொன்று, சிவன், நந்திதுர்க்கம் எனும் மலை, ஊர், சமணர் பட்டப்பெயர், பல்லவ அரசர் பெயர் எனத் தமிழகராதி போன்ற நூல்கள் பொருள் கூறுகின்றன. எருதை இளைஞர் மனதின் போக்கிரிக்குணத்தோடு ஒப்பிடுவதுமுண்டு.

சிறு குழந்தை, ஆண், பெண் ஆகியோரைத் தன் எசமானன்னாகவும், அவர்கள் இடும் கட்டளையை ஏற்று நடக்கும் எருதை வீட்டிலொரு செல்லப் பிராணியாக வளர்ப்பதும் பழந்தமிழர் மரபு. தமிழகத்தில் தைத்திங்கள் பொங்கல் தினவிழாக்களில் நிகழும் மாட்டுப்பொங்கல் நாளன்று மானுடருடன் நட்புடன் வாழும் எருது, பசு, எருமை, ஆடு ஆகியவற்றை வழிப்பட்டு வணங்குவது பழந்தமிழர் மரபு. எருதுகளை வாடி எனும் பட்டியில் அடைத்து வாடிவாசல் வழியாக அவற்றை விரட்டவே அவை வீறு கொண்டு எகிரிக் குதித்துப் பாய்ந்தோடும் போது அவற்றின் திமில்களை அணைத்துக் கொம்புகளையும் பிடித்து அடக்குவதை, **கொல்லேறு தழுவுதல் (எ) ஏறுதழுவுதல் (அ) ஏறு விளையாடுதல்** என்பர். அதுவே தற்போது தமிழகத்தில் சல்லிக்கட்டு என மருவியுள்ளது. சிந்து சமவெளியில் வடுக்கொள்ளுதல் எனக் கருதப்பெற்றுள்ளது. தமிழகக் காங்கேயம் காளைகளுக்குத் தனிச்சிறப்புண்டு.

ஏறுதழுவுதல் (அ) ஏறு விளையாடுதலின் போது இறந்துபட்டதொரு வீரனை எருது விளையாடிபட்டான் என்றும், அந்த வீரனுக்கு வீரக்கல் (எ) நடுகல் நடும் மரபைப் பற்றித் தொல்காப்பியம் பொருளதிகாரம் விவரிக்கிறது.

# ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும் பரம்மஞானக் குறியீடும்



ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும் பரமஞானக் குறியீடும் **மேலானதுக்கும் மேலானது என்பதன்** புனிதத்தன்மை வாய்ந்தது என்பதை உணர்த்துவதாகக் கருதலாம்.

ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தி திமில் இல்லாத ஒரு கொம்புடைய எருது வகையைச் சேர்ந்த மானுடருடன் நட்புடைய வீட்டு விலங்கு வகையைச் சார்ந்தது. அவ்விலங்கின் கொம்பு மிகக் கொடுமையான நஞ்சையும் முறிக்கக் கூடியதும், பலவகையான நோய்களைத் தீர்க்கும் சிறந்த மருந்துமாகும். அவ்விலங்கு மானுடரால் கொல்லப்பட்டு, இவ்வினம் தற்காலத்தில் முற்றிலுமாக அழிந்து விட்டது.



அவ்விலங்கின் மரக் கட்டையிலான உருவமொன்று கர்நாடகம் மாநிலம், மைசூர் ((பேல்க்லோர்) பல்கலைக் கழகத்தின் அருங்காட்சியகத்தில் உள்ளதாகத் தெரிய வருகிறது.

சேலம் மாவட்டம், மேட்டூர்- பண்ணவாடிக்கு அடுத்துள்ள காவேரிபுரம் - கோட்டையூர், மாரியம்மன் கோயில் ஆடி மாதம் 18ஆம் நாளன்று இரண்டு இளைஞர்களுக்கு இரண்டு கொம்பு, ஒத்தக் கொம்புடைய தலைப்பாகைக் (முண்டாசுக்) கட்டி அதாவதொரு எருதுவாகவும், ஒத்தக்கொம்பனாகவும் அடையாளப்படுத்தி ஒரு ஏரில் பூட்டி, முற்காலத்தில் **பண்ணமைமுழுவு** எனும் **வீரமுழுவுவகை** எனக் கூறப்பெற்றுள்ளது. தற்போது அவ்விழா **பொன்னேர் உழும் விழாவாகத்** தொடர்ந்து நிகழ்கிறது.

எம்.ஐ.சி.. பி.எல்.சி.எக்ஸ்.வி.எல், 8 என்ற அடையாள எண்ணுடைய வில்லையில், முடிந்த சிகையுடன் மூவர் தத்தத்தம் இருகரங்களில் வாசனைப் புகைதரும் தூவக்கால், ஒத்தக்கொம்பன் (எ) ஒத்தக்கோடு நந்தியின் திருவுருவம், கொடி ஆகியவற்றைக் கரங்களில் ஏந்திபடி ஒரு பதாகனின் ஊர்வலம் செல்லும் காட்சியைச் சிந்து சமவெளி முத்திரை ஒன்றில் காணமுடிகிறது. (நன்றி: சர் அ.வி.ஹன்டர்)


Mic.pl.CXVI,8

எச்-98எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஒரு பரம்மஞானக் குறியீடும், ஆறு எழுத்துக்களும் உள்ளன. இந்த முத்திரை இடமிருந்து வலமாக, வா + ச + ன + னி + (ங் + கு). வாசனனிங்கு. **வாசனன் இங்கு** எனப் படிக்கப்பெறுகிறது. (வாசனன் - வசிப்பவன் / வாழ்பவன். இங்கு -இவ்விடம்.)

**தொல்வாச்சியம்: பரமஞானியாக வசிப்பவன் / வாழ்பவன் இவ்விடம்.**


H-98a

இ.எச்-309 என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் உள்ள பரம்மஞானக் குறியீடு + அன் + பு + மே. **பரம்மஞானி அன்பு மே** எனப் படிக்கப்பெறுகிறது. (பரம்மஞானி - பரம்மஞானி. அன்பு - அன்பு. மே - உயர்ச்சி.)

**தொல்வாச்சியம்: பரமஞானி அன்பு உயர்ச்சி.**

வாசனைப் புகைத்தரும் தூவக்காலுடன் உள்ள ஏழு எழுத்துக்களை ஓ + ம + ப் + பா + நதி + ந. **ஓமப்பா நதி ந** எனப் படிக்கப்பெறுகிறது. (ஓமப்பா - ஓமத்தூய்மை (எ) திருநீற்றின் தூய்மை. நதி - வணக்கம். ந - சிறப்பு.)

**தொல்வாச்சியம்: ஓமம் எனும் மூலிகைச் செடியின் இலைகளை எரித்த சாம்பலை தூய்மையான திருநீறாக வணங்குதல் சிறப்பு.**


EH-309

மேற்கண்டவற்றின் வாயிலாகப் பரம்மஞானக் குறியீட்டிற்கும், வாசனைப் புகைத்தரும் தூவக்கால் வடிவத்திற்குமான வேற்றுமையைக் குறிப்பிடுவதாகக் கருதலாம்.

## புருடாமிருகம்



புருடாமிருகம்

சிந்து சமவெளிக் குறியீடுகளில் புருடா மிருகத்தின் உருவங்களையும் காணமுடிகிறது.

இம்மிருகம், எருதின் கொம்பு, மனித முகம், யானையின் பல், துதிக்கை, புலியின் உடல், எருது புலி ஆகிய இரண்டின் கால்கள், தேள் கொடுக்குப் போன்ற வால் ஆகியவற்றை உடையதும் காண்போரை அச்சுருத்தும் அதிபயங்கரமான மிருகத்தின் வடிவமாகச் சித்திரித்துக் காட்டப்பெற்றுள்ளது.

இம்மிருகத்தைக் கிரேக்கம் பாரசீகம் நூல்கள் மனிதர்களை உண்ணும் மிருகம் (மெண்டிக்கோர்) எனவும், சிவபுராணத்தின் ஓரங்கமான கந்தபுராணம் **புருடாமிருகம்** எனவும் குறிப்பிடுகிறது, இந்தப் **புருடாமிருகம்** சலேந்திரன் என்னுமோர் அரக்கன் அனுப்பிய இராகுவைக் கொன்று உண்ணுவதற்காகச் சிவனால் படைக்கப்பட்ட மிருகம் எனவும் கூறுவர்.

தன்னைப் பிடித்துத் தின்பதற்காக வரும் இந்த மிருகத்தைக் கண்ட இராகு பயந்து, அதனிடம் தப்பிக்க ஓடி மறைந்து கொள்ள முயற்சித்தது. தான் மறைந்து கொள்ளத் தகுதியான இடமேதும் இல்லாததால் இம்மிருகம் சிவனிடம் தஞ்சமடைந்தது. தம்மிடம் தஞ்சமடைந்தவரைக் காத்தருளும் கருணையுடைய சிவன் தாம் படைத்தப் புருடாமிருகத்திடம் இராகுவை விட்டுவிடு எனப் பணித்தார். இறைவனின் கட்டளையை ஏற்ற அந்தப் புருடாமிருகம், நான் எதை உண்பது என வினவியது? நீ உன்னையே உண்பாயாக எனப் பணித்தார். புருடாமிருகமும் அவ்வாறே செய்தது. தன் தலையைத் தவிர உண்பதற்கு ஏதும் இல்லாத நிலையில் இறைவனை நோக்கியது. தனது கட்டளையை ஏற்றுச் செயல்பட்ட புருடாமிருகத்தின் பக்தியைக் கண்ட **இறைவன், என்னை வணங்க வருவோர் அனைவரும் முதலில் உனது கீர்த்தி முகத்தை வணங்கிய பின்னரே என்னை வழிப்படுவராக!** என அருளினார் என்று கந்தபுராணம் விவரிக்கிறது.



அந்தக் கீர்த்தி முகத்தைத் தமிழகத் திருக்கோயில்களின் திருக்கோபுரச் சிகரத்தின் இருபுறங்களில் அதிபயங்கரமாகக் காட்சித்தரும் நாசிக் கூடு எனத் தமிழகச் சிற்ப சாத்திர நூல்கள் குறிப்பிடுகின்றன.

மேற்கண்ட கந்தபுராணம் கூறும் நிகழ்வு, குறிப்பாகத் தமிழகத் தென் மாவட்டங்களில் சிவராத்திரி தினத்தன்று **திருத்தல ஓட்டம்** என்ற பெயரில் சிவபக்தர்கள் சிவதலங்களை நோக்கி ஓடும் மரபு தொடர்கிறது.



H-96a

**எச்-96எ** என்ற அடையாள எண்ணுடையதொரு முத்திரையில் 9 எழுத்துக்-களும், அதிபயங்கரமானதொரு புருடமிருகத்தின் உருவமும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக (**ஊ**+ ன்) + ப+ ட்+ டு (ஆ+ னி )+ ட்+ டு. **ஊன் பட்டு ஆனிட்டு** எனப் படிக்கப்படுகிறன்றன.

( ஊன் - உடல் (எ) உடம்பு. பட்டு - இருந்தேத்தும் மாகதர் (இருந்து சான்று ஏத்தும் துதிக்கும், மாகதர் மா விலங்கு வடிவிலான ஆடை). ஆனிட்டு - மூலமாக இட்டு.

**தொல்வாச்சியம் : உடம்பு இருந்தேத்தும் மாகதர் மூலமாக இட்டு.**

இந்த முத்திரையிலுள்ள சொற்றொடர், உடம்பு ஒரு பட்டாடை. அது மூலவரால் படைக்கப்பட்டது எனக் குறிப்படுவதாகத் தெரியவருகிறது. தமிழகத்தில் காணக்கிடக்கும் நெடுங்கல், கல்வட்டம், கற்திட்டை, கற்குவியல் போன்ற பல்வேறு பெருங்கற்கால நினைவுச் சின்னங்களைப் பொதுவாக **உறங்கும் பட்டாடை** என்பது சொல் வழக்கு. அச் சொல்வழக்கு நாளடைவில் உறங்கும் பட்டடை என்றும், குரங்காடும் பாறை என்றும் மருவியுள்ளது.

சிந்து சமவெளி சில குறியீடுகளைப் பற்றி ஆராய்ந்தறிந்ததையடுத்து அதன் குறியீடுகளையும், எழுத்துக்களையும் படித்துப் பொருளறிவதற்கான சில முக்கிய குறிப்புக்கள் என்ற தலைப்பில் காணலாம்.

# சிந்து சமவெளிக் குறியீடுகளையும், எழுத்துக்களையும் படித்துப் பொருளறிவதற்கான சில முக்கிய குறிப்புக்கள்

சிந்து சமவெளி நகர நாகரிகக் குறியீடுகள் (Symbols) காலத்தால் முற்பட்ட படச்சொற்கள் (Pictographic words). அக்குறியீடுகளில் இருந்தே செந்தமிழ் மொழியின் எழுத்துக்கள் (Phonotic letters) ஆகியவற்றைப் படித்துத் தமிழ் அகராதியின் துணையுடன் பொருளறிவதற்குக் கீழ்க்கண்ட சில முக்கியக் குறிப்புக்கள் உதவிக் கரம் நீட்டும்.

01. சிந்து சமவெளி பழந்தமிழ் (எ) செந்தமிழ்த் தொல்வாச்சியங்கள் முதல் கட்ட வளர்ச்சியாகும். அவை குறியீடுகளாகவும், எழுத்துக்களாகவும் பானை ஓடுகளில் (Pot shells)இடமிருந்து வலமாகப் படிக்கும் படியாகக் கீறப்பெற்றுள்ளன.

02. இரண்டாம் கட்ட வளர்ச்சியாக வில்லைகளில் (Tablets) இடமிருந்து வலமாகப் படிக்கும் படியாகப் பொறிக்கப்பெற்றுள்ளன.

03. மூன்றாம் கட்ட வளர்ச்சியாக முத்திரைகளில் (Seals) புடைப்பு வகையைச் சேர்ந்தவையாக வலமிருந்து இடமாகப் பொறிக்கப்பெற்றுள்ளன. அம்முத்திரைகளை மிருதுவானத் துணி, தோல், மரப்பட்டை போன்றவற்றின் மீது அச்சிட்டு இடமிருந்து வலமாகப் படிக்கும் படியாக உள்ளன. **குறியீடுகள் சொற்றொடர்களின் முதலிலோ, இடையிலோ, முடிவிலோ இடம் பெற்றுள்ளன.**

04. வில்லைகள், முத்திரைகள் ஆகிய இரண்டும் வட்டம், சதுரம், முக்கோணம் போன்ற வடிவங்களும், ஒன்று முதல் இரண்டு சதுர அங்குலம் (அ) மிகச் சிறிய அளவுகளுடையவை. அதனால், ஓரெழுத்துச் சொற்கள் அதிக அளவில் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

இரண்டு, மூன்று, நான்கு எழுத்துக்கள் இணைந்து குறியீடுகள் போன்றுள்ளன. எனவே ஒவ்வொரு எழுத்துக்களை அடையாளப்படுத்தியும், அவற்றைக் கூட்டியும் படித்துப் பொருளறியும் படியாக உள்ளன. அதற்கு உதாரணமாக **சீ ஆரூர், பகவன், பக்த** போன்ற மேலும் சில சொற்களைச் சுட்டிக்காட்டலாம்.

05. **அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ** ஆகிய 12 உயிர் எழுத்துக்களைக் காணமுடிகின்றன. 3 சார்பு எழுத்துக்களில் ஒன்றான **∴ எனும் முப்பாற் புள்ளி** ஒரே ஒரு முத்திரையில் காணமுடிகிறது

**க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்** ஆகிய 18 மெய்யெழுத்துக்களில் **ச், ங், ள்** ஆகிய மூன்றைத் தவிர **மற்ற மெய்யெழுத்துக்களையும், உயிர்மெய் எழுத்துக்களையும் சொற்களுக்கு ஏற்ப ஊகித்துப் படிக்கும் படியாக உள்ளன.**

06. ஒன்று, இரண்டு, மூன்று எழுத்துக்கள், எழுத்துக்களினுள்ளே உள்ளன. அவற்றை முதலில் உள்ளிருந்து வெளியாகவும், மேலிருந்து கீழாகவும் பின்னர் இடமிருந்து வலமாகவும் படித்துப் பொருளறியும் படியாக உள்ளன. **ஊன்** என்ற சொல்லில் உள்ள **'ன்** 'என்ற எழுத்துரு **ஊ** என்ற எழுத்தினுள்ளே உள்ளது அதற்கோர் உதாரணமாகும்.

07. ஒரே வருக்கத்தைச் சேர்ந்த **ண்ணண், ன்னன்** போன்றவை மேலிந்து கீழாக ஒன்றையடுத்து மற்றொன்றாகப் படித்துப் பொருளறியும் படியாக உள்ளன.

**பண்ணண், நன்னன், சின்னன்** போன்ற பெயர்ச் சொற்கள் நான்கு எழுத்துக்களும் செங்குத்துக்கோடுகளை உடையவை. உதாரணமாக, **நன்னன்** எனும் பெயர்ச் சொல்லின் **'ந'** என்ற எழுத்துரு பெரியதாகவும், அதனருகே **ன்னன்** எனும் மூன்றும் உயரம் குறைந்தும், ஒன்றன் கீழ் ஒன்றாகவும், சற்றுச் சாய்ந்தும் உள்ளன. அவற்றை இடமிருந்து வலமாக **'ந'** முதலாகவும், அதனையடுத்து **ன்னன்** என மேலிருந்து கீழாகவும் உள்ளன.

08. வில்லைகள், முத்திரைகள் ஆகிய இரண்டின் முன்பக்கம், பின் பக்கம் ஆகிய இரண்டிலும் முப்பட்டை வடிவிலானவற்றில் மூன்று பக்கங்களில் உள்ள குறியீடுகளையும் எழுத்துக்களையும் கொண்டதொரு சொல்லாகவும், தனித்தனிச் சொல்லாகவும் உள்ளன.

09. வட்டம், சதுரம் வடிவமுடைய சில வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றின் பக்க வசத்திலுள்ள குறியீடுகளையும் எழுத்துக்களையும் சொற்றொடரின் முதல் எழுத்தை அடையாளம் கண்டு படிக்கும் படியாக உள்ளன.

10. **ட், ட, டி, டு, டை** போன்ற எழுத்துக்கள் **குறைந்த உயரச் செங்குத்துக் கோடுகளாகவும், (இ)ட்ட** என்பதிலுள்ள இரண்டு எழுத்துக்கள் மேல் பகுதியில் ஒன்றையடுத்து மற்றொன்றாகவோ அல்லது (எம்-304எ முத்திரையில்) ப போன்ற எழுத்தின் மேலே உள்ளன. **(இ)ட்டு** என்பதிலுள்ள இரண்டு எழுத்துக்கள் **ட்** மேலாகவும், **டு** கிழாகவும் உள்ளன. **ட்டி, ட்டை, ட்டிடை** ஆகிய என்பதிலுள்ள **ட்** மேலாகவும், **டி, டை,** ஆகியவை பக்கவசத்தில் சாய்ந்தும் இணைந்துமுள்ளன. **ட்** (அ) **ட** என்ற எழுத்துரு ச போன்ற எழுத்தின் உள்ளேயும் உள்ளது.

11. **ஒன்று முதல் பத்து வரையிலான எண்கள்** நடுத்தர உயரச் செங்குத்துக் கோடுகளாகவும், **உ** எனுமொரு உயிரெழுத்தும், **ந, ண, ன** ஆகிய மூன்று மெய் அல்லது உயிர்மெய் எழுத்துக்களும் அதிக உயரமான செங்குத்துக் கோடுகளானவை.

12. **ஆனந்தி** என்ற பெயர்ச் சொல்லின் நான்கு எழுத்துக்களில் **'ன '**என்னும் உயிர்மெய்யும், **'ந்'**மெய்யும் செங்குத்துக் கோடுகளுடையவை. எனவே **'ஆ'** என்னும் உயிரோடு **'ன'** என்ற உயிர்மெய் இணைந்தும், **'ந், தி'** ஆகிய இரண்டும் அவற்றையடுத்துள்ளன.

13. **சீ அன்பன்** என்ற சொற்களில் **அன்** என்ற சொல் தீக்குச்சி வடிவ மனித வடிவிலும், திரு என்பதைக் குறிக்கும் **'சீ'** என்ற எழுத்துரு சீப்பு வடிவிலும், அவ்வடிவம் அம்மனித வடிவம் நாபியிலும், **சீஅன்** ஆகிய இரண்டும் **'ப'** என்ற எழுத்துருவின் உள்ளேயும், **'ன்'** எனும் மெய் தனித்துமுள்ளன.

14. சில வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் உள்ள சொற்களின் ஒன்று அல்லது இரண்டு எழுத்துக்கள் அரைவட்ட அடைப்புக்குறியில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. அடைப்புக் குறியில் உள்ளவற்றை நீங்கலாகவும், இணைத்தும் இரண்டு சொற்களாகப் படித்துப் பொருள் அறியும்படியாகவும் உள்ளன. அதற்கோர் உதாரணமாகப் **பா(சஊ)ச்சி** என்பதைப் **பாச்சி** (தாய்ப்பால்) எனவும், **பாச ஊச்சி** (தாய்ப்பாலைப் பாசத்தோடு உறுஞ்சி குடிக்கச் செய்தல்) எனவும் இரு பொருள்படும் படியாக உள்ளன.

15. பானை ஓடுகள், வில்லைகள் ஆகியவற்றில் காணப்படும் பெரும்பான்மையான குறியீடுகள், எழுத்துக்கள் கீறல் வகையையும், முத்திரைகளில் காணப்படும் பெரும்பான்மையான குறியீடுகள், எழுத்துக்கள் புடைப்பு வகையையும் சேர்ந்தவை.

16. 4, 6, 8, 9, 12, 15, 16, 18 போன்ற மேலும் சில எண்களைக் குறிக்கும் சதுர வடிவிலான கட்டங்களாக உள்ளன.

17. **ரண், ரன்** ஆகிய இரண்டு சொற்களில் **ரகரம்** மொழிக்கு முதலாக உள்ளன. இலக்கண முறைப்படி **ரகர, லகர, யகர** எழுத்துக்கள் மொழிக்கு முதலாக வராது. எனவே அவற்றைச் சுட்டெழுத்துக்களான **'அ, இ, உ'** ஆகிய மூன்றில் அகரத்தோடு **அரண், அரன்** எனப் படிக்கும் படியாக உள்ளன.

18. **பதிதா** என்ற சொல் **துணையெழுத்துடன்** உள்ளது.

19. சிந்து சமவெளி குறியீடுகள், எழுத்துக்கள் ஆகியவற்றைக் கொண்ட பெரும்பாலான தொல்வாச்சியங்கள் ஓரடி வெண்பாக்களாகும்.

20. சிந்து சமவெளி ஓரெழுத்துச் சொற்கள், சொற்றொடர்கள் ஆகியவற்றிற்குத் தமிழகராதியின் வாயிலாகப் பொருளறியலாம்.

21. பொதுவாக அனைத்துப் பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகிய மூன்று வகையிலும் உள்ள குறியீடுகளும், எழுத்துக்களும் **உள்ளிருந்து வெளியாகவும், மேலிருந்து கீழாகவும், இடமிருந்து வலமாகவும்** படிக்கும் படியாகவே உள்ளன.

மேற்கண்டவை சிந்து சமவெளி குறியீடுகள், எழுத்துக்கள் ஆகியவற்றைப் படித்துப் பொருளறிவதற்கான **சில முக்கியக் குறிப்புக்கள் மட்டுமே யாகும்.**

# சிந்து சமவெளிக் குறியீடுகளும் கூட்டெழுத்துக்களும்

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அன் | அன் அள் | அன்ப | அன்ப | பா அன்ப | பா அன்ப | அனு | அநே | அனே | உ அன் | சீ அன்ப | சீ அன் | சீ அன் சீ |
| an | an al | anba | anba | pā anba | pā anba | anu | ane | anē | u an | Sii anba | Sil an | Sii an sii |
| ஆண | ஆன | உப | உய் | உய்ய | உயா | உயிர் | உயிருரு | உரு | உள் | உள்ள | உள்ளாள் | ஊப |
| Aana | Aana | upa | uly | ulyya | uyā | uyir | uyirurū | uru | ul | ull | ullal | Ūba |
| ஏண் | ஏன் | ஓம் | ங்ங | சீ ஆரூர் | ஞ்ச | உஞ்ச | ஞ்சல் ஆ | ட்ச | (இ)ட்ட | (இ)ட்டி | (இ)ட்டு | (இ)ட்டை |
| ean | ean | Om | ngnga | Sii ārurūr | nja | unja | unjal ā | itcha | itta | itti | ittu | ittai |
| (இ)ட்டிடை | ட்டலான் | ட்டனன் | ன்னன் | னன்ப | ட்ப | ட்ட ப | ஞப | திதா | நாணி | பக்(தி)த | பகவன் | பத்து பா |
| ittitai | itanan | itanan | nnan | nanba | itpa | itta pa | ñba | thithā | nānl | Bakth(i)a | Bagavan | paththu pā |
| பதி | ருப | ருருப | சீயோ | யார் | யான் | ருள் | ருள் | ல்ல | ல்லால் | ள்ள | ன்னன் | னன்ப |
| pathi | rūpa | rurūpa | Siiyō | yār | yaan | rul | rul | illa | illāl | illa | nnan | nanba |
| னன்பு | னன்பே | னமே | ஐந்துமே | சோகம் | சண்டேசன் | பினாகபாணி | சீயோன் | பினாகபாணி சீயோன் | பிச்சாடன் | சமநிலை | விழிப்பு | கனவு |
| nanbu | nanbē | namē | ainthumē | Sogam | Sandesan | Pinagapani | Siiyon | Pinagapani Siiyon | Pichchadan | samanilai | vizhipu | kanavu |
| சுவ | அத்தி | அடைப்புகுறி | பாசம் / பற்று | பரமம் | ஆழி | பதி / வானம் | ஆறு | ஒன்பது | பன்னிரண்டு | பதினைந்து | பதினெட்டு | இருபத்தொன்று |
| Swa | aththi | adaippukuri | pāsam / pattru | Pramam | āzhi | pathi / vānam | āru | onpathu | panirendu | pathinainthu | pathinettu | irupaththondru |

சிந்து சமவெளி நாகிகுறியீடுகளும் கூட்டெழுத்துக்களும் என்ற தலைப்பில், சிந்து சமவெளி நகர நாகரிகப் பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றின் நீள அகல அளவுகள் மிகச் சிறியவை என்பதாலும், குறியீடுகளையும், எழுத்துக்களையும் பதிவிடுவதற்கான போதிய இடமில்லாத காரணத்தாலும் ஓரெழுத்துச் சொற்களும், சொற்களின் இரண்டுக்கும் மேற்பட்ட எழுத்துக்கள் இணைந்தும் கூட்டெழுத்துக்களாக உள்ளதாக முன்கண்டது மீண்டும் நினைவுக் கொள்ளத்தக்கது.

அத்தகைய எழுத்துக்கள் இணைந்து கூட்டெழுத்துக்களாகக் காட்சியளிப்பவற்றில் சில முக்கியமானவை மட்டும் எடுத்துக்காட்டப் பெறுகின்றன.

# சிந்து சமவெளி நாகரிகத்தின் எழுதும் முறை

சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் எழுதும் முறை என்ற தலைப்பில், குறியீடுகளும், எழுத்துக்களும் கொண்ட பானை ஓடுகள், வில்லைகள் ஆகிய இரண்டிலும் இடமிருந்து வலமாகக் காணப்பெறுகின்றன. ஆனால், முத்திரைகளில் அவை வலமிருந்து இடமாகக் காணப்படுவதனால், அந்நாகரிகத்தின் எழுதும் முறை இடமிருந்து வலமா? வலமிருந்து இடமா? என்ற வினா எழுகிறது. அவ்வினாவுக்கு ஒரே மாதிரியான குறியீடுகள், எழுத்துக்கள் கொண்ட மூன்று பானை ஓடுகள், முத்திரைகள் ஆகியவை விடை கூறுகின்றன. பானை ஓடுகள், வில்லைகள் ஆகியவற்றை நேரடியாகவும், இடமிருந்து வலமாகவும், முத்திரைகளை மிருதுவான துணி, மரப்பட்டை, தோல் போன்றவற்றின் மீது அச்சிட்டு இடமிருந்து வலமாகவும் படிக்கவேண்டுமென முன் கண்டது நினைவு கொள்ளத்தக்கது.


H-1394A
பரமேசன்


M-94A
பரமேசன்


M-94a
பரமேசன்

எச்-1394எ என்ற அடையாள எண்ணுடைய பானை ஓட்டில் கீறப்பெற்றுள்ள நான்கு எழுத்துக்களை இடமிருந்து வலமாகப் (முன்னுள்ள இரண்டு எழுத்துக்களை ஊகித்துப்) **பரமேசன்** என நேரிடையாகப் படிக்கமுடிகிறது. ஆனால் எம்-94எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பொறிக்கப்பெற்றுள்ளது. அதே மாதிரியான நான்கு எழுத்துக்களை மிருதுவான துணி, தோல், மரப்பட்டைப் போன்றவற்றின் மேல் அச்சிட்டு இடமிருந்து வலமாகப் **பரமேசன்** படித்தறியும் படியாகப் பொறிக்கப்பெற்றுள்ளன.







L-221A H-212A&B H-212 a&b

பா பிச்சாடன் ஆழி அன் ஆழி சீ பா பிச்சாடன் ஆழி அன் ஆழி பந் சீ பா பிச்சாடன் ஆழி அன் ஆழி பந்

எல்-221எ என்ற அடையாள எண்ணுடைய பானை ஓட்டில் கீறப்பெற்றுள்ள குறியீடுகள், எழுத்துக்கள் ஆகியவற்றை இடமிருந்து வலமாக நேரிடையாகப் **(பா பிச்சாடனன்) (ஆழி அன் ஆழி)** எனப் படிக்கமுடிகிறது. ஆனால் எச்-212எ,பி என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பொறிக்கப்பெற்றுள்ள குறியீடுகள், எழுத்துக்கள் ஆகியவற்றை மிருதுவானதுணி, தோல், மரப்பட்டைப் போன்றவற்றின் மேல் அச்சிட்டு இடமிருந்து வலமாகப் **சீ (பா பிச்சாடனன்) (ஆழி அன் ஆழி) பந்** எனப் படித்தறியும் படியாகப் பொறிக்கப்பெற்றுள்ளன. இவ்விரண்டிலும் **பா பிச்சாடனன் ஆழி அன் ஆழி** எனும் சொற்றொடர்கள் பொதுவானவை.





C-89A
பண்ணன்

M-189A

M-189.a
நாணி பண்ணன்

சி-89எ என்ற அடையாள எண்ணுடைய பானை ஓட்டில் கீறப்பட்டுள்ள நான்கு எழுத்துக்களைப் **பண்ணன்** என இடமிருந்து வலமாக நேரிடையாகப் படிக்கமுடிகிறது. ஆனால் எம்-189எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பொறிக்கப் பெற்றுள்ள ஆறு எழுத்துக்களை மிருதவான துணி, தோல், மரப்பட்டைப் போன்றவற்றின் மேல் அச்சிட்டு இடமிருந்து வலமாகப் **(நாணி) பண்ணன்** எனப் படித்தறியும் படியாகப் பொறிக்கப்பெற்றுள்ளன. இவ்விரண்டிலும் **பண்ணன்** என்ற பெயர்ச் சொல் பொதுவானது.

இம்மூன்று சான்றுகளை ஆராய்ந்தறிந்ததன் அடிப்படையில் சிந்து சமவெளி நாகரிகத்தின் எழுதும் முறை வலமிருந்து இடமல்ல என்பதும், இடமிருந்து வலமே என்பதும் உறுதியாகிறது.

# சிந்து சமவெளிச் செந்தமிழ்ச் தொல்வாச்சியங்கள்

சிந்து சமவெளிச் செந்தமிழ்ச் தொல்வாச்சியங்கள் என்ற தலைப்பில், 7,500 ஆண்டுக்கும் முற்பட்டதும், மிகத் தொன்மையான செந்தமிழ் எழுத்துக்களைக் கொண்டதுமான சொற்கள் கட்டு, அணியாக அதாவது தொல்வாசகங்களாக நம் தமிழர்களால் பதிவிடப்பெற்றுள்ளவை படித்துப் பொருளறியப்பெறுகின்றன.

அவ்வாறு படித்துப் பொருளறியப் பெறும் தொல்வாசகங்கள் பொ.ஆ.பி.19-20ஆம் நூற்றாண்டில் எவராலும் படித்துப் பொருள் கூறப் பெறவில்லை என்பதும், பொ.ஆ.மு.1500இல் சிந்து சமவெளி நகர நாகரிகம் ஏதோ ஓர் அறிய இயலாத காரணத்தால் சீர்குலைந்துள்ளது. பொ.ஆ.மு.1500-க்குப் பின் நம் ஒருங்கிணைந்த கர்மப் பூமி (எ) புண்ணிய பூமி குழப்பமான சூழ்நிலையில் தத்தளித்துள்ளது என்பதும், அந்தக் குழப்பமான சூழ்நிலையின் விளைவால் நிகழ்ந்தவை ஊறும் ஊறின் விளைவுகள் யாவை என்பதைப் பற்றியும் முன் கண்டவை நினைவுக் கூறத்தக்கது.

அநேகமாக பொ.ஆ.மு.1500-க்கும் பிறபட்டதொரு காலத்தில் சிந்து சமவெளி நகர நாகரிகப் பகுதிகளில் ஒன்றான பாதாளா (எ) பாதாளலோகத்தில் வாழ்ந்த நாகர்களால் நாகரி எனும் புதியதொரு எழுத்துக்களைக் கொண்ட சொற்றொடர்களாகி உருவாக்கப் பெற்ற உள்ளன என்பது எமது தனிப்பட்ட கருத்தாகும். நாகரிகம் என்பதன் வேர்ச்சொல் நாகரி என்றாலும் அது பிழையாகாது.

அந்நாகரி என்பதே கலைமகளைக் குறிக்கும் வடமொழியின் வடிவெழுத்து வகையான பிராமி எனப் புனையப்பட்டதொரு பெயர்ச் சொல்லாக இருக்க வாய்ப்புக்கள் அதிகமுண்டு.

உண்மையில் நாகரி எனும் வடிவெழுத்துக்களே வடநாகரி (எ) நந்தி நாகரி (தேவநாகரி), தென்னாகரி (எ) சித்தம் (தமிழி) என இரண்டாகியுள்ளன. பொ.ஆ.பி. 19ஆம் நூற்றாண்டில் சர் ஜேம்ஸ் பிலிப் எனும் ஆங்கிலேயரால் படிக்கப்பட்ட பின்னரே அந்நாகரி என்ற எழுத்துக்களை அசோகன் பிராமி என அறிவிக்கப்பெற்றுள்ளது. சித்தம் என்ற சொல் ஆயத்தமானது (எ) மூலப்பகுதி எனப்பொருள்பெறும். அம்மூலப்பகுதியே பல்வேறு பெயர்களில் திபத் போன்ற வடதிசை நாடுகளையும், இலங்கை போன்ற தென் திசை நாட்டையும், சில கீழ்த் திசை நாடுகளையும் சென்றடைந்துள்ளன எனலாம்.

தொன்மையான செந்தமிழ் மொழியின் வேர்ச் சொற்களின் எண்ணிக்கையை 10,000-க்கும் குறைவாகவே இருந்திருக்கவும், அவற்றில் பல சொற்கள் வழக்கிழந்திருக்கவும் கூடுமென்பது எமது தனிப்பட்டக் கருத்து.

அதற்கோர் உதாரணமாக சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழியின் **இட்ட** என்றதொரு சொல்லைக் சுட்டிக்காட்டலாம்.

மற்றுமோர் உதாரணமாகச், செந்தமிழ் இலக்கிய நூல்களில் ஒன்றான சிற்றிலக்கியத்தில் ஊஞ்சல் பாட்டென்று ஒன்றுள்ளது. ஊஞ்சல் என்பதன் வேர்ச் சொல் **உஞ்சல்**. அந்த உஞ்சல் என்ற சொல் சிந்து சமவெளி நகர நாகரிக இரண்டு வில்லைகளில் **உஞ்சள்** எனப் பதிவிடப்பட்டுள்ளதைச் சுட்டிக்காட்டலாம்.

சிந்து சமவெளி செந்தமிழ் மொழியின் தொன்மைகள் சொல்லப்படத்தக்கவை (எ) தொல்வாச்சியங்களை முன் கண்ட சிந்து சமவெளி குறியீடுகளையும், எழுத்துக்களையும் படித்துப் பொருளறிவதற்கான சில முக்கிய குறிப்புக்களின் துணையுடன் படித்துத் தமிழ் அகராதியின் துணையுடன் பொருள் அறியப்பெறுகின்றன. .

செந்தமிழ் மொழியின் ஓரெழுத்துச் சொற்கள் முதல் ஒன்றுக்கும் மேலான எழுத்துக்களுடையவை. அச்சொற்களுக்கும் வேறுபட்ட பொருள்களுண்டு. எமது சிற்றறிவுக்கு எட்டியவரைச் சிந்து சமவெளி செந்தமிழ் மொழித் தொல்வாச்சியங்களாக எடுத்துக் காட்டியுள்ளோம்.

**தமிழகத் தமிழறிஞர் பெருமக்களும், வருங்காலச் சந்ததியர்களும் இந்நூலை ஒரு கருதுகோளாகக் கொண்டு இதிலுள்ள குறைபாடுகளைக் களைந்து செம்மைப்படுத்த முன்வருவர் என்ற நம்பிக்கையோடு விரிச்சி கேட்டல் என்பதைப் பற்றி காணலாம்.**

# விரிச்சி கேட்டல்


M-482a

விரிச்சி கேட்டல் என்ற தலைப்பில் ஒரு நற்செயலைச் செய்யத்துவங்கும் முன் அச்செயலை மங்களகரமாக **விரிச்சி நிற்றல்** (நற்செய்தியை கேட்க விரும்பி நிற்றல்) எனத் துவங்குவது பழந்தமிழர்களின் மரபு. அவ்வாறு துவங்குவதைப் **படையியங்கு அரவம் பாக்கத்து விரிச்சி** எனத் தொலகாப்பியம் பொருளதிகாரம் நூற்பா 1004-1 கூறுகிறது. அம்மரபின் அடிப்படையில், சிந்து சமவெளி நகர நாகரிக முத்திரைகளில் ஒன்றான M-482a எனும் அடையாள எண்ணுடைய முத்திரையில் பொறிக்கப் பெற்றுள்ள 2 குறியீடுகளும், 4 எழுத்துக்களும் கூறும் நற்செய்தியை ஆராய்தறிவோம்.

இம்முத்திரையில் உள்ள **சுவத்திகம்** வடிவிலுள்ள முதலாம் குறியீட்டைச் **'சுவ'** என்றும், **ஒரு மரத்தின்** வடிவிலுள்ள இரண்டாம் குறியீட்டை **அத்தி** என இரண்டு படச் சொற்களாகவும் (Pictographic words), மற்ற 4 எழுத்துக்களைச் **சீ** + **பொ** + **(ரு** + **ள்)** என இடமிருந்து வலமாகச் **சுவத்தி சீ பொருள்** எனப் படிக்கப்பெறுகின்றன. (சுவத்தி(கம்) - மங்களகரமானது. சீ - திரு, நன்கு மதிக்கத்தக்கது. பொருள் -கடவுள் / உண்மைக் கருத்து / தத்துவம் / அறம்/ **வீடுபேறு / உபமேயம்.**)

**தொல்வாச்சியம்: மங்களகரமானது நன்கு மதிக்கத்தக்கதொரு தத்துவம் (அ) மங்களகரமானது நன்கு மதிக்கத்தக்கதொரு உபமேயம்.**

7,500 ஆண்டுகளுக்கும் முற்பட்ட காலத்தில் சிந்து சமவெளி நகர நாகரிகப் பகுதியின் **சுவத்தி சீ பொருள்** என்ற தொல்வாச்சியம் பல்லவர் ஆட்சிக்காலத்தைச் சார்ந்த 6ஆம் நூற்றாண்டுக்கும் பிற்பட்ட தமிழகக் கல்வெட்டுக்களில் **ஸ்வஸ்தி ஸ்ரீ (எ) சுவத்தி சீ** என மங்களகரமாகத் துவங்குப்பெற்றுள்ளன. **சுவத்தி சீ** என்பதற்கு மங்களம் உண்டாகட்டும் எனப் பொருள் கூறுவர்.

குறிப்பு: **ஸ்வஸ்தி** என்பதில் **'வ' , 'தி'** ஆகிய இரண்டு எழுத்துக்களும், **'ஸ்ரீ '** என்பதில் **'ரீ '** என்ற ஓரெழுத்தும் தமிழ் எழுத்துக்களாகும். **'சீ '** எனும் 'திரு என்பதே **'சிரீ '**. அச்சொல் 'ஸ்ரீ என 6ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட காலத்தில் மாற்றமடைந்து சமசுகிருத மொழியின் ஓர் உயிரெழுத்தாகியுள்ளது.

# பதினாற்றினுள்


M-321a

எம்-321எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் வரைபடக் கணிதத்தைச் சார்ந்த எட்டுக் கட்டங்களைக் கொண்ட இரண்டு குறியீடுகளும், இரண்டு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இவ்விரண்டு குறியீடுகளையும், இரண்டு எழுத்துக்களையும், இடமிருந்து வலமாக, எட்டு + எட்டு + (இ)ன் + (உ)ள். பதினாறு + (இ)ன் + (உ)ள் எனப் படிக்கப்படுகின்றன. (பதினாறு + (இ)ன் + (உ)ள். பதின் + ஆறு + ன் + ள். பதினாற்று + இன்(சாரியை) பதினாற்றின் + உள்.) **தொல்வாச்சியம் : பதினாற்றினுள்.**

ஒழுக்கம்அன் பருள்ஆ சாரம் உபசாரம் உறவு சீலம்

வழுக்கில்லாத் தவம்தா னங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை

அழுக்கிலாத் துறவ டக்கம் அறிவொடர் சித்த லாதி

இழுக்கிலா அறங்களானால் இரங்குவான் பணிய றங்கள். (சிவவாக்கியார் சுபபக்கம் பாடல் 113.)

பொருள்: சீவன்கள் (உயிர்கள்) உலகியலில் வாழும் போது கடைபிடிக்கவேண்டிய நல்வினைகள் (அறங்கள்) **ஒழுக்கம், அன்பு, அருள், ஆசாரம், உபசாரம், உறவு, சீலம், வழுக்கிலாத் தவம், தானங்கள், வந்தித்தல், வணங்குதல், வாய்மை, அழுக்கிலாத் துறவு, அடக்கம், அறிவு, அர்ச்சித்தல் ஆகிய 16 அறங்களை இறைவன் கருணை மனம் கொண்டு கட்டளையிட்டு அருளியுள்ளான்.** அவற்றைக் கடைபிடித்து வாழ்வோர் பெறுவதற்கரிய பெரும் பேறு பெறுவர்.

இம்முத்திரையின் வாயிலாகச் சிந்து சமவெளி நகர நாகரிகப் பகுதியில் வாழ்ந்த பழந்தமிழர்கள் மனிதக் குலத்திற்கு மிகவும் அவசியமானவற்றை அறிந்துள்ளனர் எனலாம்.

# அட்ட அட்ட யான், அட்ட அட்ட யானுள்



M-1080a



H-1767A&B

எம்-1080எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் இரண்டு வரைபடக் கணிதக் குறியீடுகளும், இரண்டு எழுத்துக்களும், ஒரு பசுவும், பசுத் தொட்டியும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக (அ ட் ட) + (அட்ட) + யா + ன். **அட்ட அட்ட யான்.** எனப் படிக்கப்பெறுகிறது.

எம்-1767எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் இரண்டு வரைபடக் கணிதக் குறியீடுகளும், இரண்டு எழுத்துக்களும், ஒரு இடபத்தின் உருவமும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இந்த வில்லை இடமிருந்து வலமாக (அ ட்ட) + (அட்ட) + யா + ன். **அட்ட அட்ட யான்** எனப் படிக்கப்பெறுகிறது.

**(அட்ட அட்ட- எட்டும் எட்டும் (எ) 16. யான் -** தன்மை ஒருமைப் பெயர்.)

**தொல்வாச்சியம் : பதினாறு ஆனவன் (எ) தன்மை ஒருமைப் பெயர்.**

சிவபெருமான் தன்னைத் தாமாகவே சுகாசனன், விவாகன், உமாகண்டன், விருக்கருத்திரன், புராரி, நிருத்தன், சந்திரசேகரன், அர்த்தநாரீசுவரன், விசனவர்த்தன், சண்டேசன், காமாரி, காலநாசன், தெட்சணாமூர்த்தி, பிச்சாடன், முகலிங்கன், இலிங்கசம்பூதன் ஆகிய பதினாறு திருவுருவங்கள் சிவபெருமானின் வெளிப்பாடுகள் என மயமதம் சூ.36.43பி-46எ கூறுகிறது. எம்-1767எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் இடபம் எனும் எருது சிவபெருமானின் வாகனம் உள்ளது அதற்கானதொரு சான்றாகக் கருதலாம்.


H-1952a&b

எம்-1952எ,பி என்ற அடையாள எண்ணுடைய முத்திரையின் **'எ'** புறத்தில் இரண்டு எட்டுக் கட்டங்கள் கொண்ட வடிவியல் கணிதக் குறியீடுகளும், மூன்று எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் (எ) ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரம்மஞானக் குறியீடும் பொறிக்கப் பெற்றுள்ளன.

**'பி'** புறத்தில் வானமண்டலத்திலுள்ள 13 இராசி மண்டல அதிபதிகள் வணங்கும் நின்றகோலத்தில் சோதிச் சுடர்களாகச் சூழ்ந்துள்ள திருவாசி (வாகனப் பிரபை) வடிவமும், அதன் நடுவே ஒரு திருவுருவத்தையும் காணமுடிகிறது.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக (அட்ட)+(அட்ட) +யா +னு +ள். **அட்ட அட்ட யானுள். அட்ட அட்ட யான் உள்** எனப் படிக்கப்பெறுகிறது. (அட்ட அட்ட - எட்டும் எட்டும் (எ) 16. யான் -தன்மை ஒருமைப் பெயர். உள் - உள்ளம், உள்ளிடம், மனம், மறை (இரகசியம்), மனவெழுச்சி, இடம், ஒரு குறிப்பு வினைப் பகுதி, தொழில் பெயர் விகுதி)

**தொல்வாச்சியம் : பதினாறு ஆனவன் (எ) தன்மை ஒருமைப்பெயர் மறை /இரகசியம்.**

சிவபெருமான் தன்னைத் தாமாகவே சுகாசனன், விவாகன், உமாகண்டன், விருக்கருத்திரன், புராரி, நிருத்தன், சந்திரசேகரன், அர்த்தநாரீசுவரன், விசனவர்த்தன், சண்டேசன், காமாரி, காலநாசன், தெட்சணாமூர்த்தி, பிச்சாடன், முகலிங்கன், இலிங்கசம்பூதன் ஆகிய பதினாறு திருவுருவங்கள் சிவபெருமானின் வெளிப்பாடுகள் என மயமதம் சூ. மயமதம் சூ.36.43பி-46எ கூறுகிறது என முன் கண்டது குறிப்பிடத்தக்கது.

குறிப்பு: முற்கால வானியல் சாத்திரத்தில் 13 இராசி மண்டலங்கள் இருந்துள்ளன. அவற்றில் **அபிசித்து** எனும் இராசி மண்டலம் தவிர்க்கப்பட்டு 12 இராசி மண்டலங்கள் எனச் சோதிட சாத்திரத்தில் கூறப்படுகின்றன. வானமண்டலத்தில் கோடை காலத்தில் சிவபெருமானின் திருவுருவம் என்பதும் அதுவே **'பி'** புறத்தில் வானமண்டலத்திலுள்ள 13 இராசி மண்டல அதிபதிகள் சூழ்ந்துள்ள திருவாசி (வாகனப் பிரபை) வடிவமும், அதன் நடுவே உள்ள திருவுருவத்தின் தலையின் மேல் **'ரு'** என்ற எழுத்துள்ளதால், இந்தத் திருவுருவம் உருத்திரன் (எ) சிவன் எனக் கருதலாம்.

அபிசித்து உட்பட 13 இராசி மண்டலங்களைக் குறிப்பிடும் புடைப்புச் சிற்பங்களைப் புதுக்கோட்டை மாவட்டம், ஆவுடையார் திருக்கோயிலில் காணலாம்.

# திரு அனாதக சக்கரம் அவன் அனாதக சக்கரம்.



சிந்து சமவெளி நகர நாகரிக முத்திரைகளில் ஒன்று தற்போது அமெரிக்கா நாட்டிலுள்ள கிளிவ்லாண்ட மியூசியம் ஆப் ஆர்ட் (எ) அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்-பெறுகிறது. (நன்றி.)

மிருதுவான கல்லாலான இந்த முத்திரை 3.2 x 3.2 மி.மீ அளவுடையதாகவும் இதுபோன்ற மிருக உருவங்களையும் எழுத்துப் பொறிப்புக்-களையும் கொண்டவை யாராலும் படித்துப் பொருளறியப்படவில்லை எனவும் குறிப்பிடப் பெற்றுள்ளன.

இம்முத்திரையில் திரு என்ற சொல்லைக் குறிக்கும் **'சீ'** என்ற உயிர்மெய் எழுத்துச் சீப்பு வடிவிலானதொரு குறியீடாகவும், அரைவட்ட வடிவ அடைப்புக் குறியில் சோகம் என்ற சொல்லைக் குறிக்குமொரு சொல் பறவையின் வடிவமாகவும், எண் பன்னிரண்டென்பதைப் பன்னிரண்டு கட்டங்களாகவும், அவன் என்பதைக்குறிக்கும் **அன்** என்ற சொல் தீக்குச்சி மனித உருவமாகவும், எண் பன்னிரண்டென்பதைக் குறிக்கும் பன்னிரண்டு கட்டங்களாகவும் பொறிக்கப்பெற்றுள்ளன. அம்முத்திரையில் எருது (எ) காளையின் உருவமொன்றும் உள்ளது.

இம்முத்திரை இடமிருந்து வலமாக அடைப்புக்குறியிலுள்ள சோகம் எனும் குறியீட்டைச் சேர்க்காமலும், சேர்த்தும் என இருவகையாகப் படிக்கப்பெறுகின்றன.

01. சீ பன்னிரண்டும் அன் பன்னிரண்டு.

02. சீ சோகம் பன்னிரண்டும் அன் பன்னிரண்டு.

(சீ - திரு. சோகம்- கடவுளும், ஆன்மாவும் ஒன்றெனப்-பாவிக்கை. பன்னிரண்டு - பன்னிரண்டு. அன் - அவன். பன்னிரண்டு - பன்னிரண்டு.)

பன்னிரு (எ) எண் பன்னிரண்டென்பது உலகளவில் ஒரு புனிதமான எண்ணாக ஏற்றுக்கொள்ளப் பெற்றுள்ளது. அந்த எண், சோதிட சாத்திரத்தில் பன்னிரு இராசி மண்டலங்கள், ஓராண்டின் பன்னிரு மாதங்கள், ஆதித்திய புராணம் (எ) சூரியபுராணத்தில் பன்னிரு ஆதித்தியர்கள், சைவசித்தாந்தத்தில் பன்னிரு திருமறைகள், சரிகை, கிரிகை ஆகியவிரு மார்க்கங்களில் பன்னிரு சோதிலிங்கங்கள், ஞானமார்க்கத்தில் உயிர்க்குரிய பன்னிருவகை வேதனைகள், **யோக மார்க்கத்தில் அனாதகம் என்னும் (இதய)சக்கரத்தின் பன்னிரு தாமரை இதழ்கள்** எனச் சுட்டிக்காட்டப்பெறுகின்றன.

மேற்கண்டவற்றில் குறிப்பாக யோக மார்க்கத்தில், மார்பு மத்தியிலுள்ள அனாகதம் எனும் சக்கரம் **தன் மீதும், பிறர் மீதும் நேசம் கொள்ளுதல், பிறர் உணர்வுகளைப் புரிந்துணர்தல், மன்னிக்கும் தன்மை கொண்டிருத்தல், சக உயிர்களிடம் பரிவு, அக்கறை, இரக்கம் காட்டுதல்** ஆகிய மேன்மையான நற்குணங்களை நிர்வாகிக்கும் சக்கரமாகும்.

சிந்து சமவெளி நகர நாகரிகப் பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் மூலபந்த ஆசனத்தில் அமர்ந்துள்ள திருவுருவங்கள், அட்டயோகம், ஆஞ்யா சக்கரம், விழிப்பு, கனவு, உறக்கம், துரியம், துரியாதீதம் ஆகியவற்றைக் குறிக்கும் குறியீடுகள் அதிக அளவில் பதிவிடப்பெற்றுள்ளதால் எண் பன்னிரு என்பது **யோக மார்க்கத்தில், அனாதகம் என்னும் (இதய)சக்கரத்தின் பன்னிரு தாமரை இதழ்கள்** எனக் கருதலாம்.

01. சீ பன்னிரண்டும் அன் பன்னிரண்டு.

**தொல்வாச்சியம் : திரு அனாதக சக்கரம் அவன் அனாதக சக்கரம்.**

02. சீ சோகம் பன்னிரண்டும் அன் பன்னிரண்டு.

**தொல்வாச்சியம் : திருக்கடவுளும், ஆன்மாவும் ஒன்றெனப் பாவிக்கும் அனாதக சக்கரம் அவன் அனாதக சக்கரம்.**

குறிப்பு: அவன் என்ற சொல் அன்புள்ள பாசன் பரஞ்சோதியைச் (சிவபெருமானை) சிற்றுயிர்கள் அவன் என்றழைப்பது அளவில்லா அன்பின் வெளிப்பாடாகும்.

இம்முத்திரையில், முதல், கரு, உரி ஆகிய மூன்று பொருட்களின் அடிப்படையில் 7,500 ஆண்டுகளுக்கும் முற்பட்டதொரு காலத்திலும், சிந்து சமவெளி என்னுமிடத்திலும், யோக மார்க்கத்தில் அனாதக சக்கரத்தில் தியானம் செய்து கடவுளும், ஆன்மாவும் ஒன்றெனக் கருப்பொருளாகப் பாவித்தும், அகப்புற ஒழுக்கம் (எ) உரிப்பொருளை அறிந்துணர்ந்தும் வாழ்ந்தவர்கள். அவர்களால் குறியீடுகளாலும் செந்தமிழ் மொழியின் தொல்லெழுத்துக்களாலும் அறிவிக்கப்பெற்றுள்ளவையே தொல்வாச்சியங்கள் எனலாம்.

# வழிபாடு

உலகில் குறிப்பாக இந்தியத் திருநாட்டில் பல்வேறு வகையான வழிபாடுகளுண்டு. அவற்றில், உண்ணும் உணவுக்காகக் காய் கனிகளை அளிப்பது, குளிர்ச்சியிலான நிழல் தருவது, ஆரோக்கியமாக வாழ்வதற்கான பிராணவாயுவை வெளியிடுவது, மருத்துவக் குணமுடையதுமான மரங்களையும், செடி, கொடிகளையும், சுட்டெரிக்கும் ஆதித்தனையும், குளிர்ச்சி தரும் சந்திரனையும் வணங்கி வழிபடுவது **இயற்கை வழிபாடு**. தத்தம் குலம் துண்டிக்கப்படாததொரு தங்கச் சங்கிலிபோல் தொடர வழிபடுவது **குலதெய்வ வழிபாடு.**

இனவிருத்தியைச் செய்யும் தாய்குலத்தைத் தெய்வமாகக் கருதி வணங்கி வழிபடுவது தாய்வழிபாடு (எ) **தாய்த்தெய்வ வழிபாடு**. அதில் **யோனி (எ) பெண்குறி** வழிபாடும், தாய் நாடும், நம் தாய்மொழியும் உள்ளடங்கும்.

பன்னெடுங்காலமாகவும், தலைமுறை தலைமுறையாகவும், வயது மூப்பால் இயற்கை எய்திய மூத்தோர்களான தத்தம் முன்னோர்களையும் நினைவு கூறும் வகையில் அவர்கள் உபயோகித்தப் போர்க் கருவிகளைப் பாதுகாத்தும், அவர்களுக்கு விருப்பமான உணவுகளைப் படைத்தும் வணங்கி வழிபடுவது **முன்னோர் வழிபாடு.**

கொடிய மிருகங்களிடமிருந்தும், வளர்ப்பு மிருகங்களான ஆடுமாடுகளைத் திருடவரும் கள்வர்களிடமிருந்தும் பாதுகாக்கவும், அவர்களிடமிருந்து மீட்கவும் முனைந்த போது வீரமரணம் அடைந்தவர்களுக்கான வழிபாடு நெடுங்கல் அல்லது **நடுகல் வழிபாடு**.

ஏறுதழுவுதல் (சல்லிக்கட்டு) எனும் வலிமை மிக்க காளைகளை அடக்கும் போது வடுகொண்டு (வீரத்தழும்பு கொண்டு) இறந்தபட்ட வீரர்களுக்கான வழிபாடு **வீரக்கல் வழிபாடு.**

தத்தம் நாட்டைப் பாதுகாக்கும் பொருட்டுப் பகைவரை எதிர்த்துப் போரிட்டபோது வீரமரணம் அடைந்தவர் வழிபாடு **பட்டவன் வழிபாடு.** அவ்வழிபாடு சின்னம் பெரும்பாலும் குடியிருப்புப் பகுதியின் வடமேற்குத் திசையில் அதற்கான ஒதுக்கப்பட்ட நிலப்பகுதியில் அதாவது பட்டவெளியில் (இடுகாட்டில்) நிறுவப்பெறும். அதற்குக் கல்வட்டம், கற்படுக்கை, கற்குவியல் போன்ற பல்வேறு பெயர்களுண்டு. திருக்கோயில் திருவிழா நிகழ்வுகளில் ஒன்றான **படுகளம், பட்டவன் எடுத்தல்** போன்றவையும் **பட்டவன் வழிபாட்டின் ஓர் அங்கமாகும்.**

மேற்கண்ட இயற்கை வழிபாடு, தாய்த்தெய்வ வழிபாடு, முன்னோர் வழிபாடு. நடுகல் வழிபாடு. வீரக்கல் வழிபாடு. பட்டவன் வழிபாடு ஆகியவை அனைத்தும் அவர்களின் நினைவிடங்களிலும், வாயுமூலை எனும் வடமேற்குத் திசையில் நிகழும். ஆனால் குடியிருப்பு வீடுகளில் ஈசானகோணம், ஈசான திசை, ஈசானியம், சனி மூலை நீர்மூலை எனும் வடகீழ்த் திசையில் (ஈசன் ஆனன்) ஈசானன் மூலையில் உள்ளதொரு அறையில் நிகழும்.

பொதுவாக இயற்கையின் சீற்றத்திலிருந்தும், கொடிய நோய்களிடமிருந்தும், மழைபொய்த்துப் போவதனால் ஏற்படும் பெரும் வறட்சியிலிருந்தும், தங்களைக் காத்தருளும் படி பிறருக்குத் தொல்வாச்சியங்களாக எழுதி வைக்கப்படும் கல் **ஆசிரியக் கல்.** அந்த ஆசிரியக்கல் வழிபாடே குடிபாடு எனும் குடி வழிபாடு எனலாம். அக்குடி வழிபாடு பெரும்பாலும் இறைவன், இறைவி எழுந்தருளியுள்ள திருத்தலங்களில் நிகழும்.

புதுகோட்டை மாவட்டம் குடுமியான் மலை சிவனாலயத்தில் எழுந்தருளியுள்ள அன்னையின் கருவறை முன்மண்டப வாசல் தரையில் பதிக்கப்பெற்றுள்ள பலகைக் கல் ஒன்றில் சிற்ப வேலைப்பாடுகளுடனும், பூர்ணகும்பம், இரண்டு திருவிளக்குகள், ஒரு யோகியின் துடைஎழும்பின் வடிவம், வணங்குமொரு (சஞ்சலம் அடையக் கூடிய மனதைக் குறிக்குமொரு) குரங்கின் உருவம் ஆகியவற்றையும், **ஸ்வஸ்தி ஸ்ரீ திருநலக்குன்றத்து இராகுத்தராயன் ஆசிரியம். அஞ்சினான் புகழிடம்** என்ற எழுத்துப் பொறிப்பு **ஆசிரியக் கல் என்பதற்குச்** சிறந்ததொரு வரலாற்றுச் சான்றாகும்.

நீ உன் உடல் அல்ல. நீ சீவாத்மா. சீவாத்தமாவும் பரமாத்மாவும் ஒன்றே, ஒன்றைத்தவிர மற்றொன்று இல்லை என்பதைத் தன்னுர்தல் **திருக்கோயில் இறைவழிபாடு.** பொதுவாகத் திருக்கோயில்கள் குடியிருப்புப் பகுதியின் அனைத்துச் சீவராசிகளும் (மக்களும்) ஒன்று கூடி வழிபட ஏதுவாகக் குடியிருப்புக்களின் (ஊரின்) மையத்தில் அமையும். அத்திருத்தலங்களின் வடகீழ்த் திசையில் கிணறு, குளம், நீரோடை, ஆறு ஆகிய நீர்நிலைகளில் ஏதேனுமொன்று இருக்கும்.

அக்குடியிருப்புகள் நிறைந்த கிராமங்கள் ஊர்களாகி, ஊர்கள் நகரங்களாகி பிற்காலத்தில் பாதுகாப்பு அரண்களும், அகலமும், ஆழமும் உள்ள அகழிகளும் கொண்ட கோட்டைகளாகின. எண்ணிக்கையில் அடங்காத கோட்டைகள் நிறைந்த நாகரிகப் பகுதியே சிந்து சமவெளி நகர நாகரிகப் பகுதி. அப்பகுதியில் ஒன்றே **பகவன்புரம்.** மற்றொன்று **காளிபங்கன்** எனும் நகரம். அந்நகரத்தில் எழுந்தருளியுள்ள காளி (எ) உமையோடு கூடியவனும், பாகமுடைவனும், இறைவனும், ஒன்றும் கெடாதவனாகிய சிவபெருமானை வழிபடுவது **சிவன் வழிபாடு.**

இந்த உமையோடு கூடியவன் (எ) சிவன் யார்? என்ற வினாவுக்கு சிந்து சமவெளி மக்கள் கூறியுள்ள தொல்வாச்சியங்களைப் பல்வேறு தலைப்புக்களில் காணலாம்.

# சிவபெருமான்

சிவபெருமானின் திருப்பெயர்களைச் சங்கரன், இறையோன், சம்பு, சதாசிவன், பேயோடாடி, அரவணிந்த மூர்த்தி, புராந்தகன், பூதநாதன், கங்கைவேணியன், கங்காளன், கடுக்கையங்கண்ணிகுடி, மங்கையோர்பாகன், முன்னோன், மகேச்சுவரன், வாமதேவன் ஆகிய 15 பெயர்களும், நீலகண்டன், மாதேவன், நிருமலன், குன்றவில்லி, **சூலபாணியன்,** சுகாசனன், **பசுபதி,** சுடலையாடி, காலகாலன், கபாலி, உருத்திரன், மலையாளி, ஆலமர்கடவுள், நித்தன், ஐம்முகன், **பரசுபாணி** ஆகிய 15 பெயர்களும், அந்திவண்ணன், முக்கண்ணன், அழலாடி, பாண்டரங்கன், சந்திரசேகரன், ஆனந்தன், அனந்தன், **ஆதி**, தந்திபுரியோன், நம்பன், தற்பரன், நீறணிந்தோன், **நந்தி,** ஈச்சுவரன், ஏறூர்ந்தோன், நக்கன், ஞானமூர்த்தி ஆகிய 17 பெயர்களும், வரன், மறைமுதலி, ஈசன், மானிடமேந்தி, சோதி, பிரமன் மாற்றகரியோன், தாணு, பிஞ்சகன், **பினாபாணி,** பரமன், எண்டோளன், பார்கன், பவன், யோகி, **பகவான்,** ஏகன், **அரன்**, **உமாபதி** ஆகிய 18, என மொத்தம் 65 பெயர்கள் எனச் சூடாமணி நிகண்டு 6,7,8,9 பாடல்கள் குறிப்பிடுகின்றன.

சங்கரனிறையோன், காமதகனன், கங்காதரனே, கறைமிடற்றண்ணல், கூற்றையுதைத்-தோன், குன்றவில்லி, ஏற்றுவாகனன், **திரியம்பகன்,** சோதி, நக்கன்சடையோன், நாரிபாகன், முன்னட்பகவன், **பசுபதிபரமன்,** கொன்றைசூடி, கொலை**மழுவாளி,** ஈமத்தாடி, பிஞ்சகன்பித்தன், ஆனையுரித்தோன், **அரன்,** சிவனுருத்திரன், காலகாலன், கபாலமூர்த்தி, நீலகண்டன், நீறணிகடவுள், அரவாபரணன், அழலதுவேந்தி, அமலனாநந்தன், **பரசுபாணி,** சுடலையாடி, மானிடமேந்தி, மறைமுதல்யோகி, புலித்தோலுடையோன், புரமூனறெரித்தோன், **பினாகபாணி,** பேயோடாடி, பூதநாதன், புணர்கங்காளன், ஞானமூர்த்தி, ஈசனனாதி, ஐம்முகபகவன், ஆதிபண்டாரங்கன், அந்திவண்ணன், ஆலமர்கடவுள், நந்திநம்பன், நாதன்றற்பரன், கண்ணதன்மூர்த்தி, கைலையாளி என்று எண்ணிய பெயர் இன்னமும்பலவே எனச் சேந்தன திவாகரம் தெய்வப்பெயர்த் தொகுதி கூறுகிறது.

சிவபெருமான் தன்னைச் சுகாசனன், விவாகன், உமாகண்டன், விருக்கருத்திரன், புராரி, நிருத்தன், சந்திரசேகரன், அர்த்தநாரீசுவரன், விசனவர்த்தன், **சண்டேசன்,** காமாரி, காலநாசன், தெட்சணாமுர்த்தி, **பிச்சாடன்,** முகலிங்கன், இலிங்கசம்பூதன் ஆகியோராக வெளிப்படுத்திக் கொண்டதாக மயமதம் சூ.36.43பி-46எ கூறுவது நினைவு கொள்ளத்தக்கது.

சிவபெருமான் மூன்றுகண்களையும், நான்கு கரங்களையும், பிறைச் சந்திரனை சிகையில் சூடியும், புலித்தோலை உடையாகவும், கழுத்தணி, காதணிகள், கைக்காப்புகள், (பூணூல் இடைச்செருகல்) ஆகியவற்றுடன் காட்சியளிப்பான் - என மயமதம் (சூ.36.46பி - 48) கூறுகிறது. சிவபெருமான் போகவடிவம், கோரவடிவம், யோகவடிவம் ஆகிய மூன்று முகங்களை உடையவன் எனச் சிவஞானசித்தியார் சுபபக்கம் (70) கூறுகிறது.

சிவபெருமானை அழகிய இளம் பாலகனாகச் **சத்தியயேசாதம்** தோற்றத்திலும், கொடிய நஞ்சைக் கொண்ட பாம்பைத் தன் கழுத்தில் அணிந்த **வாமதேவன்** தோற்றத்திலும் முக்கண்களுடன் தீச்சுடரும், வாளும் ஏந்திய கருமைநிறமுடைய **அரோகம்** தோற்றத்திலும், பொன்னிறத்தில் **தற்புருடம்** தோற்றத்திலும், தன் சடையில் இளம்பிறைச் சந்திரனை அணிந்தும் நெற்றிக் கண்ணுடன், கடைவாய்க் கோரைப் பற்களையுடைய **ஈசாசனன்** தோற்றத்திலும், காட்சியளிக்கும் **பஞ்சபரம்மன்** என்பர்.

சிவபெருமானைப் படைத்தல், காத்தல், அருளல், மறைத்தல், அழித்தல் ஆகிய ஐந்தொழில் புரிபவன் எனவும், தன்வயத்தானாதல், தூயஉடம்பினாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுணர்தல், இயல்பாகவே பாசங்களை நீக்குதல், பேராளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை ஆகிய எண்குணங்களை உடையவன் எனவும், நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய **பஞ்தபூதன்** எனவும், நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், ஆதித்தன், சந்திரன், ஆன்மா ஆகிய **அட்டமூர்தங்களுக்குத் தலைவன்** எனும் எண்வகை (அட்ட) மூர்த்தி என்பர். சிவபெருமானின் படைகளை, **மருமலர்க் கொன்றையார்க்கு வாகனமிடபமாகும், பரசோடுகூடிய சூலம் பினாகவில் படைகளாமே** - எனச் சூடாமணி நிகண்டு (12.140) கூறுகிறது. சிவபெருமானுக்குத் **தாயுமானவன்** என்ற சிறப்புப் பெயருமுண்டு.

சிந்து சமவெளி நாகரிகப் பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் சிவபெருமானின் **அரன், ஆதி, பகவன், பங்கன், புவனேசுவரன், பரமேசன்** ஆகிய பெயர்ச் சொற்களும், **பசுபதி (பசு இட்ட பதி), மழுவாளி (சண்டேசன்) பினாகபாணி, சீயோன், பிச்சாடன்** ஆகிய திருவுருவங்களும் அவற்றுடன் கூடுதலாகத் **துரியன், துரியாதீதன்** என்பதைக் குறிக்கும் குறியீடுகளும், சிவன் என்பதைக்குறிக்கும் **உ, சி** ஆகிய இரண்டு ஓரெழுத்துச் சொற்களும், **புவனேசுவரி, இலவமரதத்தில் அமர்ந்துள்ள இலலிதை, பார்வதி எனும் உமையம்மையைக்** குறிக்கும் **உ, சோ** ஆகிய இரண்டு ஓரெழுத்துச் சொற்களும், **அரண்** (வேலாயுதன்) என்ற சொல்லும் காணமுடிகின்றன.

மேற்கண்டவற்றில் குறிப்பாகப் பசுபதி (பசு இட்ட பதி), மழுவாளி (சண்டேசன்) பினாகபாணி (சீயோன்), பிச்சாடன், துரியாதீதன், அரண், அரன், அன்புள்ள பாசனருள், ஏழுதலைமுறை, பரமே (மேலானதுக்கும் மேலானது), பஞ்சாட்சருள், பதிதாசோகம்,. பருருபம் போன்ற மேலும் சில தலைப்புக்களில் திருக்குறள், திருமந்திரம், திருவிளையாடல் புராணம், திருவாசகம், பதினெண்புராணங்கள் போன்ற மேலும் பல நூல்களில் கூறப்பட்டுள்ளவற்றுடன் ஒப்பிட்டுத் தொல்வாச்சியங்களாகக் காணலாம்.

# ஈசானன் (எ) சதாசிவம்



H-1734a

எச்-1734எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் நான்கு எழுத்துக்கள் பொறிக்கப் பெற்றுள்ளன. இந்த முத்திரையை இடமிருந்து வலமாகவும் மேலிருந்து கீழாகவும் ஈ + சா + ன + ன். **ஈசானன்** எனப்படிக்கப்பெறுகிறது. (ஈசானன் - சிவபெருமான், வடகிழக்குத் திசை பாலன், **சதாசிவம்**).

**தொல்வாச்சியம் : ஈசானன் (எ) சதாசிவம்.**

ஈசானன் என்னும் சிவபெருமான் மிகவும் சக்திவாய்ந்த காளை வாகனன், முக்கண்களை உடையவர், பளிங்கு (கண்ணாடி போன்ற) நிறத்தவர், சூலாயுதபாணி, உலகுக்கு அனைத்து நன்மைகளை அளிப்பவர் என மயமதம் என்னும் சிற்பசாத்திர நூல் கூறுகிறது. சிவபெருமானைத் **தமிழ் அறியும் பெருமானே** எனத் திருவிளையாடல் புராணம் சுட்டிக்காட்டுகிறது.

சதாசிவத்திற்கு ஐந்து நிறங்கள் (தன்மைகள்) என்பதை **நீலவுரு வயிர நிரை பச்சை செம்பொன் நெடும்பளிங்கு என்று அறிவரிய நிறத்தர்** - என அப்பரின் தேவாரப்பாடல் குறிப்பிடுகிறது.

வடகிழக்குப் பாலன் (எ) வடகிழக்குத் திசையின் நாயகரான ஈசானன் மங்கல காரியங்கள் அனைத்தையும் நடத்திக் கொடுப்பவர் எனவும் அவரை வணங்கி வழிபட்டால் ஞானமும், யோகமும் பெறலாம் என்பது சைவ சமயத்தாரின் நம்பிக்கையாகும். வீட்டு மனை நிலத்தின் வடகிழக்குத் திசையில், கிணறு, நீர்த்தொட்டி அமைப்பதும், குடியிருப்பு வீட்டில் பூசை அறையை அமைப்பதும் பழந்தமிழ் மரபு. ஐம்பூதங்களில் நீர் தத்துவத்தைக் குறிப்பது திருச்சிராப்பள்ளி திருவானைக்கா திருக்கோயில் என்பதும் குறிப்பிடத்தக்கது.

மேற்கண்டவற்றின் வாயிலாகச் சிந்து சமவெளி நாகரிகப் பகுதியில் வாழ்ந்த மக்கள் பழந்தமிழர்கள் என்பதும், அவர்கள் சோதிகளின் திசைகளில் குறிப்பாக வடகிழக்குத் திசையின் பாலனும், சூலாயுதபாணியும், உலகுக்கு அனைத்து நன்மைகளை அளிப்பவனுமான ஈசானனின் சிறப்பை நன்குணர்ந்தவர்கள் என்பதும் தெரியவருகிறது.


H-25a

எச்-25எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் 11 எழுத்துக்களும், ஒத்தக்-கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, பா + ல + ன +(ரு +ளி )+ ன + ம் + சி + ண் + ண + ண். பாலனருளினம் சிண்ணண். **பாலன் அருள் இனம் சிண்ணண்** எனப் படிக்கப் பெறுகிறது. (பாலன் - குழந்தை, புதல்வன், காப்போன். அருள் - சிவசக்தி / கருணை / நல்வினை / பொழிவு. இனம் - கூட்டம் /திரள், உவமானம் / சுற்றம். சிண்ணண் - ஒரு பெயர்ச்சொல்).

**தொல்வாச்சியம் : காப்போன் நல்வினைக்கு உவமானம் சிண்ணண்.**


H-248A&B

எச்-248எ,பி என்ற அடையாள எண்ணுடைய வட்ட வடிவிலான முத்திரையின் எ புறத்தில் எட்டு எழுத்துக்களும், பி புறத்தில் இரண்டு எழுத்துக்களும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாகச் சீ + பா + ங்கு + (நா +ழ் )+ ச் + சா + யா + ப + ன். **சீ பாங்கு நாழ்ச்சாயாபன். சீ பாங்கு நாழ்ச் சாயாபன்** எனப் படிக்கப் பெறுகிறது.

(சீ - திரு. பாங்கு - அழகு / பக்கம் / இடம் / நன்மை / தகுதி / நலம்/ , துணையானவர். நாழ் - நாள் / திறமை / செருக்கு (மகிழ்ச்சி) / குற்றம் / இல்லாதது சொல்லுதல். சாயாபன்(தி) - சாயா என்பவளின் அன்பன் (எ) கணவனான ஆதித்தன் (எ) சூரியன்.

**தொல்வாச்சியம் : திருத்துணைவன் திறமைத்தரும் ஆதித்தன் (எ) சூரியன்.**

குறிப்பு : இயற்கை வழிபாட்டில்ஆதித்தன் (எ) சூரியன் அறியாமை (எ) இருளை அகற்றி, ஞானத்தை அருள்பவன் என எப்பொருட்கும் இறைவனோடு ஒப்பிட்டு அவனை வணங்கி வழிபடுபர். அவன், மனவுறுதியையும், பெயரையும், புகழையும், அதிகாரத்தையும் அளிக்கும் சர்வவல்லமைப் படைத்தவன் என்பர். அவனுக்குச் சாயாபுருடன் - நிழல் வடிவாகத் தோன்றும் சாயா என்பவளின் தலைவன் (அ) கணவன் என்ற பெயருண்டு.

# மேலானதுக்கும் மேலானாது

இந்நிலவுலகில் மானிடராய்ப் பிறவியெடுத்து ஒரு நிர்ணியிக்கப்பட்ட காலம் வரை வாழும் காலத்தில், நம்மில் பெரும்பான்மையோர் பெற விரும்புவதில் முதன்மையானது புகழ். அப்புகழ் நிரந்தரமானதா? என்றாலது இல்லை. ஆனால் ஆதியும் அந்தமும் இல்லாததும், **மேலானதுக்கும் மேலானதும்**, நிலையானதான புகழே மேலான புகழ். அப்புகழே நிரந்தரமானது.

திருக்குறள் (233) **"உரைப்பார் உரைப்பவை எல்லாம்இரப் பார்க்கொன்று ஈவார்மேல் நிற்கும் புகழ்"** என்ற பாடலும், திருமந்திரம் (308) **"புகழுகின் றார்க்கும் புராணன்எம் ஈசன் இகழநின் றார்க்கும் இடும்பைக் கிடமா மகிழநின்று ஆதியை ஓதி உணரக் கழியநின் றார்க்குஒரு கல்பசு ஆகுமே"** என மேலானதுக்கும் மேலானதன் நிரந்தரமான புகழ் யாதென்று அறிவிப்பவரின் புகழையும், மேலானதுக்கும் மேலானது யாதென்று அறிபவர்களின் புகழையும் உணர்த்துகின்றன.

திருவள்ளுவர் பெருமானும், திருமூலர் பெருமானும் வாழ்ந்த காலத்துக்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாகவே, சிந்து சமவெளி நகர நாகரிகப் பகுதியில் வாழ்ந்த பெருங்குடி மக்கள் **"மேலானதுக்கும் (அ) மிகவும் மேலானதின் புகழை அறிந்து புகழ்ப்பட வாழவேண்டும்"** என்ற செய்தியைக் குறியீடுகளாகவும், எழுத்துக்களாகவும் பானை ஓடுகளில் கீறியும், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் பொறித்தும் அறிவித்துள்ளனர்.

அச்செய்திகளில், **மேலானதுக்கும் (அ) மிகவும் மேலானது எது? அதை எப்படி அறிவது? அறிவதனால் அடையக் கூடிய முடிவான நிலை எது?** ஆகிய வினாக்களுக்கான விடையை மிகத் தெளிவாகச் சுட்டிக் காட்டியுள்ளனர்.


Saanvur

முதலில் "மேலானதைப் **பரம்**" என்றும், இரண்டாவதாக "மேலானதுக்கும் (அ) மிகவும் மேலானதைப் **பரமே**" என்றும் அதனுடன் தொடர்புடையவற்றைச் சில அரிய சொற்களாலும் அறிவித்துள்ளனர். முன்கண்ட சாணூர் பானை ஓட்டில் கீறப்பெற்றுள்ள பரம் என்ற சொல் பற்றி ஆராய்ந்தறிந்தது நினைவுக் கொள்ளத்-தக்கது.


M-1592A


Hls -1A



சிந்து சமவெளி நகர நாகரிக M-1592A எம்-1592எ என்ற பானை ஓடு, எச்.எல்.எஸ்-1எ என்ற வார்ப்பு, யானையின் உருவத்துடன் உள்ள அடையாள எண்ணில்லாத மற்றொரு வார்ப்பு ஆகிய மூன்றிலும் மூன்று எழுத்துக்கள் உள்ளன. அவற்றை இடமிருந்து வலமாகப் ப + ர + மே. **பரமே** எனப் படிக்கப்பெறுகின்றன. **(பரமே** - மேலானதற்கும் மேலானது)

**தொல்வாச்சியம் : மேலானதற்கும் மேலானது**


H-1411A

எச்-1411எ என்ற அடையாள எண்ணுடைய பானை ஓட்டில் நான்கு எழுத்துக்கள் உள்ளன. அவற்றை இடமிருந்து வலமாக முதலில் **'ப'** எனவும், உள்ளிருந்து வெளியாக **(ர + ம)** எனவும், அதனையடுத்து **'ன்'** எனும் னகர மெய்யுடன் ப + ர + ம + ன். **பரமன். பரம் அன்** எனப் படிக்கப்பெறுகிறது. (பரம் - மேலானதற்கும் மேலானது. அன் -அவன்)

**தொல்வாச்சியம் : மேலானதற்கும் மேலானவன் (எ) முதற்கடவுள்**

முதற்கடவுளே **பரமமூர்த்தி** அப் பரமமூர்த்தியே **பரமான்மன்** என்றும், அந்தப் பரமான்மாவையும், சீவான்மையும் பற்றிய இரகசியமே மறைவான தத்துவக் கொள்கை எனும் **பரமரகசியம்** என்றும், உண்மையான பொருளை அதாவது **மேலான பொருளைப்பற்றி அறிந்து வீடுபேறு நிலையடைவது பரமார்த்தம்** என்பர்.

இந்தப் பானை ஓட்டில், மாறுபட்ட வடிவமுடைய **ரகரம், மகர மெய்யின்** உள்ளே ஒரு புள்ளியாகவும் உள்ளிருந்து வெளியாகப் படிக்கும் படியாகவும் உள்ளது. **'உள்'** - உள்ளம் என்ற சொல், பிண்டத்தில் உள்ளது அண்டத்தில் உள்ளது! அண்டத்தில் உள்ளது பிண்டத்தில் உள்ளது! என்ற உண்மையை உணர்த்துவதாகக் கருதலாம்.

Hls-1A என்ற அடையாள எண்ணுடைய வில்லையிலுள்ள **ரகரம்** எனும் இடையின எழுத்துருவின் வடிவம் சற்றுமாற்றம் அடைந்துள்ளது. இந்த மாறுபட்டை (உ+ரு) **உரு** என இணைந்துள்ள ஒரு சொல்லாக அதிகளவில் காணலாம்.

**பரமே** என்ற சொல்லிலுள்ள **மே** (ம் + ஏ) என்ற உயிர்மெய்யில் உள்ள **ஏ ஏற்றம்** எனத் தொல்காப்பியம் நூற்பா 788 கூறுகிறது. **(ஏற்றம்** - மேலே ஏறுதல், உயர்ச்சி, மேல், **புகழ்**, மிகுதி, மேன்மை, நீரிறைக்கும் கருவி) **ஏ** என்ற எழுத்துரு செய்யுள்களின் இறுதியில் வருவதை அசைநிலை என்பனார் புலவர்.

**'ஏ'** என்ற எழுத்துத் தோற்றத்தை உறுதிசெய்வது எனப் பொருளுணர்த்துவதாகவும், **பரமே** என்ற சொல் உயர்ச்சியடைய வேண்டிய **மேலான புகழ் / மேலானதுக்கும் மேலானது** என்பதைக் குறிப்பிடுவதாகவும். கருதலாம்.

ஒருசதுர வடிவத்தின் மேலே நீண்டதொரு செங்குத்துக் கோடுடைய வடிவம் **மே** என்ற எழுத்துரு. அது **பரவெளியைச்** சுட்டுவதாகவும், மேலான புகழை அடைவதற்கு மேலானதுக்கும் மேலானதொரு உயர்ச்சியை அடைய வேண்டும் என்பதைச் சுட்டுவதாகவும் கருதலாம். அந்த உயர்ச்சியடைய உதவுது ஏழு படிகளைக் கொண்டதோர் ஏணிமரம். அந்த ஏணிமரத்தின் வடிவமே சிந்து சமவெளி நகர நாகரிகச் செந்தமிழ் மொழியின் **"சிறப்பு ழகரம்"** என முன்கண்டது நினைவுக் கொள்ளத்தக்கது.

**"ஆய்ந்துகொள் வார்க்கரன் அங்கே வெளிப்படும் தோய்ந்த நெருப்பது தூயமணி சிந்திடும் ஏய்ந்த இளமதி எட்டவல் லார்கட்கு வாய்ந்த மனமல்கு நூலேணி ஆகுமே"** எனத் திருமந்திரம் ஞானச் சுடர் ஒளிப் பாடல் எண்: 295 கூறுகிறது. **(மனமல்கு நூல் ஏணியாமே** என்பதற்குப் பக்குவப்பட்ட மனம், ஏணி போல் இருந்து அவர்கள் மேன்மை அடைய துணைச் செய்யும் எனப் பொருளாகும்.)


C-2a

C-2A என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் மூன்று எழுத்துக்களும், ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும் பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன. இம்முத்திரையை முன்கண்டவாறு இடமிருந்து வலமாகப் ப+ர+மே. **பரமே** எனப் படிக்கப் பெறுகிறது.

**தொல்வாச்சியம்: மேலானதற்கும் மேலானது**


H-75a

ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும் பரமஞானக் குறியீடும் **மேலானதுக்கும் மேலானது என்பதன்** புனிதத்தன்மை வாய்ந்தது என்பதை உணர்த்துவதாகக் கருதலாம்.

எச்-75எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் நான்கு எழுத்துக்களும், ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இம்முத்திரையை இடமிருந்து வலமாகச் சீ + ப + ர + மே. **சீ பரமே (திரு பரமே)** எனப்படிக்கப்பெறுகிறது. ( சீ - திரு / அருள்மிகு / தெய்வீகத் தன்மையுடைய. பரமே - மேலானதுக்கும் மேலானது.)

**தொல்வாச்சியம் : தெய்வீகத் தன்மையுடைய மேலானதுக்கும் மேலானது**

**குறிப்பு:** சீப்பு வடிவிலான **சீ** எனும் உயிர்மெய் எழுத்துரு **தெய்வீகத்தன்மையைச்** சுட்டிக்காட்டுமொரு மிகப்பழமையான ஓரெழுத்துச் சொல். தமிழகத்தில் பரப்பாய்வின் போது கண்டறிப்பட்ட பழமையான கல்வெட்டுக்களில் **இந்தத் தெய்வீகத்தன்மையுடைய கோயில்** என்பதை **இந்தச் சீ கோயில்** என்ற சொற்களால் உணர்த்தப்பட்டுள்ளன.


M-965a

எம்-965எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் எட்டு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன. இம்முத்திரையை இடமிருந்து வலமாகப் ப + ர + மே + ந + ட் + பு + உ + ரு. **பரமே நட்பு உரு** எனப் படிக்கப்பெறுகிறது. (பரமே - மேலானதுக்கும் மேலானது. நட்பு உரு - நட்புடைய தெய்வத்திருமேனி)

**தொல்வாச்சியம் : மேலானதுக்கும் மேலானது நட்புடைய தெய்வத்திருமேனி.**



H-510a

எச்-510எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஆறு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

இம்முத்திரையை இடமிருந்து வலமாகப் **ப /ர / மே / ட்(டி) / உ /ஆ பரமேட்(டி) உ ஆ** எனப் படிக்கப்பெறுகிறது. (பரமேட்(டி) - பரரமேட்டி. சிவன். உ - சிவன். ஆ - ஆகுகை /ஆவது /சிற்றுயிர்).

**தொல்வாச்சியம் : பரரமேட்டி சிவன் ஆகுக.**



M-672a

எம்-672எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் நான்கு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

இம்முத்திரையை இடமிருந்து வலமாகப் ப + ர + மே + சி. **பரமே சி** எனப்படிக்கப் பெறுகிறது. (பரமே - மிகவும் மேலானது. சி - சிரஞ்சீவி / சிவம்).

**தொல்வாச்சியம் : மிகவும் மேலானது சிவ(ம்)ன்.**



M-1343a

எம்-1343எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் உடைந்த பகுதியில் **ப** எனும் எழுத்துடன் ஆறு எழுத்துக்கள் உள்ளன. கீழ்ப்பகுதியில் ஏதோ ஒரு மிருகத்தின் உருவம் பொறிக்கப்பெற்றுள்ளதாகக் கருதலாம். இம்முத்திரையை இடமிருந்து வலமாகப் **ப+ர+மே + சி +(இ)ட் + ட + ஆ. பரமே சி (இ)ட்ட ஆ** எனப்படிக்கப்பெறுகிறது.
(பரமே சி மிகவும் மேலானது சிவ(ம்)ன். (இ)ட்ட - இட்ட. ஆ - ஆகுகை.)

**தொல்வாச்சியம் : மிகவும் மேலானதான சிவ(ம்)ன் இட்டதாகுகை.**


M-131a

எம்-131எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஏழு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன. இம்முத்திரையை இடமிருந்து வலமாகப் ப + ர + மே + ட்(டி) + பொ) + ரு + ள். **பரமேட்(டி) பொருள்** எனப்படிக்கப்பெறுகிறது.

(பரமேட்(டி) - மிகவும் மேலான புகழுடைய சிவன். பொருள் - கடவுள்)

**தொல்வாச்சியம் : மிகவும் மேலான புகழுடைய சிவன் கடவுள்.**


H-50a

எச்-50எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஆறு எழுத்துக்களும், பினாக-பாணியின் உருவமும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

இம்முத்திரையை இடமிருந்து வலமாகப் ப + ர + மே + ட்(டி)+ பே) + ர் + பினாகபாணி **பரமேட்(டி) பேர் பினாகபாணி** எனப்படிக்கப் பெறுகிறது. (பரமேட்(டி) - மிகவும் மேலான சிவனின் பெயர். பினாகபாணி - பினாகபாணி.)

**தொல்வாச்சியம் : மிகவும் மேலான புகழுடைய சிவனின் பெயர் பினாகபாணி.**


L-28a

எல்-28எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் எட்டு எழுத்துக்களும், ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இம்முத்திரையை இடமிருந்து வலமாகப் ப + ர + மே + ட்(டி)+ பா + ட் + டை + (இ)ங்கு. **பரமேட்(டி) பாட்டை இங்கு** எனப்படிக்கப் பெறுகிறது. (பரமேட்(டி) - மிகவும் மேலான சிவன். பாட்டை - ஒழுக்கம். இங்கு- அங்கு. **தொல்வாச்சியம் : மிகவும் மேலான சிவன் ஒழுக்கம் இவ்விடம்.**



H-694a

எம்-694எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஒன்பது எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் உள்ளன. இம்முத்திரையை இடமிருந்து வலமாகப் ப + ர + மே + சி +(இ)ட் + ட +(ஊ + ன்) +ஆ. **பரமே சி (இ)ட்ட ஊன் ஆ** எனப்படிக்கப் பெறுகிறது. (பரமே- மிகவும் மேலான. சி - சிவன். (இ)ட்ட - (இ)ட்ட. ஊன்- உடம்பு. ஆ - ஆகுக /சிற்றுயிர்.)

**தொல்வாச்சியம் : மிகவும் மேலான சிவனிட்ட உடலாகுக.**



H-389a

எச்-389எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் எட்டு எழுத்துக்களும், **அன்** என்ற சொல்லைக் குறிக்கும் தீக்குச்சி மனித உருவமும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் உள்ளன. இம் முத்திரையை இடமிருந்து வலமாகப் ப + ர + **மே + சி +(இ)ட் + ட + உ + அன் + பு. பரமே சி (இ)ட்ட உ அன்பு** எனப்படிக்கப் பெறுகிறது. (பரமே - மிகவும் மேலான. சி - சிவன். இட்ட - இட்ட. உ - உமையம்மை அன்பு - அன்பு.)

**தொல்வாச்சியம்: மிகவும் மேலான சிவன் இட்ட உமையம்மை அன்பு.**



M-94a

எம்-94எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஐந்து எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் பொறிக்கபபெற்றுள்ளன.

இம்முத்திரை இடமிருந்து வலமாகப் **ப + ர + மே + ச + ன். பரமேசன்** பரமே ஈசன் எனப் படிக்கப்பெறுகிறது.

(பரமே - மிகவும் மேலான. ஈசன்- எப்பொருட்கும் இறைவன் (எ) சிவன்)

**தொல்வாச்சியம் : மிகவும் மேலான சிவன்.**


H-449a

எச்-449எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஒன்பது எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

இம்முத்திரை இடமிருந்து வலமாகப் ப + ர + மே + சோ + ட + பே + ர் + உ+ ரு. **பரமே சோட பேர் உரு** எனப் படிக்கப் பெறுகிறது.

(பரமே - மிகவும் மேலானது. சோட- பதினாறு. பேர் - பேர். உரு - திருவுருவங்கள்.) **சோட பேர் உருவங்கள்** - சுகாசனன், விவாகன், உமாகண்டன், விருக்கருத்திரன், புராரி, நிருத்தன், சந்திரசேகரன், அர்த்தநாரீசுவரன், விசனவர்த்தன், சண்டேசன், காமாரி, காலநாசன், தெட்சணாமுர்த்தி, பிச்சாடன், முகலிங்கன், இலிங்கசம்பூதன் ஆகிய 16 பேர்களின் திருவுருவங்கள்.

**தொல்வாச்சியம் : மிகவும் மேலான பதினாறு பேர்களின் திருவுருவங்கள்.**


M-437a

எம்-437எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஐந்து எழுத்துக்களும், ஆழி எனும் ஆறு ஆரமுடைய சக்கரமும், எருதின் உருவமும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இம்முத்திரை இடமிருந்து வலமாகப் ப + ர + மே +(இ)ட் + ட + ஆழி. **பரமே (இ)ட்ட ஆழி** எனப் படிக்கப்பெறுகிறது.

(பரமே - மிகவும் மேலானது. (இ)ட்ட - இட்ட. ஆழி - வட்டம், ஆணைச் சக்கரம்.)

**தொல்வாச்சியம் : மிகவும் மேலானதிட்ட வட்டம்.**

இந்த முத்திரையில் எருது (எ) காளையின் உருவம் பொறிக்கப் பெற்றுள்ளதால் வட்டம் என்ற சொல் மக்கள் கூட்டத்தைக் குறிப்பிடுவதாகவும் கருதலாம்.





M-392a

மெசபடோமியா (எ) தற்போதைய ஈரான் நாட்டில் மேற்கொண்டதொரு அகழாய்வின் போது வெளிக்கொணரப்பெற்ற ஒரு பீங்கான் பாத்திரம் ஒன்றில் எட்டு சிந்து சமவெளி நாகரிக எழுத்துக்கள் உள்ளன. அவற்றை இடமிருந்து வலமாக உ + ள் + ள + ஓ + ஆ + ஏ + னு + ள். **உள்ள ஓ ஆ ஏனுள்** எனப் படிக்கப் பெறுகிறது. (உள்ள - உண்டாயிருக்கிற / உண்மையான. ஓ - சிறப்பு / வினா. ஆ - ஆன்மா /ஆகுக /ஆகுகை. ஏனுள் - எதற்கு உள்ளம் / மனவெழுச்சி). **தொல்வாச்சியம் : உண்மையான வினாவாவது எதற்கு மனவெளிச்சி?**

எம்-392எ அடையாள எண்ணுடைய முத்திரையில் ஏழு எழுத்துக்கள் உள்ளன. இம்முத்திரையை இடமிருந்து வலமாகப் ப + ர + மே + சு + நா + ரு + ள். பரமே சு நாருள். **பரமே சு நார் உள்** எனப் படிக்கப்பெறுகிறது. (பரமே - மிகவும் மேலானது. சு - மங்களம், சுகம், நன்மை. நார் - வில்லின் நாண், அன்பு. உள் - மனம், மனவெழுச்சி, உள்ளம்.)

**தொல்வாச்சியம் : மிகவும் மேலான சுகம் வில்லின் நாண் போன்ற மனவெழுச்சி.**

குறிப்பு: உண்மையான வினாவாவது எதற்கு மனவெழுச்சி? என்ற வினாவுக்கு மேலானதுக்கும் மேலான சுகம் வில்லின் நாண் போன்ற மனவெழுச்சி என விடை அறியப்பெறுவதால் மெசபடோமியாவுக்கும், சிந்து சமவெளிக்கும் இடையிலான நாகரிகத் தொடர்பு தெரிய வருவதாகக் கருதலாம்.



M-1306a

எம்-1306எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஏழு எழுத்துக்களுடன் ஆழி எனும் ஆறு ஆரங்களுடைய சக்கரமும் உள்ளன.

இம்முத்திரையை இடமிருந்து வலமாக ப + ரா + மே + (ரு + ள் )+ (இ)ட் + ட+ ஆழி. **பராமேருளிட்ட ஆழி. பரா மேருள் இட்ட ஆழி** எனப் படிக்கப் பெறுகிறது. (பரா - மேலான / உயரமான. மேருள் - மேரு மலையினுள். இட்ட - இட்ட. ஆழி (எ) ஆளி - ஆள்வோன்.)

**தொல்வாச்சியம் : மேலான மேரு மலையினுள் இட்ட ஆள்வோன்.**

குறிப்பு: அநேகமாக இந்த முத்திரை உயரமான மேருமலையில் இருந்த மிகப் பழமையான சிவனாலயம் ஒன்றைக் குறிப்பிடுவதாகக் கருதலாம்.


H-1657a

எச்-1657எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பதினைந்து எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

இம்முத்திரையை இடமிருந்து வலமாகப் ப + ர + மே + ந + ல + ன + ரு + ளா + சி + ச + ந + (இ)ட்+ ட +தி +ங்கு.

**பரமே நலனருளாசி சந (இ)ட்டதிங்கு. பரமே நலன் அருள் ஆசி சந இட்டது இங்கு** எனப் படிக்கப்பெறுகிறது.

(பரமே – மேலானதுக்கும் மேலான. நலன் - நன்மை, அருள் - கருணை / பொழிவு / சிவசக்தி / நல்வினை / ஏவல், ஆசி – வாழ்த்து / வாழ்த்தணி, சந – சந்ததி, இட்டது – கொடுத்து வைத்தது / வாழ்வது / அமைந்தது, இங்கு - இவ்விடம்.)

**தொல்வாச்சியம் : மேலானதுக்கும் மேலான நன்மையும், கருணையும் வாழ்த்தும் சந்ததியருக்கு அமைந்தது இவ்விடம்.**

M-965A என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் எட்டு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் உள்ளன.


M-965a

இம்முத்திரையை இடமிருந்து வலமாகப் **ப + ர + மே + ந + ட் + பு + உ + ரு. பரமே நட்பு உரு** எனப் படிக்கப்பெறுகிறது.

(பரமே - மேலானதுக்கும் மேலானது. நட்பு - நட்பு. உரு - தெய்வத் திருமேனி.)

**தொல்வாச்சியம் : மேலானதுக்கும் மேலானது நட்பின் தெய்வத் திருமேனி.**



H-204A

எச்-204எ, எம்-472எ, எச்-750எ,எச்-751எ, எச்-752எ, எச்-753எ, எச்-754எ, எச்-1114எ, எச்-1799எ, ஆகிய அடையாள எண்களுடைய ஒரே மாதிரியான ஒன்பது வில்லைகளில் ஏழு எழுத்துக்கள் உள்ளன.

இந்த வில்லைகள் இடமிருந்து வலமாகச் **சீ + ப + ர + மே + சி + (ர+ ள்) சீ பரமே சிரள் (சீ பரமே சிரல்)** எனப் படிக்கப்படுகிறது.

**சீ - திரு தெய்வீகத் தன்மையுடைய. பரமே - மேலானதுக்கும் மேலானதே. சிரல் - முடிவான இடம்.**)

**தொல்வாச்சியம்: தெய்வீகத் தன்மையுடைய மேலானதுக்கும் மேலானதே முடிவான இடம்**

**குறிப்பு: 'ல்'** என்ற எழுத்திற்குப் பதிலாக உள்ள **'ள்'** என்பதை ஒரு எழுத்துப் பிழையாகக் கருதலாம். சிந்து சமவெளி நகர நாகரிக வில்லைகளிலும், முத்திரைகளிலும் இதுபோன்ற சில எழுத்துப் பிழைகள் மிக அரிதாகக் காணப்படுவதுண்டு.

இந்நிலவுலகில் மானிடராய்ப் பிறவியெடுத்து ஒரு நிர்ணயிக்கப்பட்ட காலம் வரை வாழ்ந்து ஆதியும் அந்தமும் இல்லாததும், **மேலானதுக்கும் மேலானதும்**, நிலையானதுமான மேலான புகழை அடையவேண்டும். அப்புகழே நிரந்தரமான இறைநிலை.

அந்த நிரந்தரமான இறைநிலையை அடைய வேண்டுமேயானால் **மேலானதுக்கும் மேலானதைப் பற்றி உண்மைகளை நல்லோர் வாயிலாக நன்கறிந்து மனந் தெளிவடையவேண்டும்.** அத்துடன் உழவு, தொழில், வரைவு, விச்சை, வாணிகம், சிற்பக் கலை ஆகிய ஆறுவகையான கர்மங்களைக் கருமசுத்தியாக அதாவது குற்றம் குறை ஏதுமில்லாமல் செய்து முடிக்கப்பட வேண்டும் என்பது **மேலானதுக்கும் மேலானது எனும் எப்பொருட்கும் இறைவன் இட்ட கட்டளை.**

**மேலானதுக்கும் (அ) மிகவும் மேலானது எது? அதுவே எப்பொருட்கும் இறைவன்.**

**அதை எப்படி அறிவது? நல்லோர் வாயிலாக அறிய வேண்டும்.**

**அறிவதனால் அடையக் கூடிய முடிவான நிலை எது? அதுவே இறைநிலை.**

மேற்கண்ட மூன்றுமே மேலானதுக்கும் மேலானது எனக் கேட்கப்பட்ட வினாக்களுக்கான விடை எனலாம். **அந்த மேலானதுக்கும் (அ) மிகவும் மேலானது எனும் எப்பொருட்கும் இறைவன் யார்?** என்ற வினாவுக்கான விடையையும் காண்போம்.

# பசு இட்ட பதியான்




மேலானதுக்கும் (அ) மிகவும் மேலானது யார்? என்ற வினாவுக்கான விடையைப் **பசு - பாசம் - பதி** ஆகிய மூன்றும் **முப்பொருள் உண்மை** என்பர். அந்த முப்பொருள் உண்மையைப் பற்றிச் சைவசித்தாந்த நூல்கள் விவரிக்கின்றன. அந்நூல்களில் குறிப்பாகத் திருவதிகை மனவாசங்கடந்தாரின் உண்மைத் தத்துவ விளக்கம் எனும் நூலில் பசு, பாசம், பதியைப் பற்றி விரிவாகப் பேசப்பெற்றுள்ளன.

அந்நூலுக்கு உரையெழுதிய சில உரையாசிரியர்கள் பல்வேறு நூல்களைச் சான்றுகளாக எடுத்துக்காட்டியும், பிற உரையாசிரியர்களின் கருத்துக்களை மறுத்தும் தங்களது கருத்துக்களைப் பதிவிட்டுள்ளனர். **அத்தகைய கருத்து வேற்றுமைகள் அவர்களின் மனதளவில் தோன்றிய கருத்துக்களாகக் கருதலாம்.** அத்தகைய கருத்துவேற்றுமை ஏதுமில்லாத முப்பொருள் உண்மை 7,500 ஆண்டுகளுக்கும் முற்பட்ட சிந்து சமவெளி நகர நாகரிக முத்திரைகளில் பதிவுசெய்யப்பட்டுள்ளன. அவற்றுள், **சர் ஜான் மார்ஷல் பசுபதி முத்திரை** எனக் குறிப்பிட்ட **எம்-304எ** என்ற அடையாள எண்ணுடைய முத்திரையையும், அடையாள எண்ணில்லாத மற்றொரு முத்திரையையும் குறிப்பிடலாம்.

**எம்-304எ**

எம்-304எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரை சதுரவடிவிலானது. அதன் வலது புறக் கீழ் முனை உடைந்த நிலையிலுள்ளது. இதன் மேல் பகுதியில் புடைப்பு வகையைச் சேர்ந்த **ஏழு** எழுத்துக்களும், **'அன்'** என்ற சொல்லைக் குறிக்கும் தீக்குச்சி வடிவமனித குறியீடும் பொறிக்கப்பட்டுள்ளன. மூன்றாவது, நான்காவது ஆகிய இரண்டு எழுத்துக்கள் ஐந்தாவது எழுத்துடனும் இணைந்துள்ளன, ஏழாவது எழுத்து **அன்** எனும் தீக்குச்சி வடிவமனித குறியீட்டுடன் இணைந்துள்ளது.

இந்த முத்திரையின் மய்யப்பகுதியில் கூர்மையான நீண்ட நாசியும், தடித்த உதடுகளும், கொண்ட மூன்று முகமும், காளையின் இருகொம்புகளை மகுடமாகவும் அதன் நடுவே **ஆகாயத்தைக் குறிக்கும்** கால்வட்ட வடிவிலான விசிறித்தலைப் பாகையும், ஆடை அணிகலன்களும், **ஒன்றைச் செய்ய முற்படுதல்** என்பதைக் குறிக்கும் இடுப்பில் ஆடையை இறுகக் கட்டப்பட்டுள்ள **கச்சைக் கயிறு**, நீண்ட இருகரங்களில் **பாதுகாவலன்** என்பதைக் குறிக்கும் கைக்காப்புகளும் அணிந்ததும், அக்கரங்களைத் தன் முழங்கால்கள் மீது அமர்த்தியும், உடுக்கை போன்ற கால்களைக் கொண்ட யோகப் பீடத்தின் மீது பருரூபமுடைய (மலைபோன்ற வடிவமுடைய) **ஒரு யோகி யோகபந்த ஆசனத்தில அமர்ந்துள்ளதைக்** காணமுடிகிறது. அக்கச்சைக் கயிற்றை ஆண்குறி எனச் சில மேலை நாட்டினர் தவறாக அடையாளப்படுத்துகின்றனர்.

யோகப் பீடத்தினடியில் ஒன்றை மற்றொன்று நோக்கும் **இரண்டு வரையாடுகளும்,** இடதுபுற மேல் பகுதியில் ஒரு **காண்டாமிருகம்,** அதன் கீழ்ப்பகுதியில் **எருமைமாடு,** வலதுபுற மேல் பகுதியில் **யானை,** அதன் கீழ்ப்பகுதியில் புலி என ஐந்து வகையான மிருகங்களும், யானை, புலி ஆகிய இரண்டுக்குமிடையே **தீக்குச்சி வடிவமனிதக் குறியீடும்,** அந்த யோகியின் உருவத்தைச் சூழ்ந்துள்ளதாகக் காணமுடிகிறது.

இந்த முத்திரையை மிருதுவான துணி, தோல், மரப்பட்டைப் போன்றவற்றின் மீது அச்சிட்டு மேல் பகுதியிலுள்ள **ஏழு** எழுத்துக்களையும், **'அன்'** என்ற சொல்லைக் குறிக்கும் தீக்குச்சி வடிவமனிதக் குறியீட்டையும் இடமிருந்து வலமாக, ப + சு + (இட் + ட + ப) + தி + (யா + அன்). **"பசு இட்ட பதி யான்"** எனப் படிக்கப்படுகின்றன.

(பசு - ஆ / பசு / சிற்றுயிர் (எ) ஆன்மா. இட்ட - படைத்த / கொடுத்த / வைத்த. பதி- கணவன், தலைவன், கடவுள். யான் - தன்மை ஒருமைப் பெயர்.)

**தொல்வாச்சியம் : பசு இட்ட பதியான் - "சிற்றுயிர்களைப் படைத்த கடவுள் என்பது தன்மை ஒருமைப் பெயர்"**

இம்முத்திரை உணர்த்தும் உண்மையை அறிந்தோ! அறியாமலோ! பிறர் சொல் கேட்டோ! இந்தியத் தொல்பொருள் துறையின் முதலாம் பொது ஆளுநராகப் பணியாற்றிய சர் ஜான் மார்ஷல் இந்த முத்திரையைச் சரியாகப் **பசுபதி முத்திரை** எனப் பெயரிட்டுள்ளார்.

இது பசுபதி முத்திரையே என்பதை உறுதி செய்வதற்குச் சில ஆதாரச்சான்றுகளுடன் ஆராய்வு செய்யப்பெறுகிறது. அதற்கு முதலில் அப்பருருபமுடைய **யோகியின் மூன்று முகங்களைப் பற்றிச்** சிவஞானசித்தியார் சுபபக்கம் (70) கூறுவதைக் காணலாம்.

## மூன்று முகம்

போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்
யோகியா யோக முத்தி உதவுதல் அதுவும் ஓரார்
வேகியானாற் செய்த வினையினை வீட்ட லோரார்
ஊகிய மூடரெல்லாம் உம்பரின் ஒருவ னென்பர்.

**பொருள்:** முதல்வன் கொண்ட திருமேனிகளில் சில திருமேனி போகவடிவமும், சில திருமேனி கோரவடிவமும், திருமேனி யோகவடிவமுகமாகக் கொண்டது. அவை முறையே உயிர்களுக்குப் போகம் புரிதல் பொருட்டும், வினையினை வீட்டுற்பொருட்டும், யோகமுத்தியுதவுதற் பொருட்டுமாம். உத்தேசித்த மூடர்கள் எல்லாம் முதல்வனைத் தேவர்களில் ஒருவன் என்பர்.

இப்பாடலின் வாயிலாக இம்முத்திரையின் மய்யப்பகுதியில் மூலபந்த யோகாசனத்தில் அமர்ந்துள்ள (பருரூப வடிவிலான) **முதல்வன்** எனும் **சிவனின்** இடது புறமுகம் போகமுகத்தையும், வலது புறமுகம் சினமுடைய கோரமுகத்தையும், நடுநாயகமாக உள்ள முகம் யோகமுகத்தையும் சுட்டிக்காட்டுகின்றன என்பது தெரிவருகிறது.

முதல்வனாகிய சிவபெருமான் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களைப் புரிபவன் என்றாலும், அவன் விகாரப்படாமல் (வேறுபாடுகள் இல்லாமல்) இருப்பவன் எனவும் கூறப்படுகிறது.

எனவே படைக்கும் தொழில் புரியும் பிரம்மன், காக்கும் தொழில் புரியும் விட்டுணு, அழிக்கும் தொழில் புரியும் உருத்திரன் ஆகிய மூவரும் வெவ்வேறுவர் அல்லர், அம்மூவர் மட்டுமின்றி அனைத்துமே முதல்வனின் தோற்றங்களே என்பதையும் அறியமுடிகிறது. பதியாகிய சிவனைப்பற்றித் திருமந்திரம் கூறுகிறது.

பதிபல ஆயது பண்டு இவ்வுலகம்

விதிபல செய்தொன்று மெய்ம்மை உணரார்

துதிபல தோத்திரம் சொல்ல வல்லாரும்

மதிஇலர் நெஞ்சினுள் வாடுகின் றாரே. (திருமந்திரம் 33)

பொருள்: பதி பலவாகவே இவ்வுலகம் முன்பிருந்தது. அவ்வாறு இருந்தது பலவிதிகளைச் செய்வதற்காகவே என்ற உண்மையை உணராதவர்கள் பலவிதமான தோத்திரங்களை ஓதும் வல்லமை உடையோராயினும், அவர்கள் மூடர்களாக மனதில் வாட்டத்துடன் வாழ்கின்றவரே.

மேற்கண்ட இரண்டு பாடல்களின் வாயிலாகச் சிற்றுயிர்களைப் படைப்பதற்கான சதாசிவனும், காப்பதற்கான மகேசுவரனும், அழிப்பதற்கான உருத்திரனும் பதியான சிவனின் வெளிப்பாடுகளே என்றதொரு உண்மையை உணர்த்துவதும் தெரியவருகிறது.

அந்த உண்மையை மறைத்துப் பிரம்மா, விட்டுணு, சிவன் என முத்தொழில் புரியும் கடவுளராகத் தவறாக வரிசைப்படுத்தியும், அதில் சிவனைச் சிறுமைப்படுத்தியும் ஓதியர்கள், மதியில்லாதவர்கள் என்பதும் அறியமுடிகிறது.

## சிற்றுயிர்கள்

காண்டாமிருகம், எருமைமாடு, வரையாடுகள், யானை, தீக்குச்சி வடிவ மனித உருவம் புலி ஆகியவை அனைத்தும் சிற்றுயிர்களை அதாவது பண்டைய இந்தியத் திருநாட்டில் வாழ்ந்த ஐந்து பெருங்குடியினரைக் குறிப்பிடுவதாகத் தெரியவருகிறது.

பொ. ஆ. மு. 6ஆம் நூற்றாண்டு காலத்தில் இந்தியத் துணைக்கண்டத்தில் வாழ்ந்த ஐந்து பெருங்குடி மக்களைப் பதினாரு மகாஜன பதங்கள் (பதினாறு பெருங்குடியினரின் காலடிகள்) எனப் பௌத்தமதத்தின் அங்குத்தரநிதயா எனும் நூலில் குறிப்பிடப்பெற்றுள்ளது.

உண்மையில் 7,500 ஆண்டுகளுக்கும் முன் இந்தியத் துணைக்கண்டத்தில் வாழ்ந்தவர்கள் ஐம்பெருங்குடியினர் என்பதும் அவர்கள் தங்களை, முறையே வடமேற்குத் திசையில் வாழ்ந்தோரைக் காண்டாமிருகமாகவும், மேற்கு - தென்மேற்குத் திசையில் வாழ்ந்தோரை எருமை மாடாகவும், தென்திசையில் வாழ்ந்தோரை வரையாடுகளாகவும், வடக்கு-வடமேற்குத் திசையில் வாழ்ந்தோரை யானையாகவும், கிழக்கு-தென்கிழக்குத் திசையில் வாழ்ந்தோரைப் புலியாகவும், தீக்குச்சி வடிவ மனித உருவம் காசி விசுவநாதர் ஆலயப்பகுதியில் உள்ள பசுபதிநாதர் சிவாயலத்தின் அருகில் வாழ்ந்தோரை அடையாளப்படுத்திக் கொண்டுள்ளனர். அந்த ஐம்பெருங்குடியினரைப் படைத்த பதியான சிவனுக்குப் **பஞ்சமகன்** என்ற சிறப்புப் பெயருண்டு.

தற்கால இந்தியத் துணைகண்டத்தின் தென்மேற்குத் திசையிலுள்ள **கர்நாடக மாநிலத்தை எருமைநாடு** எனப் பழங்காலக் கல்வெட்டுச் செய்திகள் கூறுவதும், வடகிழக்கு திசையிலுள்ள உத்தரப் பிரதேசத்தின் ஒருபகுதியும் பீகார் மாநிலத்திற்கும் அடையாளச் சின்னம் யானை என்பதும், தென்கிழக்குத் திசையிலுள்ள வங்காளம், ஒரிசா ஆகிய இரண்டு மாநிலங்களின் அடையாளச் சின்னம் புலி என்பதும் மேற்கண்டவற்றை உறுதி செய்கின்றன.

அதாவது, வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு ஆகிய நான்கு புவியின் திசைகளிலும், வடகிழக்கு, தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு ஆகிய நான்கு சோதியின் திசைகளிலும் என எட்டுத் திசைகளில் வாழும் சிற்றுயிர்களைப் படைத்து, காத்து, அழிப்பவன் ஆதிமுதல்வனான சிவன் என்பதைக் குறிப்பிடுவதாகக் கருதலாம். அக்கருத்தை உறுதிபடுத்தும் வகையில் திருமூலர் அருளிய திருமந்திரம் பாடல் (441) கூறுவதாவது,

எட்டுத்திசையும் அடிக்கின்ற காற்றவன்
வட்டத்திரையனல் மாநிலம் ஆகாசம்
ஒட்டி உணர்நிலை என்னும் இக்காயப்பை
வட்டி அவிழ்க்கின்ற கண்ணுதல் காணுமே

**பொருள்:** வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு ஆகிய புவியின் திசைகளும், தென்மேற்கு (நிலம்), வடகிழக்கு (நீர்), தென்கிழக்கு (நெருப்பு), வடமேற்கு (காற்று) ஆகிய எண்திசையிலிருந்து அடிக்கும் காற்றவன். வட்டமான பூமியின் மாநிலத்தைச் சூழ்ந்துள்ள அயல்கடல் நீரானவன். பரந்து விரிந்துள்ள ஆகாயமானவன். ஒட்டி உணரும் தன்மையுடைய உடலில் உயிரைக் கட்டி வைப்பவன். உடலோடு கட்டிய உயிரை அவிழ்த்து விடுபவன். நெற்றிக் கண்ணுடையவனாகக் காட்சியளிப்பவனே சிவன் எனும் காட்சியே. இப்பாடல் ஆதிமுதல்வனே பஞ்சபூதங்களான நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகியவற்றின் **பஞ்சமகன்** எனும் சிவன் என்பதைக் குறிப்பிடுவதும் தெரியவருகிறது.

அடையாள எண்ணில்லாத சதுரவடிவிலான மற்றொரு முத்திரையின் வலது புறக் கீழ் முனை உடைந்த நிலையில் உள்ளது. இதன் மேல் பகுதியில் **ஏழு** எழுத்துக்களும், **'அன்'** என்ற சொல்லைக் குறிக்கும் தீக்குச்சி வடிவமனிதக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரையின் மேல் பகுதியிலுள்ள **ஏழு** எழுத்துக்களையும், **'அன்'** என்ற சொல்லைக் குறிக்கும் தீக்குச்சி வடிவமனிதக் குறியீட்டையும் இடமிருந்து வலமாகப், ப + சு + (இ)ட் + ட + ப + தி + யா + அன். **"பசு இட்ட பதி யான்"** எனப் படிக்கப்படுகின்றன. பசு இட்ட பதியான் என்பது பற்றி முன்கண்டது நோக்கத்தக்கது.



இந்த முத்திரையின் மய்யப்பகுதியில் இருகொம்புகளை உடைய **நந்தியின் முகமுடைய மனித உருவம்** ஆகாய கங்கையைத் தலையில் சூடிய **ஆறுசூடி** எனும் **சிவனைக் குறிக்கும்** ஆறுமடிப்புகளைக் கொண்ட கால்வட்ட வடிவிலான விசிறித்தலைப் பாகையை மகுடமாகத் தரித்தும், ஆடை அணிகலன்களை அணிந்தவாறும், மூலபந்த யோகாசனத்தில் உடுக்கை வடிவிலான கால்களைக் கொண்ட யோகப் பீடத்தின் மீது அமர்ந்தவாறும் காட்சியளிக்கிறது.

அதன் இடது புறத்தில் காண்டாமிருகம், வலது புறத்தில் புலி ஆகிய இரண்டு மிருகங்களின் உருவங்கள் மட்டும் உள்ளன. இவ்விரு மிருகங்கள் பற்றி முன்கண்டது நினைவுக் கொள்ளத்தக்கது.

மேற்கண்டவற்றின் வாயிலாகச் சிவபெருமானுடன் தொடர்புடைய நந்தியின் சிறப்பு தெரியவருகிறது. நந்தியின் சிறப்பைப் பற்றித் திருமந்திரம் பாடல்கள் (*523*, *2443*) கூறுகின்றன.

நந்தி எழுந்து நடுவுற ஓங்கிய
செந்தீ கலந்துட விலனென நிற்கும்
முந்திக் கலந்திங்கு உலகம் வலம் வரும்
அந்தி இறைவன் அதோமுக மாமே. (*523*)

**பொருள்:** இறையருளாகிய நந்தி மூலாதாரச் சக்கரத்தின் நடுவுற இருந்து கிளம்பி, மேலெழுந்து சிவ சொரூபமாய் நெற்றிப் பொட்டில் இருபுருவ நடுவில் நிற்கும். முந்திக் கலந்தங்கு உலகம் வலம் வரும். இந்தத் தவயோகம் செய்ய வல்லார்க்கு இறையருள் முந்திப் பிறப்பறுத்து இறையருளுடன் கூடும் வெற்றியைப் பெற்றுத் தரும்.

நந்தி அறியும் நழுவில் அதீதமாம்
இந்தியம் சத்தாதி விடவியன் ஆகும்
நந்திய மூன்று இரண்டுஒன்று நலம் ஐந்து
நந்தி நனவாதி மூட்டும் அனாதியே. (*2443*)

**பொருள்:** இவ்விடத்து ஆன்மாவாகிய நந்தியின் அறிவு நழுவினால் அதாவது அறிவு சென்று பற்றும் நுகர்ச்சி, ஓசை, உணர்வு முதலான புலனிச்சைகள் விலகிப் போனால் ஆருயிர்கள் அதீதமான விழிப்பு, கனவு, உறக்கம், துரியம், துரியாதீதம் ஆகிய ஆன்மாவுக்கு நலம் தரும் அவத்தைகள் நீங்கிப் பழமைக்கும் பழமையான நந்தியெம்பெருமான் நனவு முதலான மேலான நின்மல (மாசு இல்லாத) நிலையில் உயிர்களைக் கூட்டுவிப்பான்.

இவ்விரு முத்திரைகளின் வாயிலாகச் சிற்றுயிர்களைப் படைத்த பசுபதி என்பது சிவபெருமானின் தன்மை ஒருமைப் பெயர் என்பதும், அப்பதியே இந்தியத் துணைக்கண்டத்தில் வாழ்ந்த ஐம்பெருங்குடிமக்களின் கடவுள் என்பதும், அவன் போகவடிவமும், கோரவடிவமும், யோகவடிவமுகங்களைக் கொண்டவன் என்பதும், அவனே மகாயோகியும், நந்தியெம்-பெருமானுமாகும் என்பது நாம் அனைவரும் அறியப்பட வேண்டிய உண்மை.



பசு - பாசம் (பந்தம்) - பதி எனும் முப்பொருள் உண்மையைப் பழந்தமிழர்கள் நன்கு அறிந்துணர்ந்தவர்கள் என்பதற்கான தொல்லியல் ஆதாரச்சான்றுகள் தமிழகத்தில் உள்ளன. அம்மூன்று குறியீடுகளை கொடு-மணல் KDL-G-11.6 என்ற அடையாள எண்ணுடைய பானை ஓடு ஒன்றில் கீறியாற்றப்பெற்றுள்ளன.

**பசு (எ) உயிர், பதி (எ) கோன்** என்பதற்கான குறியீடுகள் மதுரை மாவட்டம் கொங்கர் புளியங்குளம் தமிழிக் கல்லெழுத்துக்கள் இரண்டின் இறுதியில் பொறிக்கப்பெற்றுள்ளன.









**பாசம் (எ) பந்தம்** என்பதற்கான குறியீடு தற்போதைய திருச்சி இலால்குடி நன்னிமங்கலம் சிவனாலயத்தின் கருவறையின் முன்மண்டபத்தின் வடதிசைக் கற்சுவற்றில் ஆழி, சித்திர மேழி பெரியநாட்டார் குறியீடுகளுடன் படுக்கை வசமாக உள்ளது.

அந்தப் பசுபதியாகிய சிவனின் திருவடியை உயிராகிய பசு எவ்வாறு அடைவது? என்ற வினா எழுகிறது. அந்த வினாவுக்கு K-52A எனும் அடையாள எண்ணுடைய முத்திரை விடைகூறுவதைக் காணலாம்.




# பஞ்சாட்சருள்


K-52a

பஞ்சாட்சருள் என்ற தலைப்பில் அஞ்செழுத்து மந்திரத்தைப் பற்றிச் சிந்து சமவெளி நகர நாகரிக வில்லை, முத்திரை ஆகியவற்றில் பொறிக்கப்பட்டுள்ள தொல்வாச்சியங்கள் ஆராய்வு செய்யப் பெறுகின்றன.

கா-52எ என்ற அடையாள எண்ணுடைய செவ்வக வடிவிலான சிந்து சமவெளி நகர நாகரிக முத்திரையில் புடைப்பு வகையைச் சேர்ந்த ஏழு எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் **'ஞ்'** எனும் இரண்டாவது எழுத்தும், **'ச'** எனும் மூன்றாவது எழுத்தும் இணைந்துள்ளன. **'ஞ்'** எனும் மெய்யெழுத்தைத் தொடர்ந்து சகர வர்க்கத்தைச் சேர்ந்த **'சா, சி, சீ ....'** போன்ற எழுத்துகள் தொடரும் என்பது செந்தமிழ் இலக்கண முறை.

**'ட்'** எனும் நான்காவது எழுத்தும், **'ச'** எனும் ஐந்தாவது எழுத்தும் உள்ளிருந்து வெளியாகவும், **'ற'** எனும் ஆறாவது எழுத்தும், **'ள்'** என்னும் ஏழாவது எழுத்தும் உள்ளிருந்து வெளியாகவும் படிக்கும்படியாக இணைந்துள்ளன.

இந்த முத்திரையிலுள்ள ஏழு எழுத்துக்களை இடமிருந்து வலமாகப், ப + (ஞ் + சா) +(ட் + ச) +(ரு + ள்). **'பஞ்சாட்சருள்'. பஞ்ச அட்சர அருள்** எனப் பகுத்துப் படிக்கப்படுகின்றன. (பஞ்ச - ஐந்து. அட்சர(ம்) - எழுத்து(க்கள்). அருள் - கருணை.)

**தொல்வாச்சியம் : பஞ்சாட்சருள் - அஞ்செழுத்துக்கள் அருளுடையவை.**

'பஞ்ச அட்சர(ம்) என்பதைப் பஞ்சாட்சர(ம்)' எனவும், அஞ்செழுத்து மந்திரம் எனவும் அதனை 'நமசிவாய' எனவும் சைவசித்தாந்தம் நூல்கள் கூறுகின்றன. அதற்குச் சான்றாக **'நமசிவாய வாழ்க! நாதன் தாள் வாழ்க! வாழ்க வாழ்க! வாழ்க! வாழ்க!'** எனச் சிவபுராணத்தில் மணிவாசகப்பெருமான் குறிப்பிட்டுள்ளார் என்பர். பிற்காலத்தில் **அட்சரம்** என்ற சொல் **அக்கரம்** என எழுதப்பட்டுள்ளதைச் சுட்டிக்காட்டுவர்.

ஆனால், பஞ்சாட்சருள் என்ற சொற்றொடர் ஏதேனும் ஒரு நூலில் குறிப்பிபட்டுள்ளதை அறிய இயலவில்லை. அதனால் அருள் என்ற சொல் இணைந்திருப்பதற்கான காரணகாரியமும் அறிய இயலவில்லை. எனினும் இதில் ஏதோ ஒரு செய்தி ரகசியமாக அறிவிக்கப்பட்டுள்ளது என்பதை மட்டும் ஊகிக்க முடிகிறது.

பஞ்சாட்சரம் என்ற அஞ்செழுத்து மந்திரம் **'சி'** என்ற பெரு எழுத்தில் துவங்கி **'சி'** என்ற பெரு எழுத்தில் முற்றுப்பெறும் வகையில் **'சிவயந, மசிவயந நமசிவய, யநமசிவ வயமநசி'** என ஐந்து வகையாகத் திருமந்திரம் பாடல் எண் 923 கூறுகிறது. அவற்றுள் **சிவயநம** என்பதைச் **சிவாயநம** என எழுதப்பெற்றுள்ளது. இவ்விரண்டில் எது சரியானது என்ற ஐயம் எழுகிறது.

பஞ்சாட்சரம் என்ற ஐந்தெழுத்து மந்திரம் குற்றெழுத்துக்களைக் கொண்டது நெட்டெழுத்துக்களைக் கொண்டதல்ல. அதாவது 'சிவ' என்பது ஒரு குற்றெழுத்து மந்திரம், 'சிவா' என்பது ஒரு நெட்டெழுத்துக்கள் கொண்ட பெயர்ச்சொல். மந்திரங்களில் பெயர்ச் சொல் இடம் பெறாது என்பர். அதற்கொரு உதாரணமாக '**நமசிவாயம்**' என்ற பெயர்ச் சொல்லை உண்மைத் திருவதிகை மனவாசங்கடந்தாரின் உண்மைத்தத்துவப் பாடல், உரைநூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

குற்றமில்லாத ஐந்தெழுத்துக்கள் **ஆசீல் அஞ்சு** (மதிப்பில் ஐந்து) என்பதனால் **'நமசிவய, சிவயநம'** ஆகிய இரண்டும் முறையானது என்பது தெரியவருகிறது. எனினும் **'நமசிவய, சிவயநம'** ஆகிய இரண்டில் எது சரியானது என்பது மேலும் ஆய்வுக்குரியதாகிறது.

**'நமசிவய'** என்ற ஐந்தெழுத்து மந்திரத்தில், **'ந'** என்பது திரோதம் எனும் மறைத்தல், **'ம'** என்பது மலம் எனும் மாயை, **'சி'** என்பது சிவன் / சிவம், **'வ'** என்பது அருள், **'ய'** என்பது ஆவி எனும் உயிர் என்பவற்றைக் குறிக்கும் குற்றெழுத்துச் சொற்கள்.

**'சிவயநம'** என்ற ஐந்தெழுத்து மந்திரத்தில், **'சி'** என்பது சிவன் / சிவம், **'வ'** என்பது அருள், **'ய'** என்பது ஆவி (உயிர்), **'ந'** என்பது திரோதம் எனும் மறைத்தல், **'ம'** என்பது மலம் எனும் மாயை. அதாவது, **'சிவயநம'** குற்றமில்லாத ஒளி எழுத்துக்களாக இருக்கின்ற ஐந்து குற்றெழுத்துக்களுக்கு அடையாக இருப்பது சிவம். சிவத்தையடுத்து வருவது அருள். அதனையடுத்து வருபவை ஆவி (உயிர்), திரோதம், மலம் எனும் மாயை. **'சிவயநம'** என ஏன்? எழுதவும், உச்சரிக்கவும் வேண்டும் என்பதைப் பற்றிக் கீழ்க்கண்ட திருவதிகை மனவாசங்கடந்தாரின் உண்மைத்தத்துவப் பாடல்கள் (4) தெளிவாகக் கூறுகின்றன.

உற்ற குறிஅழியும் ஓதுங்கால் பாடைகளில்
சற்றும் பொருள்தான் சலியாது – மற்றது கேள்
ஈசன் அருள் ஆவி எழிலோர் திரோதம் மலம்
ஆசீல் எழுத்து அஞ்சின் அடையாம். (40). (பாடைகளில் - மொழிகளில்)

சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்தும்

**அவன் எழுத்து** அஞ்சின் அடைவாம் - இவனின்று

நம்முதலாஓதில் அருள் நாடாது நாடும் அருள்

சிம்முதலா ஓதுநீ சென்று. (41)

மேற்கண்ட இரண்டு பாடல்களின் வாயிலாக **ஈசன் அருள் ஆவி எழிலோர் திரேதம் மலம்** என்றும் **சிவன் அருள் ஆவி எழிலோர் திரோதம் மலம்** ஆகியவற்றை வரிசைப்படுத்திச் **சிவயநம** என வரிசைப்படுத்திக் காட்டி **அவன் எழுத்துக்களான அஞ்சின் அடை** அதாவது அஞ்செழுத்துக்களின் பண்பும், பொருத்தமானவை எனக் கூறுகிறது.

அஞ்சுஎழுத்தே ஆகமும் அண்ணல் அருமறையும்

அஞ்செழுத்தே ஆதிபுராணம் அனைத்தும்- அஞ்செழுத்தே

ஆனந்தத் தாண்டவமும் ஆறாறு கப்பாலாம்

மோனந்த மாமுத்தியாம். (44)

பொருள்: அஞ்செழுத்தே முதல்வன் வாக்கும், பெருமையுடைய அறம்,பொருள், இன்பம், வீடு. அஞ்செழுத்தே ஆதிபுராணங்கள் அனைத்தும். அஞ்செழுத்தே ஆனந்தத் தாண்டவமும் **முப்பத்தாறு தத்துவங்களுக்கு** அப்பாலுமான அமைதியான பரமுத்தியுமாகும் எனச் **சிவயநம** எனும் அஞ்செழுத்தின் சிறப்பை உணர்த்துகிறது. மேற்கண்ட இரண்டு பாடல்களின் வாயிலாகச் **சிவயநம** என்பதே முறையானது என்பதை அறியமுடிகிறது.



M-1452A M-1452B

எம்-1452எ,பி என்ற அடையாள எண்ணுடைய சதுர வடிவிலான சிந்து சமவெளி நகர நாகரிக வில்லையில் பத்து எழுத்துக்கள் பொறிக்கப்பெற்றுள்ளன. அவற்றை இடமிருந்து வலமாகப் ப + (ஞ் + சா) + (ட் + ச) + (ரு +ள்) + ப + ர + மே. **'பஞ்சாட்சருள் பரமே'** எனப் படிக்கப்பெறுகின்றன.

அவற்றுள் மூன்று எழுத்துக்களைக் கொண்ட **'பரமே'** என்ற சொல் தென்புலத்தாரைக் குறிக்கும் உள்நோக்கும் வரையாடு என்பதைச் சுட்டிக்காட்டுகிறது. பஞ்சாட்சருள் பரமே அதாவது பஞ்சாட்சருள் மேலானாதுக்கும் மேலானது என்பதை முன் கண்ட பாடல் எண் 41இல் உள்ள **அவன் எழுத்து** எனக் கூறுகிறது. அது முப்பத்தாறு தத்துவங்களுக்கு அப்பாலுமான அமைதியான பரமுத்தியுமாகும் என்பதைச் சுட்டிக்காட்டுகிறது. (**அவன் எழுத்து - சி எனும் சிவனைக் குறிக்கும் பெருவெழுத்து.**)

மேற்கண்டவற்றின் வாயிலாக 7,5000 ஆண்டுகளுக்கு முன்பாகப் பஞ்சாட்சருள் என்ற தொல்வாச்சியம் குற்றெழுத்துக்களைக் கொண்ட **சிவயநம** எனும் ஐஞ்செழுத்து மந்திரம் என்பதும், பஞ்சாட்சரம் என்பதைப் பஞ்சாக்கரம் என எழுதுவது தவறு என்பதும் தெரியவருகின்றன. முப்பத்தாறு தத்துவங்களுக்கு அப்பாலுமான அமைதியான பரமுத்தியுமாகும் என்பதைப்பற்றியும் ஆராய்ந்து அறியவேண்டும் என்ற ஆவலைத் தூண்டுகிறது.

புருடதத்துவம் (12), வித்தியாதத்துவம் (24) என ஆறாறு (36) தத்துவங்கள் என்பர். அவற்றை, வித்தியாத் தத்துவங்களாக ஐம்புதங்கள்(5), ஐம்பொறிகள் (5), ஐம்புலன்கள்(5), ஐந்தறிவுகள் (5), மனம், புத்தி, சத்துவம், சித்தம் (4) ஆகிய 24 தத்துவங்கள் சக்தித்தத்துவம் எனவும் அவை ஞானயோக மார்க்கத்துடன் தொடர்புடையவை என்பர்.

ஞானயோகமார்க்கம் முத்திக்கான நுழைவாயில் மட்டுமே ஆகும் என்பாருமுண்டு. அதற்கும் மேலானது அதாவது புருடதத்துவம் முதன்மையான புருடன், பிரகிருத்தி ஆகிய இரண்டுக்கும் மேலானது. அந்த மார்க்கமே சைவ சித்தாந்தத்தில் சிவமார்க்கம் என்பர்.

அந்த ஞான யோகமார்க்கத்தில், நெருப்பு (சி) காற்றோடு (வ) தொடர்புடையது. நிலம் (ந) நீரோடு (ம) தொடர்புடையது. ஆகாயம் (ய) எனவும் ஆகாயம் அனைத்தையும் உள்ளடக்கிக் கொண்டுள்ளது என்பதன் அடிப்படையில் **ய** எனும் ஆகாயத்தை மய்யப்படுத்திச் சிவயநம எனக் கூறப்பட்டுள்ளதும், அதுவே **நிராதாரயோகக் குறியீடு** என்பதும், அக்குறியீடு சிந்து வெளிப் பானை ஓடுகளிலும், தமிழகப் பானை ஓடுகளிலும், பாறை ஓவியங்களிலும் குறிப்பாகக் கீழ்வாலைப் பாறை ஓவியங்களில் வரையப்பட்டுள்ளதும் தெரியவருகின்றன.

அந்த நிராதாரயோகக் குறியீடு, ஆன்மா தன்னறிவு இழந்து அறிவுவடிவாய சிவனை அடைந்து பற்றற நிற்கும் நிலையைக் குறிக்கும் குறியீடு. அந்தக் குறியீடே சிந்து சமவெளி நகர நாகரிகச் செந்தமிழ் மெய்யெழுத்துகளில் ஐந்துப் புள்ளிகளை இணைக்கும் கோடுகளான **ய** எனும் உயிர்மெய்யெழுத்தின் வடிவம் என்பதும், அந்த எழுத்துச் **சிவயநம** எனும் அஞ்செழுத்து மந்திரத்தில் மய்யமாக உள்ளதும் தெரியவருகிறது.

எனினும், நமசிவய என்பதில் **ய** எனும் உயிர்மெய்யெழுத்து அந்தமாக (முடிவாக) உள்ளதே என்ற ஐயம் எழுகிறது. அதற்கான வினாவைத் திருவதிகை மனவாசங்கடந்தாரின் உண்மைத்தத்துவப் பாடல் (4) கூறுவது நினைவு கொள்ளத்தக்கது.

நாற்கோணம் பூமி புனல்நண்ணும் மதியின் பாதி
ஏற்கும் அனல் முக்கோணம் எப்போதும் ஆக்கும்
அறுகோணம் கால்வட்டம் ஆகாயம் ஆன்மா
உறுகாயம் ஆம் இவற்றால் உற்று.




பொருள்: நிலம் எனும் பூமியின் சதுரம், நீரின் வடிவம் அரைவட்டம், நெருப்பின் வடிவம் மேல்நோக்கும் முக்கோணம், காற்றின் வடிவம் அறுகோணம், ஆகாயம் கால்வட்டம் ஆகியவை ஆன்மா குடிகொண்டுள்ளதைக் காணும் உடலாகும் என்பதைக் காண்க - என ஐம்புதங்களின் வடிவங்களைக் கூறுகிறது.

இப்பாடலின் அடிப்படையில், ஐம்பூதங்களான 'ந' - நிலம், 'ம' - நீர், 'சி' - நெருப்பு, 'வ' - காற்று, 'ய' - ஆகாயம் ஆகியவற்றை மேல்நோக்கி வரிசைப்படுத்தி **நமசிவய** எனப் பரிணாம வளர்ச்சியடைந்துள்ளன என்பதும் தெரியவருகிறது.

கால் வட்ட வடிவம் விசிறிதலைப் பாகையின் மடிப்பு வடிவம் என்பதும், அதுவே குந்தலினி யோகத்தில் உச்சந்தலையில் ஆயிரம் தாமரை இதழ்களுடைய சகஸ்ரகாரம் சக்கரத்திலிருந்து பீறிட்டு மேலும் ஞானத்தைக் குறிக்குமொரு குறியீடு என்பதும் தெரியவருகிறது.

முன் கண்ட ஞான யோகமார்க்கத்தில், நெருப்பு (சி) காற்றோடு (வ) தொடர்புடையது. நிலம் (ந) நீரோடு (ம) தொடர்புடையது என்பதையும், ஆகாயம் (ய) எனவும் ஞானம் சகஸ்ரகாரம் சக்கரத்திலிருந்து பீறிட்டு எழும் என்பதைக் குறியீடு என்பதையும் தமிழகத்தின் மதுரை மாவட்டம் கீழவளவு, விழுப்புரம் மாவட்டம் கீழ்வாலை, புதுக்கோட்டை மாவட்டம் திருமெய்யம், சிவகங்கை மாவட்டம் திருமலை போன்ற பாறை ஓவியங்களில் காணமுடிகின்றன.

ஞானயோகத்தில் அஞ்செழுத்து மந்திரத்தை **நமசிவய** எழுதும் உச்சரிப்பதுமாக இருந்துள்ளதை அறியமுடிகிறது. அம்மந்திரத்தை உரக்க உச்சரிக்காமல் மனதாலும் உதடுகளாலும் மட்டுமே முணுமுணுக்க வேண்டும் எனத் திருவதிகை மனவாசங்கடந்தாரின் உண்மைத்தத்துவப் பாடல் உரையாசிரியர் குறிப்பிட்டுள்ளது ஆய்வுக்குரியது.

மேற்கண்ட ஆய்வின் வாயிலாகவும், **ந** என்ற எழுத்துரு முதலில் வருமேயாயின் அதனால் அருள் கூடாது. **சி** என்ற **சிவபெருமானைக் குறிக்கும் பெருவெழுத்துரு** முதலில் வருமேயாயின் அதனால் அருள் கூடும் என்பதனால் பஞ்சாட்சரம் எனும் அஞ்செழுத்து மந்திரம் குற்றெழுத்துக்களைக் கொண்ட **சிவயநம** என்பதே முறையானது எனலாம்.

புதுக்கோட்டை மாவட்டம் மலையடிபட்டி



சிவயநம பெருக

**சிவயநம** என்பதே முறையானது என்பதைப் புதுக்கோட்டை மாவட்டம், மலையடிபட்டி திருவாலத்தூர் மலையின் மேல்பரப்பில் பொறிக்கப்பெற்றுள்ள கல்வெட்டு ஒன்று **சிவயநம பெருக** என உறுதிசெய்கிறது. (பெருக - நிரம்ப). நன்றி: பத்மஸ்ரீ சே.தாமோதரன்.

அந்த முறையான **சிவயநம** என்பதே ஞானயோகமார்க்கத்தில் **நமசிவய** எனப் பிற்காலத்தில் மாற்றம் அடைந்துள்ளது. அஞ்செழுத்து என்பதைப் பஞ்சாக்கரம் என எழுதுவதும் உச்சரிப்பதும் முறையானதல்ல. அதனைப் பஞ்சாட்சரம் என எழுதுவதும் உச்சரிப்பதுமே சரியான முறை. பஞ்சாட்சரம் சிவனும், சிவனின் அருளுமாகும். அம்மந்திரம் 36 தத்துவங்களுக்கும் மேலானதுமாகும் போன்ற உண்மைகள் 7,500 ஆண்டுகளுக்கும் முற்பட்ட சிந்து சமவெளி நகர நாகரிக முத்திரை எண்: கா-52எ வில்லை, எண்: எம்-1452எ,பி ஆகிய இரண்டின் வாயிலாக அறிவிக்கப்பட்டுள்ளதாகத் தெரியவருகின்றன.

**அருளோடும் அன்போடும் வாராப் பொருளாக்கம் புல்லார் புரள விடல்** - எனத் திருக்குறள் (752) கூறுகிறது.

பொருள்: பொருளும், இன்பமும் அன்பினாலும், அருளாலும் வரவேண்டும். எப்போதும் நம்மிடத்தில் அன்பு முன்னதாக இருக்கவேண்டும். அன்பு முன்னிருந்தால் மட்டுமே அருள் வரும். அன்பு ஒரு மாயை என்றாலுமது திருவன்பு அருளில் கலந்து தெளிவைத் தரும்.

**அன்பே சிவம்** எனும் அந்தத் திருவன்பு எவ்வாறு அருளில் கலந்து தெளிவைத் தரும்? என்ற வினாவுக்கான விடையை **அன்பன்** என்ற தலைப்பில் ஆராய்ந்தறியலாம்.

# அன்பன்


M-1162A

சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் வரலாற்றுச் சான்றுகளில் குறிப்பாகப் பானை ஓடுகளில் கீறப்பெற்றுள்ளதும், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் பதிவிடப்பெற்றுள்ள தொல்வாச்சியங்களில் **அன்பு** என்ற சொல்லுடன் தொடர்புடையவை உள்ளன. அந்த அன்பு சொல்லில் உள்ள மூன்று எழுத்துக்களில் **அன்** எனும் இரண்டெழுத்துச் சொல் **அவன்** என்பதைக் குறிக்கும். அச்சொல் ஒரு தீக்குச்சி மனித வடிவமாகவே சுட்டிக்காட்டப்பெற்றுள்ளன.

**அவன்** என்ற ஆண்பால் சுட்டுப்பெயர்ச் சொல் மெய்ப்பொருள் உண்மையில் **சிவன்** என்ற சொல்லைக் குறிக்குமென்பர். இந்த மெய்ப்பொருள் உண்மையைத் திருக்குறள் அன்புடைமை அதிகாரத்தில் முதலாம் பாடல் **என்பிலதனை வெயில்போலக் காயுமே அன்பிலதனை** எனவும், திருமந்திரம் 270ஆம் பாடலின் முதலடியில் **அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவலார்** எனச் சுட்டிக்காட்டப்பெற்றுள்ளன.

சிந்து சமவெளி தொல்வாச்சியங்களில் தெய்வத்தன்மையைக் குறிக்கும் **'சீ'** எனும் எழுத்துச் சீப்பு வடிவுடையதாகவே காணப்பெறுகிறது. **'சீ'** என்ற எழுத்துரு தாய்க்கும் சேய்க்குமான கொப்பூழ் கொடி உறவின் சிறப்பையும், **அன்பு** எனும் தொடர்புடையோர்மாட்டு உண்டாகும் பற்றையும் சுட்டிக்காட்டும் வகையில் கொப்பூழ் பகுதியில் கீழ் நோக்கியவாறு படுக்கை வசத்தில் சுட்டிக் காட்டப் பெற்றுள்ளது. அதற்கோர் உதாரணமான எம் - 1162எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையைக் குறிப்பிடலாம்.

இந்த முத்திரையில் அலங்காரத் தொங்கு சீலை போத்திய ஒரு யானையின் உருவமும், யானைமேல் அமைந்த இருக்கை எனும் அம்பாரியில் **'சீ'** எனும் முதலாம் எழுத்துரு **அன்** எனும் தீக்குச்சி மனித உருவத்தின் கொப்பூழ் பகுதியிலும், **'ப, ப்'** ஆகிய இரண்டும் **கால் பாதங்களாகப் 'ப'** எனும் எழுத்துருவின் உள்ளடங்கியபடியும், **'ன்** எனும் எழுத்துரு தனித்தும் சுட்டிக்காட்டப் பெற்றுள்ளன.

இந்த முத்திரையை உள்ளிருந்து வெளியாகவும், இடமிருந்து வலமாகவும், (சீ + அன் + ப + ப் + ப ) + ன். **சீ அன்பப்பன்** எனப் படிக்கப்பெறுகிறது. (சீ - திரு / தெய்வத் தன்மை / திருமகள் (எ) அம்மை. அன்பப்பன் - அன்புக்குரிய அப்பன் / தகப்பன் / தந்தை.)

**தொல்வாச்சியம் : திரு அம்மையின் அன்புக்குரிய அப்பன் (அ) திரு அன்புடைய அப்பன்.**



K-60A

கா-60எ என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் யானை மேல் அமைக்கப்பெறும் இருக்கையான அம்பாரியைப் 'ப' என்ற எழுத்தாகவும், அதனுள்ளே **அன்** எனும் செல்லைக் குறிக்கும் ஒரு மனித வடிவக் குறியீடும் நான்கு எழுத்துக்களும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இந்த முத்திரையிலுள்ள எழுத்துக்களையும், குறியீட்டையும் இடமிருந்து வலமாக, (தி + ரு) + (அன் + ப) + ன். **திரு அன்பன்** எனப் படிக்கப்பெறுகிறது.

**(திரு-** தெய்வத் தன்மை. அன்பன் - பக்தன் / தோழன் / கணவன். **'சீ'** என்பதற்கு இணையான மற்றொரு சொல் **திரு** என உறுதிசெய்கிறது.

**தொல்வாச்சியம் : தெய்வத் தன்மையுடைய பக்தன் / தோழன் / கணவன்.**



Ns-56a

என்.எஸ்-56எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **அன்** எனும் செல்லைக் குறிக்கும் ஒரு தீக்குச்சி மனித வடிவக் குறியீடும் ஆறு எழுத்துக்களும், ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரையிலுள்ள குறியீட்டையும் மூன்று எழுத்துக்களை இடமிருந்து வலமாக, அன் + ப + னா + தி + ர + ரு + ரு. **அன்பனாதிரருரு. அன்பன் ஆதிரர் உரு** எனப் படிக்கப்பெறுகிறது. (அன்பன் - பக்தன், தோழன், கணவன். ஆதிரர்- மூத்தோர. உரு- தெய்வத்திருமேனி).

**தொல்வாச்சியம் : பக்தன் மூத்தோரின் தெய்வத்திருமேனி**

இந்த முத்திரைப் **பக்தன் மூத்தோரின் தெய்வத்திருமேனி** எனப் பக்தனின் சிறப்பை உணர்த்துவதை அறியமுடிகிறது.

அத்துடன் அடியார் என்பது **தாசோகம்** எனும் **நான் அடியேன்** எனும் சிவபக்தர்கள் கூறுவதன் உட்பொருளையும் உணரமுடிகிறது.

அடியார் என்பதை அடியாள் எனவும், தாசா (தாசர்) எனவும், ஆயுதங்களை ஏந்திக் கொலைக் குற்றம் செய்வோர் எனச் சிந்து சமவெளி நகர நாகரிக மக்களை இழிவுபடுத்தியவரின் அறியாமையை அகற்றுவதும் தெரியவருகிறது.

குறிப்பு: சோகம், பதிதாசோகம் ஆகியவை பற்றிப் பிற்பகுதியில் **பதிதாசோகம்** என்ற தலைப்பில் காணலாம்.



H-440a

எச்- 440எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **அன்** எனும் சொல்லைக் குறிக்கும் ஒரு தீக்குச்சி வடிவ மனிதக் குறியீடும் மூன்று எழுத்துக்களும், ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரையிலுள்ள குறியீட்டையும் மூன்று எழுத்துக்களையும் இடமிருந்து வலமாக, அன் + பு + சோ + உ. **அன்பு சோ உ** எனப் படிக்கப்பெறுகிறது.

**(அன்பு-** தொடர்புடையோர் மாட்டு உண்டாகும் பற்று. **சோ- உமையம்மை**/ வாணகரன் நகர் / வியப்பு. **உ-** ஓரெழுத்துச் சொல் / **சிவன்** / உமையம்மை / இரண்டு எனும் எண்.)

**தொல்வாச்சியம்: அன்பு உமையும் சிவனும்** (அ) **அன்பு சக்தியும் சிவனும் / அன்பு உமாபதி / அன்பு அம்மையப்பன்.**

குறிப்பு: ஆரம்பகாலத்தில் **அன்ப** என்ற சொல்லில் உள்ள **'ப'** என்ற எழுத்துருவின் வடிவத்தைப் **'பு'** என ஊகித்து அன்பு எனப் படிக்கும் படியாகவும், பிற்காலத்தில் **'பு'** என்ற வடிவமாகப் பரிணாம வளர்ச்சியடைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.


B-la

ப-1எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **அன்** எனும் சொல்லைக் குறிக்கும் தீக்குச்சி வடிவ மனிதக் குறியீடுகள் இரண்டும், ஆறு எழுத்துக்களும், **ஆழி** எனும் சொல்லைக் குறிக்கும் குறியீடுகள் இரண்டும், ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரையிலுள்ள குறியீடுகளையும் மூன்று எழுத்துக்களையும் இடமிருந்து வலமாக, அன் + பு + அன் + (இ)ட் + ட + ஊ + ன் + யா + ஆழி + ஆழி. **அன்பு அன் இட்ட ஊன் யா ஆழி ஆழி** எனப் படிக்கப்பெறுகிறது.

(அன்பு - தொடர்புடையோர்மாட்டு உண்டாகும் பற்று. அன் - அவன். இட்ட - கொடுத்த / அளித்த / படைத்த. ஊன் - உடல். யா - அகலம் / யாவை. ஆழி ஆழி - வட்டத்தில் வட்டம்.)

**தொல்வாச்சியம் : தொடர்புடையோர்மாட்டு உண்டாகும் பற்று அவன் அளித்த உடலுடைய அகலமான வட்டத்தில் வட்டம் (மக்கட்பகுதிக்குள் பகுதி)**

இந்த முத்திரை சிந்து சமவெளி நகரங்களில் ஒன்றான **பண்ணவாழி எனும்** நகரத்தில் மேற்கொள்ளப்பட்ட தொல்பொருள் அகழாய்வின் போது வெளிக்கொணரப் பெற்றுள்ளதால், அந்நகரத்தில் ஒரு குறிப்பிட்ட பகுதியில் வாழ்ந்த பெருங்குடி மக்கட்பகுதியைச் சிறப்பித்துச் சுட்டிக்காட்டுவதாகவும் கருதலாம்.

பண்ணவாளி 335 என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஏறு தழுதல் காட்சியும், வீரத் தழும்பு கொள்ளுதல் எனப் பொருள்படும் வடு என்ற சொல்லும் உள்ளதனால், அப்பகுதி பழந்தமிழர்கள் அதிகளவில் வாழ்ந்ததொரு பகுதியாக இருக்கக்கூடும் எனக் கருதலாம். (பண்ணவாளி - பண்ணம் என்ற பகுதியைச் சேர்ந்தவர்.)

தமிழகத்தில் பண்ணவாடி எனும் பழமையானதொரு கிராமம் சேலம் மவட்டம் மேட்டுரிலிருந்து கோட்டையூர் வழியாகக் கர்நாடக மாநிலம் எல்லைப் பகுதிக்குச் செல்லும் மலைப்பாதையில் அமைந்துள்ளது என்பதும், அவ்வூர் எட்டுக் கிராமங்களுக்குத் தலைமைக் கிராமம் என்பதும் குறிப்பிடத்தக்கது.


H-310a


M-1439a


M-1440a


M-1441a


M-1442a

எச்-310எ, எம்-1439எ, எம்-1440எ, எம்-1441எ, எம்-1442எ ஆகிய அடையாள எண்களுடைய ஐந்து முத்திரைகளிலும் ஒரே மாதிரியான மூன்று எழுத்துக்கள் பொறிக்கப் பெற்றுள்ளன.

இவ்வைந்து முத்திரைகளிலுள்ள மூன்று எழுத்துக்களை இடமிருந்து வலமாகப், பா + ச + ன் **பாசன்** எனப் படிக்கப்பெறுகிறது.

(பாசன்- சிற்றுயுயிர் / சீவான்மா / சிவபெருமான் / யமன்).

**தொல்வாச்சியம் : பாசன் பரஞ்சோதி (எ) சிவபெருமான்.**


M- 1429A


M- 1429B


M- 1429C

பாசன் பரஞ்சோதி (எ) சிவபெருமான் என்பதை எம்-1429எ,பி,சி என்ற அடையாள எண்ணுடைய முப்பட்டைக் கட்டை வடிவமு டைய மாவுக்கல்லிலானதொரு வில்லை எவ்வாறு உறுதி செய்கிறது என்பதைக் காணலாம்.

அவ்வில்லையின் **'எ'** புறத்தில் தீக்குச்சி மனித வடிவிலான ஒரு குறியீடு **அவன்** என்பதைக் குறிக்கும் **அன்** எனும் சொல்லும், எட்டு எழுத்துக்களும் உள்ளன.

**'பி'** புறத்தில் ஒரு மரக்கலமும், மரக்கல வீடும், மரக்கலத்தை இலக்கு நோக்கி செலுத்துவதற்கான இரண்டு துடுப்புகளும், கடலில் தத்தளிக்குமோர் உருவத்தை மனவருத்தத்துடன் உற்றுநோக்குமொரு பறவையும், பறக்கும் நிலையிலுள்ள மற்றுமொரு பறவையும் காணப்பெறுகின்றன.

**'சி'** புறத்தில் ஒரு மகரம் (எ) முதலையும் அதன் வாயில் சிக்குண்டு கிடக்குமொரு மீனின் உருவமும் உள்ளன. முதலைக்கு வன்மீன் (அ) வன்மீனம் எனும் பெயருண்டு.

இந்த வில்லையின் வாயிலாக அறிவிக்கப்பெற்றுள்ளதை ஆராய்ந்தறிவதற்கு முன் இந்நிலவுலகில் மானுடர் வாழ்க்கையைப் பற்றி நம் முன்னோர் கூறியதைக் காண்பது நல்லது.

இந்நிலவுலகில் மானுடராய்ப் பிறவியெடுத்து நிச்சயக்கப்பட்டதொரு குறிப்பிட்ட காலம் வரை வாழும் வாழ்க்கையைச் **சம்சாரம்** எனவும், அதனைப் பிறவிப் பெருங்கடலுடன் ஒப்பிடுவர். அக்குறிப்பிட்டக் காலத்தில் புறப்பற்றின் வெளிப்பாடான அறியாமையால் அப்பிறவிப்-பெருங்கடலின் மாயச்சுழலில் மூழ்கிச் சுழன்று, சுழன்று இந்நிலவுலகில் மீண்டும் மீண்டும் மானுடராகப் பிறவியெடுத்துப் பிறப்பு - இறப்பு, இன்பம் - துன்பம் எனும் இரட்டைகளை அனுபவித்து வாழ்வர் என்பர். அவ்வாறு வாழ்வதை வன்மீன் எனும் முதலையின் வாயில் சிக்குண்டு கிடக்கும் மீனுடன் ஒப்பிட்டுச் சுட்டிக்காட்டியுள்ளதாகக் கருதலாம்.

அவ்வாறு மீண்டும் மீண்டும் பிறவி எடுப்பதை மறுபிறவி என்றும் அந்த மறுபிறவியைத் தடுக்க இப்பிறவிலேயே அப்பெருங்கடலை நீந்திக் கரைச்சேரவேண்டும் அதாவது வீடுபேறு பெறவேண்டும் என்பர். வீடுபேறு பெறுவதே மானுடர் பிறப்பின் ரகசியமும், வாழ்க்கையின் இலட்சியமும் என்பர். அதைத் தவிர வேறு எதுவுமே இல்லை என அறுதியிட்டும் கூறுவர். அந்தச் சம்சாரம் எனும் பிறவிக்கடலை நீந்திக் கரைசேருவதற்கு அதாவது வீடுபேறு பெறுவதற்குத் தடைகளாக உள்ளவற்றை அகற்றப்படவேண்டுமென்று குறிப்பிடுவர்.

அத்தடைகள் ஆறு என்றும், அவற்றில் முதலாவது தடை **காமம் எனும் ஆசை.** அந்த ஆசை நிறைவேறாமல் தடுப்பதன் விளைவு **குரோதம் எனும் கோபம்.** காமம் எனும் ஆசை நிறைவடைந்தாலும் கூட அது மேலும் மேலும் அதிகரிக்கும்.

அதன் விளைவு **லோபம் எனும் பேராசை. குரோதமும், லோபமும்** அதாவது கோபமும் பேராசையும் **மாயை** எனும் **ஏமாற்றப்படுவதற்கான** காரணமாகிறது என்பர். பேராசை நிறைவடைவதன் விளைவு **மடா எனும் போதை.**

அந்தப் போதைத் தலைக்கேருவதன் விளைவு **தானே உயர்ந்தவன்** எனும் **அகங்காரம்** அதாவது **பெருமை.** அப்பெருமையைத் தன்னைத் தவிர வேறு எவரும் பெற்றுவிடக்கூடாது என்ற எண்ணத்தின் விளைவு **மாச்சரியம் எனும் பொறாமை** என்பர்.

மேற்கண்ட ஆறு விதமான தடைகளுக்கு மூலக்காரணம் **காமம்** எனும் **ஆசை.** மற்றவை **ஐந்தும் காரணத்தால் விளையும் காரியங்கள்.** அந்த மூலக்காரணமான **காமம்** எனும் **ஆசை** பிறவிப் பெருங்கடலில் மீண்டும் மீண்டும் எழும் ஓயாதக் கடலலைக்கு ஒப்பானது என்பர்.

ஆசையை அடக்குவது மிகவும் கடினம் என்றாலும் கூட, அதனை **மனக்கட்டுப்பாட்டால் அடக்க முடியும்** என்பது மூத்தோர் வாக்கு. **மனக்கட்டுப்பாட்டால்** பிறவிக் கடலில் மூழ்கி தத்தளிக்காமல், பிறவிக் கடலை நீந்திக் கரைசேரவும் உதவுமொரு மிதவையே ஒரு கட்டுமரம் என்றும், அதனை மனக்கட்டுப்பாட்டுக்கு உதவும் ஏழாவது அறிவான புத்தியுடனும் ஒப்பிடுவர். காலப்போக்கில் அக்கட்டுமரத்தை ஓடத்துடனும் மரக்கலத்துடனும் ஒப்பிடப்பெற்றுள்ளது.

அந்த மரக்கலத்தைக் கடல்கரையை நோக்கிச் செலுத்த உதவுவது துடுப்பு. அத்துடுப்பை எண்ணத்துடன் ஒப்பிடுவர். அத்துடுப்பின் நுனிப்பகுதி இருகரங்களால் இறுகப்பிடிக்க உதவும் வகையில் உருண்டு திரண்டு திண்மை எனும் வலிமை உடையதாகவும், அதனடிப் பகுதி அகன்று விரிந்துமிருப்பதைப் பரந்த எண்ணத்துடன் ஒப்பிடுவர். அத்திண்மையுடைய ஒருவரைத் **திண்ணியன்** என்பர். மனக்கட்டுப்பாட்டால் பிறவிப்பெருங்கடலைக் கடந்து கரைசேருவது உறுதி என்பதைத் **திண்ணியம்** என்பர்.

அத்திண்ணியத்தையே **எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார் திண்ணியர் ஆகப்பெறின்** என வினைத்திட்பத்தில் உரைத்துள்ளார் திருவள்ளுவர் பெருமான். தமிழகத்தில் சில ஊர்களுக்குத் **திண்ணியம்** என்ற பெயர்களுண்டு என்பது குறிப்பிடத்தக்கது. அத்திண்ணியங்களில் ஒன்றே இந்தியத் திருநாட்டின் வடமேற்கு திசையில் அமைந்துள்ள சிந்து சமவெளி எனலாம்.

அந்தச் சிந்து சமவெளியின் நகரங்களில் வாழ்ந்த மக்களின் நாகரிகமே சிந்து சமவெளி நகர நாகரிகம் என்பதும், அவர்கள் பேசிய மொழியே உலகின் முதல் மொழியான தமிழ் மொழி என்பதும், அந்நாகரிக மக்கள் அறிவித்துச் சென்றுள்ளதே சிந்து சமவெளி நகர நாகரிகக் குறியீடுகளும், எழுத்துக்களும், அவைவே உலக வரலாற்றின் துவக்கக் காலம் என்பதும் முன்கண்டது நினைவுக் கொள்ளத்தக்கது.

அந்த உலக வரலாற்றின் துவக்கக் காலத்துச் சுவடுகளில் பானை ஓடுகளில் கீறப்பட்டுள்ளவையும், வில்லைகளிலும், முத்திரைகளிலும் பொறிக்கப்பட்டுள்ள குறியீடுகளும் எழுத்துக்களுமாகும் என்பதும் நினைவு கொள்ளத்தக்கது.

அவற்றில் ஒன்றே சிந்து சமவெளி நகர நாகரிகப்பகுதியில் இறந்தவர் மேடு எனும் மோகஞ்சொ-தரோ எனும் நகரத்தில் தொல்பொருள் அகழாய்வின் போது வெளிக்கொணரப்பட்ட எம்-1429எ,பி,சி என்ற அடையாள எண்ணுடைய முப்பட்டைக் கட்டை வடிமுடைய மாவுக்கல்லானதொரு வில்லை.

**எம்-1429சி**



M- 1429C

முன்கண்ட ஆறுதடைகளில் முதலாவதான காமம் எனும் ஆசையைக் குறிப்பது முதலை. ஆதிமனிதன் காமம் எனும் ஆசையால் அஞ்ஞான நிலையில் சம்சாரக் கடலில் வன்மீன் (எ) முதலையின் வாயில் சிக்குண்டு தவிப்பதைக் குறிப்பது மீன்.

அஞ்ஞான நிலையில் சிக்குண்டு தவிப்பது மானுடர் மட்டுமல்லர். மானுடர் உடலில் உள்ளுயிராகச் சிலகாலம் குடிகொண்டிருக்கும் ஆன்மாவும் ஆகும். அந்த ஆன்மாவே முதலைவாயில் சிக்குண்டுகிடக்கும் ஒரு மீனை உற்றுநோக்கி வருத்தத்துடன் மரக்கலத்தில் அமர்ந்த நிலையிலுள்ளதொரு பறவை. அப்பறவையை எம்-1429பியில் காண்க.

**எம்-1429பி**



M- 1429B

பிறவிப் பெருங்கடலில் மூழ்கித் தத்தளிக்காமல் மனக்கட்டுப்பாட்டால் மரக்கலத்தில் பயணித்து வலிமையான துடுப்புக்களால் சம்சாரக் கடலைக் கடந்து கரையேறுவது ஞானம்.

ஞானத்தால் பெறுவது வீடுபேறு. வீடுபேறுவைக் குறிப்பிடுவது மரக்கலவீடு. வீடுபேறு பெற அதாவது இறைவனின் திருவடியை அடைய பயணிக்கத் துவங்கும் ஆன்மாவாகிய உயிரைக் குறிப்பது மரக்கலத்தில் பறக்கும் தருவாயிலுள்ள பறவை.

இதையே **பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவன் அடிசேரா தார்** எனக் கடவுள் வாழ்த்தில் உரைத்துள்ளார் திருவள்ளுவர் பெருமான்.

**எம்-1429எ**



M- 1429A

அந்த இறைவன் எனும் கடவுள் யார் என்பதே எம்-1429எ புறத்தின் முதலிலுள்ள குச்சிமனித வடிவிலான குறியீடும், **அவன்** எனப் பொருள்படும் **அன்** என்ற சொல்லுமாகும். அச்சொல்லும் எட்டு எழுத்துக்களும் இடமிருந்து வலமாக. அன் + பு + ள் + ள + பா + ச + ன + (ரு + ள்). **அன்புள்ள பாசனருள். அன்புள்ள பாசன் அருள்** எனப் படித்துப் பொருளறியப்பெறுகின்றன. (அன்புள்ள - தொடர்புடையோர்மாட்டு உண்டாகும் பற்றுள்ள. பாசன் - சிவன். அருள் - கருணை.)

**தொல்வாச்சியம் : தொடர்புடையோர்மாட்டு உண்டாகும் பற்றுச் சிவனின் கருணை.**

**அன்பின் வழியது உயிர்நிலை; அஃதிலார்க்கு என்புதோல் போர்த்த உடம்பு** என அன்பின் சிறப்பைத் திருவள்ளுவர் பெருமான் அன்புடைமையில் சுட்டிக்காட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது.

முன்கண்ட **பாசன்** என்ற சொல் யாரைக் குறிப்பிடுகிறது என்ற வினாவுக்கு, பாசன் என்ற சொல் **பாசன் பரஞ்சோதி (எ) சிவனைக்** குறிப்பிடுகிறது என்பதை உறுதி செய்கிறது.

அந்தப் **பாசன் பரஞ்சோதி (எ)** சிவனை அன்பால் மட்டுமே அணுகி அவன் கருணையினால் அவன் திருவடியை அடையமுடியும். யாகக் குண்டத்தில் தீமூட்டி மந்திரங்களை ஓதி இந்திரன், அக்கினி, வாயு போன்ற தேவர்களை வணங்கி வழிபட்டால் சிவனின் திருவடியை அடைய முடியாது என அகத்தியர் பெருமான் கூறியது மீண்டும் குறிப்பிடத்தக்கது.

அன்பும், பாசமும், கருணையும் உடைய ஆதிமுதல்வனே சிவன் என்பதனால் **அன்பே சிவம்** எனச் சைவசித்தாந்தம் கூறுகிறது. அன்பால் விளையும் பாசம், அருள் எனும் கருணை ஆகிய இரண்டைப்பற்றித் திருமூலர் பெருமான் அருளிய திருமந்திரம் கூறுவதாவது,

பாசத்தில் இட்டது அருள்அந்தப் பாசத்தின்
நேசத்தை விட்டது அருள்அந்த நேசத்தில்
கூசற்ற முத்தி அருள்அந்தக் கூட்டத்தின்
நேசத்துத் தோன்றா நிலை அருளாமே. *(1802)*

**பொருள்:** (சீவராசிகளை) அவன் பாசத்தில் கிடக்கச் செய்தது அவனருள். பிறகு அந்தப் பாசத்தை நேசத்தில் கிடக்கச்செய்தது அவனருள். அந்த நேசத்தால் தளர்வில்லாத பெருமை எனும் முக்தியை அடையச் செய்வது அவனருள். அம்முக்தியடைந்த கூட்டத்தாரைப் பிறவாநிலையை அடையச் செய்வதும் அவனருளாமே.

அடையாள எண்ணில்லாதொரு முத்திரை ஒன்றில் மூன்று எழுத்துக்களும், ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் உள்ளன.



இந்த முத்திரையை இடமிருந்து வலமாக, நே + ச + ன். **நேசன்** எனப் படிக்கப் பெறுகிறது. **(நேசன்** - அன்புடைய பக்தன் / அடியான் / நண்பன்.)

**தொல்வாச்சியம் : அன்புடைய பக்தன்.**

**சிவனை நேசிப்பவன் சிவநேசன்** என்பதைக் குறிப்பிடும் வகையில் தத்தம் ஆண் குழந்தைக்கு **சிவநேசன்** எனப் பெயர்ச் சூட்டுவது பழந்தமிழர் மரபு என்பது குறிப்பிடத்தக்கது.


H-2019A


H-2019B


H-2019C

எச்-2019 எ, பி, சி என்ற அடையாய எண்ணுடைய வில்லையின் **எ, பி** ஆகிய இருபுறங்களில் உள்ள தீக்குச்சி மனித வடிவிலான அன் எனும் சொல்லையும் ஒன்பது எழுத்துக்களையும் இடமிருந்து வலமாக, அன் + பு + சோ + சி + ச + ந + மே + த் + தி + ஆ. **அன்பு சோசி சந மேத்தி ஆ** எனப் படிக்கப்பெறுகிறது.

(அன்பு - தொடர்புடையோர்மாட்டு உண்டாகும் பற்று. சோ - உமையம்மை (அம்மை). சி - சிவன் (அப்பன்). சந - மக்கட் கூட்டம். மேத்தி- தூய்மை. ஆ - சிற்றுயிர்(கள்.)

**தொல்வாச்சியம் : தொடர்புடையோர்மாட்டு உண்டாகும் பற்றுள்ள அம்மையப்பனின் மக்கட் கூட்டம் தூய்மையான சிற்றுயிர்கள்.**


H-2054A


H-2054B


H-2055A


H-2055B

எச்-2054எ,பி, எச்-2055எ,பி, ஆகிய இரண்டு அடையாள எண்களுடைய வில்லைகளில் ஒரே மாதிரியான **அன்** எனும் சொல்லைக் குறிக்கும் தீக்குச்சி வடிவிலான மனித குறியீடும், நான்கு எழுத்துக்களும் உள்ளன.

இவ்விரு வில்லைகளை இடமிருந்து வலமாக. அன் + பு + சோ + சி + மே. **அன்பு சோசி மே** எனப்படிக்கப்பெறுகின்றன.

(அன்பு - தொடர்புடையோர்மாட்டு உண்டாகும் பற்று. சோ -உமையம்மை. சி - சிவன் (அப்பன்). மே - ஏற்றம், உயர்ச்சி, மேம்பாடு.)

**தொல்வாச்சியம் : தொடர்புடையோர்மாட்டு உண்டாகும் பற்று அம்மையப்பனின் மேம்பாடு.**

திருமூலர் அருளிய திருமந்திரங்கள் அனைத்தும் **'ஏ'** (ஏற்றம்) என முற்றுப் பெறுவது போலவே இவ்விரு வில்லைகளில் முற்றுப்பெறுவது இவற்றின் சிறப்பாகும்.



M-853a

எம-853எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **அன்** எனும் சொல்லைக் குறிக்குமொரு தீக்குச்சி வடிவ மனித உருவமும், ஏழு எழுத்துக்களும், ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாக, அன் +பு + (உ +ள்) + ள+ (இ)ட் + ட +ஆ. அன்புள்ள இட்ட ஆ. **அன்பு உள்ள இட்ட ஆ** எனப் படிக்கப்பெறுகிறது.

(அன்புள்ள - தொடர்புடையோர்மாட்டு உண்டாகும் பற்று / பக்தி. உள்ள - உண்டாகி இருக்கிற, உண்மையான. இட்ட - கொடுத்த, படைத்த, வைத்த. ஆ - சிற்றுயிர், ஆவது, ஆகுகை.)

**தொல்வாச்சியம் : தொடர்புடையோர்மாட்டு உண்டாகி இருக்கிற பற்று இட்டதாகுகை.**



H-2143A&B

எச்-2143எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் **அன்** எனும் சொல்லைக் குறிக்கும் தீக்குச்சி வடிவிலான மனித குறியீடும், ஆறு எழுத்துக்களும் உள்ளன.

இவ்வில்லையை இடமிருந்து வலமாக. அன் + பு + (உ + ள்) + ள + ப + ண். **அன்பு உள்ள பண்** எனப்படிக்கப் பெறுகிறது.

(அன்பு - தொடர்புடையோர்மாட்டு உண்டாகும் பற்று. உள்ள - உண்டாகி இருக்கிற, உண்மையான. பண் - இசை / இசைப்பாட்டு / தகுதி / அமைவு / தொண்டு.)

**தொல்வாச்சியம்: தொடர்புடையோர்மாட்டு உண்டாகும் பற்று உண்மையான அமைவு / தகுதி.**

குறிப்பு: முன் கண்டபடி ஆரம்பகாலத்தில் **அன்ப** என்ற சொல்லில் உள்ள **'ப'** என்ற எழுத்துருவின் வடிவத்தைப் **'பு'** என ஊகித்து அன்பு எனப் படிக்கும் படியாகவும், பிற்காலத்தில் **'பு'** என்ற வடிவமாகப் பரிணாம வளர்ச்சியடைந்துள்ளதைப் பிற்பகுதியில் காணலாம்.



M-8a

எம்-8எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஐந்து எழுத்துக்களும், ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இந்த முத்திரையிலுள்ள நான்கு எழுத்துக்களை இடமிருந்து வலமாக, ம +கா +(ன +ன் + பே). மகானன்பே. **மகான் அன்பே** எனப் படிக்கப்பெறுகிறது.

(மகான் - கொடைப்பண்பினோன் / அறிவுத் தத்துவம் அறிந்த அறிஞன் / பெரியோன். அன்பே - அன்பின் (ஏற்றம்) / மேம்பாடு.)

**தொல்வாச்சியம்: அறிவுத் தத்துவம் அறிந்த அறிஞனின் அன்பு மேம்பாடு**

பொதுவாகத் தத்தம் குடும்பம் தலைத்தோங்கவும், சொத்துக்கு உரிமையுடைய வாரிசாக ஓர் ஆண் மகனையும், ஆசை எனும் பாசத்திற்கு ஒரு பெண் மகளையும் குறிப்பிடுவர். எனவே இந்த முத்திரையை மகன் அன்பே என்றில்லாமல் மகான் (ஞானியின்) அன்பே எனப்படித்துப் பொருளறிவது ஏற்புடையது.

ஏனெனில், அன்பு என்ற சொல் உண்மையில் தான் படைத்த உயிர்கள் அனைத்தையும் தானாக்கிக் கொள்ளுதற்கண் இறைவனுக்குள்ள இச்சை மிகுதி என்பனார் ஞானிகள்.

குறிப்பு: இந்த முத்திரையில் பொறிக்கப்பெற்றுள்ள **'க்'** எனும் **மெய்யின்** வருக்கவகையான **'கா'** எனும் உயிர்மெய் எழுத்துரு. சிந்து சமவெளி நகர நாகரிக எழுத்துக்களில் **'க்'** எனும் மெய்யும், **'க** முதல் **'கௌ'** வரையிலான 12 உயிர்மெய்களும் எந்தவிதமான வேறுபாடில்லாமல் அதாவது எவ்விதமான மாற்றம் இல்லாமல் ஒரே வடிவமாகவே காணப்பெறும். அவ்வாறே **'பெ, பே'** ஆகிய இரண்டெழுத்துக்களும் மாற்றமேதும் இல்லாமல் ஒரே வடிவமாகவே காணப்பெறும் என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த முத்திரையிலுள்ள **'க'** எனும் ஓரெழுத்து முதன்மை எண் ஒன்று, ஆன்மா, பரமன் ஆகியவற்றில் குறிப்பாகப் பரமனைப் பற்றிய செய்திகள் யாவை? என்ற வினாவுக்கு முதலில் **'க'** என்பதைப்பற்றியும், அதனையடுத்துச் **சிவனின் வெளிப்பாடுகள்** என்ற தலைப்பிலும் காணலாம்.

# க



க எனும் உயிர்மெய்யெழுத்தைக் குறிக்கும் வடிவம் சிவபெருமான் பரசு எனும் கோடரி ஒன்றைத் தன் முன்கரங்களால் மார்பில் அணைத்தவாறு காட்சித்தரும் பரசுபதி எனும் சண்டேசனின் திருவுருவம் என மயமதம் (36.92-93எ) சூத்திரங்கள் குறிப்பிடுகின்றன. அந்தப் பரசுபதியைப் பற்றித் திருமூலர் அருளிய திருமந்திரம் (2672) கூறுவதாவது,

பரசு பதிஎன்று பாரமுழுது எல்லாம்
பரமசிவன் ஆணை நடக்கும் பாதியால்
பெரிய பதிசெய்து பின்னாம் அடியார்க்கு
உரிய பதியும் பாராக்கி நின்றானே.

பொருள்: பரசுபதி என்று உலகம் முழுவதும் எல்லாம் பரமசிவனின் ஆணைப்படி நடக்கும். பரம் எனும் அவனின் சக்தி (பரை) எனும் பாதியால் பெறுதற்கரிய பெரிய தலைமையை வகிக்கச் செய்யும். பின்னர் இறை அடியார்களுக்கு உரிய தலைவன் என அவனே உலகம் முழுவதையும் படைத்து நிற்பவனே.

இத்தகைய சிறப்புடைய பரசுபதி எனும் சண்டேசனின் திருவுருவச் சிற்பங்கள் தமிழகத்தில் அனைத்துப் பகுதிகளில் கேட்பார் அற்றுக் கிடப்பதும், தவறான புரிதலைப் புகுத்தி வழிபடச் செய்துள்ளதும் வருந்தத்தக்கதொரு செய்தியாகும்.



அப்பரசுபதி (எ) சண்டேசனின் திருவுருவே சிந்து சமவெளிச் செந்தமிழ் எழுத்துக்களில் **'க'** எனும் உயிர்மெய்யெழுத்தாக இருந்துள்ளது.

தமிழி எழுத்துக்கள் உருவான காலத்தில் சிவத்தை ஒரு செங்குத்துக் கோடாகவும், சக்தியை ஒரு படுக்கைக் கோடாகவும் அதாவது மெய்யியல் ரீதியில் சிவசக்தியாகவும், பிரகாச விமர்சன உருபம் என்பதைக் குறிப்பிடு-வதாகவும், அறிவியல் ரீதியில் **ஒரு கூட்டல் குறியீடாகவும்,** முதன்மை எண் ஒன்றைக் குறிப்பிடுவதாகவும், அதனையடுத்துச் சிவலிங்கமாகவும், மாற்றமடைந்துள்ளதாகக் கருதலாம்.



குறிப்பு: மயமதம், ஐந்திறம் ஆகிய இரண்டு நூல்களை அருளியவன் யார்? என்ற வினாவுக்குத் **திருவுறும் ஆடலான் அருள் நிலை சிறந்தே ஆன்றவிந் தடங்கும் அருந்தமிழ்ச் சான்றோர் என்றுள மகிழ்ந்து வாழ்த்துவீர் நன்றே அவைநெறி சாராத் தமிழொளி உணர்வால் மயந்தமிழ்ச் சிற்பி அளித்தனன் மகிழ்ந்தே** என 892ஆம் பாடல் அடிகளில் காணப்படுவதால் செந்தமிழ் மொழியில் சிற்பசாத்திரம் என்றதொரு நூலையும், ஐந்திறம் என்றதொரு நூலையும் அருளிய மயன் ஒரு தமிழன் என விடை கூறுவதோடு, ஐந்திறம் எனும் நூலை அருளியவன் இந்திரன் அல்லன் என்பதையும் உறுதிசெய்கிறது.

**மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியனெனத் தன்பெயர் தோற்றிப் பல்புகழ் நிறுத்த படிமையோனே எனத் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் சிறப்புப்பாயிரத்தின் இறுதியில் பதிவிட்டுள்ளார்** தொல்காப்பியர் பெருமான். (இதில் ஐந்திறம் என்பதில் இருக்கவேண்டிய றகர வல்லின உயிர்மெய் ரகர இடையின உயிர்மெய்யாக மாற்றப்பட்டுள்ளதாகக் கருதத் தோன்றுகிறது)

# சிவனின் வெளிப்பாடுகள்

செந்தமிழ் மொழி எழுத்துக்களின் வடிவங்கள் முதன் முதலில் குறியீடுகளாகவும், அக்குறியீடுகளிலிருந்தே எழுத்துக்கள் வரிவடிவம் பெற்றுள்ளன என்பதை, **குறிகுறி யீடே வரைவென வாகி அறிநிலை எழுதலின் எழுத்தெனப்படுமே** (7) எனவும், **எட்டெட் டுறுநிலை நாற்புறத்து இயலாய் எட்டுறும் கலையாய் மூலப்பொருளாய்ப் புள்ளி நுட்பம் பொருந்த அறிவார் துள்ளும் உணர்வால் நுண்ணிலை அறிவரே** (135) எனவும், கோடும் குறியும் புள்ளியும் ஆய்ந்து கோட்டியியல் நீட்டியல் குறிப்பின் உணர்ந்து நாடும் எழுத்துரு எழுத்தொலி செப்பல் ஏடில் அறிந்தே இயம்பும் முறையே (117) எனவும் மயன் அருளிய ஐந்திறம் பாடல் அடிகள் கூறுகின்றன. அவ்வாறு அறியப்படுவது மூலம், காலம், கோலம், சீலம், ஞாலம் என ஐந்தியல் முறை எனவும் சுட்டிக்காட்டுகிறது என முன்கண்டவை நினைவுக் கொள்ளத்தக்கது.

குறியீடுகளிலிருந்து செந்தமிழ் மொழியின் எழுத்துக்கள் முதன் முதலில் பரிணாம வளர்ச்சி அடைந்துள்ள காலம், சிந்து சமவெளி நகர நாகரிகக் காலம் என்பதும், அக்காலத்தில் எழுத்துக்கள் வரிவடிவம் பெற்றுப் பரிணாம வளர்ச்சி அடைந்துள்ளன எனலாம். அவ்வாறு பரிணாம வளர்ச்சி அடைந்துள்ள செந்தமிழ் மொழி எழுத்துக்களைத் தமிழ்ப் பிராமி எனப் பிறரும், தமிழி எனத் தமிழகத் தொல்லியல் துறைக் கல்வெட்டாய்வாளர்களும் கூறுவர்.

அத்தமிழி எழுத்துக்களில் முதலாம் எண் ஒன்றையும், முதலாம் மெய்யெழுத்தையும் ஒரு கூட்டல் குறி என அடையாளம் கண்டுள்ளனர். அதாவது, இப்பிரபஞ்சத்திலிருந்து வெளிப்படும் அனைத்துக்கும் காரணமும் அதனால் விளையும் காரியமும் எனக் காரணகாரியம் உண்டென்பது பிரபஞ்ச நியதி.

அந்தப் பிரபஞ்ச நியதியை வரைபடக் கணித ரீதியில் வடக்கு - தெற்குத் திசைகள் நோக்கும் செங்குத்துக் கோடு நிலையான காரணத்தின் வடிவம் எனவும், கிழக்கு - மேற்குத் திசைகள் நோக்கும் படுக்கைக் கோடு இயக்கம் எனும் காரியத்தின் வடிவம் எனவும் குறிப்பிட்டு, அதனை ஒரு கூட்டல் குறியாகவும் அடையாளம் கண்டுள்ளனர். அக்காரணத்தைப் பிரகாசம் எனும் சிவன் எனவும் அக்காரியத்தை விமர்சனம் எனும் சக்தி எனவும் சிவனும் சக்தியும் இணைந்த காரண்காரியத்தை, பிரகாச விமர்சன உருபம் எனவும் மெய்யியல் ரீதியில் கூறுவர் எனச் சற்று முன்கண்டது நினைவுக் கொள்ளத்தக்கது.




இப்பிரபஞ்சத்திலிருந்து காரணகாரியமாக வெளிப்படுவதற்குக் காலமும், இடமும் அவசியம். காலத்தின் வடிவம் வட்டம், இடத்தின் வடிவம் சதுரம். ஒரு வட்டத்திலுள்ளதொரு கூட்டல் குறியைக் காலத்தில் காரணகாரியம் எனவும், சதுரத்திலுள்ளதொரு கூட்டல் குறியை இடத்தில் காரணகாரியம் எனவும் என அடையாளம் கண்டுள்ளனர்.

யோக மார்க்கத்தில் காலத்தில் காரணகாரியம் என்பதை ஆன்மாவின் அவத்தைகளில் முதலாவதான விழிப்பு நிலை. இடத்தில் காரணகாரியம் என்பதை இறுதியான இறைநிலை. அந்த இறைநிலையே பரமனின் பரலோகம். பரலோகத்திலிருந்து வியாபித்திருக்கும் பதி **தன்னைப் பரம்பரை** (எ) சிவசக்தியாக இயங்குகிறது என்பர்.

பரம் என்பதை நான்கு கட்டங்களுடைய **பிதா** வரைபடமாகச் சுட்டிக்காட்டுவதைச் சிந்து சமவெளி நகர நாகரிகப் பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றிலும், தமிழகப் பானை ஓடுகளிலும்,தமிழகத் திருக்கோயில்களிலும் காணமுடிகின்றன.

முன்கண்ட **மேலானதுக்கும் மேலானதும்** என்ற தலைப்பில் எச்-449எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரை **பரமே சோட பேர் உரு** எனப்படிக்கப்பெற்றதும், அதில் **சோட பேர் உரு** என்பது சுகாசனன், விவாகன், உமாகண்டன், விருக்கருத்திரன், புராரி, நிருத்தன், சந்திரசேகரன், அர்த்தநாரீசுவரன், விசனவர்த்தன், சண்டேசன், காமாரி, காலநாசன், தெட்சணாமுர்த்தி, பிச்சாடன், முகலிங்கன், இலிங்கசம்பூதன் ஆகிய 16 பேர்களின் திருவுருவங்கள் சிவபெருமானின் 16 வெளிப்பாடுகள் என அறியப்பட்டதும் நினைவுக் கூறத்தக்கது.

அப்பதினாறு வெளிப்பாடுகளில் சண்டேசன், பிச்சாடன் ஆகிய இரண்டையும், பினாகபாணி (எ) சியோன், துரியாதீதன் ஆகியோரைப்பற்றியும் சிந்து சமவெளி நகர நாகரிகச் சுவடுகளில் காணமுடிகின்றன.

**சண்டேசனின் தெய்வத் திருவுருவம்,** 7,500 ஆண்டுகளுக்கும் முற்பட்ட சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழியின் **க** எழுத்துருவும், 2,500 ஆண்டுகளுக்கும் முற்பட்ட தமிழி எழுத்துக்களில் **கூட்டல் குறி** வடிவிலான முதன்மை எண் ஒன்றும், மெய்யெழுத்துக்களில் முதன்மையான மெய்யெழுத்து எனச் சற்றுமுன் கண்டதையடுத்துச் சண்டேசன், பிச்சாடன், பினாகபாணி, துரியாதீதன் ஆகியோரைப் பற்றியும் காண்போம்.


சண்டேசன்


பிச்சாடன்


பினாகபாணி


துரியாதீதன்

# சண்டேசன்

பரசு எனும் மழுவை ஏந்திய பரசுபதியாகிய சண்டேசன் சிவபெருமானின் 16 வெளிப்பாடுகளில் ஒன்று என மயமதம் (சூ.36. 43பி - 46எ), **ஒரு மழு எனும் கோடாரியை வலது புறத்தோளில் சாத்தியும், தனது முன்கரங்களால் மார்பில் அணைத்தவாரும் காட்சியளிக்கும் திருமேனியைக் கொண்டவன் சண்டேசன்** என மயமதம் (சூ.36. 92எ - 93எ) கூறுவதன் வாயிலாகப் பரசு எனும் மழுவை ஏந்திய **தெய்வத்திருமேனி சண்டேசன்** என்பது உறுதியாகிறது. **மருமலர்க் கொன்றையார்க்கு வாகனமிடபமாகும், பரசோடுகூடிய சூலம் பினாகவில் படைகளாமே** - எனச் சூடாமணி நிகண்டு (12.140) சண்டேசன் எனும் பரசுபதி சிவபெருமானின் வெளிப்பாடுகளில் ஒன்று எனவும் குறிப்பிடுகிறது.

## பரசு எனும் கோடாரி

பரசு எனும் கோடாரி அடித்துத் தாக்கும் போர்க்கருவிகளில் ஒன்று என்பதனால் அது சிவபெருமானின் அச்சுறுத்தும் தன்மையெனக் கருதலாகாது. ஏனெனில், சிவபெருமான் பரசுபதியாக வெளிப்பட்டு இதயக் குகையில் உள்ளதும், தூய்மையானதும், முழுமையானதும், பிரகாசமுடையதுமான ஆன்மா ஒரு சக்கரம், உடலுடன் கூடிய மனம் மற்றொரு சக்கரம். அவ்விரு சக்கரங்களையும் கருமவினை(கள்) எனும் அச்சுப் பிணைத்துப் பிறப்பு - இறப்பு என்ற மாயச் சுழற்சியில் சுற்றிச் சுழலச் செய்கிறது.

கருமவினை(கள்) எனும் அச்சை ஞானமாகிய கோடாரியால் துண்டித்தால் ஆன்மாவாகிய சக்கரம் மாயச் சுழற்சியிலிருந்து விடுபட்டு உடனடியாக நின்றுவிடும். ஆனால், உடலுடன் கூடிய மனமெனும் மற்றொரு சக்கரமோ அதன் கர்மவினையின் எதிர் வினைகள் தீர்ந்து முடியும் வரை சுழன்ற பின்னர் நின்றுவிடும். அது நின்றவுடன் உடலும் மனமும் வீழ்ந்துவிடும். பிறப்பு - இறப்பு என்ற மாயச் சுழற்சியிலிருந்து விடுதலையடைந்து முக்தியடையும் - என வீரத் துறவி சுவாமி விவேகானந்தர் அருளிய ஞானயோகம் (உண்மையான மனிதனும் தோன்றும் மனிதனும் பக்.373-374) கூறுகிறது.

இவ்வுலகில் பிறப்பு - இறப்பு என்ற மாயச் சுழற்சியிலிருந்து விடுதலையடைந்து முக்தியடைவதைக் குறிப்பிடும் பொ.ஆ.பி. 10ஆம் நூற்றாண்டைச் சார்ந்த குறியீடு ஒன்று திருத்தவத்துறை எனும் இலால்குடி சப்தரிசி ஈசுவரர் எனும் சிவாலயத்தின் தென்புறமுள்ள ஊஞ்சல் மண்டத்தின் கற்தரையில் கோட்டுருவமாகப் பொறிக்கப்பெற்றிருந்தது.



அக்கோட்டுருவத்தில் பிரபஞ்சக் குறியீடும், நின்ற கோலத்தில் இருகரங்களும் சங்கிலியால் கட்டப்பட்ட மனித உருவமும், சக்கரத்தின் ஒருபகுதியும், ஓர் அச்சும், ஒருகோடாரியும் எம்மால் கண்டுபிடிக்கப்பெற்றன. (படம் - திருக்குறியீட்டியல் பக்கம் 98).



ஆனால், அந்தக் கோட்டுருவம் அத்திருக்-கோயில் புணரமைப்பின் போது நம்மவரின் அறியாமையால் பளிங்கு தட்டை ஓடுகளைக் கொண்டு முற்றிலுமாக மூடி மறைக்கப்பட்டு விட்டது.

பௌத்த சமயமும் பரசு எனும் கோடாரியை ஒரு புனிதமான சின்னமாக ஏற்றுக்கொண்டுள்ளதை உணர்த்தும் பொ.ஆ.பி. 5-6ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த குறியீடுகள் தமிழகத்தில் புதுக்கோட்டை மாவட்டம், பூலாங்குறிச்சி மதகுமலை, நார்தாமலை (படம் -திருக்குறியீட்டியல் ப. 97) ஆகிய மலைப் பாறைகளின் மேல் பரப்பில் பொறிக்கப்பெற்றுள்ளன.

திரித்தனா, பரசு எனும் கோடாரி என எம்மால் அடையாளம் காணப்பெற்ற அவ்விரண்டு குறியீடுகளின் வாயிலாகப் பன்னெடுங்காலமாகச் சிந்து சமவெளி நகர நாகரிகத்திற்கும் பழந்தமிழக நகர நாகரிகத்திற்குமான தொடர்பும் அறியமுடிகிறது.


L-118A

எல்-118எ என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் சண்டேசனின் திருவுருவமும், 'ந' எனும் ஓரெழுத்துமுள்ளன. இந்த வில்லையை இடமிருந்து வலமாகச், சண்டேசன் + ந. **சண்டேசன் ந** எனப் படிக்கப்பெறுகிறது. (சண்டேசன்- சண்டேசன். ந- சிறப்பு, மிகுதி).

**தொல்வாச்சியம் : சண்டேசனன் மிகுதி** (அ) **சண்டேசனின் சிறப்பு.**


H-505A

எச்-505எ என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் இரண்டு எழுத்துக்களும், சண்டேசனின் உருவமும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும் பரமஞானக் குறியீடும் உள்ளன. இம்முத்திரையை இடமிருந்து வலமாக (உ+ ரு) + சண்டேசன். **உரு சண்டேசன்** எனப் படிக்கப் பெறுகிறது. (உரு - தெய்வத்திருமேனி சண்டேசன் - சண்டேசன்)

**தொல்வாச்சியம் : தெய்வத்திருமேனி சண்டேசன்.**


H-1677A

எச்-1677எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **'பா'** என்ற எழுத்தும் பிச்சாடன், சண்டேசன் ஆகிய இரண்டு திருவுருவங்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும் பரமஞானக் குறியீடும் உள்ளன. இந்த முத்திரை இடமிருந்து வலமாக பா + பிச்சாடன் + சண்டேசன் எனப்படிக்கப் பெறுகிறது. (பா- தூய்மை. பிச்சாடன் - பிச்சாடன். சண்டேசன்- சண்டேசன்)

**தொல்வாச்சியம் : தூய்மையான பிச்சாடன் சண்டேசன்.**


M-2104A

எம்-2104எ என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் சண்டேசன், பிச்சாடன் ஆகிய இரண்டு திருவுருவங்கள் இணைந்தவாறும், நான்கு எழுத்துக்களும் அன் என்ற சொல்லைக் குறிக்கும் தீக்குச்சி வடிவக் குறியீடும் யானை தந்தத்திலான வில்லையில் காணமுடிகின்றன.

இந்த வில்லையை இடமிருந்து வலமாக (சண்டேசன் + பிச்சாடன்) + உ + அன் + உ + ப + ண். **சன்டேசன் பிச்சாடன் உ அன் உ பண்** எனப்படிக்கப்பெறுகிறது. (சண்டேசன்- சண்டேசன். பிச்சாடன் - பிச்சாடன். **உ** - எண் இரண்டு, உமையம்மை, **சிவன்**. அன் - அவன். பண் - பாட்டு, இசை, ஒப்பு.)

**தொல்வாச்சியம்: சண்டேசன் பிச்சாடன் ஆகிய இருவரும் சிவன் (எ) அவனுக்கு ஒப்பு.**


M-1203A

எம்-1203எ எனும் அடையாள எண்ணுடைய வில்லையில் சண்டேசனின் திருவுருவமும் நான்கு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும் பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த வில்லையை இடமிருந்து வலமாகச் சண்டேசன் + மா + ணி + ன+ மே. சண்டேசன் மாணினமே. **சண்டேசன் மாண் இனமே** எனப் படிக்கப்பெறுகின்றன.

(சண்டேசன் - சண்டேசன். மாண் - மாட்சிமை / பெருமை. இனமே- வகையே / திரளே / உவமானமே). **தொல்வாச்சியம்: சண்டேசன் பெருமைக்கு உவமானமே.**

குறிப்பு: இந்த வில்லையில் சண்டேசனின் தோளிலுள்ள மழு (எ) கோடாரி மாறி காணப்படுவது நோக்கத்தக்கது. சிந்து சமவெளி எழுத்துக்களின் அமைப்பின்படி இந்த முத்திரையை உள்ளிருந்து வெளியாகவும் வலமிருந்து இடமாகவும் **னமேண்மா சண்டேசன்** எனப் படித்தாலது சொற்களாகாது. இது போன்ற வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றின் சொற்களுக்கு ஏற்ப **சண்டேசன் மாண் இனமே** எனப் படித்துப் பொருளறியும் படியாக உள்ளன.


H-1287A&B

எச்-1287எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் பிச்சாடன், சண்டேசன் ஆகிய இரண்டு திருவுருவங்களும், ஐந்து எழுத்துக்களும் உள்ளன. பா (எ) எழுத்து பிச்சாடன் தலையாகக் காட்டப்பெற்றுள்ளது.

இந்த வில்லையை இடமிருந்து வலமாக, சீ + பா + பிச்சாடன் + சண்டேசன் + நா + ப + ன். **சீ பா பிச்சாடன் சண்டேசன் நாபன்** எனப் படிக்கப்பெறுகிறது.

(சீ -திரு. பா - பரப்பு / தூய்மை. பிச்சாடன் - பிச்சாடன். சண்டேசன் - சண்டேசன். நாபன் - நாபியிலிருந்து தோன்றியவன்.) (நாபி - கொப்பூழ்)

**தொல்வாச்சியம் : திரு. தூய்மையான பிச்சாடன் சண்டேசனின் நாபியிலிருந்து தோன்றியவன்.**

குறிப்பு: மகாவிட்டுணுவின் நாபியிலிருந்து பிரம்மதேவன் தோன்றியதாக வைணவம் கூறுகிறது. **அந்தப் பிச்சாடன் என்பவன் யார்?** என்ற வினாவுக்கான விடையைக் காணலாம்.

# பிச்சாடன்

சிந்து சமவெளி நகர நாகரிக வரலாற்றுச் சுவடுகளான பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் பதிவிடப்பெற்றுள்ளவற்றில் **பிச்சாடன்** பற்றிய பதிவுகள் சற்றே அதிகம் என்றாலது மிகையாது.

பிச்சாடன் என்பது சிவபெருமானின் பதினாறு வெளிப்பாடுகளில் ஒன்று என முன்கண்டது நினைவு கொள்ளத்தக்கது. பிச்சாடன் என்ற பெயர்ச் சொல் பிற்காலத்தில் பிச்சாடனன், பிச்சாண்டார் எனவும் உச்சரிக்கப்பெற்றுள்ளன.

சிவபெருமான் பிச்சாடன் வேடம் பூண்டு பரதேசியாக வந்ததாகவும், அதற்கான காரணகாரியத்தைப் பற்றி இரண்டு திருமந்திரப் பாடல்களின் வாயிலாக அறியமுடிகிறது.

பிச்சையது ஏற்றான் பிரமன் தலைதன்னில்
பிச்சையது ஏற்றான் பிரியாள் அறம் செய்ய
பிச்சையது ஏற்றான் பிரமன் சிரம் காட்டி
பிச்சையது ஏற்றான் பிரமன் பரமாகவே. (1887)

பொருள்: மூல முதல்வனான சிவபெருமான், பிரமன் தலையைத் திருவோடாகக் கொண்டு, பிரம்ம கபாலம் ஏந்தினான். இப்படி பிச்சை ஏற்றது தனது பிரியாளாகிய உமையம்மை முப்பத்திரண்டு அறங்களைச் செய்வதற்காகவும், பிரம்மனின் தலையைக் கொண்டு பிச்சையெடுத்துப் பிரம்மனைவிட தாம் மேலானவன் என்பதை உலகுக்கு உணர்த்தவே.

பரந்து உலகுஏழும் படைத்த பிரானை
இறைத்துணி என்பார்கள் ஏற்றுக்கு இரக்கும்
நிரந்தரமாக நினையும் அடியார்
இரந்துண்டு தனகழல் எட்டச் செய்வானே. (1888)

பொருள்: பரந்து விரிந்த ஏழு உலகங்களைப் படைத்து, பரந்த உலகெங்கும் பொருந்தி இருக்கின்ற பரம்பொருளை இரந்துண்டு வாழ்பவன் என்று சொல்வார்கள்! இறைவன் எதற்காகப் பிச்சை எடுக்கவேண்டும்? இடையின்றி எப்போதும் அவரையே நினைத்து வாழ்ந்துக் கொண்டிருக்கும் அவனது அடியார்கள் உண்ணும் உணவு அவனிட்ட பிச்சை என்பதைச் சீவான்மாக்கள் அறியவேண்டும். அதன் மூலமாக அவனது திருவடி நிழல் நீங்காதிருக்க வேண்டும் என்பதற்காகவே அவன் பிச்சாடன் உருபத்தில் காட்சித்தருகிறான்.

## பிச்சாடன் திருவுருவம்



பிச்சாடனின் திருவுருவத்தைப் பற்றிய குறிப்பு மயமதம் சூ.36.10,2-103இல் பிச்சாடன் அறிவு புகட்டும் வகையில் நிர்வாணியாக, மூன்று கண்களுடனும், நான்கு கரங்களுடனும், இடது மேல் கரத்தில் மயில் வால் தோகையையும், கீழ்க் கரத்தில் மண்டை ஓட்டையும், வலது மேல் கரத்தில் உடுக்கையையும், கீழ்க் கரத்தில் ஒரு மானின் வாயை நோக்கியும், காலணிகள் அணிந்தவாறு வட்டனையிட்டு நடக்க துவங்குவது போன்று அமைந்திருக்குமெனக் கூறுகிறது.



தமிழகத் திருக்கோயில்களில் பிச்சாடனின் திருவுருவச் சிற்பங்களைக் காணலாம். அவற்றில், நான்கு கரங்களுடையவராகவும், இடது புற மேல் கரத்தில் சூலத்தை ஏந்தியவாறும், கீழ்க் கரத்தால் பூதகணம் ஒன்றின் தலையில் சுமந்துள்ள அன்னக்கூடையில் அன்னமிடுவது போலவும், வலது புற மேல் கரம் உடுக்கையையும், கீழ்க் கரம் மானுக்கு உணவளிப்பது போலவும், அணிகலன்கள் அணிந்த நிர்வாணியாக வட்டனையிட்டு நடக்கும் அழகிய திருமேனியுடையவராகவும் நளின கோலத்தில் காணலாம். (நிர்வாணி - அழகன், ஆடையில்லாதவன், சிவன். (மான் - மூதாதையரைக் குறிக்குமொரு குறியீடு)



சிவபெருமானே பிச்சையெடுத்தக் காரணத்தால் அவனடியார்களும் அன்னக்காவடி ஏந்தி **பிச்சாண்டி தேவி மாதா அன்னப்பூரணி** (பிச்சாண்டி - இறைவன் பிச்சாடன் கோலத்தில் அன்னப்பிச்சைக் கேட்டு வந்ததுபோல தேவி - தெய்வமகளீரே, மாதா- அன்னையரே, அன்னப்பூரணி - உமையம்மையரே அரிசி உணவை அளிப்பீராக.)

சிவனடியார்கள் **பிச்சாண்டி தேவி மாதா அன்னப்பூரணி** எனக் கூவி பிச்சையெடுத்து அவ்வுணவை மற்ற சிவனடியார்களுக்கும் பகிர்ந்தளித்து வாழ்ந்துள்ளனர். அம்மரபு தற்போது முற்றிலும் மறைந்து விட்டது.



H-374A



H-1362A

பிச்சாடன் அன்னக்காவடி ஏந்திய காட்சியை எச்-374எ, எச்-1362எ ஆகிய சிந்து சமவெளி நகர நாகரிகப் பானை ஓடுகளில் கீறப்பட்டுள்ள இத்திருவுருவங்களைக் காணமுடிகிறது.

## பிச்சாடன் திருக்கோயில்

இந்தியத் திருநாட்டில் குறிப்பாகத் தமிழகத்தில் பிச்சாடன் கோயில், பிச்சாடனார் கோயில் அல்லது பிச்சாண்டார் கோயில் என்ற பெயரில் ஏராளமான திருக்கோயில்கள் இருந்துள்ளன. பொ.ஆ.பி. 6ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட காலத்தில் அத்திருக்கோயில்களின் பெயர்கள் மாற்றமடைந்துள்ளன.

அதற்கோர் உதாரணமாகத் திருச்சிராப்பள்ளி மாநகரம் எல்லைக்கு உட்பட்டதும், பழங்காலத்தில் பிச்சையூர் என்ற ஊரில் இறைவன் எழுந்தருளிய பிச்சாடன் கோயில் என்பதுமான திருக்கோயில் தற்போது உத்தமர் கோயில் என்ற பெயருடன் விளங்கி வருகிறது. எனினும், அப்பிச்சையூருக்கு அருகே பிச்சாண்டார் கோயில் என்ற பெயரில் தொடர்வண்டி நிலையம் ஒன்று தற்போது உள்ளது. ஆண் குழந்தைகளுக்குப் பிச்சை (அ) பிச்சாண்டி என்றும் பெண் குழந்தைகளுக்குப் பிச்சையம்மாள் என்றும் பெயர்ச் சூட்டுவது பழந்தமிழர் மரபு. அம்மரபு தற்போது முற்றிலும் மறைந்து விட்டது.

சிவகங்கை மாவட்டம் மணலூரில் (கீழடியில்) பிச்சாண்டார் கோயில் ஒன்று இருந்துள்ள செய்தியைப் பழம்பாடல் ஒன்றின் வாயிலாக அறியமுடிகிறது.

ஒன்றாம் எண் சந்துக்கும் பிச்சாடனார் சந்நதிக்கும் நேர்கோட்டு வழி இருக்கிறது.

சிறுகுறி உருவப் பால்கொழுக்கட்டை நிவேதன ரசம் போய்விட்ட,

வெண்கல உருளைகளில் சுயத்தையே படைக்க வந்து கொண்டிருக்கும்

திரிபூவனத்துப் பொன்னையாளுக்கும், ஆலவாய் சித்தருக்குமிடையே

கடக்க முடியாத வைகை மணல்.

பொருள்: இறைவனின் படைப்புகளில் ஒன்றான மானுடர் உடலிலுள்ள உயிர், பிச்சாடனாரிடம் ஐக்கியமாகும் சாயுச்சிய நிலைக்கும், வெளிப்படையான கிரியை எனும் மார்க்கம் இருக்கிறது (என்பதை), அடையாளப்படுத்தும் வகையில் தெய்வத்திருமேனிக்குப் பால், வெல்லம், அரிசி மாவு முதலியவற்றால் சமைக்கப்பட்ட உணவைப் படைப்பதற்காகச் சுவை (புளிப்பு) போய்விட்ட செம்பும், தூய்மையான வெள்ளியும் கலந்த வெண்கல வட்டவடிவடிமான பாத்திரம் போல - தன்னையே அர்ப்பணிக்க வந்து கொண்டிருக்கும், திரிபூவனத்துப் பொன்னையாளுக்கும், மதுரையில் எழுந்தருளியுள்ள சோமசுந்தர சித்தருக்கும் நடுவே, கடக்க இயலாத வைகை நதிக்கரையில் மூதாதையர் வழிப்பட்ட மணலூர்த் திருக்கோயில்.

இப்பாடல் சிவகங்கை மாவட்டம் மணலூரில் பிச்சாடன் கோயில் இருந்துள்ளதை அடையாளம் காட்டுவதாகவும் கருதலாம். அதற்குக்கானதொரு சான்று மணலூரில் மிகப்பழமையான நந்தி சிற்பமொன்று மண்ணில் புதைந்து கிடப்பதையும் குறிப்பிடலாம்.

**பிச்சாடன் புராணம்**

சிவபெருமான் பற்றிய பதினெண் புராணங்களில் பிச்சாடன் புராணமும் உள்ளடங்கும். அப்புராணத்தில் பிச்சாடன் பற்றிய பாடலொன்று கீழ்க்கண்டவாறு கூறுகிறது.

அடியிற்றொடுத்த பாதுகையும்
    அசைந்த நடையும்இசை மிடறும்
வடியிற் சிறப்ப நடந்தருளி
    மூழை ஏந்தி மருங்கணைந்த
நெடியிற்பொலி தோள் முனிமகளிர்
    சுரமங்கையரை மயல்யூட்டிப்
படியிட்டெழுதாப் பேரழகாற்
    பலிதேர் பகவன் திருவுருவம் - - (சிவஞான சுவாமிகள்.)

**பாடல் விளக்கம் :** முன்னொரு காலத்தில் தாருகாவனத்தில் வாழ்ந்து வந்த முனிவர்கள் யாகங்களே எல்லாப் பயன்களையும் அளிக்க வல்லமை உடையவை என்றும், அந்த யாகங்களைத் தவிர மிகப்பெரிய சக்தி வாய்ந்த தெய்வ வழிபாடு வேறு எதுமே இல்லை என்றும், அச்சக்தியால் பெறக்கூடிய பயன்களே தங்களுக்குப் பலன் தரக்கூடியவை என்ற அகம்பாவத்துடன் வாழ்ந்து வந்தனர்.

அந்த முனிவர்களின் அகம்பாவத்தை அகற்றி, அவர்களுக்கு உண்மையை உணர்த்த எண்ணிய சிவபெருமான், பிச்சாடனாகத் தோற்றமெடுத்துப் பலகோடி பிரகாசமான பொழிவு படைத்த அழகிய உடலுடையராக, ஆடையேதும் அணியாதவராய்க் கையில் ஒரு பிச்சைப் பாத்திரமேந்தி அந்தத் தாருகாவனத்தை வந்தடைந்தார். முனிவர்களின் வீடுகள் தோறும் சென்று பரதேசியாக வரும் தமக்கு அன்னமிடுமாறு கேட்கலானார்.

கற்புக்கரசிகளாக விளங்கிய முனிவர்களின் பத்தினிகள் பிச்சாடனனின் மன்மதத் தோற்றத்தைக் கண்டு, தர்மநெறி மறந்து, காமப்பித்தேரி, மதிமயங்கி பெருமூச்சுவிட்டனர். பரதேசியாக வந்த பிச்சாடனனின் புன்னகைப்புரியும் பிரகாசமான சந்திரமுகத்தையும், வசீகரம் நிறைந்த கண்களைக் கண்ட அப்பெண்கள் துடிதுடித்துப் போயினர்.

தங்களது இல்லங்களிருந்த பொருட்களைப் போட்டது போட்ட படியே போட்டுவிட்டும், தங்களது கால்களைப் பின்னிக்கொள்ள ஓடோடி வந்த அவர்களது குழந்தைகளை உதைத்துத் தள்ளிவிட்டும், அந்தப் பரதேசியின் பின்னால் நடந்தனர். ஆனால் அப்பரதேசியோ பிச்சை கேட்டவாறே வீடுவீடாகச் சென்று யாகசாலை நோக்கி நடந்து சென்று கொண்டிருந்தார்.

அவரைப் பின்தொடர்ந்து வந்த அப்பெண்களோ, தாங்கள் செய்வது என்னவென்று அறியாமலும், அவர்களது ஆடைகள் நழுவி விழுவதைக் கூட உணராமலும், அவரைக் கட்டியணைக்கவும் முற்பட்டனர்.

அக்காட்சியைக் கண்ட முனிவர்கள் கடுங்கோபம் கொண்டு தங்களது பத்தினிகளைத் தடுத்து நிறுத்த முயன்றனர். அவர்களின் பத்தினிகளோ தங்களது கணவர்களை உதறித் தள்ளிவிட்டுச் சென்று கொண்டிருந்தனர். அவர்களின் அச்செயலால் மேலும் கடுங்கோபம் கொண்ட முனிவர்கள் அப்பரதேசியைச் சபித்தனர். அவர்களின் சாபம் பரதேசியை எந்தவிதத்திலும் பாதிக்காததைக் கண்டு திகைத்து நின்றனர்.

(அம்முனிவர்கள் பரதேசியைக் கொல்ல பாம்பு, புலி, மான் ஆகியவற்றை ஏவியதாகவும், பரதேசியோ அப்பாம்பைத் தனது கழுத்தில் மாலையாகவும், புலியைக் கொன்று அதன் தோலை ஆடையாக அணிந்து கொண்டதாகவும், மானுக்கு உண்ண புல்கொடுத்துத் தடுத்தாட்கொண்டதாகவும் கூறப்படுவதுண்டு.)

சற்றுநேரத்தில் அப்பரதேசி தாருகாவனத்திற்குள் சென்று மறைந்தார். அப்பரதேசி மறைந்ததைக் கண்ட முனிவர்களின் பத்தினிகள் துயரத்தில் ஆழ்ந்தனர்.

அப்பரதேசியை முனிவர்கள் சபித்தக் காரணத்தால் தாருகாவனம் முழுவதும் மழைபொழியாமல் பெரும் வறட்சியடைந்தது. அந்த வறட்சியால் அனைவரும் கொடிய வெக்கை நோய்வாய்ப்பட்டும், இன்னல்களுக்கும் ஆளாயினர். என்ன செய்வதென்று தெரியாத நிலையில் பிரம்மதேவனைத் துதித்தனர்.

பிரம்மதேவன் அம்முனிவர்களின் முன்தோன்றி எம்மைத் துதித்தக் காரணத்தைக் கேட்கவே, அம்முனிவர்கள் கொடிய வெக்கை நோய்வாய்ப்பட்டுப் பல இன்னல்களுக்கும் ஆளாகியுள்ளோம் எங்களை இந்நிலையிலிருந்து மீட்டு எங்கள் காத்தருளவேண்டுமென்றனர்.

முனிவர்களே! தாருகாவனத்திற்குப் பிச்சை எடுக்க வந்ததொரு பரதேசியை நீங்கள் சபித்ததே உங்கள் இன்னல்கள் அனைத்திற்குமான காரணம். பரதேசியாக வந்தவர் சிவபெருமான். எனவே, அவரைத் துதித்தால் மட்டுமே, உங்கள் இன்னல்களுக்குத் தீர்வு காணமுடியும் எனக் கூறி மறைந்தார்.

அம்முனிவர்கள் சிவபெருமானைத் துதிக்கத் துவங்கினர். சிவபெருமான் பிச்சாடனாக அவர்கள் முன் தோன்றவே, முனிவர்கள் மண்டியிட்டு அவரை வணங்கினர். அருளும் குணமுடைய அப்பெருமான், கவலைவேண்டாம் இனி தாருகாவனத்தில் மழைபொழியும், உங்கள் இன்னல்கள் அனைத்தும் தீரும் என வரமளித்து மறைந்தார். அவ்வாறே, தாருகாவனத்தில் மழைபொழிந்து வெக்கை நோயால் விளைந்த இன்னல்கள் அனைத்தும் நீங்கின.

அம்முனிவர்கள் மீண்டும் சிவபெருமானைத் துதிக்கவே, அவரும் அவர்கள் முன்தோன்றினார். தங்களது விருப்பம் யாது? என வினவினார். ஐயனே! யாகங்களே எல்லாப் பயன்களையும் அளிக்க வல்லவை என்றும், யாகங்களைத் தவிர மிகப்பெரிய சக்தி வாய்ந்த தெய்வ வழிபாடு வேறு எதுமே இல்லை என்றும், அதனால் பெறும் பயன்களே எங்களுக்குப் பலன் தரக்கூடியவை என்ற அகம்பாவத்துடன் இருந்த எங்களது அறியாமையை அகற்றி அருள் புரிந்தீர்கள்.

ஐயனே! நாங்கள் அனுதினமும் தங்களை வணங்கி வழிபடவும் தாங்கள் இத்தாருகாவனத்தில் எழுந்தருளவேண்டுமென வேண்டினர். **இறைவன், அவ்வாறே ஆகட்டும்** என அருளி மறைந்தார். அம்முனிவர்கள் தாருகாவனத்தில் சிவலிங்கமொன்றை நிறுவி வணங்கி வழிபட்டு நோய்நொடி ஏதுமின்றி வாழ்ந்தனர்.

## சீ பலி

சீ பலி என்பது குறிப்பாகச் சிவத்தலங்களில் நிகழும் சிறப்பு வழிபாடுகளில் ஒன்று. அதுவே அன்னப்பூசை என்பதாகும். இந்தச் சிறப்பு வழிபாட்டின் போது சிவபெருமான் பிச்சாடனாகத் தோன்றி அனைத்துச் சீவராசிகளுக்கும் உண்ண உணவளிப்பதாக ஒரு நம்பிக்கை.

சீபலியின் போது சிவபெருமானுக்குப் படைக்கப்பட்ட அன்னத்தை அவரே ஆகாயம், நீர், நிலம் ஆகியவற்றில் வாழும் அனைத்துச் சீவராசிகளுக்கு வழங்குவதை உணர்த்துவதாகும். இந்தச் சீ பலி எனும் சிறப்பு வழிபாடு தற்காலத்தில் **அன்னப்பூசை** என்றும் **அன்னக்காப்பு** என்றும் அனைத்துத் திருத்தலங்களிலும் நடைபெறுகின்றன.

சிவபெருமானின் பதினாறு வெளிப்பாடுகளில் ஒன்றான பிச்சாடன் பற்றிய பல செய்திகள் பிற்காலத்தில் பல்வேறு நூல்களில் கூறப்பட்டுள்ளன. எனினும் 7,500 ஆண்டுகளுக்கு முற்பட்டதாகக் கூறப்படும் சிந்து சமவெளி நகர நாகரிக மக்கள் அறிவித்தவையே மிகப் பழமையானவை. அவை பெரும்பான்மையாகப் பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் "பிச்சாடனின் திருவுருவின் தலையைப் **'பா' எனும் ஓரெழுத்திலும்,** சிலவற்றில் **முக்கோண வடிவிலும், வட்டவடிவிலும், இரு கரங்களால் உணவுப் பாத்திரங்களையோ, தடியையோ பிடித்தவாறே"** அவர்களால் அறிவிக்கப்பெற்றுள்ளன.


H-1461A

எச்-1461எ என்ற அடையாள எண்ணுடையப் பானை ஓட்டில் **'ம'** எனும் ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட பிச்சாடன் திருவுருவம் **'ள்'** என்றதொரு எழுத்தும் இணைந்துள்ளவாறு கீறப்பெற்றுள்ளன. பிச்சாடன் மள். **பிச்சாடன் மள்(ளன்)** எனப் படிக்கப்பெறுகிறது. (பிச்சாடன் - பிச்சாடன். மள்((ளன்) - திண்ணியன், வலிமையுடைவன், இளைஞன்).

**தொல்வாச்சியம் : பிச்சாடன் திண்ணியன்.**


M-60 a


M-188a


M-229 a


M-1735 a


H-516 a

எம்-60எ, எம்-188எ, எம்-229எ, எம்-1735எ, எச்-516எ ஆகிய அடையாள எண்களுடைய ஐந்து முத்திரைகளில், தூய்மை என்பதைக் குறிக்கும் ' பா' என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட பிச்சாடன் திருவுருவமும், சிவன் என்பதைக் குறிக்கும் **'உ'** எனும் ஓரெழுத்தும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த ஐந்து முத்திரைகளை இடமிருந்து வலமாகப் பா + பிச்சாடன் + உ. **பா பிச்சாடன் உ.** எனப் படிக்கப்பெறுகின்றன. (பா-தூய்மை. பிச்சாடன்- பிச்சாடன். உ - சிவன்.)

**தொல்வாச்சியம் : தூய்மையான பிச்சாடன் சிவன்**


M-429a


H-499a


L-42a


M-838a


H-2350A


M-1626A

எம்-429எ, எச்-499எ, எல்-42எ, எம்-838எ,அடையாள எண்களுடைய நான்கு முத்திரைகளிலும், எச்-2350எ, எம்-1626எ, ஆகிய அடையாள எண்களுடைய இரண்டு பானை ஓடுகளிலும் முன்கண்ட 'பா' என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட பிச்சாடன் திருவுருவமும், **'ன்'**எனும் மெய்யெழுத்தும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன. இவற்றை இடமிருந்து வலமாகப் பா + பிச்சாடனன். **பா பிச்சாடன் அன்** எனப் படிக்கப்படுகின்றன. (பா-தூய்மை. பிச்சாடன்- பிச்சாடன். அன் - அவன் எனும் ஆண்பால் சுட்டுப்பெயர்.)

**தொல்வாச்சியம் : தூய்மையான பிச்சாடன் அவன் எனும் ஆண்பால் சுட்டுப்பெயர்.**


L-16a


M-96a

எல்-16எ, எம்-96எ அடையாள எண்களுடைய இரண்டு முத்திரைகளில், முன்கண்ட 'பா' என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட பிச்சாடன் திருவுருவமும், **'ண்'** எனும் மெய்யெழுத்தும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன. இந்த முத்திரைகளை இடமிருந்து வலமாகப் பா + பிச்சாடனாண். **பா பிச்சாடன் ஆண்** எனப் படிக்கப் பெறுகின்றன. (பா-தூய்மை. பிச்சாடன்- பிச்சாடன். ஆண் - தலைமை).

**தொல்வாச்சியம் : தூய்மையான பிச்சாடன் தலைமை.**


K-153a


M-1740a

கே-153எ, எம்-1740எ, ஆகிய அடையாள எண்களுடைய இரண்டு முத்திரைகளில் பிச்சாடன் திருவுருவமும், **உ, டு** ஆகிய இரண்டு எழுத்துக்களும் உள்ளன. எம்-1740எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் மட்டும் ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன. இவ்விரு முத்திரைகள் இடமிருந்து வலமாகப், **பிச்சாடன் +உ+டு. பிச்சாடன் உடு** எனப் படிக்கப்பெறுகின்றன. (பிச்சாடன் - பிச்சாடன். உடு - நட்சத்திரம்).

**தொல்லாச்சியம்: பிச்சாடன் ஒரு நட்சத்திரம்.**

எச்-38எ, எம்-1324எ, எம்-1334எ, எம்-1699எ ஆகிய அடையாள எண்களுடைய நான்கு முத்திரைகளில் எம்-1699எ நீங்கலாக முன் கண்ட **'பா'** என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட பிச்சாடன் திருவுருவமும், இரண்டு எழுத்துக்களும் உள்ளன. எச்-38எ, எம்-1699எ ஆகிய இரண்டில் ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.


H-38a


M-1324a


M-1334a


M-1699a

இந்நான்கு முத்திரைகளை இடமிருந்து வலமாகப் (பா + பிச்சாடன்) + (ரு + ள்). **பா பிச்சாடனருள். பா பிச்சாடன் அருள்** எனப்படிக்கப்பெறுகின்றன. (பா- தூய்மை. பிச்சாடன்- பிச்சாடன். அருள் - கருணை, பொழிவு, நல்வினை).

**தொல்வாச்சியம் : தூய்மையான பிச்சாடன் கருணை.**



அடையாள எண்ணில்லாத இந்த முத்திரை ஒன்று தற்போதைய ஈரான் நாட்டில் ஊர் என்னுமிடத்தில் கண்டுபிடிக்கப்பெற்றுள்ளது. இதில் அடைப்புக் குறியும் அதனுள் பிச்சாடன் திருவுருவமும், எழுத்துக்களும் உள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் பிச்சாடன் + பொ + (ரு + ள்). **பிச்சாடன் பொருள்** எனப் படிக்கப்பெறுகிறது. (பிச்சாடன் - பிச்சாடன். பொருள் -கடவுள் / அறம் / உவமேயம் / நன்கு மதிக்கப்படுவது).

**தொல்வாச்சியம்: பிச்சாடன் கடவுள்.**



C-21a

சி-21எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **'பா'** என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட பிச்சாடன் திருவுருவமும், இரண்டு எழுத்துக்கள், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் பா +பிச்சாடனி + (ச் + சை). **பிச்சாடன் இச்சை** எனப் படிக்கப்பெறுகிறது. (பிச்சாடன் - பிச்சாடன். இச்சை- விருப்பம், பக்தியோடு செய்யும் தொண்டு).

**தொல்வாச்சியம் : தூய்மையான பிச்சாடன் விருப்பம்.**



M-1898a

எம்-1898எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **எருதின் உருவமும், இரண்டு எழுத்துக்களும்** பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாக (இ)ச் + சை). **இச்சை** எனப் படிக்கப்பெறுகிறது.

(இச்சை- விருப்பம், பக்தியோடு செய்யும் தொண்டு).

**தொல்வாச்சியம் : பக்தியோடு செய்யும் தொண்டு.**


M-209a

எம்-209எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பிச்சாடன் திருவுருவமும், ப, (ட்,ச) ஆகிய மூன்று எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் பிச்சாடன் + ப + (ட் + ச) **பிச்சாடன்** எனப் படிக்கப்பெறுகிறது. (பிச்சாடன்- பிச்சாடன். பட்ச(ம்) - அன்பு, கேட்பாடு, பதினைந்து நாள் கொண்டது).

**தொல்வாச்சியம் : பிச்சாடன் அன்பு.**


M-969a

எம்-969எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் முன்கண்டபடி **'பா'** எழுத்துடன் **பிச்சாடன்** திருவுருவமும், இரண்டு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்-கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன. இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் **பா + பிச்சாடன் + (ஆ + சி). பா பிச்சாடன் ஆசி** எனப் படிக்கப்பெறுகிறது. (பா- தூய்மை. பிச்சாடன் - பிச்சாடன். ஆசி - வாழ்த்து, வாழ்த்தணி).

**தொல்வாச்சியம் : தூய்மை பிச்சாடன் வாழ்த்து,**


M-988a

எம்-988எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பிச்சாடன் திருவுருவமும், மூன்று எழுத்துக்களும், அநேகமாக உடைந்த பகுதியில் ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் பிச்சாடன+ண்+ண+ண். பிச்சாடன் அண்ணண் எனப் படிக்கப்பெறுகிறது. (பிச்சாடன் - பிச்சாடன். அண்ணண் - முன்பிறந்தவன், மூத்தோன்.)

**தொல்வாச்சியம் : பிச்சாடன் மூத்தோன்.**



K-49a

கே-49எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பிச்சாடன் திருவுருவமும், ண், ண, ண், ஆகிய மூன்று எழுத்துக்களும், இலவமரக்கிளையில் அமர்ந்து சுட்டிக் காட்டும் இலலிதை எனும் உமையம்மையின் திருவுருவமும், அவளது வாகனமாகிய புலியின் உருவமும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் பிச்சாடன+ண்+ண+ண். **பிச்சாடன் அண்ணண்** எனப் பகுத்துப் படிக்கப்பெறுகிறது.

(பிச்சாடன் - பிச்சாடன். அண்ணண் - முன்பிறந்தவன், மூத்தோன்.)

**தொல்வாச்சியம் : பிச்சாடன் மூத்தோன்.**

குறிப்பு: வரிப்புலியைத் தன் வாகனமாகக் கொண்ட இலவமரத்தில் அமர்ந்துள்ள இலலிதை (எ) பார்வதி தேவி எனச் சுட்டிக்காட்டுகிறாள்.

இந்த முத்திரை சிந்து சமவெளி நகர நாகரிகப் பகுதியில் ஒன்றான காளிபங்கன் என்னுமோர் நகரம் என்பதும், அந்நகரத்தில் சிவலிங்கம் உருவங்கள் வெளிக்கொணரப் பெற்றுள்ளன. உமையம்மை எனும் பார்வதி தேவியைக் காளி, இலலிதை என்பர்.



M-1728a

எம்-1728எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் முக்கோண வடிவிலான தலையாகக் கொண்ட பிச்சாடன் திருவுருவமும், எட்டு எழுத்துக்களும், ஆழி என்பதைக் குறிக்கும் குறியீடும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாக முக்கோணம் + பிச்சாடன + ண் + ண +ண் + சோ + சந + (இ)ட் + ட + ஆழி. **முக்கோணம் பிச்சாடன் அண்ணண் சோ சந (இ)ட்ட ஆழி** எனப் படிக்கப்பெறுகிறது. (முக்கோணம் - திரிகோணம் (மலை). பிச்சாடன் - பிச்சாடன். அண்ணண் - முன்பிறந்தவன் / மூத்தோன். சோ- வானாகரன் நகரம் / உமையம்மை. சந- மக்கள். இட்ட - இட்ட, ஆழி - வட்டம் / கூட்டம், கட்டளை).

**தொல்வாச்சியம் : திரிகோண(மலை)ப் பிச்சாடன் மூத்தோன் என உமையம்மை மக்களுக்கு இட்ட கட்டளை.**

(குறிப்பு: திரிகோண மலை என்ற பெயருடைய மலை ஒன்று ஜார்கண்ட் மாநிலத்திலும் திரிகோண மலை என்ற மற்றொரு பெயருடைய மலை ஒன்று இலங்கை நாட்டிலுண்டு.)


K-53A

கா- 53எ என்ற அடையாள முத்திரையில் முக்கோண (திரிகோண) வடிவிலான மூன்று மலைகளும், அவற்றின் நடுவே அரச இலைவடிவிலான 'ஈ'என்ற எழுத்தும் உள்ளன. (திரிகோணங்கள் - திரிகோண மலைகள். ஈ - பார்வதி (எ) உமையம்மை / சிறிய பறவை.)

**தொல்வாச்சியம் : திரிகோண(மலை) பார்வதி (எ) உமையம்மை.**


L-43a

லோ- 43எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் முன்கண்டபடி **'பா' என்ற எழுத்துடன் பிச்சாடன்** திருவுருவமும், நான்கு எழுத்துக்களும், அநேகமாக ஓர் எருதின் உருவமும் உள்ளன. இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் பா+ பிச்சாடன் + மே + ரு + ரூ + ப(ம்). **பா பிச்சாடன் மேருரூப (ம்)** எனப் படிக்கப்பெறுகிறது.

(பா- தூய்மை. பிச்சாடன் - பிச்சாடன். மேருரூப(ம்) - மேருமலை வடிவம்.)

**தொல்வாச்சியம் : தூய்மையான பிச்சாடன் மேருமலை வடிவம்.**

சிந்து சமவெளி நகர நாகரிகப் பதிவுகளான, லோ- 43எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரை பிச்சாடன் (எ) சிவபெருமான் மேருமலை வடிவினன் என்றும், எம்-988எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரை பிச்சாடன் மூத்தோன் அதாவது முன்பிறந்தவன் என்றும், கே-49எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரை பிச்சாடன் மூத்தோன் என உமையம்மை (எ) பார்வதி தேதி சுட்டிக்காட்டுவதும், எம்-1728எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரை **திரிகோண(மலை)ப் பிச்சாடன் மூத்தோன் என உமையம்மை மக்களுக்கு இட்ட கட்டளை என்பதும்** மேருமலையைப் பற்றியும், கா- 53எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரை திரிகோண மலை பார்வதி தேவி போன்ற தொல்வாச்சியத்தின் பதிவுகளாகக் கருதலாம்.

உலகப் புவியியல் வரலாற்று அறிஞர் பெருமக்களால் அதிகமாகப் பேசப்பெறுவது மேரு மலை. அந்த மேருமலைக்கு மகா மேரு என்றதொரு சிறப்புப் பெயருமுண்டென்பர். அம்மலையைப் பொன்னிறமானது என்றும், துறக்கம் (எ) சுவர்க்கம் அதாவது பரலோகத்திற்கு ஒப்பிட்டுக் கூறப்பெறுவதும் உண்டு. அந்த மேருமலை ஆதித்தன் எனும் சூரியனின் மய்யப்பாதையில் இருந்துள்ளது என்றும், அதன் வடக்குத் திசையில் வடதுருவமும், தெற்குத் திசையில் தென்துருவமும் உள்ளது என்றும் குறிப்பிடுவர். மேருமலையில் சிவன் தவம் செய்வதாகவும், பார்வதி அம்மலையில் பிறந்தவள் என்றும், **மேருமலையைப் பெண் குறியின் வடிவம் அதாவது அரசஇலையின் வடிவம் என்றும் கூறுவர்.**




அந்த அரச இலையின் வடிவமே சிந்து சமவெளி செந்தமிழ் உயிரெழுத்து ‘ஈ’என்பதும் நம் இந்தியத் திருநாட்டின் மிக உயர்ந்த விருதான **பாரத்ரத்னா விருதின் குறியீடுமாகும்.** அதைப்பற்றிய முழு விபரங்களை எமது **வாய்மையே வெல்லும்** என்ற தலைப்புடைய நூலில் காணலாம்.

ஆனால் அந்த மேருமலையானது கிழக்கு ஆப்பிரிக்கா நாடுகளில் ஒன்றான டான்சானியாவில் உள்ள மேரு மலை, தென்அமெரிக்காவின் பெரு எனும் மலையாக இருந்திருக்கக் கூடும் போன்ற கருத்துவேறுபாடுகளுண்டு.

மேற்கண்ட சிந்து சமவெளி நகர நாகரிகப் பதிவுகளின் வாயிலாக மேரு மலை என்பது வில்போன்ற வடிவமுடைய இமயமலையையும், அதனடிப்பகுதி பெண் குறியின் வடிவம் அதாவது அரசஇலையின் வடிவம் என்பதும் தெரியவருகின்றன. முன் அட்டைப்படத்தின் விளக்கமும் அஃதே.


K-22a

கே-22எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பிச்சாடன் திருவுருவமும், ஆறு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாக (சீ + ஆ + ரூ + ர் ) +பிச்சாடனா + ன +ன். சீ ஆரூர் பிச்சாடனானன். **சீஆரூர் பிச்சாடன் ஆனன்** எனப் டிக்கப்பெறுகிறது.

(சீ ஆரூர்- திருவாரூர். பிச்சாடன் - பிச்சாடன். ஆனன் - ஆனவன்).

**தொல்வாச்சியம் : திருவாரூரில் எழுந்தருளிய பிச்சாடன் ஆனவன்.**


K-79a K-79b

கே-79எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையின் எ புறத்தில் பிச்சாடனனின் திருவுருவமும் எட்டு எழுத்துக்களும் இணைந்துள்ளன.

இந்த வில்லையை இடமிருந்து வலமாகவும், மேலிருந்து கீழாகவும், (சீ + ப + ஞ் + ச + சி + பா + பிச்சாடன் + ந + ள்). **சீ பஞ்ச சி பா பிச்சாடன் நள்** எனப் படிக்கப்பெறுகிறது.

(சீ - திரு. பஞ்ச சி - (படைத்தல், காத்தல், அருளல், மறைத்தல், அழித்தல் ஆகிய ஐந்தொழில்கள் புரியும்) பஞ்சமகன். பா -தூய்மை. பிச்சாடன் - பிச்சாடன். நள் - செறிவு (எ) உள்ளீடு.)

**தொல்வாச்சியம் : திரு பஞ்சமகன் பிச்சாடனன் செறிவு (எ) உள்ளீடு.**

பி புறத்திலுள்ள வட்ட வடிவ முனைகளைக் கொண்ட ஆறு ஒளிரேகைகள் ஆழி சக்கரத்திலுள்ள ஆறு வகையான கர்மாக்களைக் குறிப்பிடுவதாகக் கருதலாம்.


M-990a

எம்-990எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் முக்கோண வடிவமுடைய தலையாகக் கொண்ட பிச்சாடன் திருவுருவமும், **'பா, ஈ'** ஆகிய இரண்டு எழுத்துக்களும், அநேகமாக சேதமடைந்த பகுதியில் ஒத்தக்-கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாக முக்கோணம் + பிச்சாடன் + பா + ஈ. **முக்கோணம் பிச்சாடன் பா ஈ** எனப் படிக்கப்படுகிறது. (முக்கோணம் - திருகோணம் (மலை). பிச்சாடன் - பிச்சாடன். பா - பரப்பு, தூய்மை. ஈ - வியப்புக் குறிப்பு, பார்வதி)

**தொல்வாசிசியம் : திருகோண (மலை) பிச்சாடன் பரப்பு வியப்புக் குறிப்பு.**


K-20a

கே-20எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பிச்சாடன் திருவுருவமும், நான்கு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், (அநேகமாக) பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் **பிச்சாடன்** + (உ+ள்+ ளா+ ள்). **பிச்சாடன் உள்ளாள்** எனப் படிக்கப்பெறுகிறது.

(பிச்சாடன் - பிச்சாடன். உள்ளாள்-உள்ளிருந்து அறியும் ரகசிய உளவாளி.)

**தொல்வாச்சியம் : பிச்சாடன் உள்ளிருந்து அறியும் ரகசிய உளவாளி.**



H-1046a

எச்-1046எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பிச்சாடன் திருவுருவமும், அதன் கால்களில் 'ப்', 'ப' ஆகிய இரு எழுத்துக்-களும் 'ர', 'மே' ஆகிய இரு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும் பொறிக்கப்பெற்றுள்ளன. இந்த முத்திரையில் பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடு இடம் பெறவில்லை.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் பிச்சாடனாப் பரமே எனப் படிக்கப்பெறுகிறது. (பிச்சாடன் - பிச்சாடன். ஆப்(தம்) - நட்பு. பரமே - மேலானதே). **தொல்வாச்சியம் : பிச்சாடன் நட்பு மேலானதுக்கும் மேலானதே.**



H-2067A&B

எச்-2067எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் 'உ' என்ற எழுத்தும், 'பா' என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட பிச்சாடன் திருவுருவமும், மூன்று எழுத்துக்-களும் உள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாக உ + பா + பிச்சாடன +ற + ம் + மே. உ பா பிச்சாடனறம் மே. **உ பா பிச்சாடன் அறம் மே** எனப் படிக்கப்பெறுகிறது. (உ- சிவன். பா- தூய்மை. பிச்சாடன் - பிச்சாடன். அறம்- தர்மம்.மே - மேம்பாடு.)

**தொல்வாச்சியம்: சிவத்தூய்மை பிச்சாடன் தர்மம் மேம்பாடு.**



M-991a

எம்-991எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் 'பா' என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட பிச்சாடன் திருவுருவமும், 'உ' என்ற எழுத்துருவும், அன் எனும் தீக்குச்சி மனித உருவமும் துரியன் என்பதைக் குறிக்கும்

ஒரு குறியீடும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன. இந்த முத்திரை இடமிருந்து வலமாகப் பா + பிச்சாடன் + உ+ அன் துரியன். **பா பிச்சாடன் உ அன் துரியன்** எனப் படிக்கப்பெறுகிறது. (பா- தூய்மை. பிச்சாடன்- பிச்சாடன். உ- சிவன். அன் - அவன். துரியன் - துரியன்).

**தொல்வாச்சியம் : தூய்மையான பிச்சாடன் சிவன். அவன் துரியன்.** (சிவபெருமானுக்குத் துரியசிவன் என்ற பெயருமுண்டு.)


M-190a

எம்-190எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பா என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட பிச்சாடன் திருவுருவமும், நான்கு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன. இந்த முத்திரை இடமிருந்து வலமாக பா + பிச்சாடன் + ந + (ள் + ளு)+ ந. **பா பிச்சாடன் நள்ளு ந** எனப் படிக்கப்பெறுகிறது. (பா- தூய்மை. பிச்சாடன்- பிச்சாடன். நள்ளு - விரும்புதல், நட்புக் கொள்ளுதல். ந - சிறப்பு).

**தொல்வாச்சியம் : தூய்மையான பிச்சாடனை விரும்புதல் சிறப்பு.**



அடையாள எண்ணில்லாததொரு முத்திரையில் பிச்சாடன் திருவுருவமும், **'ரு, ள'** ஆகிய இரண்டு எழுத்துக்கள் இணைந்தும், **'ன்'** எனும் எழுத்தும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன. இந்த முத்திரை இடமிருந்து வலமாகப் பிச்சாடன + (ரு + ள)+ ன். **பிச்சாடனருளன். பிச்சாடன் அருளன்** எனப் பகுத்துப் படிக்கப்பெறுகிறது. (பிச்சாடன்- பிச்சாடன். அருளன் - அருள் புரிபவன்).

**தொல்வாச்சியம்: பிச்சாடன் அருள் புரிபவன்.**



M-834a

எம்-834எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பிச்சாடன் திருவுருவமும், ஆறு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் பிச்சாடனு + ரு + மே + லி + ட்+ட+ஆ. **பிச்சாடனுரு மேலிட்ட ஆ. பிச்சாடன் உரு மேல் இட்ட ஆ** எனப் படிக்கப் பெறுகிறது.

(பிச்சாடன்- பிச்சாடன். உரு - தெய்வத் திருவுருவம். மேலிட்ட - மேலிட்ட. ஆ- ஆகுக / ஆகுகை / சிற்றுயிர்).

**தொல்வாச்சியம் : பிச்சாடன் தெய்வத் திருவுருவம் மேலிட்டதாகுக.**



M-1123a

எம்-1123எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **'பா'** என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட பிச்சாடன் திருவுருவமும், **'ரு, ர, ர, ர'** ஆகிய நான்கு எழுத்துக்களும் எருதின் உருவமும் உள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் பா பிச்சாடனரு +(அ)ர + (அ)ர +(அ)ர. **பா பிச்சாடன் உரு (அ)ர, (அ)ர, (அ)ர** எனப் படிக்கப்பெறுகிறது. (பா- தூய்மையான பிச்சாடனர்- பிச்சாடனர். உரு- தெய்வத்திருமேனி. (அ)ர அ)ர (அ)ர - (அ)ர அ)ர (அ)ர). (அர - அரா)

**தொல்வாச்சியம் : பிச்சாடன் உரு அர அர அர. (பிச்சாடன் உரு அரா அரா அரா.)**

தற்காலத்தில் அர அர அர சிவனே! என்பதும் அர அர அர மகாதேவா! என்பது போல சிந்து சமவெளி நகர நாகரிக மக்கள் **பிச்சாடன் உரு அர, அர,** அர எனப் போற்றிப் புகழ்ந்து பாடியுள்ளனர் (உரைத்தனர்) என்பர்.

(குறிப்பு: இந்த முத்திரையில் ரகர உயிர்மெய் எழுத்துக்களின் எடிவங்கள் **'ரு, ர, ர, ர'** என வேறுபடுத்திக் காட்டியுள்ளது நோக்கத்தக்கவை.)


M-1689a

எம்-1689எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **'பா'** என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட பிச்சாடன் திருவுருவமும், நான்கு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் பா + பிச்சாடன + (ரு + ளி), (ன+ மே). **பா பிச்சாடனருளினமே. பா பிச்சாடன் அருள் இனமே** எனப் படிக்கப்பெறுகிறது.

(பா- பரப்பு, தூய்மை. பிச்சாடனர்- பிச்சாடனர். அருள் - அருள். இனமே - சுற்றமே).

**தொல்வாச்சியம் : தூய்மையான பிச்சாடன் அருளும் சுற்றமே.**


L-38a

எல்-38எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பா பிச்சாடன் திருவுருவமும், **அன்** எனும் தீக்குச்சி வடிவ மனிதக் குறியீடு **'நே'** எனும் எழுத்து இணைந்தும், **'சோ'** என்ற எழுத்தும், ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் பா + பிச்சாடன் + (அன் + நே) + சோ. **பிச்சாடன் அன் நே சோ** எனப் படிக்கப் பெறுகிறது.

( பா- தூய்மை. பிச்சாடன் - பிச்சாடன். அன் - அவன். நே - அன்பு. சோ - உமையம்மை.)

**தொல்வாச்சியம் : தூய்மை பிச்சாடன். அவன் அன்பு உமையம்மை**


M-1026a

எம்-1026எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ' சீ' எனும் எழுத்துருவும், **பிச்சாடன் திருவுருவமும்,** சேதமடைந்த பகுதியில் ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், அநேகமாக பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றிருக்கக் கூடும் எனக் கருதலாம். இந்த முத்திரையை இடமிருந்து வலமாகச் **சீ பிச்சாடன்** எனப் படிக்கப் பெறுகிறது. (சீ- திரு, அருள்மிகு. பிச்சாடன்- பிச்சாடன்).

**தொல்வாச்சியம் : திரு பிச்சாடன்**


H-1809A&B

எச்- 1809எ, பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் ' **சீ** 'எனும் எழுத்துருவும், ' **பா** ' என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட பிச்சாடன் **திருவுருவமும்** உள்ளன. இந்த வில்லை இடமிருந்து வலமாகச் சீ + பா + பிச்சாடன். **சீ பா பிச்சாடன்** எனப் படிக்கப்பெறுகிறது. (சீ - திரு, அருள்மிகு. பா - தூய்மை. பிச்சாடன் - பிச்சாடன்.

**தொல்வாச்சியம் : திருத் தூய்மையான பிச்சாடன்.**


H-514a

எச்- 514எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **பிச்சாடன் திருவுருவமும், ச, ன, ன், (இ)ட், ட** ஆகிய ஐந்து எழுத்துக்களும், **ஆழி** எனும் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் பிச்சாடனா + ச + ன + னி + ட் + ட + ஆழி. **பிச்சாடனாசனனிட்ட ஆழி. பிச்சாடன் ஆசனன் இட்ட ஆழி** எனப் படிக்கப்பெறுகிறது.

(பிச்சாடன்- பிச்சாடன். ஆசனன் - பீடாதிபதி இட்ட - இட்ட. ஆழி - கட்டளை, வட்டம், அரசாணை).

**தொல்வாச்சியம்: பிச்சாடன் பீடாதிபதி இட்ட கட்டளை.**

குறிப்பு: பிச்சாடன் சிவபெருமானின் பதினாறு வெளிப்பாடுகளில் ஒருவன் என்பதாலும், பீடாதிபதி என்பது சைவ சித்தாந்த பீடத்தின் தலைமைப் பொறுப்புடையவர் என்பதாலும் சிந்து சமவெளி நாகரிகத்தில் சைவசித்தாந்தப் பீடம் இருந்துள்ளது தெரியவருகிறது.



H-2218A,B&C

எச்- 2218எ,பி,சி என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **'பா'** என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட **பிச்சாடன் திருவுருவமும், 'ன், ஆ, ன, ப, ண்'** ஆகிய ஐந்து எழுத்துக்களும் உள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் **பா பிச்சாடனன் ஆன பண்** எனப் படிக்கப்படுகிறது. ( பா- தூய்மை. பிச்சாடனன்- பிச்சாடனன். ஆன - ஆகிய. பண் - பாட்டு, தொண்டு, தகுதி).

**தொல்வாச்சியம் : தூய்மையான பிச்சாடனன் ஆகிய தொண்டு.**



M-1880

எம்-1880எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பிச்சாடன் திருவுருவமும், ஞ்,ச, (இ)ட், ட, ஆ ஆகிய ஐந்து எழுத்துக்களும், எருமையின் உருவமும், உணவுத் தொட்டியின் வடிவமும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாகப் **பிச்சாடனுஞ்ச (இ)ட்ட) ஆ. பிச்சாடன் உஞ்ச இட்ட ஆ** எனப் பகுத்துப் படிக்கப்பெறுகிறது. ( பிச்சாடனன் - பிச்சாடனன். உஞ்ச - அரிசிப் பிச்சையெடுத்து நடத்தும் வாழ்க்கை. ஆ - ஆவது, ஆகுகை.)

**தொல்வாச்சியம் : பிச்சாடன் அரிசிப் பிச்சையெடுத்து நடத்தும் வாழ்க்கை ஆகுகை.**




M-330 a&b

எம்-330எ,பி என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ‘**பா**’ என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட **பிச்சாடன் திருவுருவமும்**, ஏழு எழுத்துக்களும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் பா + பிச்சாடனு + (ஞ் + ச) + (இ)ட் + ட + ஆ + ப் + ப . **பா பிச்சாடனுஞ்ச (இட்ட) ஆப்ப. பா பிச்சாடன் உஞ்ச இட்ட ஆப்ப** எனப் படிக்கப்பெறுகிறது.

(பா- தூய்மை. பிச்சாடனன்- பிச்சாடனன். உஞ்ச - அரிசிப் பிச்சையெடுத்து நடத்தும் வாழ்க்கை உயிர் வாழ்வதற்காக. இட்ட- இட்ட. ஆப்ப - உணவு).

**தொல்வாச்சியம் : தூயமையான பிச்சாடன் அரிசிப் பிச்சையெடுத்து நடத்தும் வாழ்க்கை வாழ்வதற்காக உணவு.**

மேற்கண்ட எம்-1880எ, எம்-330எ,பி ஆகிய இரண்டு முத்திரைகள் கூறுவதை ‘**இரவலர் கோலம் இறைவன் கொண்டது**’ என்ற தலைப்பில் திருமந்திரம் (1888) பாடல் கீழ்க்கண்டவாறு கூறுகிறது.

பரந்து உலகுஏழும் படைத்த பிரானை
இரந்துணி என்பார்கள் எற்றுக்கு இரக்கும்
நிரந்தர மாக நினையும் அடியார்
இரந்துண்டு தன்கழல் எட்டச் செய்தானே.

பொருள்: விரிந்து பரந்த உலகங்கள் ஏழையும் படைத்து, பரந்த உலகு எங்கும் பொருந்தி இருக்கின்ற பரம்பொருளை: இரந்துண்டு வாழ்பவன் என்று சொல்வார்கள்! இறைவன் எதற்காகப் பிச்சை எடுக்கவேண்டும்? இடையீடின்றி எப்போதும் அவனையே நினைத்து வாழ்ந்து கொண்டிருக்கின்ற, அவன் அடியார்கள் உண்ணும் உணவு, அவனிட்ட பிச்சை என்பதை அனைத்து ஆன்மாக்களும் அறியவேண்டும். அதன் மூலமாகத் தன் தன் திருவடி நிழலில் நீங்காதிருக்க வேண்டும் என்பதற்காகவே: அவன் பிச்சாடனனாகக் காட்சித் தருகிறான். (இரந்துணி -இரந்து உண்பவன். கழல் -திருவடி.)


H-792A


H-792B


H-793A


H-793B

எச்-792எ,பி, எச்-793எ,பி, என்ற அடையாள எண்களுடைய இரண்டு வில்லைகளில் சீ என்ற எழுத்தும், 'பா' என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட **பிச்சாடன்**, பினாகபாணி **திருவுருவங்களும், அன் என்பதைக் குறிக்கும் தீக்குச்சி வடிவ மனித உருவமும், 'ப,ன்'** ஆகிய இரண்டு எழுத்துக்களும் உள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகச் **சீ + பா + பிச்சாடன் + (பினாகபாணி + அன்)+ ப + ன். சீ பா பிச்சாடன் பினாகபாணி அன்பன்** எனப்படிக்கப்பெறுகிறது. (சீ - திரு. பா - தூய்மை. பிச்சாடனன் - பிச்சாடனன். பினாகபாணி - பினாகபாணி. அன்பன் - பக்தன், தோழன்.)

**தொல்வாச்சியம்: திருத்தூய்மையான பிச்சாடன் பினாகபாணியின் தோழன்.**



H-1867A&B



H-1868A&B



H-1869A&B

எச்-1867எ,பி, எச்-1868எ,பி, எச்-1869எ,பி ஆகியஅடையாள எண்களுடைய மூன்று வில்லைகளில் **பிச்சாடன் திருவுருவமும் 'பா'** என்ற எழுத்தும், அடைப்புக்குறியில் **'ச'** என்ற எழுத்தும், **'ப, ண்'** ஆகிய எழுத்துக்கள் என **நான்கு எழுத்துக்கள்** பொறிக்கப்பெற்றுள்ளன.

இம்மூன்று வில்லைகளில், அடைப்புக் குறியில் **உள்ள ச** என்ற எழுத்து நீங்கலாக இடமிருந்து வலமாகப் **பிச்சாடன் +பா +ப+ண் பிச்சாடன் பா பண்** எனப் படிக்கப்பெறுகின்றன. (பிச்சாடனன்- பிச்சாடன். பா- தூய்மை.யான. பண்- அமைவு) **பிச்சாடன் தூய்மையான அமைவு.**

இம்மூன்று வில்லைகளில், அடைப்புக் குறியில் **உள்ள 'ச'** என்ற எழுத்து உட்பட இடமிருந்து வலமாகப் பிச்சாடன் + பா +ச + ப + ண். **பிச்சாடன் பாச பண்** எனப் படிக்கப்பெறுகின்றன. (பிச்சாடனன்- பிச்சாடனன். பாச - அன்பு. பண்- அமைவு) **பிச்சாடன் அன்பின் அமைவு.**

**தொல்வாச்சியம் : பிச்சாடன் தூய்மையான அமைவு. பிச்சாடன் அன்பின் அமைவு.**



H-948A&B



H-949A&B

எச்-948எ,பி, எச்-949எ,பி ஆகியஅடையாள எண்களுடைய இரண்டு வில்லைகளில் குறிப்பாக எச்-949எ,பிஇல் மட்டும் **'பா'** என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட **பிச்சாடன் திருவுருவமும், 'ச், சை, ப, ன் '**ஆகிய நான்கு எழுத்துக்களும் உள்ளன.

இந்த வில்லைகள் இடமிருந்து வலமாகப் (எச்-948எ,பி) **பிச்சாடன் + (இ)ச்சை + ப+ன்.** (எச்-949எ,பி) **பா பிச்சாடன் (இ)ச்சை பன்** எனப் படிக்கப்பெறுகின்றன.

(பா - தூய்மை. பிச்சாடன் - பிச்சாடன். இச்சை - விருப்பம். பன்- அரிவாட்பல் (எ) தானாக ஒன்றுக்கும் மேலாகுவது).

**தொல்வாச்சியம் : பிச்சாடன் விருப்பம் தானாக ஒன்றுக்கும் மேலாகுவது.**

**தொல்வாச்சியம்: தூய்மையான பிச்சாடன் விருப்பம் தானாக ஒன்றுக்கும் மேலாகுவது.**



M-731a

எம்- 731எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **பிச்சாடன் திருவுருவமும்,** ஐந்து எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் பிச்சாடன + னு + ட + ச + ன் +ஆ. பிச்சாடனுடசன் ஆ. **பிச்சாடனன் உடசன் ஆ** எனப் படிக்கப்பெறுகிறது.

(பிச்சாடன்- பிச்சாடன். உடசன் - இலைக்குடிலன். ஆ- ஆகுகை.)

**தொல்வாச்சியம்: பிச்சாடனன் இலைக்குடிலன் ஆகுகை.**

குறிப்பு: உடசன் (எ) இலைக்குடிலன் என்ற சொல் பிற்காலத்தில் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள இலையான் (இளையான்) குடியில் ஈசன் எழுந்தருளியுள்ள சிவனாலயத்தைக் (இராசேந்திர சோழீசுவரத்தைக்) குறிப்பிடுவதாகக் கருதலாம்.


H-1844A&B

எச்-1844எ,பி என்றஅடையாள எண்ணுடைய வில்லையில் 'சீ'என்ற எழுத்தும், 'பா' என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட **பிச்சாடன் திருவுருவமும், ' தி, ப, ண்'** ஆகிய மூன்று எழுத்துக்களும் உள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகச் சீ + பா + பிச்சாடனா + தி + ப + ண். **சீ பா பிச்சாடனாதி பண். சீ பிச்சாடன் ஆதி பண்** எனப் படிக்கப்பெறுகிறது. (சீ - திரு. பா - தூய்மை. பிச்சாடன் - பிச்சாடன். ஆதி - தொடக்கம், பழைமை. பண் - பாட்டு, தகுதி, அமைவு.)

**தொல்வாச்சியம் : திரு தூய்மையான பிச்சாடன் பழமையான அமைவு.**


H-125a


H-152a


M-1986a


H-189A


H-1105A


H-1999A&B

எச்-125எ, எச்-152எ, எம்-1986எ, எச்-189எ, எச்-1105எ, எச்-1999எ,பி என்ற அடையாள எண்களுடைய ஆறு வில்லைகளில் **சீ** என்ற எழுத்தும், **பா** என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட **பிச்சாடன் திருவுருவமும்,** நான்கு எழுத்துக்களும் பொறிக்கப்பெற்றுள்ளன. எச்-19994எ,பி-இன் பி புறத்தல் மரத்தின் வடிவம் சுட்டிக்காட்டப் பெற்றுள்ளது.

எச்-125எ, எச்-152எ, எம்-1986எ ஆகிய மூன்று வில்லைகளை இடமிருந்து வலமாகப் பா + பிச்சாடன் + (ரு + ள்) +(ஏ +ண்). பிச்சாடனருள் ஏண். **பா பிச்சாடன் அருள் ஏண்** எனப் படிக்கப்படுகின்றன. (பா- தூய்மை பிச்சாடன் - பிச்சாடன். அருள் - பொழிவு, கருணை, ஏண்- வலிமை, உயர்ச்சி).

**தொல்வாச்சியம் : தூய்மையான பிச்சாடன் அருள் வலிமை.**

எச்-189எ, எச்-1105எ, எச்-19994எ,பி ஆகிய மூன்று வில்லைகளைச் **சீ + பா + பிச்சாடன் + (ரு + ள்) +(ஏ +ண்) சீ பிச்சாடனருள் ஏண். சீ பிச்சாடன் அருள் ஏண்** எனப் படிக்கப்படுகின்றன. (சீ - திரு. பா- தூய்மை பிச்சாடன் - பிச்சாடன். அருள் - பொழிவு, கருணை, ஏண்- வலிமை, உயர்ச்சி).

**தொல்வாச்சியம் : திரு தூய்மையான பிச்சாடன் அருள் வலிமை.**

இம்மூன்றில், எச்-19994எ,பி வில்லையின் பி புறத்தலுள்ளதொரு மரத்தின் வடிவம் **பிச்சாடன் அருள் வலிமை** என்பதை உள்வயிரமுள்ள ஒரு மரத்துடன் ஒப்பிட்டுக் காட்டப்பெற்றுள்ளது

**தொல்வாச்சியம் : திரு தூய்மையான பிச்சாடன் அருள் வலிமை.**


M-1957a

எம்-1957எ என்ற அடையாள எண்ணுடய வில்லையில் **'பா'** என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட **பிச்சாடன் திருவுருவமும்,** நான்கு எழுத்துக்களும் **ஒன்று (எ) எண்ணும்,** .இரண்டு எழுத்துக்களும், **ஆழி** குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த வில்லையை இடமிருந்து வலமாகப் பா + பிச்சாடன + (ரு + ள்) + ஏ + ன் + ஒரு + (இ)ட்+ ட + ஆழி. **பா பிச்சாடனருள் ஏன் ஒரு இட்ட ஆழி. பா பிச்சாடன் அருள் ஏன் ஒரு இட்ட ஆழி** எனப் படிக்கப்பெறுகிறது.

(பா- தூய்மை பிச்சாடன் - பிச்சாடன். அருள் - பொழிவு, கருணை, ஏன் - எதற்காக, என்ன காரணம். என்னை. ஒரு - ஒன்று, ஒன்றாக, ஒப்பற்றதாக, இட்ட- இட்ட. ஆழி - கட்டளை, வட்டம்.).

**தொல்வாச்சியம்: தூய்மையான பிச்சாடன் கருணை ஏன் ஒப்பற்றதொன்றாக இட்ட வட்டம்?**


H-154a

எச்-154எ என்ற அடையாள எண்ணுடய முத்திரையில் **'பா'** என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட **பிச்சாடன் திருவுருவமும்,** ஆறு எழுத்துக்களும் **ஒரு என்ற எண்ணும், ஆ என்ற எழுத்தும்** பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் பா + **பிச்சாடன்**+(ரு + ள்) +(ஏ +னி) +ட் + ட + **ஒரு** + **ஆ**. **பா பிச்சாடனருள் ஏனிட்ட தொரு ஆ. பா பிச்சாடன் அருள் ஏன் இட்ட ஒரு ஆ** எனப் படிக்கப்பெறுகிறது.

(பா- தூய்மை பிச்சாடன் - பிச்சாடன். அருள் - பொழிவு, கருணை, ஏன் -எதற்காக, என்ன காரணம். இட்ட - இட்ட. ஒரு - ஒன்று, ஒன்றாக, ஒப்பற்றதாக, ஆ - சிற்றுயிர், ஆகுகை, ஆவது.)

**தொல்வாச்சியம் : தூய்மையான பிச்சாடன் கருணை எதற்காக இட்டதொரு சிற்றுயிர்?**


M-1419A


M-1419B

எம்-1419எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையின் எ புறத்தில் **'சீ '** என்றதொரு எழுத்தும், **'பா'** என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட **பிச்சாடன் திருவுருவமும்,** ஐந்து எழுத்துக்களும், **பி** புறத்தில் **ய்** எனும் ஓரெழுத்தும் பொறிக்கப்பட்டுள்ளன.

இந்த வில்லையை இடமிருந்து வலமாகச் சீ + பா + பிச்சாடன + (ரு + ள்) + (ஏ + ட + னா + ய். **சீ பா பிச்சாடன ஏடனாய். சீ பா பிச்சாடன் அருள் ஏடன் ஆய்** எனப் படிக்கப்பெறுகிறது. (சீ - திரு. பா - தூய்மை. பிச்சாடன் - பிச்சாடன். அருள் - கருணை, பொழிவு. ஏடன் - தோழன். ஆய் - ஆக.)

**தொல்வாச்சியம்: திரு தூய்மையான பிச்சாடனின் கருணைத் தோழனாக.**


M-733a

எம்-733எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **பினாகபாணியின் திருவுருமும், பிச்சாடன் திருவுருமும்,** எட்டு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரத்தை அறிந்தவன் என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் **பினாகபாணி + மே + அ + ந பிச்சாடன் + ப + (ரு + ரு + ப) + சி பினாகபாணி மே அ ந பிச்சாடன் பருரூப சி** எனப் படிக்கப்பெறுகிறது. (பினாகபாணி - பினாகபாணி. மே - மேம்பாடு / ஏற்றம், அ - அழகு, ந - சிறப்பு. பிச்சாடன் - பிச்சாடன். பருரூப - மலை போன்ற திருவுருவ. சி - சிவபெருமான்.)

**தொல்வாச்சியம் : பினாகபாணியின் மேம்பாடு(ம்) அழகு(ம்) சிறப்புமுடைய பிச்சாடன் மலை போன்ற திருவுருவ சிவபெருமான்.**


H-226A


H-227A


H-228A


H-226B



H-227B


H-228B

எச்-226எ,பி, எச்-227எ,பி,எச்-228எ,பி ஆகிய அடையாள எண்களுடை மூன்று வில்லைகளில் **சீ** என்றதொரு எழுத்தும், **பா** என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட **பிச்சாடன் திருவுருவமும்,** மூன்று எழுத்துக்களும், **பி** புறத்தில் **மூன்று பரம்ம ஞானக் குறியீடுகளும் சிவபெருமானின் பதினாறு வெளிப்பாடுகளைப் பதினாறு வட்டங்களாகவும்** அடையாளப்படுத்தப் பெற்றுள்ளன.

இம்மூன்று வில்லைகளைச் சீ + பா + பிச்சாடனி + ல் + லா + மை. சீ பிச்சாடனில்லாமை. சீ பா பிச்சாடன் இல்லாமை எனப் படிக்கப்பெறுகின்றன. (சீ- திரு. பா- தூய்மை. பிச்சாடன் - பிச்சாடன். இல்லாமை - இன்மை).

**தொல்வாச்சியம் : திரு தூய்மையான பிச்சாடன் இன்மை**



H-1181A&B



H-2062A&B



H-2063A&B

எச்-1181எ,பி, எச்-2062எ,பி, எச்-2063எ,பி ஆகியஅடையாள எண்களுடைய மூன்று வில்லைகளில் **சீ என்ற எழுத்தும், பா** என்ற ஓரெழுத்தைத் தலையாகக் கொண்ட **பிச்சாடன் திருவுருவமும் துணை எழுத்தும், சோகம்** என்பதைக் குறிக்கும் குறியீடும் **ஆ, உ, ம், மே** ஆகிய நான்கு எழுத்துக்களும் உள்ளன.

இம்மூன்று வில்லைகளை இடமிருந்து வலமாகச் சீ + பா + பிச்சாடனா + சோகம் + ஆ + உ + ம் + மே. **சீ பா பிச்சாடனா சோகம் ஆ உம் மே** எனப் படிக்கப்பெறுகின்றன.

(சீ - திரு. பா - தூய்மை. பிச்சாடனா சோகம் - பிச்சாடனனும் ஆன்மாவும் ஒன்றெனப் பாவித்தல். ஆ - ஆகுகு /ஆகுகை /சிற்றுயிர். உம் - ஏற்றுக்கெள்ளுதல். மே - மேம்பாடு.)

**தொல்வாச்சியம் : திரு தூய்மையான பிச்சாடனனும் ஆன்மாவும் ஒன்றெனப் பாவித்தல் ஆகுக என ஏற்றுக்கொள்ளும் மேம்பாடு.**


M-495A


M-495B


M-495C

எம்-495எ,பி,சி என்ற அடையாள எண்ணுடய முப்பட்டை வடிவிலான வில்லையின் **'ஏ'** புறத்தில 10 எழுத்துக்களும், 1 குறியீடும், **'பி '**புறத்தில 15 எழுத்துக்களும், 1 குறியீடும், **'சி'** புறத்தில் 5 எழுத்துக்களும், 4 குறியீடுகளும் என மொத்தம் 30 எழுத்துக்களும், 6 குறியீடுகளும் பொறிக்கப்பெற்றுள்ளன.

**எம்-495எ**

தமிழ் இலக்கணம் முறைபடி **'ர'** எனும் இடையின எழுத்துக்கு 'அ, இ, உ' ஆகிய மூன்றில் எதாவது ஒரு சுட்டெழுத்துச் சொல்லுக்கு முதலாக வரும்.

எனவே இப்புறத்தில் உள்ள எழுத்துக்களும் குறியீடும், இடமிருந்து வலமாக **(அ)ரு + பா + ப் + பு + பிச்சாடன் + ப + (ஞ் + சை) + ய + (ரு+ள்).** (அ)ரூபாப்பு பிச்சாடன் பஞ்சையருள். **அருப ஆப்பு பிச்சாடன் பஞ்சையர் உள்** எனப் படிக்கப்பெறுகின்றன.

(அருப(ம்) - சிவன். ஆப்பு - அருவமான உடல். பிச்சாடன் - பிச்சாடன். பஞ்சையர் - வறிஞர். உள் - உள்ளம், மனம், மனவெளிச்சி) சிவனுடல் பிச்சாடன் வறிஞனின் உள்ளம்.

**தொல்வாச்சியம் : சிவனுடல் பிச்சாடன் எனும் பரதேசியின் உள்ளம்**

**எம்-495பி**


M-495B

**'பி'** புறத்திலுள்ள எழுத்துக்களையும் குறியீட்டையும் இடமிருந்து வலமாகவும், மேலிருந்து கீழாகவும், ப் பா + (அன் + நே) + சீ + உ + ல் + லா + ண + ன் + ந + (ள் + ளு) + ப + ல் + லா + (ட் + ப). **பா (அன் நே) சீ உல்லாணன் நள்ளு பல்லாட்ப** எனப் படிக்கப்பெறுகின்றன.

(பா - பரப்பு, பாட்டு, தூய்மை. அன் -அவன். நே- அன்பு. சீ- திரு. உல்லாணன் - திறமையும் அன்புடையோன். நள்ளு (நள்ளுதல்)- நட்புக் கொள்ளுதல் விரும்புதல், பல்ல(ர்) - பலர். ஆட்ப -ஆட்படுதல் (உயர்நிலையடைதல்).

**தொல்வாச்சியம்: தூய்மையான அவன் அன்பு. திரு திறமையும் அன்புடையோனையும் விரும்புதல் பலர் உயர்நிலையடைதல் (ஆகுக)**

**எம்-495சி**



**M-495C**

'சி' புறத்திலுள்ள எழுத்துக்களையும் சோகம் (எ) குறியீடு நீங்களாகவும், அதனைக் கூட்டியும் இருவிதமாகவும், இடமிருந்து வலமாக, ந + ள் + ளு + பிச்சாடனா + ட் +ப + அன் + செடி. **நள்ளு பிச்சாடனாட்ப அன் செடி.**

ந + ள் + ளு + (சோகம்) + பிச்சாடனா + ட் +ப + அன் + செடி. **நள்ளு (சோகம்) பிச்சாடனாட்ப அன் செடி எனப் படிக்கப்பெறுகிறது.**(நள்ளு (நள்ளுதல்) - நட்புக் கொள்ளுதல். சோகம் - சிவனும், சீவனும் ஒன்றெனப் பாவிக்கை. பிச்சாடன் - பிச்சாடன். ஆட்ப -ஆட்படுதல் (உயர்நிலையடைதல்). அன்- அவன். செடி- நெருக்கம், ஒளி.) இவ்விடத்து ஒளி என்ற சொல் நன்மதிப்பு எனப்பொருள்பெறும்.

**தொல்வாச்சியம் 01 : நட்புக் கொள்ளுதல் பிச்சாடன் உயர்நிலையடைதல் அவன் ஒளி.**

**தொல்வாச்சியம 02˙ : நட்புக் கொள்ளுதல் சிவனும் சீவனும் ஒன்றெனப் பாவித்தல், பிச்சாடன் உயர்நிலையடைதல் அவன் ஒளி.**

எம்-495எ,பி,சி என்ற அடையாள எண்ணுடைய முப்பட்டை வடிவிலான வில்லையின் மூன்று புறங்களில் உள்ள குறியீடுகளையும் எழுத்துக்களையும் கொண்ட தொல்வாச்சியம் கீழ்க்கண்டவாறு கூறுவதாகக் கருதலாம்.

**தொல்வாச்சியம்: சிவனுடல் பிச்சாடன் எனும் பரதேசியின் உள்ளம்.**

**தொல்வாச்சியம்: தூய்மையான அவன் அன்பு. திரு திறமையும் அன்புடையோனையும் விரும்புதல் பலர் உயர்நிலையடைதல் (ஆகுக).**

**தொல்வாச்சியம் 01 : நட்புக் கொள்ளுதல் பிச்சாடன் உயர்நிலையடைதல் அவன் ஒளி.**

**தொல்வாச்சியம 02˙ : நட்புக் கொள்ளுதல் சிவனும் சீவனும் ஒன்றெனப் பாவித்தல், பிச்சாடன் உயர்நிலையடைதல் அவன் ஒளி.**



பிச்சாடன் என்ற தலைப்புடைய இப்பகுதியில், குறிப்பாக எம்-495எ,பி,சி என்ற அடையாள எண்ணுடைய முப்பட்டை வடிவிலான வில்லையைப் படிப்பதற்கு உந்து சக்தியாகத் திகழ்ந்த எனது நண்பரும், சிந்து சமவெளி ஆய்வாளருமான மறைந்த **பூரணச் சந்திர ஜீவா** அவர்களின் நினைவாக சமர்பிக்கிறோம்.

முன் கண்ட எச்-1181எ,பி, எச்-2062எ,பி, எச்-2063எ,பி, என்ற அடையான எண்ணுடைய வில்லைகளின் தொடர்ச்சியான **பருருப சி** என்ற தலைப்பில் மலை போன்ற திருவுருவ சிவபெருமானைப் பற்றிக் காணலாம்.

# பருரூப சி

சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் வரலாற்றுச் சான்றுகளில் **பருரூப** என்ற சொல்லைக் காணமுடிகிறது. அச்சொல்லுள்ள **'ப'** என்ற எழுத்துரு தனித்தும், **ருரூப** ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்துள்ளன. **பருரூப** என்ற சொல் யாரைக் குறிப்பிடுகிறது என்பதை வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் கூறப்பெற்றுள்ளன.


M-2113A

பருரூப என்பதைப் **பரு (உ)ரூப** எனவும், **பரு** என்பதற்கு மலை, கடல், கணு, துறக்கம், நெல்லின் முனை, எனவும், **(உ)ரூப** என்பதற்கு வடிவ, உருவ, அழகு எனவும் தமிழ் அகராதியின் வாயிலாகப் பொருளறிய முடிகிறது.

எம்-2113எ என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் ஆறு எழுத்துக்களுள்ளன. அவற்றில், மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்துள்ளன.


M-862a

இந்த வில்லை இடமிருந்து வலமாக, சீ + ப +(ரு + ரூ + ப) +உ. **சீ பருரூப உ** எனப் படிக்கப்பெறுகிறது. (சீ - திரு, பருரூப - மலை உருவ, உ - சிவபெருமான்.)

**தொல்வாச்சியம்: திருமலை (போன்ற) உருவ சிவபெருமான்.**

எம்-862எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் எட்டு எழுத்துக்களும், ஒரு குறியீடும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானி என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன. இரண்டாவது, மூன்றாவது, நான்காவது ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்தும், ஐந்தாவது, ஆறாவது ஆகிய இரண்டு எழுத்துக்கள் இணைந்துமுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாகப் ப + ரு +ரூ + பி + ட் + ட + ப + னா + தி. பருரூபிட்ட பனாதி. **பருரூப இட்ட பன் ஆதி** எனப் படிக்கப்பெறுகிறது. (பருரூப - மலை (அ) கடல் போன்ற உருவ. இட்ட - இட்ட பன் - அரிவாட்பல். ஆதி - கடவுள் / எப்பொருட்கும் இறைவன் / தொடக்கம்).

**தொல்வாச்சியம் : மலை போன்ற உருப(ம்) இட்ட அரிவாட்பல் எப்பொருட்கும் இறைவன்.**



M-700a

எம்-700எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஆறு எழுத்துக்களும் அவற்றில் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்தும், ஐந்தாவது, ஆறாவது ஆகிய இரண்டு எழுத்துக்கள் இணைந்துமுள்ளன. இரண்டு குறியீடுகளும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானி என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, ப (ருரூப) ஆழி (ஊன்) பறவை. **பருரூபாழி ஊன் பறவை** எனப்படிக்கப்பெறுகிறது. (பருரூபாழி - மலை உரூப வட்டம், ஊன் - உடல் / உடம்பு. பறவை - ஆன்மா / அன்னம்).

**தொல்வாச்சியம் : மலை உருவ வட்டம் உடலும் ஆன்மாவும்.** அதாவது **மலை போன்ற உருவத்தின் மக்கட் கூட்டம் உடலும் ஆன்மாவும் ஆகும்.**

(இவ்விடத்து, வட்டம் என்பது மக்கட்கூட்டத்தையும், பறவை என்பது அன்னப்பறவை (எ) சிவப்பறவை எனச் மறைமுகமாகக் குறிப்பிடுவதாகவும் கருதலாம்.)



M-754a

எம்-754எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பதினொரு எழுத்துக்களும், அவற்றில் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்தும், ஆறாவது, ஏழாவது, எட்டாவது ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்துமுள்ளன.

அநேகமாக உடைந்த கீழ்ப்பகுதியில் ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானி என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளதாகக் கருதலாம்.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, ப (ரு+ரு+ப) + ம் +(இ) ட்+ ட+பா) + ட்+டை (இ)ங்கு. பருருபமிட்ட பாட்டை (இ)ங்கு. **பருருபம் இட்ட பாட்டை (இ)ங்கு** எனப் படிக்கப்பெறுகிறது. (பருருபம் - மலை உருவம், இட்ட- இட்ட. பாட்டை - பாதை, ஒழுங்கு, இங்கு - இவ்விடம்).

**தொல்வாச்சியம் : மலை (போன்ற) உருவமிட்ட ஒழுங்கு இவ்விடம்**



M-1670a

எம்-1670எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஒன்பது எழுத்துக்களும், அவற்றில் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்துள்ளன. ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானி என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, ப+ (ரு+ரு+ப) +உ+சா +(இ)ட்+ட +ஆ. **பருருப உசா இட்ட ஆ** எனப் படிக்கப்பெறுகிறது. (பருருப - கடல் (அ) மலை போன்ற உருவ. உசா - ஆய்வு. இட்ட- இட்ட. ஆ - சிற்றுயிர், ஆகுகை / ஆகுக).

**தொல்வாச்சியம் : கடல் (அ) மலை போன்ற உருவ(ம்) ஆய்வுக்கு இட்டதாகுகை.**



H-879A&B



H-880A&B

எச்-879எ,பி, எச்-880எ,பி ஆகிய இரண்டு அடையாள எண்களுடைய முத்திரைகளின் 'எ' புறத்தில் ஒரு முதலையின் உருவம் பொறிக்கப் பெற்றுள்ளன. 'பி' புறத்தில் ஆறு எழுத்துக்களும், அவற்றில் மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்துள்ளன. இந்த முத்திரை இடமிருந்து வலமாக, சீ + ப + (ரு + ரு + பா) + ழி. **சீ பருருபாழி** எனப் பகுத்துப் படிக்கப்படுகிறது. (சீ - திரு . பருருப - மலை உருவ. ஆழி - வட்டம் / கட்டளை).

**தொல்வாச்சியம் : திரு மலை போன்ற உருவ வட்டம்.**

(முதலை - மகரம் என்பதனால் மலை போன்ற வட்ட வடிவத்திற்கும், மகர இராசிக்கும் தொடர்புடைய திருவாதிரை நட்சத்திரத்திற்கும் தொடர்புடையதாகக் கருதலாம்.)



H-1191A&B

எச்-1191எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் பன்னிரண்டு எழுத்துக்கள் பொறிக்கப்பெற்றுள்ளன. மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது ஆகிய மூன்று எழுத்துக்களும் இணைந்துள்ளன. ஏழாவது, எட்டாவது, ஒன்பதாவது எழுத்துக்களும் இணைந்துள்ளன.

இந்த வில்லை இடமிருந்து வலமாகச், சீ + ப + (ரு+ரூ+ப) + ச + (ண் + ணி +உ) +சா ப + ண். சீ பருரூப சண்ணி உசா பண் எனப் படிக்கப்பெறுகிறது.

(சீ- திரு, பருரூப - மலை உரூவ, சண்ணி - ஒடுங்குதல், உசா - ஆய்வு, பண் - தொண்டு).

**தொல்வாச்சியம் : திரு மலை உருவத்துடன் ஒடுங்குவதற்கான ஆய்வு ஒரு தொண்டு.**



H-1192A&B

எச்-1192எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் பன்னிரண்டு எழுத்துக்கள் பொறிக்கப்பெற்றுள்ளன. மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்துள்ளன. இந்த வில்லை இடமிருந்து வலமாகச், சீ + ப + (ரு+ரூ+ப) + ச + (ண் + ணி +உ) +பா + ச + ண். **சீ பருரூப சண்ணி உபாசண்** எனப் படிக்கப்பெறுகிறது. (சீ- திரு, பருரூப - மலை உரூவ, சண்ணி - ஒடுங்குதல், உபாசண் - ஆய்வாளன்.)

**தொல்வாச்சியம் : திரு மலைபோன்ற உருவத்துடன் ஒடுங்குவதற்கான ஆய்வாளன்**



M-314a

எம்-314எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் மூன்று வரிகளில் எழுத்துக்களும் குறியீடுகளும் பொறிக்கப்பெற்றுள்ளன. முதலாம் வரியில் ஆறு எழுத்துக்களும, ஒரு குறியீடும், இரண்டாம் வரியில் பதினான்கு எழுத்துக்களும், மூன்றாம் வரியில் பதினொரு எழுத்துக்களும், இரண்டு குறியீடுகளும் என முப்பத்தொரு எழுத்துக்களும், மூன்று குறியீடுகளும் உள்ளன.

இந்த முத்திரையை அதிக எண்ணிக்கை உடையதொரு முத்திரை எனக் கருதப்பெறுவதாகும். இம் மூன்று வரிகளையும் இடமிருந்து வலமாகப் படிக்கப்பெறுகின்றன.

**முதலாம் வரி :** வ + ச் + சோ + சி +இட்+ ட +ஆழி. **வச்சோசி இட்ட ஆழி.** (வச் - வச்சம் எனும் தேசம். சோசி - சக்தி சிவன் / அம்மையப்பன். இட்ட - இட்ட. ஆழி -வட்டம்.)

**தொல்வாச்சியம் : வச்சதேசத்துச் சக்தி சிவனிட்ட (அம்மையப்பனிட்ட ) வட்டம்.**

**இரண்டாம் வரி :** ப + (ரு + ரூ + ப) + ம் + இட்டு + இட்டு + ஏ +இட்டு + இட்டு. **பருரூபம் இட்டு இட்டு ஏ இட்டு இட்டு.** (பருரூபம்- மலைபோன்ற உருவம் இட்டு - காரணமாக, இட்டு - தொடங்கி, ஏ - பெருக்கம், இட்டு - காரணமாக, இட்டு - தொடங்கி)

**தொல்வாச்சியம் : மலைபோன்ற உருவம் காரணமாகத் தொடங்கிய பெருக்கம் (ஒரு) காரணமாகத் தொடங்கியது.**

**மூன்றாம் வரி :** (துரியாதீதன் + ஊ + னு + ள்) + ஆ + ர + பினாகபாணி + (அ+ ண்+ ணா ) + (ந + ள )+ ன். **துரியாதீதன் ஊனுள் ஆர பினாகபாணி அண்ணா நளன்.** (துரியாதீதன்- துரியாதீதன், ஊனுள் - உடலும் உள்ளமும், ஆர - மிகுந்த, பினாகபாணி - பினாகபாணி, அண்ணா - அண்ணாமலையான், நளன் - பெருமை)

**தொல்வாச்சியம் : துரியாதீதனின் உடலும் உள்ளமும் மிகுந்த பினாகபாணி அண்ணாமலையான் பெருமை.**

(துரியாதீதன் -யோகத்தில் பேரமைதி நிலையை அடைந்த சிவபெருமான். பினாகபாணி - பினாகம் எனும் வில்லை ஏந்திய சிவபெருமான். அண்ணமலையான் - திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள சிவபெருமான்.)


M-1704a

எம்-1704எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையிலுள்ள ஒன்பது எழுத்துக்களுள் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்துள்ளன. ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானி என்பதைக் குறிக்கும் பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாகப், ப + (ரு+ரூ+ப) + (ஊ + ன்) +இட்+ ட +ஆ. பருரூப ஊனிட்ட ஆ. **பருரூப ஊன் இட்ட ஆ** எனப் படிக்கப் பெறுகிறது.

(பருரூப - மலை உருவ, ஊன் - உடல், இட்ட- இட்ட, ஆ - சிற்றுயிர், ஆகுகை, ஆகுக).

**தொல்வாச்சியம் : மலை (போன்ற) உருவ உடல் இட்டதாகுகை** எனக் கூறுகிறது.



H-1975A&B



H-1976A&B

எச்-1975எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையின் **'எ'** புறத்தில் ஒன்பது எழுத்துக்கள் உள்ளன. அவற்றுள் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்துள்ளன.

'பி'புறத்தில் இரண்டு பாம்புகள் போன்ற வடிவமாகப் ப என்ற எழுத்தும் அதன் நடுவே மூலப்பந்த யோகாசனத்தில் அமர்ந்துள்ளதொரு மகாயோகியின் திருவுருவமும், அதனையடுத்துப் பெரியதொரு வட்ட வடிவமும், அவ்வட்டத்தின் கீழே உள்ளவை அடையாளம் காண இயலாத நிலையில் சிதலமடைந்துள்ளன.

**'எ'** புறத்திலுள்ள ஒன்பது எழுத்துக்களையும் குறியீடுகளையும் இடமிருந்து வலமாக, ப+ (ரு +ரூ + ப) + உ + டு + ஒன்று (ஒரு) + உ + தி. பருரூப உடு ஒரு உதி எனப் படிக்கப் பெறுகின்றன.

(பருரூப - கடல் (அ) மலை போன்ற உருவ. உடு - நட்சத்திரம். ஒன்று - ஓர். உதி(வி) காலந்தொடங்கு, உதித்தலைச் செய்(யும்).

**தொல்வாச்சியம் : மலை போன்ற உருவ நட்சத்திரமோர் ஒரு காலத்தொடக்கம்.** (அந்நட்சத்திரம் திருஆதிரையான் (எ) திருவாதிரை நட்சத்திரமாகக் கருதலாம்.)

எச்-1976எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையின் **'எ'** புறத்தில் நான்கு எழுத்துக்கள், **'பி'** புறத்தில் இரண்டு எழுத்துக்கள் என ஆறு எழுத்துக்களுள்ளன. இவ்வில்லையில் பொறிக்கப்பெற்றுள்ள ஆறு எழுத்துக்களை, ப + (ரு + ரூ + ப) உ + டு. **பருரூப உடு** எனப் படிக்கப்பெறுகின்றன.

**தொல்வாச்சியம்: மலை போன்ற உருவ நட்சத்திரம்**



அவற்றையடுத்துத் தலைமுடி பறந்து விரிந்து நிலையில் மூலப்பந்த யோகாசனத்தில் அமர்ந்துள்ளதொரு **மகாயோகியின் திருவுருவம்** வலது புறம் நோக்கியவாறு உள்ளது.

அதனையடுத்துப் பெரியதொரு **வட்ட வடிவமும்,** அவ்வட்டத்தின் கீழே மண்டியிட்டு வணங்கும் நிலையில் ஒரு மனித உருவமும், கிடந்த நிலையிலொரு மனித உருவமும், அதற்கும் கீழே சிறிய சதுர வடிவில் நான்கு வரிகளில் ஒன்றின் கீழ் ஒன்றாக 9, 6, 6, 9 (அ) 10 அதாவது 9669 அல்லது 9670 எனப் பொறிக்கப்பெற்றுள்ளன.

வட்ட வடிவம் - வானமண்டலத்தில் டிசம்பர் மாதம் நிறை நிலா (பௌணர்மி) நாளன்று கிழக்குத் திசையில் தோன்றி ஆறுமாத காலம் மேற்குத் திசை நோக்கிப் பயணித்து ஏப்ரல் மாதம் மறையும் ஆதிரையான் (எ) காலபுருடன் நட்சத்திரக் கூட்டத்திலுள்ள மிகப்பெரியதும் செந்நிறமுடையதுமான திரு ஆதிரை (திருவாதிரை) எனும் நட்சத்திரம் எனக் கருதலாம்.

அத்திருவாதிரை நட்சத்திரம், நம் பரிதி குடும்பத்தின் தலைவனான ஆதித்தன் (எ) சூரியனை) விட 10 - 20 மடங்கு அடர்த்தியிலும், 950 மடங்கு அளவில் பெரியதும், அதிக அளவு கதிர்வீச்சுமுடையதாக வானியல் கூறுகிறது.

**அத்திருவாதிரை நட்சத்திரம், ஒவ்வோர் ஆண்டும் டிசம்பர் - சனவரி (மார்கழி - தை) ஆகிய இரண்டு மாதங்களுக்கும் இடைப்பட்டதொரு நாளில் கீழ்த் திசையில் முழு நிலவுக்கருகே மகர இராசியில் காட்சிதரும்.** அவ்வாறு காட்சிதரும் நாளை இந்தியத் திருநாட்டில் குறிப்பாகத் தமிழகத்தில் திருவாதிரை நட்சத்திரம் மகர இராசியில் பிரவேசிக்கும் நாள் என்பர். அந்த நாளைத் **தமிழ் மொழியில் திருவாதிரைத் தரிசன நாள்** என்றும், **வடமொழியில் ஆருத்திரா தரிசன நாள்** என்பர்.

திரு ஆதிரையான் நட்சத்திரத்தை வணங்குமொரு மனித உருவம் **ஆருடன் எனும் சிவன் முத்தன்.** கிடந்த நிலையில் கிடக்குமொரு மனித உருவம் **முசலகன் (அ) முயலகன் எனும் பூதகணம்** என்பர். அந்த முயலகன் நடராசனின் (சிவபெருமானின்) காலால் மிதிக்கப்பெறுவதாகக் கூறுவர்.

நடராசன் (எ) சிவபெருமான், தமது ஆனந்த திருநடனக் கோலத்தை வியாக்கரபாதர், பதஞ்சலி ஆகிய இரண்டு முனிவர்களுக்கும் தமிழகத்தில் திருக்காட்சியளித்தத் திருத்தலம் ஆகாயத் தத்துவத்தைக் குறிக்கும் தில்லையம்பலம் எனும் **சிதம்பரம்** என்பர். திருவாதிரைத் தரிசன நாள் முதன்முதலாகக் கொண்டாடப்பட்ட திருத்தலம் **திரு உத்திரக்கோசைமங்கை** என்பர்.

எண் 9669-க்கு அடுத்துவரும் எண் 9670. தமிழகக் கல்வெட்டுக்களில் குறிப்பாக மன்னர்களின் ஆட்சியாண்டை ஒரு குறிப்பிட்ட ஆண்டுக்கு **எதிராமாண்டு** (எ) அடுத்த ஆண்டு எனக்குறிப்பிடுவதும் ஓர் ஆண்டு **மேல் செல்லா நின்ற** ஆண்டு என்பதும் பழமையான மரபு.

அப்பழமையான மரபானது 9669-க்கும் எதிராண்டு 9670 அல்லது 9669-க்கும் மேல் செல்லா நின்ற 9670 எனக் குறிப்பிடுவதும் சிந்து சமவெளி நகர நாகரிக மரபு என்று தெரியவருகிறது. எனவே 9669, 9670 ஆகிய இரண்டையும் ஆண்டுகளாகக் கருதலாம்.

இப்பூமியில், பனி உருகும் நீர்த்துடிப்புத் துவக்க காலம் - 1எ என்பது 14700 முதல் 13,500 வரையிலான ஆண்டுகள் எனக் கதிரியக்கக் கார்பன் முறைப்படி கணக்கிடப் பெற்றுள்ளது. அவ்வாண்டுகள் இவ்வில்லையிலுள்ள 9669, 9670 ஆகிய ஆண்டுகளுக்குக் குறைவானது.

இப்பூமியில், ஒரு பெரு வெள்ளம் பொ.ஆ.மு. 2348இல் (4348 ஆண்டில்) நிகழ்ந்ததென்பர். கலியுகம் பொ.ஆ.மு. 3111 (5111ஆம் ஆண்டில்) துவங்கியதென்பர். சூரியன் மற்றும் சந்திரன் ஆகிய கிரகங்களை அடிப்படையாகக் கொண்டு காலங்கள் (மானங்கள்) எகிப்து நாட்டில் கணக்கிடப் பெற்றுள்ளன என்பர்.

அந்தச் சூரியமான காலக்கணக்கீடு துவங்கிய காலம் பொ.ஆ.மு.3,000ஆம் (5,000) ஆண்டெனவும், சந்திரமான காலக்கணக்கீடு துவங்கிய காலம் பொ.ஆ.மு.3,251ஆம் (5,251) ஆண்டெனவும் கூறுவர்.

மேற்கண்ட பெரு வெள்ளம், கலியுகம், சூரியமானம், சந்திரமானம் ஆகிய நான்கு காலக் கணக்கீடு முறைகள் துவங்கிய காலங்களான முறையே 4348, 5111, 5,000, 5,251 ஆகியவற்றை விட இவ்வில்லையிலுள்ள 9669, 9670 ஆண்டுகள் மிகவும் முற்பட்டவை.

சி-14 (எ) கரிமப் பகுப்பாய்வின்படி சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் காலம் பொ.ஆ.மு. 5,500 (7500ஆண்டுகள்) முதல் பொ.ஆ.மு. 1,500 (3,500 ஆண்டுகள்) வரை என்பதால் 9669, 9670 ஆண்டுகள் மிகவும் முற்பட்டவை.

எனவே, 9669, 9670 ஆண்டுகள் என்பது சிந்து சமவெளி நகர நாகரிக மக்களால் அறியப்பட்டதொரு காலக்கணக்கீடு முறை எனவும், அக்காலக் கணக்கீடு முறை திருவாதிரைத் தரிசன நாளை அடிப்படையாகக் கொண்டு அறியப் பெற்றதாகவும் கருதலாம்.

சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் காலம் 7,500 முதல் 3,500 வரையிலான ஆண்டுகள் என்பதனாலும், எச்-1976எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் 9669, 9670ஆம் ஆண்டு எனக் குறிப்பிடப்பட்டுள்ளதாலும் (திருவாதிரைத் தரிசிக்கை நாளை அடிப்படையாகக் கொண்டு) காலக் கணக்கீடு துவங்கப் பெற்ற காலம் அதிகப்பட்சமாக (9670 + 7.500) **17,170ஆம் ஆண்டு** எனவும், குறைந்தப்படசமாக (9670 + 3.500) **13,170ஆம் ஆண்டு** எனக் கருதலாம்.

மேற்கண்டவற்றின் அடிப்படையில், 17,170ஆம் (அ) 13,170ஆம் ஆண்டு மார்கழி மாதம் நிறைநிலா (பௌணர்மி) நாளன்று மகரராசியில் திருவாதிரை நட்சத்திரம் தோன்றும் நாள், சிந்து சமவெளி நகர நாகரிக மக்களால் அறிவிக்கப்பெற்ற முதலாம் திருவாதிரையான் தரிசிக்கை (ஆருத்திரா தரிசன) நன்னாளும், எழுகன்னிமார்கள் (எம்-1186எ) பாடியதாக மாணிக்கவாசகர் பெருமான் அருளிய திருவெம்பாவை அரங்கேறிய நன்னாளுமாகும் எனலாம்.



வடநாடு ஏழு கன்னிமார்கள் ஓவியம்



திருச்சி எட்டரை ஏழு கன்னிமார்கள்



M-1186A

எழு கன்னிமார்களுக்கு உதாரணமாகப் பாவாடை சட்டையணிந்து ஒருவரது கரத்தை மற்றொருவர் பிடித்தவண்ணம் நின்றகோலத்தில் காட்சியளிப்பதைச் சிந்து சமவெளி முத்திரை எண் எம்-1186எ-யிலும், திருச்சிராப்பள்ளி மாவட்டம் எட்டரைக் கிராமத்தில் எழுந்தருளியுள்ள ஐயனார் கோயிலிலும், வடமாநிலங்களில் சிறுமியரால் வரையப் பெற்றுள்ள எழு கன்னிமார்களுடன் மகர ராசியைக் குறிக்கும் முதலையின் உருவத்தையும் சுட்டிக்காட்டலாம்.

எச்-1975எ,பி, எச்-1976எ,பி ஆகிய அடையாள எண்களுடைய வில்லைகளில் பொறிக்கப்பெற்றுள்ள இச்செய்தியின் வாயிலாகச் சிந்து சமவெளி நகர நாகரிக மக்கள் வானியல் சாத்திரத்தை நன்கு அறிந்துள்ளனர் என்ற செய்தி தெரியவருகிறது.

திருவாதிரை நட்சத்திரம், நம் பரிதி குடும்பத்தின் தலைவனான ஆதித்தனை (சூரியனை) விட 10 -20 மடங்கு அடர்த்தியிலும், 950 மடங்கு அளவில் பெரியதும், அதிக அளவு கதிர்வீச்சுமுடையது என்பதும், **உதி(வு)** (எ) **காலத்துவக்கம்** என்பதும் நினைவு கூறத்தக்கது. அத்திருவாதிரை நட்சத்திரம் வானியல் சாத்திரத்தில் **ஓரையான் (எ) காலபுருடன்** (அ) வேட்டைக்காரன் உடுக்கணம் (நட்சத்திரக் கூட்டம்) என்பதில் காணப்பெறும் செந்நிறமான நட்சத்திரமாகும்.

உலகில் சில நாடுகளின் வானசாத்திர நூல்கள் **ஓரையான்** என்பதை அக்கடியன் மொழியில் உரு அண்ணா எனவும், லத்தீன், கிரக்கம் போன்ற மற்ற உலக மொழிகளில் **ஓரையான்** என்றே குறிப்பிடப்பெறுகிறது என்ற செய்தி தெரியவருகிறது. ஓரையான் என்ற சொல்லை ஓரை யான் எனவும், அதற்கு (ஓரை - காலம். யான் தன்மை ஒருமைப்பெயர்.) காலத்தின் தன்மையைக் குறிக்குமொரு ஒருமைப்பெயர் எனத் தமிழ் அகராதி பொருள் கூறுவதாலது ஓரையான் என்ற சொல் காலபுருடன் என்பதைக் குறிப்பதாகும்.

**ஓரையும் நாளுந் துறந்த வெழுக்கம் கிழவோர்க்குமில்லை** (தொல்காப்பியம் பொருளதிகாரம் -135), **ஓரையாய்த் தொண்டோடி மகளீர்** (புறநானூறு -176), **மங்களபெருங்கணி வகுத்தவோரையான்** (சீவகசிந்தாமணி). **ஓரை என்ற சொல் ஹோரை (சமசுகிருதம்), எள்ளோரை (அ) சித்தராண்ணம் (தெலுங்கு)** எனக் கூறுவதால் **ஓரையான் என்ற சொல் தூயத் தமிழ்ச் சொல் என்பது உறுதியாகிறது.**

சிந்து சமவெளி நகர நாகரிக முத்திரைகளில் **யான்** என்ற சொல் பதிவிடப்பெற்றுள்ளன என்பது மேலும் உறுதியாகிறது.

ஓரை என்பது இரண்டரை நாழிகை கொண்ட ஒரு மணிநேரம் எனும் காலத்தைக் கணக்கிடும் முறை. 60 நாழிகை கொண்டது ஒரு நாள் என்பதன் அடிப்படையாகக் கொண்டு 60 வினாடிகள் கொண்டது ஒரு நிமிடம், 60 நிடங்கள் கொண்டது ஒரு மணி, 60 வருடங்கள் கொண்டது ஒரு வட்டம் என்ற காலக் கணக்கீடு முறை உண்டாகியுள்ளதும் தெரியவருகிறது.

எச்-1975எ,பி, எச்-1976எ,பி ஆகிய இவ்விரு வில்லைகளின் பதிவுகளின் படி முதன் முதலில் காலத்தைக் கணக்கிடும் முறை அநேகமாக 17,170ஆம் (அ) 13,170ஆம் ஆண்டு மார்கழி மாதம் நிறைநிலா (பௌணர்மி) நாளான திருவாதிரை நட்சத்திரம் மகரராசியில் உதிக்கும் நாள் என்பதும், சிந்து சமவெளி நகர நாகரிக மக்களால் துவங்கப்பெற்றுள்ள காலக்கணக்கீட்டின் துவக்க நாள் என்பதும் தெரியவருகிறது.

பிற்காலத்தில் காலக்கணக்கீட்டின் துவக்க நாள் பல்வேறு காரணங்களின் அடிப்படையில் மாற்றமடைந்துள்ளதும் தெரியவருகிறது.

தமிழ்த் திருநாட்டில், புதுக்கோட்டை மாவட்டம், மலையடிப்பட்டியில் உள்ள திருவாலத்தூர் மலையின் மேல்பரப்பில் ஏராளமான கோட்டுருவக் குறியீடுகள் பொறிக்கப்பெற்றுள்ளன. அவற்றில் குறிப்பாகப் **பருருபன் ஆதன்** என்ற எழுத்துப் பொறிப்புக்கு அருகிலேயே சிந்து சமவெளி குறியீடான **துரியாதீத(ம்)ன்** குறியீடு ஒன்றும் பொறிக்கப்பெற்றுள்ளது.

# துரியாதீத(ம்)ன்

இறைவழி பாட்டினைப் பொதுவாகச் 'சங்கியை' என்பர். அதனுள் சரிகை, கிரிகை, ஞானம், யோகம் ஆகிய நான்கு என்பர். அந்நான்கில் முதல் இரண்டு மார்க்கங்களில் ஆன்மா (எ) உயிரின் நிலைப்பாடுகளாக முறையே விழிப்புநிலை, கனவுநிலை, உறக்கநிலை ஆகிய மூன்று நிலைகள் என்பர். ஞானம், யோகம் ஆகிய இரண்டு மார்க்கங்களில் குறிப்பாக யோகமார்க்கத்தில் முறையே விழிப்புநிலை, கனவுநிலை, உறக்கநிலை, அமைதிநிலை (எ) துரியநிலை, பேரமைதிநிலை (எ) துரியாதீதநிலை ஆகிய ஐந்து நிலைகள் என்பர். பேரமைதிநிலை (எ) துரியாதீதநிலையைச் சீவமுத்திநிலை எனவும் தூங்கித் தூங்கா நிலை எனவும் குறிப்பிடப் பெறுவதுமுண்டு. மகாயோகி (எ) சிவனைத் துரியசிவன் என்றும் துரியாதீதன் என்றும் கூறுவர்.

அந்த ஐந்து நிலைகளில் நான்காவது நிலையான அமைதிநிலை (எ) துரியநிலையைக் குறிக்கும் குறியீடு ஒரு செங்குத்துக் கோட்டில் மூன்று படுக்கைக் கோடுகள் ஒன்றன் மீது ஒன்றாகவும், ஐந்தாவது நிலையானத் துரியாதீதம் (அ) துரியாதீதன் என்பதைக் குறிக்கும் குறியீடு ஒரு செங்குத்துக் கோட்டில் நான்கு படுக்கைக் கோடுகள் ஒன்றன் மீது ஒன்றாகவும் காட்சியளிக்கின்றன.

துரியாதீதன் என்பதைக் குறிக்கும் ஒரு குறியீடு தமிழகத்தில் கீழடிப் பானை ஓடு ஒன்றில் கீறப்பட்டுள்ளதையும், விழுப்புரம் மாவட்டம் கீழ்வாலையில் 8,000 - 4,000ஆண்டுகளுக்கு உட்பட்டதாகக் கருதப்படும் கருஞ்சிவப்பு நிறத்தில் பாறை ஓவியமாக வரையப்பட்டுள்ளதையும், புதுகோட்டை மாவட்டம் திருமெய்யம் கோட்டை, மலையடிப்பட்டி ஆகிய இரண்டு வரலாற்று பகுதியில் கோட்டுருவங்களாகச் செதுக்கப் பெற்றுதையும் சுட்டிக்காட்டலாம்.




கீழடி



கீழ்வாலை



திருமெய்யம்கோட்டை மலையடிபட்டி


Rjd-241A C-109A

சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் சான்றுகளான ஆர்.ஜே.டி.241எ என்ற அடையாள எண்ணுடைய உடைந்த பானை ஓட்டிலும், சி-109எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையிலும் ஒரு செங்குத்துக் கோடும், நான்கு படுக்கைக் கோடுகளும் கீறப்பட்டுள்ளதொரு குறியீடு வெளிக்கொணரப் பெற்றுள்ளதையும் சுட்டிக்காட்டலாம்.


H-2084A&B

எச்-2084எ என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் ஆறு எழுத்துக்களும் மூன்று குறியீடுகளும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த வில்லையை இடமிருந்து வலமாக, (பிச்சாடனனுள் + பினாகபாணி + துரியாதீதம்(ன்) + (உ + ரு) +(பி + தா) +சி ) பிச்சாடன் உள் பினாகபாணி. துரியாதீதம்(ன்) உரு பிதா சி எனப் படிக்கப்பெறுகின்றன. (பிச்சாடன் உள் - பிச்சாடனின் உள்ளம், பினாகபாணி - பினாகபாணி., துரியாதீத(ம்)ன் - யோகநிலையில் ஆன்மாவின் ஐந்து அவத்தைகளில் ஒன்றான துரியநிலைக்கு மேலான துரியாதீத நிலை, உரு - திருவுருவம், பிதா - தந்தை, சி - சிவன்.)

**தொல்வாச்சியம் : பிச்சாடனின் உள்ளம் பினாகபாணி. துரியாதீதன் திருஉருவம் தந்தையான சிவன்.** (குறிப்பு: இந்த வில்லை பிச்சாடன் என்ற தலைப்பில் படிக்கப்பெற்றாலும், துரியாதீதன் என்பதன் சிறப்பைக்கருதி இப்பகுதியில் மீண்டும் பதிவுசெய்யப்பெறுகிறது.)

எச்-2085எ என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் நான்கு எழுத்துக்களும் நான்கு குறியீடுகளும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த வில்லை இடமிருந்து வலமாக, **பிச்சாடனுள் + பினாகபாணி + துரியாதீத(ம்)ன் + சீ + உ + அன் + பு. பிச்சாடனின் உள் பினாகபாணி துரியாதீத(ம்) சீ உ அன்பு** எனப் படிக்கப்பெறுகிறது.

(பிச்சாடனின் - பிச்சாடனின். உள்- உள்ளம்- பினாகபாணி - பினாகபாணி. சீ - திரு, உ- சிவன், அன்பு - அன்பு.)


H-2085A&B

**தொல்வாச்சியம்: பிச்சாடனின் உள்ளம் பினாகபாணி. துரியாதீதன் (எ) திரு சிவனன்பு.**


H-2086A&B

எச்-2086எ என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் ஐந்து எழுத்துக்களும் இரண்டு குறியீடுகளும் பொறிக்கப்பட்டுள்ளன. இந்த வில்லை இடமிருந்து வலமாக, பா +(ந + ந் + நா+ ப) + ங்கு + பினாகபாணி + துரியாதீதம்(ன்). **பா நந்நா பங்கு பினாகபாணி துரியாதீதம்(ன்)** எனப் படிக்கப்படுகிறது (பா - பாட்டு, பரப்பு, காப்பு (தெய்வ வணக்கம்), அழகு, தூய்மை, நந்நா - நான்கு நான்கான (பதினாறான), பங்கு - பாகம், பினாகபாணி -பினாகபாணி. துரியாதீதன் - துரியாதீதன்.)

**தொல்வாச்சியம்: தெய்வ வணக்கம் (அ) காப்புப் பதினாறான பாகமுடைய பினாகபாணி (எ) துரியாதீதன்.**

குறிப்பு: மகாபுருடன் பதினாறு பாகமுடையவன் என்பதைப் பற்றி முன்கண்டதும், மயமதம் சூ. 36.43பி-46எ சிவனின் பதினாறு வெளிப்பாடுகள் பற்றி விவரிப்பதும் நினைவு கொள்ளத்தக்கது. மயமதம் சூ. 36.92-93எ ஒரு வில்லையும் அம்பையும் கரத்தில் ஏந்திவாறு காட்சியளிப்பவன் வில்லாளன் எனும் சிவன் எனக் கூறுகிறது. பினாகம் எனும் மேரு மலையை வில்லாகக் கொண்டவனான சிவபெருமான் பினாகபாணி என்பர்.

முன்கண்ட எம்-321எ, எம்-1080எ, எச்-1952எ,பி ஆகிய மூன்று முத்திரைகளும், எச்-1767எ,பி என்ற வில்லையும் பதினாறு ஆனன் எனக் குறிப்பிடுகின்றன என்பது நினைவுக் கொள்ளத்தக்கது.


M-212a

எம்.-212எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஆறு எழுத்துக்களும் ஒரு குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, பா+ துரியாதீதன+ன்+(பி+னா+ன+ஈ) பா **துரியாதீதனன்பினான ஈ. பா துரியாதீதன் அன்பின் ஆன ஈ** எனப் படிக்கப்பெறுகிறது.

(பா - தூய்மை. துரியாதீதன் - துரியாதீதன், அன்பின் - அன்பின். ஆன - அந்த. ஈ - உமையம்மை (எ) பார்வதிதேவி.)

**தொல்வாச்சியம்: தூய்மை துரியாதீதன் அன்பினான உமை (எ) பார்வதிதேவி.**


H-2102A&B

எச்-2102எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் மூன்று எழுத்துக்களும் இரண்டு குறியீடுகளும் பொறிக்கப்பெற்றுள்ளன.

**பு** என்ற எழுத்து **அன்** என்பதைக் குறிக்கும் தீக்குச்சி வடிவிலான மனித உருவத்தின் கால் பகுதியில் உள்ளது. இந்தச் செவ்வக வடிவமுடைய **ப** உயிர்மெய்யைச் சமசுகிருதம் தனதாக்கிக் கொண்டுள்ளதும் அறியமுடிகிறது.

இந்த வில்லை இடமிருந்து வலமாக, துரியாதீதன் +(அன் + பு) + ப + ண். துரியாதீதன் அன்பு பண் எனப் படிக்கப்பெறுகிறது. (துரியாதீதன் - துரியாதீதன். அன்பு - தொடர்புடையார் மாட்டு உண்டாகும் பற்று. பண் - பாட்டு, தகுதி, அமைவு.)

**தொல்வாச்சியம்: துரியாதீதன் தொடர்புடையார் மாட்டு உண்டாகும் பற்றின் அமைவு.**


H-2245A&B

எச்-2245எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் இரண்டு எழுத்துக்களும் ஒரு குறியீடும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இந்த வில்லை இடமிருந்து வலமாக, சீ + பா + துரியாதீத(ம்)ன். **சீ பா துரியாதீத(ம்)ன்** எனப் படிக்கப் பெறுகிறது. (சீ- திரு, பா- தூய்மை, துரியாதீதன்- துரியாதீதன்.)

**தொல்வாச்சியம்: திருத்தூய்மை துரியாதீத(ம்)ன்.**

யோகமார்க்த்தில் ஈடுபடும் யோகிகளின் விழிப்பு, கனவு, உறக்கம், அமைதி (துரியம்), பேரமைதி (துரியாதீதம்) ஆகிய ஐந்து நிலைப்பாடுகளில் ஐந்தாவது நிலைப்பாடான (அவைத்தையான) துரியாதீதத்தைப் பற்றி, **“உயிரெனப் படுப திந்த உடலினவே றுள்ளதை உற்றுச் செயிருறும் இச்சா, ஞானச் செய்திகளுடைய தாகிப் பயிலீவுறும் இன்பத் துன்பப் பலங்களும் றுகரும் பார்க்கில் துயிலோடும் அஞ்ச வத்தைப் படும் உண்மைத் துரியாதீதம்”**- எனச் சிவஞான சித்தியார் சுப பக்கம் (பா.189) கூறுகிறது.

**உரை:** உயிர் சூனியமெனின் அவ்வாறு சொல்வதொன்றுளதாய் நிற்றலானும், உடம்பே உயிர் எனின் உடம்பகத்தே பொருந்தி நின்று யானெனதென்னுஞ் செறுக்குறுதலானும், ஐம்பொறியே உயிரெனின் ஞானமாத்திரையேயன்றி ஞானக் கிரியை இச்சையென்னு மூன்றும்

உடைத்தாகலானும், சூக்கும உடம்பே உயிரெனின் கனவோடு பயின்றுதனை நனவின்கண் உற்றறிந்து நிற்றலானும், பிராணவாயுவே உயிரெனின் இன்ப துன்பப் பயன் ஒடுங்கிய விடத்தின்றி யொடுங்காதவிடத்து நுகர்ந்து நிற்றலானும, பரமம்மே உயிரெனின் அறிந்தாங்கறிதலின்றி ஐந்தவத்தைப்பட்டறிதலானும், அனைத்துங் கூடிய சமுதாயம் உயிரெனின் அனைத்தும் நீங்கிய துரியாதீதத்தும் உண்மையானும், இந்த உடலின் கண் உயிரெனப்படுவது இவையனைத்திற்கும் வேறு.

இப்பாடலிலுள்ள, "**துயிலோடும் அஞ்சவத்தைப்படும் உண்மைத் துரியாதீதம்**" என்ற வரி, ஐம்பொறிகளும், மனமும் ஒடுங்கிய துரியாதீதத்தில் உறங்கி விழித்த பின்னர்ச் சுகமாகத் (நன்றாகக்) தூங்கினேன் என்றணர்வு நிகழ்தல் **உயிரென்று ஒன்றுண்டு** என்பது தெரியப்படும் என்பதாகும். அதாவது, ஐந்து நிலைப்பாடுகளிலும் உயிராகிய ஆன்மாவானது, உள்ளாளி எனும் உள்ளிருந்து அறியும் இரகசிய உளவாளியாகவும் இருக்குமென்பது பொருளாகும்.

**"துரியம் கடந்து துரியா தீதத்தே அரிய விவேகம் கொண்டு அம்பலத்துஆடும் பெரிய பிராணனைப் பிரணவக் கூபத்தே துரிய வல்லார்க்குத் துரிசுஇல்லை தானே"** – எனத் திருமந்திரம் (2454) கூறுகிறது.

**பொருள்:** துரியம் எனும் பேருறக்கம் எனும் அமைதி நிலையைத் தாண்டி அதற்கும் அப்பால், சீவர்களுக்கு அரிய முத்தி இன்பமாகிய வீடுபேற்றை அளிக்கத் திருவுளம் கொண்டு, சிற்றம்பலத்தில் திருநடனம் புரிகின்ற பேரருளாளனான சிவபெருமானை, நீரு ஊற்றுப் போலப் பொங்கிப் பரவும் பிரணவ வட்டத்துக்குள் ஆராய்ந்து கண்டறியக் கூடியவர்களுக்கு, எவ்விதமான துன்பமும் இல்லையாம். (துரிசு-துன்பம்)

108 மறையில் ஈறுகள் என்பவற்றில் துரியாதீதம் என்பது 65ஆவது மறையில் ஈறு. அதில் "உலகில் அவதூத மார்க்கத்தில் நிலைத்தவர் பலரில்லை. அப்படிப்பட்டவரைக் காண்பதரிது எனவும், அவர்களில் ஏதேனும் ஒருவர் இருந்தாலும் அவர் என்றும் புனிதமானவர் எனவும், அவர் வைராக்கிய மூர்த்தி எனவும், அவர் ஞானமே உருவாகக் கொண்டவர் என்பதனால் அவரை மகா ஞானி என்றும் மகா புருடர் என ஞானிகள் கருதுவார்கள் எனவும் குறிப்பிடப்பெற்றுள்ளது.

அந்த மகா புருடரின் சித்தம் என்னிடம் நிலைத்திருக்கும், நான் அவரிடம் இருப்பேன். அப்படிப்பட்டவர்கள் ஆதியில் கிரமப்படி குடீசகராக இருந்து அம்ச நிலை எய்தி அதிலிருந்து பரமகம்சராகி சுவரூப அனுசந்தத்தில் பிரபஞ்சம் முழுவதையும் உள்ளபடி உணர்ந்து தண்டம், கமண்டலம், அரைநாண், கோவணத்துடன் தனது ஆடை, தனது நிலைக்குரிய செயல் ஆகியவற்றைத் தண்ணீரில் விடுத்துத் திகம்பரராகக் கிழிந்த மரவுரி, மான்தோல்˙ ஆகியவற்றைக்

கூட வைத்துக் கொள்ளாமல், மந்திரம், செபம் செய்யாதவர்போல், சவரம், எண்ணெய்க்குளியல் ஆகியவை இல்லாமலும், நெற்றியில் ஊர்த்தவ புண்டரீகமும் இல்லாமலும், லௌசிக வைதிகக் கிரிகைகள் செய்யாமலும் சஞ்சரிப்பார்கள்.

புண்ணியம் - பாவம், ஞானம் - அஞ்ஞானம், குளிர் - வெப்பம், சுகம் - துக்கம் ஆகிய இரட்டைகளை வென்று லோக வாசனை, தேக வாசனை, சாத்திர வாசனை ஆகிய மூன்று விதமான வாசனைகளுடன் நிந்தை, பகை, காமம், கோபம், வெகுளி, ஹோமம், மகிழ்ச்சி, வெகுளி, பொறாமை, தற்காப்பு முதலியவற்றைத் துறந்து உடலையும் பிணம் போல் பார்த்து முயற்சியின்றி நியமமின்றிக் கிடைத்ததைக் கைக்கொண்டு பிராணனைத் தாங்கிக் கொண்டு, அனைத்திலும் சிறந்த பாவனையான ஆன்மா எங்கும் நிறைந்தது என்ற அத்வைத நோக்கத்தைக் கைக்கொண்டு, எனக்கு வேறாக எவருமில்லை, எதுவுமில்லை என்று நிச்சயத்துடன் இறை இரகசியம் முதலிய தவச் செல்வத்தை ஆன்மாவில் அடக்கிக் கொண்டு, இரவும் பகலும் எப்பொழுதும் சம புத்தியுடன் ஒன்றை மற்றொன்றாகக் காணும் கனவுலகத்தைக் கடந்து குழந்தை, பித்தன், பிசாசு பிடித்தவன் ஆகியோரைப் போல் நடந்தாலும் அறிவில் குறையின்றித் தனியொருவராகத் திரிவர்.

சுவரூப தியானத்தால் ஆன்ம நிட்டையின் அனுகூலத்தால் அனைத்தையும் மறந்து துரீயாசிரமத்தை கடந்த அவதூத வேடத்தில் அத்வைத நிட்டராகிப் பிராணவ சுவரூபியாகி இறுதியில் உடலைவிடும் அவதூதர் எவரோ, அவர் பிறவிப்பயனை அடைவராவார் எனக் கூறப்பெற்றுள்ளது.

மேற்கண்ட சிந்து சமவெளி முதல் தமிழகம் வரையிலான தொல்பொருள், தொல்லியல் வரலாற்றுச் சான்றுகளின் அடிப்படையிலும், சிவஞான சித்தியார் சுப பக்கம் (பா.189) திருமந்திரம் (2454) வாயிலாகவும், துரியாதீத மறையில் ஈறு வாயிலாகவும், பொ.ஆ.மு.5,500 முதல் பொ.ஆ.பி. 1500 வரையிலான 4,000 ஆண்டுகளாக **இமயம் முதல் குமரி வரையில்** வாழ்ந்த பழங்குடி மக்கள் கூட்டம் மகாயோகியான சிவபெருமான் அறிவித்த யோகமார்க்கத்தைக் கடைபிடித்துத் துரியாதீதம் எனும் பேரமைதி நிலையில் எவ்விதமான துன்பமில்லாமல் வாழ்ந்தும், மரணம் எய்திய பின் வீடுபேறு எனும் இறைநிலையை நம் முன்னோர்கள் அடைந்துள்ளனர் என்பது தெரியவருகிறது.

வீடுபேறு எனும் இறைநிலையை அடைந்த முன்னோர்களில் முதன்மையானவன் யார்? என்ற வினாவுக்கான விடையாகப் **பினாகபாணி (எ) சீயோன்** என்பவனே முதன்மையானவன் என சிந்து சமவெளி நகர நாகரிக மக்கள் அறிந்துள்ளதைக் காணலாம்.

# பினாகபாணி (எ) சீயோன்

முன்கண்ட **மேலானதுக்கும் மேலானது** என்ற தலைப்பில் M-392A என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **மேலானதுக்கும் மேலான பரமே சுகம் தரும் வில்லின் நாண் போன்ற மனவெழுச்சி** (மனவெழுச்சி -உள்ளக் கிளர்ச்சி) என்பதை நினைவுக் கொள்ளத்தக்கது.

**பினாகபாணி (எ) சீயோன் எவ்வாறு காட்சியளிப்பவன்?** என்ற வினாவுக்கு அவன் வில், அம்பு கரத்தில் ஏந்திவாறு காட்சியளிப்பவன், அவனே சிவன் என மயமதம் (36.92-93எ) சூத்திரமும், **மருமலர்க் கொன்றையார்க்கு வாகனமிடபமாகும், பரசோடுகூடிய சூலம் பினாகவில் படைகளாமே** - எனச் சூடாமணி நிகண்டும் (12.140) விடை கூறுகின்றது.

மேரு மலையை வில்லாகக் கொண்டவன் (எ) பினாகபாணியின் திருவுருவத்தைக் சிற்பங்களாகக் காண்பது மிகவும் அரிது என்றாலும் 7,500 ஆண்டுகளுக்கும் முற்பட்ட சிந்து சமவெளி நகர நாகரிக முத்திரைகளில் **பினாகபாணி** திருவுருவத்தையும் அவனைப் பற்றிய சில செய்திகளும் பதிவு செய்யப்பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

எல்-52எ எனும் அடையாள எண்ணுடைய முத்திரையில் எட்டு எழுத்துக்கள் பொறிக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் முதலாவது, இரண்டாவது, மூன்றாவது ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்தும், நான்காவது, ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது ஆகிய நான்கு எழுத்துக்கள் இணைந்தும், எட்டாவது எழுத்து தனித்துமுள்ளன.


L-52a

இந்த முத்திரையிலுள்ள எழுத்துக்களைக் கீழிருந்து மேலாகவும், மேலிருந்து கீழாகவும், இடமிருந்து வலமாக; சீ + யோ + ன்) + ( இ) ட் + டி + உ + (ரு) + உ. **சீயோனிட்டி உரு உ** (சீயான் இட்டி உரு உ) எனப் பகுத்துப் படிக்கப்பெறுகின்றன. (**னகர** மெய் **இகர** உயிரோடு புனரும்போது **னிகர** உயிர்மெய் பிறக்குமென்பது தமிழ் இலக்கண விதிமுறை).

(சியோன் - பழையோன், இட்டி - இச்சை / விருப்பம். உரு - திருமேனி, உ - சிவன்).

**தொல்வாச்சியம் : பழையோன் விருப்பமான திருமேனி சிவன்.**

அச்சிவனுக்கு அடுத்த தலைமுறையாகத் தோன்றியவன் சியோன் எனக் கூறுவதாகவும் தெரியவருகிறது.



Rhr-1A

Rhr-1A எனும் அடையாள எண்ணுடைய வில்லையில் மூன்று எழுத்துக்களுடன் வில்லும் அம்பும் ஏந்திய மனித உருவம் ஒன்றும் பொறிக்கப்பட்டுள்ளது. இந்த வில்லையை மேலிருந்து கீழாகவும், இடமிருந்து வலமாகவும்; சீ + யோ + ன் + வில்லாளன். **சீயோன் வில்லாளன்** எனப் படிக்கப்பெறுகிறது.

(சீயோன் - பழையோன். வில்லாளன்- மேருமலையை வில்லாகக் கொண்ட பினாகபாணி)

**தொல்வாச்சியம் : பழையோன் மேருமலையை வில்லாகக் கொண்ட பினாகபாணி.**



Rgr-2a

Rgr-2A எனும் அடையாள எண்ணுடைய முத்திரையில் எட்டு எழுத்துக்களும் பினாகபாணி, பிச்சாடன் ஆகிய இருவரின் திருவுருவங்களும் பொறிக்கப்பெற்றுள்ளன. அவற்றுள் ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது எழுத்துக்கள் இணைந்துள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாகச், சீ + யோ + ன் + பினாகபாணி + பிச்சாடன் + ப + (ரு + ரூ + ப) + ம். **சீயோன் பினாகபாணி பிச்சாடன் பருரூபம்** எனப்படிக்கப்பெறுகிறது. (சீயோன் - பழையோன். பினாகபாணி - மேருமலையை வில்லாகக் கொண்ட பினாகபாணி. பிச்சாடன் - பிச்சாடன். பருரூபம். - மலை (அ) கடல் போன்ற உருபம்.)

**தொல்வாச்சியம் : பழையோன் மேருமலையை வில்லாகக் கொண்ட பினாகபாணி. அவன் பிச்சாடன் போன்ற மலை (அ) கடல் போன்ற உருவமுடையவன்.**



Rhr-2A

Rhr-2A எனும் அடையாள எண்ணுடைய வில்லை ஒழுங்கற்ற சதுரவடிவிலானது. இதில் ஐந்து எழுத்துக்களுடன் வில்லும் அம்பும் ஏந்திய மனித உருவம் ஒன்றும் பொறிக்கப்பெற்றுள்ளது.

இந்த வில்லையைக் கீழிருந்து மேலாகவும், இடமிருந்து வலமாகவும்; சீ + யோ + ளு + ள + ம் + பினாகபாணி. சீயோளுளம் பினாகபாணி. **சீயோள் உளம் பினாகபாணி** எனப் படிக்கப் பெறுகிறது. (சீயோள் - பழையோள் (எ) துர்க்கையம்மன், உளம் - மனம், உட்பக்கம், மார்பு, ஆதன், ஆன்மா, பினாகபாணி – பினாகபாணி.)

**தொல்வாச்சியம் : சீயோளின் மனம் சீயோன் (எ) பினாகபாணி** அதாவது **பழையோள் எனும் சீயோளின் மனம் பினாகபாணி.**

மேற்கண்ட இரண்டு முத்திரைகள், இரண்டு வில்லைகள் வாயிலாகச் சிவசக்திக்கு (அம்மையப்பனுக்கு) அடுத்த படியாகவும் அதாவது அவர்களது பரம்பரையாகவும், முதலாம் தலைமுறையானவர் சீயோன் (எ) பினாகபாணி, சியோன் எனும் பழையோள். சீயோன் என்பவன் திருவாதிரை (எ) நட்சத்திரத்திற்கு ஒப்பானவன். பிச்சாடன் போன்ற மலை (அ) கடல் போன்ற உருவமுடையவன். அவன் சீயோளின் உள்ளம் எனக் கூறுகின்றது.

பழந்தமிழர்களின் தலைமுறை தொடர்புடைய முன்னோர்களே தென்புலத்தார் எனும் நம்மூதாதையர்கள் என்றும், அவர்களை ஏழு தலைமுறையினர் என அறிவித்துள்ளனர். அந்த ஏழு தலைமுறையினர் முறையே **பரம் - பரை, சீயோன் - சீயோள், ஓட்டன் - ஓட்டி , பூட்டன் - பூட்டி , பட்டன் - பாட்டி, அப்பன் - அம்மை** (அப்பா - அம்மா) **, மகன் - மகள்** என உயர்திணை ஆண்பால், பெண்பால் என வரிசைப்படுத்தியுள்ளனர். ஏழு என்ற எண் மிகப்புனிதமான எண் மட்டுமல்ல என்பதும், அவ்வெண் ஏழு தலைமுறையோடு தொடர்புள்ளதென்பதும் தெரியவருகின்றன.

ஆனால், பொ.ஆ.மு. 15ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் இந்தியத் திருநாட்டில் குடியேறிய பிறதேசத்தாருடன் தொடர்புடையோர் ஏழு தலைமுறையினரை, **அத்ரி, பரத்துவாசர், கௌத்தமர், சமதாக்கினி, காசியப்பர், வசிட்டர், விசுவாமித்திரர்** ஆகிய ஏழு முனிவர்களே ஏழு தலைமுறையின் தலைவர்கள் என்றும், அவர்களே கோத்திரர்களாகவும் நற்குணமுடைய குலத்தில் தோன்றியர்கள் என்றும், அவர்களின் தலைமுறையினரே 108 பிரிவாயினர் என்றும் கூறியுள்ளனர் என்பதும் தெரியவருகிறது.

அந்த ஏழு முனிவர்களுக்குத் தலைவன் ஈசன் எனும் சிவன் என்பதைச் சப்தரிசீசுவரர் (சப்தரிசி ஈசுவரர்) எனத் திருத்தவத்துறை எனும் இலால்குடி சிவாலயத்தின் பெயரையும் மாற்றியுள்ளனர். அத்துடன், சீயோளின் மனம் பழையோன் (எ) சீயோன் என்பதை மாற்றி விட்டுணுவின் மனதில் இலக்குமி பிரிக்க இயலாதபடி குடிகொண்டுள்ளதாக அறிவித்துள்ளனர் என்பதும் தெரியவருகிறது.

இவ்வாறாக, இந்தியத் திருநாட்டின் தலைமுறையோரைப் பற்றியும், திருத்தலங்களின் பெயர்களையும் மாற்றி உண்மையான வரலாற்றுச் செய்திகள் மாற்றியும், மறைக்கப்பட்டுள்ளதும் தெரியவருகின்றன.

## சியோன் (எ) பினாகபாணியின் சிறப்பு

**ஓம்** என்பதை வில்லுடனும், **ஆன்மா** என்பதை அம்புடனும், **மனதை** வில்லின் நாணுடனும், **பரம்** எனும் **மேலானது எனும் இறைவனை** இலக்குடனும் ஒப்பிடுவர்.

தீர்க்க பிரணவ மந்திரமான **ஓம்** என்பதை வில்லாகவும், சிவயநம ஏனும் பஞ்சாட்சரம் மந்திரத்தை உதடுகளால் மென்மையாக வாய்க்குள் முணுமுணுத்து ஆன்மாவாகிய அம்பைக் கூர்மைப்படுத்தி அதை மனம் எனும் நாணில் பொருத்தி, அந்நாணை வைராக்கியத்துடன் இழுத்து, இறைவன் எனும் இலக்கை நோக்கி எய்தால் ஆன்மா இறைவனிடம் நிலையில் நிலைத்துநிற்கும் என யோகமார்க்கத்தில் **பாவனை** செய்ய வேண்டும் என்பர்.

அந்த வீடுபேறு எனும் இறைநிலையில் நிலைத்து நிற்பதற்குப் பழங்குடி மக்கள் கூட்டத்தினரிடம் ஒரு பொதுவான கோட்பாடு இருந்துள்ளது. அக்கோட்பாடு **பதிதாசோகம்** - இறைவனுக்கு நான் அடியேன் எனச் சிந்து சமவெளியில் வாழ்ந்த தமிழர்கள் பதிவிட்டுள்ளதைக் காணலாம்.

வில்லில் பொருத்தப்பட்டுள்ள வில்லின் வடிவத்தைச் சிந்து சமவெளி நகர நாகரிகப் பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றிலும், தமிழகத்தில் விழுப்புரம் மாவட்டம் கீழ்வாலை, புதுக்கோட்டை மாவட்டம் ஆளுருட்டிமலை போன்ற பாறை ஓவியங்களிலும், கீழடி, கொடுமணல் (KDL-G-521) போன்ற பானை ஓடுகளிலும் அதிக அளவில் காணலாம்.

மேற்கண்ட ஓம் சிவயநம போற்றி போற்றி என மென்மையாக உச்சரிப்பதன் உள்ளார்ந்தப் பொருள் இ∴தே என்பதும் இந்த முத்திரையின் வாயிலாகத் தெரியவருவதை **ஓம்** என்ற தலைப்பில் காணலாம். அதற்கு முன் பாவனை என்பதைப் பற்றிப் **பதிதாசோகம்** என்ற தலைப்பில் விரிவாகக் காணலாம்.

# பதிதாசோகம்


M-857a

எம்-857எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் துணையெழுத்துடன் கூடிய மூன்று எழுத்துக்களும், சோகம் என்பதைக் குறிக்குமொரு குறியீடும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், உடைந்த பகுதியில் பரமஞானக் குறியீடும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் ப + (தி + தா) + சோகம். **பதிதா சோகம்** எனப் படிக்கப்பெறுகிறது. (பதி - உறைவிடம் / நகரம் / பதிகை / வீடு / கோயில் / ஊர் / பூமி / குதிரை / தலைவன் / கணவன் / துணைவன் / அரசன் / மூத்தோன் / குரு / கடவுள். தாசோகம் - நான் அடியேன் எனப் பொருள்படும் வணக்கச்சொல்).

**தொல்வாச்சியம் : கடவுள் (எ) இறைவனுக்கு நான் அடியேன் எனும் வணக்கச்சொல்**


M-1156a

எம்-1156எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் துணையெழுத்துடன் கூடிய நான்கு எழுத்துக்களும், சோகம் என்பதைக் குறிக்கும் குறியீடும், யானையின் உருவமும் உள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் ப + (தி + தா) + சோகம் + சு. **பதிதா சோகம் சு** எனப் படிக்கப்பெறுகிறது.

(பதி - உறைவிடம், நகரம், பதிகை (பதிகம் - பாயிரம்) , வீடு, கோயில், ஊர், பூமி, குதிரை, தலைவன், கணவன், துணைவன், அரசன், மூத்தோன், குரு, கடவுள். தாசோகம். - நான் அடியேன். சு- சுகம், மங்களம், நன்மை.) **தொல்லாச்சியம் : கடவுளுக்கு நான் அடியேன் எனும் வணக்கச் சொல்.**



M-816a

எம்-816எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் துணையெழுத்துடன் கூடிய ஆறு எழுத்துக்களும், சோகம் என்பதைக் குறியீடும், உடைந்த பகுதியில் ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாகப் ப + (தி + தா) + சோகமி + ட் + ட + ஆ. பதிதா சோகமிட்ட ஆ. **பதிதா சோகம் இட்ட ஆ** எனப் படிக்கப்படுகிறது.

(பதி - கடவுள். தாசோகம். - நான் அடியேன் எனும் வணக்கச்சொல். இட்ட - செய்த, படைத்த கொடுத்த. ஆ - சிற்றுயிர், ஆவது, ஆகுகை).

**தொல்லாச்சியம் : கடவுளுக்கு நான் அடியேன் எனும் வணக்கச் சொல்லாகுக.**



M-1667a

M-1667A என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் துணையெழுத்துடன் கூடிய ஒன்பது எழுத்துக்களும், சோகம், ஆழி என்பதைக் குறிக்கும் இரண்டு குறியீடுகளும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாகப் ப + (தி + தா) + + சோகம் + ச + ந + (இ)ட் + ட + ன் + பா + ஆழி. பதிதா சோகம் சந இட்டன் பா ஆழி எனப் படிக்கப்படுகிறது.

(பதி - கடவுள். தாசோகம் - நான் அடியேன் எனும் வணக்கச்சொல். சந - மக்கள். இட்டன் - விருப்பமானவன். பா- பரப்பு, தூய்மையான. ஆழி - வட்டம், மக்கட் கூட்டம், நிலப்பகுதி.)

**தொல்வாச்சியம் : கடவுளுக்கு நான் அடியேன் வணக்கச்சொல்லுக்கு விருப்பமான மக்கட் கூட்டம் வாழும் நிலப் பகுதி.**



M-671a

எம்-671எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் துணையெழுத்துடன் கூடிய 12 எழுத்துக்களும், சோகம் என்பதைக் குறிக்கும் குறியீடும், உடைந்த பாகத்தில் ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் ப + (தி + தா) + + சோகம் + சோ + சி + (இ)ட் + ட + ப + ட் + ட + டை (இ)ங்கு. **பதிதா சோகம் சோசி பட்டடை இங்கு** எனப் படிக்கப்பெறுகிறது. (பதி - கடவுள். தாசோகம் - நான் அடியேன். சோசி- என்பதற்கு அம்மையப்பன். இட்ட - இட்ட. பட்டடை- பாதை. இங்கு- இவ்விடம்)

**தொல்வாச்சியம் : கடவுளுக்கு நான் அடியேன் எனும் வணக்கம் சொல்லும் அம்மையன் இட்ட பாதை இவ்விடம்.**



M-97a

எம்-97எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் துணையெழுத்துடன் கூடிய பா எனும் எழுத்துருவைத் தலையாகக் கொண்ட பிச்சாடன் உருவமும், சோகம் என்பதைக் குறிக்கும் குறியீடும் ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாக, பா + பிச்சாடனா + சோகம். பா பிச்சாடனா சோகம். **பா பிச்சாடன் ஆ சோகம்** எனப் படிக்கப்பபெறுகிறது. (பா- தூய்மையான. பிச்சாடன் - பிச்சாடன். ஆ - ஆகுகை. சோகம் -சிவனும் சீவனும் ஒன்றென பாவிக்கை.)

**தொல்வாச்சியம் : தூய்மையான பிச்சாடனாகுகை சிவனும் சீவனும் ஒன்றென பாவிக்கை.**


H-2060a

எச்-2060எஎன்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் துணையெழுத்துடன் கூடிய சீ எனும் ஓரெழுத்தும், பா எனும் எழுத்துருவை தலையாகக் கொண்ட பிச்சாடன் உருவமும், சோகம் என்பதைக் குறிக்கும் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாகச் சீ + பா + பிச்சாடனா + சோகம். சீ பா பிச்சாடனா சோகம். **சீ பா பிச்சாடன் ஆ சோகம்** எனப் படிக்கப்பெறுகிறது. **பா பிச்சாடன் ஆ சோகம்** (சீ- திரு. பா- தூய்மையான. பிச்சாடன் - பிச்சாடன். ஆ - ஆகுகை. சோகம் -சிவனும் சீவனும் ஒன்றென பாவிக்கை.)

**தொல்வாச்சியம் : திரு தூய்மையான பிச்சாடனாகுகை சிவனும் சீவனும் ஒன்றென பாவிக்கை.**


**H-1937A,B&C**


**H-1938A,B&C**

எச்-1937எ, பி, சி, எச்-1938எ, பி, சி ஆகிய அடையாள எண்களுடைய முப்பட்டை வடிவிலான இரண்டு வில்லைகளின் **எ** புறத்தில் துணையெழுத்துடன் கூடிய மூன்று எழுத்துக்களும், **பி** புறத்தில் இரண்டு எழுத்துக்களும், **சி** புறத்தில் மூன்று எழுத்துக்களும் உள்ளன.

இந்த வில்லைகளை இடமிருந்து வலமாகப், ப + தி + தா + சோகம் + ப + னு + ள் + ளா + ளி. பதிதாசோகம் பனுள்ளாளி. **பதிதாசோகம் பன் உள்ளாளி** எனப் படிக்கப்பெறுகிறது. (பதிதாசோகம் - இறைக்கு நான் அடியேனன் எனவும் பன் - அரிவாட்பல் (இறைவனால் படைக்கப்பட்ட பலவான உயிர்கள்.) உள்ளாளி- உள்ளிருந்து அறியும் இரகசிய உளவாளி).

**தொல்வாச்சியம் : இறைக்கு நான் அடியேன் என்பதை அரிவாட்பல்லாக உள்ளிருந்து அறியும் இரகசிய உளவாளி.**


H-2039A


H-2039B

எச்-2039எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் துணையெழுத்துடன் கூடிய மூன்று எழுத்துக்களும், சோகம் என்பதைக் குறிக்கும் குறியீடும், சுரன் எனும் சிறுமீன் என்பதின் குறியீடும் உள்ளன.

இந்த வில்லையை இடமிருந்து வலமாகப், ப + தி + தா + சோகம் + சுரன். **பதிதாசோகம் சுரன்** எனப் படிக்கப்பெறுகிறது. (பதிதாசோகம் - இறைவனுக்கு நான் அடியேன். சுரன் - அறிஞன், ஆதித்தன் எனும் சூரியன், காடு) இந்த வில்லை

**தொல்வாச்சியம் : இறைக்கு நான் அடியேன் என்போன் அறிஞன்.**


M-254a

எம்-254எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் துணையெழுத்தும், சோகம் என்பதைக் குறிக்கும் குறியீடு, 'ர்' எனும் எழுத்துரு, எண் ஐந்து என்பதைக் குறிக்கும் ஐந்துகோடுகள், எருமை மாடு, உணவுத் தொட்டி ஆகிய உருவங்கள் பொறிக்கப் பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாகத் துணை (எழுத்து) + சோகம் + ர் + ஐ. **துணை சோகமர் ஐ** எனப் படிக்கப்பெறுகிறது.

**துணை** என்பதற்கு அளவு, **இணை, ஒப்பு,** ஆதரவு, உதவி, உதவுவோன், காப்பு, கட்டு, இரண்டு, இரட்டை, நட்பினன்(ள்), கணவன், மனைவி, உடன்பிறப்பு, புணர்ச்சி, வலை, ஆயுத முனை, அம்பு எனவும் **சோகமர்** நான் அடியோன் என்போர் எனவும் **'ஐ'** என்பதற்கு ஐந்து எனவும் தமிழ் அகராதியின் வாயிலாகப் பொருளறிய முடிகிறது.

**தொல்வாசகம்: நான் அடியேன் என்போர் ஐவருக்கும் ஒப்பானவர்.**

குறிப்பு: **ஐவர்** என்ற சொல் இந்தியத்துணைக்கண்டத்தில் வாழ்ந்த ஐம்பெருங்குடி மக்களைக் குறிப்பிடுவதாகவோ அல்லது **ஐம்பாலினத்தையோ** கருதலாம்.

இந்திய நாட்டின் சுதந்திரப் போராட்டத்தில் நிகழ்ந்த தண்டியாத்திரையின் போது தேவநாகரியில் இயற்றிப் பாடபட்ட **இரகுபதி இராகவ இராசாராம் பதீத பாவன சீத்தாராம்** எனத் துவங்கும் பக்திப் பாடல் 17ஆம் நூற்றாண்டில் மகாராட்டிரம் மாநிலத்தில் வாழ்ந்த இராமதாஸ் (இராம தாசர்) என்பவரால் பாடப்பெற்றுள்ளது.

இப்பாடலிலுள்ள **பதீத பாவன** என்ற சொற்கள் சிந்து சமவெளி நகர நாகரிகத் தொல்வாச்சியங்களில் ஒன்றான **பதிதா பாவனை** என்பது தெரியவருகிறது.

**திரு அனாதக சக்கரம் அவன் அனதாக சக்கரம்** என முன்கண்டபடி சீவனும் சிவனும் ஒன்றெனத் தியானிக்கப் பெறவேண்டிய இடம் யோகமார்க்கத்தில் அனாதக சக்கரம் எனச் சிந்து சமவெளி நகர நாகரிக மக்கள் அறிவித்ததை இந்தியக் குடி மக்கள் 17ஆம் நூற்றாண்டு வரை அறிந்துள்ளனர் என்பதும் தெரியவருகிறது.

இறைவனுக்குத் தன் இதயத்தில் மனதால் (பாவனையால்) கோயில் கட்டிக் குடமுழுக்கு விழா செய்ய விரும்பிய தன் பக்தனின் விருப்பத்தை நிறைவு செய்யும் பொருட்டு இறைவன் அவனிடம் முதலில் சென்று அருளினார் என்பர்.

அதன் பின்னரே காடவர் கோன் எனும் அரசன் காஞ்சி மாநகரில் இறைவனுக்குக் கட்டிய கற்றளியின் குடமுழுக்கு விழாவுக்குச் சென்றார் எனக் கூறப்படும் பூசலார் நாயனார் சரிதைக் கூறுவதையும் சுட்டிக்காட்டி, பன்னிரண்டு தாமரை இதழ்களைக் கொண்ட அனாதக சக்கரத்தில் சீவனும் சிவனும் ஒன்றெனப் பாவிப்பதே (பாவனைச் செய்தலே) சிறந்த செயல் என்ற பேருண்மையை உணர்த்துவது **பதிதா சோகம்** என்ற தொல்வாச்சியத்தின் தனிச்சிறப்பு எனலாம்.

# ஐம்பாற்பிரிவு


H-512a

எண் ஐந்து என்பதற்குத் தமிழ்மொழியில் தனிச்சிறப்புக்களுண்டு. அவற்றுள் குறிப்பாக ஐம்பால் பற்றிச் சிந்து சமவெளி நகர நாகரிக மக்கள் பதிவிட்டுள்ளனர்.

எச்-512எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் இரண்டு எழுத்துக்களும், ஐந்து என்பதைக் குறிக்கும் நடுத்தர உயரமுடைய ஐந்து கோடுகளும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் உள்ளன.


M-1368a

எம்-1368எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் இரண்டு எழுத்துக்களும், ஐந்து என்பதைக் குறிக்கும் நடுத்தர உயரமுடைய ஐந்து கோடுகளும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இவ்விரு முத்திரைகள் இடமிருந்து வலமாக, பா + ல் + ஐந்து. **பால் ஐந்து** எனப் படிக்கப்பெறுகின்றன.

(பால் - பாலினம், ஐந்து - ஐந்து) **பாலினம் ஐந்து.** (பாலினம் ஐந்து - ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால்) தமிழிலக்கணத்தின் படி பாலினம் ஐந்து என்பது ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால்.)

**தொல்வாச்சியம் : பாலினம் ஐந்து.**


H-589a

எச்-589எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஐந்து எழுத்துக்களும், ஐந்து என்பதைக் குறிக்கும் நடுத்தர உயரமுடைய ஐந்து கோடுகளும், அநேகமாக எருமையின் உருவமும் உள்ளன. இந்த முத்திரையில் உள்ள நான்காவது, ஐந்தாவது எழுத்துகளான **மா, ம்** ஆகிய இரண்டும் சிறைந்துள்ளதாகக் கருதலாம்.

இந்த முத்திரை இடமிருந்து வலமாகப் பா + ல் + ஐந்தி + ன + மா +ம்.. பால் ஐந்தினமாம். **பால் ஐந்து இனமாம்.** எனப் படிக்கப்பெறுகிறது.

(பால் - ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால். ஐந்து - ஐந்து. இனமாம் - வகையாவது.)

**தொல்வாச்சியம் : ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால (என) ஐந்து வகையாவது.**


M-194a

எம்-194எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் அவன் என்பதைக் குறிக்கும் தீக்குச்சி வடிவமுடைய அன் என்ற சொல்லும், இரண்டு எழுத்துக்களும், ஐந்து என்பதைக் குறிக்கும் நடுத்தர உயரமுடைய ஐந்து கோடுகளும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக **அன் பால் ஐந்து** எனப் படிக்கப் பெறுகிறது.

(அன் - அவன. பால் - பாலினம். ஐந்து - ஐந்து)

**தொல்வாச்சியம் : அவன் பால் ஐந்து.**

குறிப்பு: அவன் பால் ஐந்து என்பது செந்தமிழ்ச் சொல்வழக்கு.

# அரன்


H-585a


M-179a

H-585A என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் இரண்டு எழுத்துக்களும், இடபம் எனும் காளையின் உருவமும் பொறிக்கப் பெற்றுள்ளன. M-179A என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் இரண்டு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் காணப்பெறுகின்றன.

செந்தமிழ் மொழியில் **ரகர** உயிர்மெய் மொழிக்கு முதலாகாது. அதற்கு முன் சுட்டெழுத்துக்களான **அகரம், இகரம், உகரம்** ஆகிய மூன்று குறில் உயிர்களில் ஏதேனும் ஒன்று வருமென நன்னூல் (148) கூறுகிறது. எனவே, இவ்விரண்டு முத்திரைகள் இடமிருந்து வலமாக (அ) + ர + ன் **அரன்** எனப் படிக்கப்பெறுகின்றன. (அரன் - அழிப்போன், எப்பொருட்கும் இறை, பதினோர் உருத்திரர்களில் ஒருவன், நெருப்பு, மஞ்சள்).

**தொல்வாச்சியம் : எப்பொருட்கும் இறைவன்.**

முன் கண்ட **மருமலர்க் கொன்றையார்க்கு வாகனமிடபமாகும், பரசோடுகூடிய சூலம் பினாகவில் படைகளாமே** - எனச் சூடாமணி நிகண்டு (12.140) கூறுவதிலுள்ள இடபம் எனும் காளையைத் தன் வாகனமாகக் கொண்ட காளைவாகனனே, படைத்தல், காத்தல், அருளல்,

மறைத்தல், அழித்தல் ஆகிய ஐந்தொழில் புரிபவனான **சிவன் (அ ) அரன் எனும் எப்பொருட்கும் இறை** எனவும், காளையும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும் ஓரினத்தைச் சேர்ந்தவை எனவும் குறிப்பிடுவதாகக் கருதலாம்.


H-512a

எம்-512எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் மூன்று எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரை முன் கண்டபடி இடமிருந்து வலமாக (அ) + ர + (ன் + ஆ). **அரன் ஆ** எனப் படிக்கப்பெறுகிறது.

(அரன் - எப்பொருட்கும் இறை. ஆ - சிற்றுயிர், ஆகுகை, ஆவது).

**தொல்வாச்சியம் : எப்பொருட்கும் இறைவன் ஒரு சிற்றுயிர்.**


M-32a


M-177a


H-407a

எம்-32எ, எம்-177எ, எச்-407எ ஆகிய அடையாள எண்களுடைய மூன்று முத்திரைகளில் ஐந்து எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் உள்ளன. இந்த முத்திரை முன் கண்டபடி இடமிருந்து வலமாக (அ) + ர + ன் + (இ)ட் + ட + ஆ. அரனிட்ட ஆ. **அரன் இட்ட ஆ.** எனப் பகுத்துப் படிக்கப்படுகிறது. (அரன் - எப்பொருட்கும் இறை. இட்ட - இட்ட, கொடுத்த, வைத்த, படைத்த. ஆ - சிற்றுயிர், ஆகுகை, ஆவது).

**தொல்வாச்சியம் : எப்பொருட்கும் இறை இட்ட சிற்றுயிர்.**

குறிப்பு: நந்தி எனும் காளையும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும் ஓரினம் என்பதை உறுதி செய்வதாகவும் கருதலாம்.


M-712a

எம்-712எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஐந்து எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், அதன் கழுத்துப் பகுதியில் ஓர் ஆழி குறியீடும் பரமஞானக் குறியீடும் உள்ளன.

முன் கண்டபடி, இந்த முத்திரை இடமிருந்து வலமாக (அ) + ர + னி + ட் + ட + ஆ. + ஆழி) அரனிட்ட ஆ ஆழி. **அரன் இட்ட ஆ ஆழி** எனப் படிக்கப்பெறுகிறது.

(அரன்- எப்பொருட்கும் இறை. இட்ட- இட்ட / கொடுத்த / வைத்த / படைத்த. ஆ -சிற்றுயிர் / ஆகுகை / ஆவது. ஆழி - கட்டளை / வட்டம் / அரசாணை.)

**தொல்வாச்சியம் : எப்பொருட்கும் இறைவன் படைத்த சிற்றுயிர் வட்டம்.**

குறிப்பு: வட்டம் என்ற சொல் மக்கட் கூட்டம் (அ) ஒரு நிலப்பரப்பு எனவும் பொருள்படும்.


M-1833a

எம்-1833எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஆறு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் இடம் பெற்றுள்ளன.

முன் கண்டபடி இந்த முத்திரை இடமிருந்து வலமாக (அ) + ர + ன் + நா + ட் + ட + ஆ. **அரன் நாட்ட ஆ** எனப் படிக்கப்பெறுகிறது.

அரன் - எப்பொருட்கும் இறை. நாட்ட(ம்) - விருப்ப(ம்). அழகு, ஆராய்ச்சி. ஆ- சிற்றுயிர், ஆகுகை, ஆவது)

**தொல்வாச்சியம் : எப்பொருட்கும் இறையின் விருப்ப(ம்) ஆராய்ச்சி சிற்றுயிர்.**

குறிப்பு: எப்பொருட்கும் இறையின் விருப்ப(ம்) சிற்றுயிர் பற்றி ஆராய்ந்தறிதல் எனும் தன்னுணர்தலைக் குறிப்பிடுவதாகக் கூறுவர்.



Ns.7a

என்.எஸ்-7எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் நான்கு எழுத்துக்களும், ஒரு ஆழி குறியீடும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

முன்கண்டபடி, இந்த முத்திரை இடமிருந்து வலமாக (அ) + ர + ன் + (இ)ட் + ட + ஆழி. அரனிட்ட ஆழி. **அரன் இட்ட ஆழி** எனப் படிக்கப்பெறுகிறது. (அரன் - எப்பொருட்கும் இறை. இட்ட - இட்ட ஆழி - கட்டளை / வட்டம்).

**தொல்வாச்சியம் : எப்பொருட்கும் இறை இட்ட வட்டம்.**



H-54a

எச்-54எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஐந்து எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக (அ) + ர + ன் + (ஊ + ன்) + ஆ. **அரன் ஊன் ஆ** எனப் படிக்கப்பெறுகிறது. (அரன்- எப்பொருட்கும் இறை. ஊன் - உடம்பு / உடல். ஆ - சிற்றுயிர் / ஆகுகை / ஆவது)

**தொல்வாச்சியம் : எப்பொருட்கும் இறையின் உடலாகுகை.**

குறிப்பு: ஒத்தக்கோடு நந்தியும் (அ) பரமஞானக் குறியீடும் தெய்வத்தன்மையோடு ஒப்பிடுவதாகக் கருதலாம்.



M-1314a

எம்-1314எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் எழு எழுத்துக்கள் உள்ளன. இந்த முத்திரை இடமிருந்து வலமாக (அ) + ர + + ன + ன் + ஒரு + ப + ல் +லு. **அரனன் ஒரு பல்லு. அரன் அன் ஒரு பல்லு** எனப் படிக்கப்பெறுகிறது.

(அரன் - எப்பொருட்கும் இறை. அன் - அவன். ஒரு - ஒரு. பல்லு - பல் எனும் அரிவாட்பல்.) அரிவாட்பல் -சிவன் சார்புடைய பலவானவை.

**தொல்வாச்சியம் : எப்பொருட்கும் இறை (எ) அவன் ஒரு அரிவாட்பல்.**



H-1520A



H-1520B

எச்-1520எ,பி என்ற அடையாள எண்களுடைய ( செம்பு காலம் எனும் 5000 ஆண்டைச் சேர்ந்த) செம்பு கோடாரி (Copper axe) ஒன்றின் **'எ'** புறத்தில் உள்ளவைத் தெளிவாக அடையாளம் காண இயலவில்லை. **'பி'** புறத்தில் மூன்று எழுத்துக்கள் கீறப் பெற்றுள்ளதைக் காணமுடிகிறது. அம்மூன்று எழுத்துக்களை இடமிருந்து வலமாக முன் கண்டபடி (அ)ர + னா + தி) **அரனாதி. அரன் ஆதி** எனப் படிக்கப் பெறுகிறது.

(அரன்- எப்பொருட்கும் இறை. ஆதி - தொடக்கம், தொடக்கமுள்ளது, காரணம், பழமை (தொன்மை).

**தொல்வாச்சியம் : எப்பொருட்கும் இறைவன் ஆதி.**



M-319a

எம்-319எ என்ற அடையாள எண்களுடைய முத்திரையில் ஏழு எழுத்துக்களும், எருதின் உருவமும் இடம் பெற்றுள்ளன. இந்த முத்திரை இடமிருந்து வலமாக, (அ)ர னி ட்ட உ பே பே. **அரன் இட்ட உ பே பே** எனப் படிக்கப் பெறுகிறது. (அரன்- எப்பொருட்கும் இறை. இட்ட - இட்ட. உ- சிறப்பு. பே - அச்சம் இல்லை. பே- அச்சம், இல்லை). இந்த முத்திரை அரன் இட்ட சிறப்பு அச்சமில்லை (அ) பயமில்லாமை எனக் கூறுகிறது. அநேகமாக அச்சங்களில் (எ) பயங்களில் மிகக் கொடூரமானது மரண பயம்.

**தொல்வாச்சியம் : எப்பொருட்கும் இறைவன் இட்ட சிறப்பு மரணபயம் இல்லாமை.**

சிந்து நதிக்கரை நகர நாகரிக வரலாற்றுச் சான்றுகளில் **அரன் (எ) சிவபெருமானின்** சிறப்புக்களைப் பற்றிக் கூறுகின்றன. பிற்காலத்தில் அச்சிறப்புக்கள் திருமந்திரம், சிவஞானசித்தியார் சுபபக்கம் ஆகியவற்றிலும் தொடர்ந்துள்ளன.

(எ. கா.) **அரநெறி ஆவது அறிந்தேனும் நானும் சிவநெறி தேடித் திரிந்து அந்நாளும் உரநெறி உள்ளக்கடல் கடந்தேறும் தரநெறி நின்ற தனிச் சுடரே** - (திருமந்திரம் -1562)

**அரனடி சொல்லி சொல்லி அரற்றி அழுது பரன்அடி நாடியே பாவிப்ப நாளும் உரன்அடி செய்துங்கு ஒதுங்க வல்லார்க்கு நிரனடி செய்து நிறைந்து நின்றானே** -(திருமந்திரம் 43).)

**அரன் அன்பர் தானமதாகிச் சிவத்து வருமவை சக்திகள் முன்னாவகுத்திட்டு உரன் உறுதி சந்திதி வேடிப்ப என்றும் திரன்உறு தோயாச் சிவாசந்தி ஆமே.** (திருமந்திரம் -2391.)

**அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம் அரன்அங்கி தன்னில் அறையில் சங்காரம் அரன்உற்ற அணைப்பில் அமரும் திரோதாயி அடி என்றும் அனுக்கிரகம் என்னே. (திருமந்திரம் - 2799.)**

**அரன்நெறி அப்பனைஆதிப்பிரானை உரநெறி யாகி உளம் புகுந்தானைப் பரநெறி தேடிய பக்தர்கள் சித்தம் பரன் அறியாவிடில் பல்வகைத் துரமே. (**திருமந்திரம் -1543.)

**அரன் முதலாக அறிவோன் ஆதீதத்தன் அரன் முதலா மாயை தங்கிச் சுழுமுனை கருமம் உணர்ந்து மாமாயை கைக்கொண்டோர் அருளும் அறைவார் சகலத்து உற்றாறே.** (திருமந்திரம் - 2260.)

**காண்பவன் சிவனே யானால் அவனடிக் கன்பு செய்கை மாண்பறம் அரன்றன் பாதம் மறந்துசெய் அறங்களெல்லாம் வீண்செய் லிறைவன் சொன்ன விதியறம் விரும்பொன்றில்லான் பூண்டனன் வேண்டல் செய்யும் பூசனை புரிந்து கொள்ளே.** (சிவஞான சித்தியார் சுபபக்கம் - 117.)

பொருள்: எல்லாக் கடவுளர் மாட்டுச் செய்யும் வழிபாடுகளையும் ஏற்றுக்கொண்டு அருள் புரிபவன் அரன் எனும் சிவபிரானென்பது பெறப்படவே, அவனை வழிபடுதலே நல்லதோரறம், அவனையன்றிச் செய்வனவெல்லாம் வீணென்பது போதருதலானும், புண்ணியமாவது வேதாகமங்களின் அவ்விறைவனால் விதிக்கப்படும் விதியாகலானும், ஒன்றினும் விரும்பலனாகியும் உயிர்கள் மாட்டுக் கருணை பூண்டு விருப்பஞ்செய்யும் அவ்விறைவன் திருவடிப் பூசனையே ஒரு தலையாகச் செய்யற்பாற்று.

# அஉ அறியா அறிவில் இடைமகனே!

**எட்டும் இரண்டுங் குவிந்தறி** (திருமந்திரம் 962-1), **எட்டும் இரண்டும் இனிதறி கின்றலர்** (திருமந்திரம் 963-1), **எட்டி னோடு இரண்டும் அறியேனையே** (திருவாசகம் 47-4), **எட்டிரண்ட றிந்தோரக்கிட ரில்லைகுயிலே** (இடைக்காட்டுச் சித்தர் பாடல் 86-1), **அஉ அறியா அறிவில் இடைமகனே!** (இடைக்காடனார் தனிப்பாடல் பொ.வி.சூ.37-3). **ஏனப்பா எட்டிருண்டும் பத்தும் காண்பார். இருப்பாரே காடியுகம் என்னைப் போல் வாழ்வார்** (அகத்தியர் பரிபாசைத் திரட்டு 53) ஆகியவை சூட்சுமமாக உணர்த்தப்பட்டுள்ளவை சித்தர் பாடல் அடிகளாகும்.

மேற்கண்ட ஐந்து பாடல் அடிகளின் வாயிலாக, எட்டு என்ற எண்ணையும், இரண்டு என்ற எண்ணையும் (குவிந்தறிந்தால்) கூட்டி அறிந்தாலது பத்து என்ற எண்ணென அறியப்படவேண்டும் எனவும், எட்டும், இரண்டும் நன்மை தருவது என்பதை அறியாமல் இருக்கின்றனர் எனவும், எட்டும், இரண்டும் அறியேனே எனவும், எட்டும், இரண்டும் அறிந்தவர்களுக்குத் துன்பம் இல்லை கோகிலமே! எனவும், எட்டும், இரண்டும் அறியாத அறிவில் இடை மகனே! எனவும், எட்டிருண்டும் **பத்தும்** காண்பார் இருப்பாரே காடியுகம் என்னைப் போல் வாழ்வார்! எனக் கூறுவதும் தெரியவருகின்றன. (**பத்து** - பெரியோரிடத்து உள்ள பக்தி எனும் பற்று, **கடவுள்.**)

**கடவுள்** என்ற சொல்லைக் **கட** என்றும் **உள்** என்றும் பகுத்து, **கட** என்பதற்கு **நிரையசை, பரவியிருத்தல்** அதாவது **ஒலியாதல்** எனவும், **உள்** என்பதற்கு **நேரசை நிலைபெறுதல்** அதாவது **ஒளியாதல்** என்பர். இதையே, கடவுளானவர் ஒலியும் ஒளியுமாக இருப்பதனாலேயே இவ்வுலகம் இயங்கிக் கொணடிருக்கிறது என்பர்.

ஒலியாகப் பரவியிருத்தலை விமர்சனமாகிய **சக்தி எனும் பரையோடும்,** ஒளியாக நிலை பெறுதலை பிரகாசமாகிய **சிவம் எனும் பரத்தோடும்** ஒப்பிடலாம். சிவசக்தியைப் **பிரகாச விமர்சன ரூபம்** எனக் குறிப்பிடுவது ஒரு சொல் வழக்கு. சிவசக்தியைப் **பரம்பரை** (பரம்பரன் எனும் இடையறாத் தொடர்பு, தலைமுறை தொடர்பு) என்பதுமொரு சொல் வழக்கு. பரம்பரையை அடுத்த தலைமுறையின் தலைவன், தலைவி ஆகிய இருவரை **சீயோன், சீயோள்** எனச் சிந்து சமவெளி முத்திரைகள் கூறுவதாக முன்கண்டவை நினைவுக் கொள்ளத்தக்கது.

**அ உ**

முண்டகன் மறையில் ஈறு, சாந்தி படலத்தில் காதுகளால் (ஐந்தாம் அறிவால்) கேட்கட்டும், கண்களால் (நான்காம் அறிவால்) காணட்டும் எனக் கூறுகிறது. காதுகளால் கேட்கக் கூடிய **ஒலி ஐந்தாம் அறிவு**. கண்களால் காணக்கூடிய **ஒளி நான்காம் அறிவு**. இவ்விரண்டும் ஆறறிவுகளின் வரிசையில் சற்று வேறுபடுகிறது. **அ** என்ற தமிழ் எழுத்துரு **எண் எட்டையும், உ** என்ற தமிழ் எழுத்துரு **எண் இரண்டையும்** குறிக்கும் என்பதனால் இவ்விரண்டு எண்களும் அதன் வரிசையில் சற்று வேறுபடுகின்றன.

எனினும், உயிரெழுத்துக்களின் வரிசையில் **அ** என்ற உயிர் முதலில் வரும். இதையே தொல்காப்பியர் பெருமான் எழுத்தெனப் படுப, **அகர முதல் னகர இறுவாய் முப்பதென்ப** எனக் குறிப்பிட்டுள்ளார். திருவள்ளுவர் பெருமான் **அகர முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு என்றுரைத்துள்ளார்**. எனவே உயிரெழுத்துக்களின் வரிசையில் எட்டு என்ற எண்ணைக் குறிக்கும் **அ** எனும் உயிரெழுத்தும் அடுத்து வரும் இரண்டு எண்ணைக் குறிக்கும் **உ** எனும் உயிரெழுத்தும் ஏற்புடையதாகிறது.

தமிழ் மொழியின் உயிரெழுத்துக்களில் சார்பு எழுத்தான **(போலி எனும் அலி எழுத்தான) ஔ** என்பதோர் உயிரெழுத்து. அந்த உயிரெழுத்து **அ, உ** ஆகிய இரண்டின் கூட்டு. அந்தக் கூட்டெழுத்திற்கு **அநந்தன்** எனும் பாம்பு, **அநந்தசொரூபி** - எண்ணில்லா உருவமுடையவன், **கடவுள்** எனப் பொருள்படுவதால் எட்டும் (அ), இரண்டும் (உ) என மேற்கண்ட பாடலடிகள் கூறுவதும் ஏற்புடையதாகிறது.

**அ** என்பதற்குக் **கடவுள்** எனவும், **உ** என்பதற்குச் **சிவபெருமான், உமையம்மை ஆகிய இருவர்** எனவும் தமிழகராதி பொருள் கூறுகிறது. கடவுள் என்பதற்குப் **பரம்** எனும் மேலானது என்பதைக் குறிக்கும் மற்றொரு பெயர்ச் சொல்லுண்டு.

மிகவும் மேலாதான பராபரத்திலிருந்து மேலானதான பரம் வெளிப்பட்டது. பரத்திலிருந்து சிவமும், சிவத்திலிருந்து சக்தியும் வெளிப்பட்டன எனச் சித்தர்கள் கண்ட மானுட ரகசியம் எனும் நூல் கூறுகிறது. முண்டகா மறையில் ஈறு, பிரபஞ்சத்தின் தோற்றம் படைப்புக் கடவுளரான பிரம்ம தேவரிடமிருந்து தோன்றியதாகக் கூறுகிறது.

பரம் என்பது பரமம் (முழுமுதல் கடவுள்) என்ற சொல்லின் சுருக்கம். பரமம் என்பதைப் பிற்காலத்தில் **தமிழ் மொழியில் பரமன்** என்றும் **சமசுகிருத்தில் ப்ரம்மம்** என்றும் இரண்டு சொற்களாயின. பரமம் என்ற சொல்லே **ப்ரம்மம்** (ப்ரம்மன் - பிரமன்) எனச் சமசுகிருத மொழியில் உச்சரிக்கப்பெறுகிறது.

குறிப்பு: முண்டகா மறையில் ஈறு (3.2.1-1) ‘ஸ வேதத்தைத் **பரமம்** பரவஹமதா’ என்பதில் **பரமம்** எனத் தமிழில் மொழி பெயர்ச் சொல் உள்ளது நோக்கத்தக்கது.

செந்தமிழ் இலக்கணம் முறைப்படி, 'ப்' என்ற வல்லின மெய்யெழுத்து மொழிக்கு முதலாக வராதென்பதும் அத்தகைய எழுத்து சிந்து சமவெளி நகர நாகரிகச் சொற்களில் காணப்பெற இல்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

எனவே, பரமம் என்ற சொல்லைப் பரம் + அம் எனப் பகுத்துப் பொருளறிவது நன்று. பரம் - உடல், கவசம், தகுதி, மேலானது, கடவுள், மேலுலகம், மேலிடம், நிறைவு, **அத்திமரம்**, வீடுபேறு, பிறவி நீக்கம். அம் - அழகு, நீர், மேகம், சாரியை. விகுதி (**முன்புள்ள பராபரத்திலிருந்து பரமாக என உண்டானது,** பகுபதவுறுப்புகளுள் இறுதியானது). முன்கண்ட விரிச்சி கேட்டல் என்ற தலைப்பில் **சுவத்திசீ பொருள்** எனப் படிக்கப்பெற்ற முத்திரையில் **பரம் என்பதைக் குறிக்கும் அத்திமரம் குறியீடு** உள்ளது நினைவுக் கொள்ளத்தக்கது.

பரமே என்ற சொல், சிந்து சமவெளி நாகரிகச் சுவடுகளான பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் காணமுடிகின்றது. பரமே தன்னைப் **பரம்பரையாக (சிவசக்தியாக)** வெளிப்படுத்தியுள்ளது. அந்தப் **பரம்பரையே** உலகின் அனைத்துச் சீவராசிகளின் **இனப்பெருக்கத்தின் மூலக் கூறு**. அதாவது இனப்பெருக்கத்திற்கு மூலமான சிவம் வெண்ணிறமான விந்துவாகவும் (சுக்கிலமாகவும்), சக்தி செந்நிறமான நாதமாகவும் (சுரோணிதமாகவும்) ஐம்பூதங்களில் முதலாவதான ஆகாயமண்டலத்தில் (அண்டத்தில்) நிலைத்தும், நிறைந்துமுள்ளதாகத் தவத்திரு ஸ்ரீ ஜெகநாதசுவாமிகள் குறிப்பிட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது.

கணிதவியலில் ஓரங்கமான வடிவியல் கணித ரீதியின் சிவத்தை ஒரு மேல் நோக்கும் முக்கோணமாகவும், சக்தியை ஒரு கீழ் நோக்கும் முக்கோணமாகவும், அவ்விரு முக்கோணங்கள் பின்னிப்பிணைந்துள்ளதொரு அறுகோணமாகச் சாக்தம் அடையாளப்படுத்துகிறது. அந்த அறுகோண வடிவம் சிந்து சமவெளி பானை ஓடுகளிலும், தமிழகத்தில் குறிப்பாகக் கொடுமணல் பானை ஓடுகளிலும் சீறல் குறியீடுகளாகக் காணமுடிகின்றன என முன்கண்டவை குறிப்பிடத்தக்கன.

அவன் அவள் அது எனும் அவை மூவினையாயின்
தோன்றிய திதியே, ஒடுங்கிமலத்தது உளதாம்
அந்தம் ஆதி என்பமனார் புலவர் - சிவஞானபோதம் சூ.01

பொருள்: அவன், அவள், அது என்று சுட்டிக்காட்டப் பெறுகின்ற தொகுதியாகிய உலகம் தோன்றுதல், இருத்தல், மறைத்தல் என்னும் மூவகைத் தொழில்களை உடைமையினால், அவை ஒருவனால் தோற்றுவிக்கப்பெற்ற உள்பொருளேயாகும். கன்ம மலத்தினால் தான் ஒடுங்குவதற்கு இடமாகிய கடவுளிடமிருந்து திரும்பச் சென்று ஒடுங்கி மீண்டும் தோன்றுவதுமாமே. முதலும் முடிவுமாகிய கடவுளே (ஒப்புயர்வற்ற அரனே) முதல் கடவுளென்று கூறுவர் அளவை நூல் (சமய நூல்) அறிவுடையோர்.



Rjd-76A

இந்தச் சிவஞானபோதம் சூ.01 கூறுவதான அவன் (எ) சிவத்தை (ஆண் இனத்தை) ஒரு மேல் நோக்கும் முக்கோணமாகவும், அவள் (எ) சக்தியை (பெண் இனத்தை) ஒரு கீழ் நோக்கும் முக்கோணமாகவும், அலி எனும் ஆணும், பெண்ணுமில்லாத இனத்தை ஒரு படுக்கை வச முக்கோணமாகவும் அதனைக் கடவுளாகிய பரமம் என்பதை அருவுருமாகச் சுட்டிக்காட்டலாம்.

அதற்கோர் உதாரணமாகச் சிந்து சமவெளி நாகரிகக் காலத்தில் அதனை அருவுருவக் குறியீடாக ஆர்.ஜே.டி. 76எ என்ற அடையாள எண்ணுடைய ஒரு பானை ஓட்டில் பறவையின் வடிவமாகக் கீறிக் காட்டப்பெற்றுள்ளது.



கீழ்வாலை



தாணிப்பாடி



அரியானா

இந்தப் பானை ஓட்டில் கீறப்பெற்றுள்ள அக்குறியீட்டைச் சற்று உற்று நோக்கின் தலையற்றதாக அதாவது தலைமையற்றதாக (ஒப்புயர்வற்றதாக), இடபக்கத்து இறக்கை, வலப்பக்கத்து இறக்கை, புட்சம் எனும் வால் உடைய ஒரு பறக்கும் பறவை எனக் கருதலாம்.

அந்தப் பறவையை வானமண்டத்தில் வடதுருவத்தில் இரவு நேரங்களில் காட்சித்தரும் ஆங்கிலத்தில் சிக்னஸ் எனும் அன்னப்பறவையுடன் ஒப்பிடலாம். அந்தப் அன்னப்பறவையின் வடிவங்களை மிகப் பலகைக் கல்லில் வடிவமைக்கப்பட்டுள்ள பிரமாண்டமான உருவங்களாகச் சித்தர்களின் பூத உடல் புதைக்கப்பட்டுள்ள சவக்குழியின் முகப்பில் நிறுவப்பட்டுள்ளதைத் தமிழகத்தில் விழுப்புரம் மாவட்டம் கீழ்வாலை, சேலம் மாவட்டம், தாணிப்பாடி, தமிழகத்தை ஒட்டியுள்ள கடப்பா, கர்னூல் போன்ற ஆந்திர மாநிலப்பகுதியிலும் காணலாம். இச்சின்னத்தைத் தமிழகத் தொல்லியல் துறையினர் பெண் தெய்வ வழிபாட்டிற்குரியதொரு சின்னம் என்பர்.

செப்புத் தகட்டிலான சிறிய வடிவத்தை அரியான போன்ற சில வடமாநிலங்களில் கண்டெடுக்கப்பெற்றுள்ளது. இச்சின்னத்தை வடமாநிலத் தொல்பொருள் துறையினர் வராகியின் வடிவமென்பர்.



H-644a

எச்-664எ என்ற அடையாள எண்ணுடைய பானை ஓட்டில் ஐந்து எழுத்துக்களும் பரமம் என்பதைக் குறிக்கும் குறியீடும் உள்ளன. முதலாவது, இரண்டாவது எழுத்துக்கள் இணைந்துள்ளன.

இந்தப் பானை ஓட்டை இடமிருந்து வலமாகவும், மேலிருந்து கீழாகவும் (ப + ர) + ன் + பே + ர் + (ப + ர + ம + ம்). **பரன் பேர் பரமம்**.

(பரன் - சீவான்மா, அயலான், கடவுள். பேர்- பெயர். பரமம் - சிறப்பு, தலைமை, முதன்மை, முதற்கடவுள், தெய்வநிலை, முண்டகன் (எ) சிவன்.)

**தொல்வாச்சியம் : கடவுளின் பெயர் பரமம்.** (வடமொழியில் **ப்ரம்மம்** என்றாயிற்று.)



M 2033A

எம்-2023எ என்ற அடையாள எண்ணுடைய வில்லையின் முதலில் சீ என்ற எழுத்தும், அந்த எழுத்து அன் என்பதைக் குறிக்கும் தீக்குச்சி வடிவிலான மனித உருவத்தின் நாபியில் உள்ளது.

அந்த மனித உருவத்தின் கால்களில் பு, பா ஆகிய இரண்டு எழுத்துக்களும், அதனையடுத்துச் சண்டேசன் திருவுருவமும், உ, ள் ஆகிய இரண்டு எழுத்துக்கள் இணைந்தும், பரமம் என்பதைக் குறிக்கும் குறியீடும், உ, ங்(கு) ஆகிய இரண்டு எழுத்துக்கள் இணைந்துள்ளன.

இந்த வில்லையை இடமிருந்து வலமாகச் **சீ அன்பு பா சண்டேசன் உள்** பரமமுங்கு. **சீ அன்பு பா சண்டேசன் உள் பரமம் உங்கு** எனப் படிக்கப்பெறுகிறது. (சீ - திரு. அன்பு - அருள். பா - தூய்மையான. சண்டேசன் - சண்டேசன். உள் - உள்ளம். பரமம் - முண்டகன். உங்கு - உள்ளிடம்).

**தொல்வாச்சியம்: திருஅருள் தூய்மையான சண்டேசனின் உள்ளம். (அது)** பரமம் **உள்ளிடம்.**


M-1909a

எம்-1909எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஏழு எழுத்துக்களும், ஒரு குறியீடும், ஒரு காண்டாமிருகத்தின் உருவமும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, (ஊ + ன்) + ஐ + இட்ட + மே + பரமமீ. ஊன் ஐ இட்டமே பரம்மீ எனப் படிக்கப் பெறுகின்றன.

(ஊன் - உடம்பு. ஐ - ஐந்து முக்கிய பிராணங்கள். இட்ட - இட்ட. மே - ஏற்றம் எனவும், பரம்மீ - முண்டகனின் மேலிடம்)

**தொல்வாச்சியம் : உடம்பும் ஐந்து முக்கிய பிராணங்களின் ஐயுணர்வும் இட்ட ஏற்றம் முண்டகனின் மேலிடம்.**

((குறிப்பு: ம் + ஈ) மீ எனும் எழுத்திலுள்ள ஈ - திருமகளைக் குறிக்கும் என்பர். பரமமீ என்பதையே வடமொழியில் **ப்ரம்மி** எனவும் பிராம்மி எனவும் குறிப்பிட்டுள்ளனர்.)


K-7a

கே-7எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பதினொரு எழுத்துக்களும், இரண்டு குறியீடுகளும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் இடம் பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாகப் பா + அனுஞ்சை + உள் + இட்ட + சு + பரமம் + யா + (இ)டப. **பா அனுஞ்சை உள் இட்ட சு பரமம் யா (இ)டப** எனப் படிக்கப்பெறுகிறது.

(பா - தூய்மையான. அனுஞ்சை - அனுமதி. உள் - உள்ளம். இட்ட - இட்ட. சு - மங்களகரமான. பரமம் - முண்டகன். யா - யாவை. இடப(ம்)- எருது (அ) நந்தி.)

**தொல்வாச்சியம் : தூய்மை, அனுமதி, உள்ளம், மங்களம், முண்டகன் யாவை? அவையே எருது (எ) நந்தி.**


H-1671a

எச்-1671எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஏழு எழுத்துக்களும், பரமம் என்பதைக் குறிக்கும் குறியீடும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாகப் பா + உ + டு +(இ) ட் + ட + பரமமா + ணு +ந. **பா உடு (இ)ட்ட பரமமாணு ந.** எனப் படிக்கப் பெறுகிறது. (பா - பரப்பு, தூய்மை, அழகு. உடு - நட்சத்திரம். இட்ட - இட்ட. பரமமாணு பரமமத்தின் அணு. ந - சிறப்பு, மிகுதி.)

**தொல்சாச்சியம் : பரப்புடைய நட்சத்திரமாக இட்டது பரமாணுவின் சிறப்பு.**

குறிப்பு: பரமமாணு என்பது முன்கண்ட செந்தமிழ் மொழி எழுத்துக்களின் வகை, எண்ணிக்கை ஆகியவற்றின் மூலம் என்பது நினைவுக் கூறத்தக்கது.


M-1749a

எம்-1749எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் இரண்டு எழுத்துக்களும், மூன்று குறியீடுகளும், ஒத்தக்கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, சு + பரமம் + அன் + பினாகபாணி + உ. சு பரமம் அன் பினாகபாணி உ எனப் படிக்கப் பெறுகிறது. (சு - மங்களகரமான. பரமம் - பரமம். அன் - அவன். உ- சிவபெருமான்.)

**தொல்வாச்சியம் : மங்களகரமான பரமம் அவன் சிவபெருமான்.**

குறிப்பு: வில், அம்பு கரத்தில் ஏந்திவாறு காட்சியளிப்பவன் வில்லாளன். அவனே சிவன் என மயமதம் (சூ.36.92-93எ) கூறுவது நினைவு கூறத்தக்கது.



M-1329a

எம்-1329எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஒன்பது என்பதைக் குறிக்கும் ஒன்பது கட்டங்களும், இரண்டு எழுத்துக்களும், மூன்று குறியீடுகளும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, ஒன்பது + அன் + உ + ஒரு + சு + பரமம் +ஆழி. **ஒன்பது அன். உ ஒரு சு பரமம் ஆழி** எனப் படிக்கப் பெறுகிறது. (ஒன்பது அன் - ஒன்பதானவன். உ - சிவன். ஒரு - ஒருங்கிணைந்து. சு - நன்மைத் தரும். பரமம் -பரமம். ஆழி - வட்டம்).

**தொல்வாச்சியம்: ஒன்பதானவன் எனும் சிவன் ஒருங்கிணைந்து நன்மைத் தருவது பரமம் எனும் கடவுளின் வட்டம்.**

இந்த முத்திரைக் குறிப்பிடுவதன் வாயிலாக மறை கிரகங்கள் எனக் கூறப்படும் இராகு, கேது ஆகிய இரண்டு கிரகங்கள் உட்பட்ட ஒன்பது கிரகங்களைப் பற்றிய முழு விபரங்களைச் சிந்து சமவெளி மக்கள் அறிந்துள்ளனர் எனக் கருதலாம்.



இக்காலத்தில் பாகிஸ்தான் நாட்டின் கராச்சி அரசு அருங்காட்சியத்தில் உள்ளதொரு வில்லையில் நான்கு எழுத்துக்களும், மூன்று குறியீடுகளும் காட்சித்தருகின்றன. அவற்றை இடமிருந்து வலமாகப் பா + (அன் + னே) + பே + பரமம் + ஓர் + ஆழி. **பா அன்னே பே பரமம் ஓர் ஆழி** எனப் படிக்கப்பெறுகிறது. (பா - தூய்மையான. அன்னே - அவனே. பே - மேகம். பரமம் - முண்டகன். ஓர்- ஒரு. ஆழி - வட்டம்).

**தொல்வாச்சியம் : தூய்மையான அவனே (கரு)மேகமும் ஒரு முண்டகனின் வட்டமும்.**

முண்டகன் எனும் சிவனால் போதிக்கப்பட்ட சூ.3.1.1-3.1.2இல் ஒன்றைத் தவிர மற்றொன்று இல்லை என்ற உண்மை நான்கு வேதங்களில் குறிப்பாக இருக்கு வேதத்தில் ஒரு மரத்தில் இரண்டு பறவைகள் வாழும். ஒன்று பழம் தின்னாது, மற்றொன்று பழம் தின்னுமென ஒரு வரியில் பதிவு செய்யப்பட்டும், மேலும் அது முண்டகா மறையில் ஈறு எனவும், அது அதர்வண வேதத்தின் ஓரங்கமாக இணைக்கப்பட்டுள்ளது. உண்மையில் அது காலத்தால் முற்பட்ட சிந்து சமவெளி நகர நாகரிகத்தைச் சார்ந்ததெனத் தெரியவருகிறது.

எட்டும் இரண்டும் பத்து என்பதே கடவுள் என்பதைக் குறிப்பதே சிந்து சமவெளி செந்தமிழ் மொழியின் **ய** எனும் உயிர்மெய் எழுத்தென்பதும், அதுவே ஆன்மா தன்னறிவு இழந்து அறிவு வடிவாகச் சிவனை அடைந்து பற்றற நிற்கும் **நிராதாரயோகநிலை** என்பதும், அதுவே **துரியம் எனும் அமைதி நிலை (அ) துரியசிவன்** என்பதும், அதுவே (அவன், அவள், அலி எனும்) **சிவன் (அ) முண்டகன் எனும் பரமம்** என்பதைக் குறிக்கும் குறியீடு என்பதும் தெரியவருகின்றன.

இதையே முன்கண்ட **ஏனப்பா எட்டிருண்டும் பத்தும் காண்பார். இருப்பாரே என்னைப்போல காடியுகம் வாழ்வார்** என அகத்தியர் பரிபாசைத் திரட்டு 53 எனக் குறிப்பிட்டுள்ளது நினைவுக் கூறத்தக்கது. (ஏ - ஏற்றம், உயர்வு.) எட்டும் இரண்டும் பத்து என்பதன் சிறப்பைப்பற்றிக் கைவல்லியநவநீதம் (79)கூறுகிறது.

எல்லாம் கண்டு அறியும் என்னை ஏது கண்டு அறிவேன் என்று
சொல்லாதே சுயமாய்ச் சோதிச் சுடருக்குச் சுடர் வேறு உண்டோ
பல்லார் முன் **தசமன்** தன்னைப் பார்ப்பதும் தனக்கெணாண்டேதான்
அல்லல் பதினொன்றானும் அவன் இடத்து உண்டோ பாராய்.

பொருள் : சுயம் பிரகாசமான அறிவாகிய உன்னை நீ அறிவதற்கு வேறு ஒரு பிரகாசம் தேவையில்லை. **பத்தாமவன்** தன்னையறிந்து அவனாலேயே அன்றி வேறாக பதின் ஒன்றாமவன் இருக்கிறானா? இல்லை அல்லவா அதுபோல் நீ உன்னை அறிவதற்கு வேறு பிரகாசம் வேண்டாம் என்பதை உணர்வாய்.



திருவானைக்கா ஆத்மசோதிக் குறியீடு

மேற்கண்ட கைவல்லியநவநீதம் பாடலுக்கான கோட்டுருவக் குறியீட்டில் பத்து சோதிச் சுடர்களையும், சோதிக்குள் சோதிச் சுடரையும் திருச்சிராப்பள்ளி, திருவானைக்கா அருள்மிகு சம்புகேசுவரர் கோயில், கீழ்த்திசைச் சுந்தரபாண்டியன் திருக்கோபுத்தின் முதலாம் நிலைக்கால் படியில் பொறிக்கப் பெற்றுள்ளதொரு குறியீட்டில் கண்குளிரக் காணலாம்.

அக்குறியீட்டின் நடுநாயமாகப் பத்துக் கோடுகள், பதினாறு கட்டங்கள் கொண்ட ஆடுபுலி விளையாட்டின் கோட்டுருவம் சோதிக்குள் சோதியாக உள்ளது நோக்கத்தக்கது.




சிந்து சமவெளியை சார்ந்த, **பத்து எனும் யகரம், நிராதார யோகம், துரியம் (எ) துரியசிவன், பரமம்** ஆகிய குறியீடுகள் தமிழகப் பாறை ஓவியங்களாக வரையப் பெற்றுள்ளதும், அகழாய்வுகளின் போது வெளிக்கொணரப்பெற்ற பானை ஓடுகளில் குறியீடுகளாகக் கீறப்பெற்றுள்ளன என்பதும் சிறப்புச் செய்தியாகும்.

**அஉ (எட்டும் இரண்டும்) அறியா அறிவில் இடைமகனே! என்ற தலைப்பில் பத்து என்பது இறைனைக் குறிக்கும் என்பதையும், அந்த இறைவனே** பரமம் என்பதையும், அது ய எனும் உயிர்மெய் எழுத்து என்பதையும் கண்டோம். தமிழகத்தில் மேற்கொள்ளப்பெற்ற அகழாய்வுகளின் போது நிராதாரயோகம் குறியீடுகள் பானை ஓடுகளில் கீறப்பெற்றுள்ளதையும் அறிந்தோம்.

சுயம்பிரகாசமான அறிவாகிய உன்னை நீ அறிவதற்கு வேறாக ஒரு பிரகாசம் தேவையில்லை. **பத்தாமவன்** தன்னையறிந்து அவானலேயே அன்றி வோறக பதின்ஒன்றாமவன் இருக்கின்றானா? இல்லை அல்லவா. அதுபோல நீ உன்னை அறிவதற்கு வேறு பிரகாசம் வேண்டாம் என்பதை உணர்ந்தறிவாய் என்ப.

எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள் - சிட்டன்
சிவயநம எனும்திரு எழுத்து அஞ்சாலே
அவாயம் அற நின்று ஆடுவான். (திருவதிகை மணவாசகங்கடந்தார் -32)

சிவன் ஆடுமிடம் எட்டும் இரண்டும் பத்து. அதன் வடிவம் ய எனும் உயிரைக் குறிக்கும் செந்தமிழ் எழுத்து. உயிர்களின் இடமாகவே இறைவன் மந்திர வடிவமாக இருப்பது சிவயநம எனும் திருவைந்தெழுத்து. அந்த ஐந்தெழுத்தில் அபாயமற நின்று ஆடுகிறான். எனவே அவன் ஆடுமிடம் உன்னில் உருவம். உணர்வுக்கு உணர்வு மந்திரமாம். எனவே, அடுத்தப்படியாக **ஆடுவான், பிடியாடி** என்பதைப் பற்றி காண்போம்.

# ஆடுவான்



அடையாள எண்ணில்லாத வில்லை ஒன்றில் நான்கு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் (எ) ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் உள்ளன.

இந்த வில்லை இடமிருந்து வலமாக ஆ + டு + வா + ன். ஆடுவான் **ஆடு வான்** எனப் படிக்கப்பெறுகிறது. (ஆடு - கூத்து. கூர்மை, வெற்றி, விலங்கு வகை. வான் - பெருமை, நன்மை, அழகு, வலிமை.)

**தொல்வாச்சியம் : கூத்தின் பெருமை / கூத்தின் அழகு / விலங்கு வகையின் நன்மை.**

குறிப்பு : கூத்தன், அம்பலக் கூத்தன், கூத்தாடி (எ) கூத்தாடுவேன், பேயோடாடி (பேயுடன் ஆடுபவான் (எ) சிவபெருமான்) எனக் குறிப்பிடுவதாகும்.

சிந்து சமவெளி நாகரிகப் பகுதியில் மேற்கொள்ளப்பெற்றதொரு அகழாய்வின் போது வெளிக்கொணரப்பெற்ற தங்கத்திலான முத்திரை மோதிரம் ஒன்றில் நான்கு எழுத்துக்களும், ஒத்தக்கொம்பன் (எ) ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் உள்ளன.



இந்த முத்திரை மோதிரத்தைப் பிடை ஆடை (அ) பிடி ஆடி எனப் படிக்கப்பெறுகிறது. (பிடை -படுக்கை, உறக்கம், சேனை, திரள். ஆடை - உடை, சித்திரை நாள். (பிடி - பேய். ஆடி - ஆடுபவன்) பிடை ஆடை என்பதை விட பிடி **ஆடி (எ) பேயோடாடி** அதாவது பேயுடன் ஆடுபவனான சிவபெருமானைப் பிடியாடி எனக் குறிப்பிடுவதாகக் கருதலாம்.

**தொல்வாச்சியம் : பேயோடாடி.**

# மார்க்கண்டேயன் சரிதை



MDK- 6847



எம்.டி.கே. - 6847 என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஆறு எழுத்துக்கள் உள்ளன. அடையாள எண்ணில்லாத இதே போன்ற மற்றொரு முத்திரையில் நான்கு எழுத்துக்கள் உள்ளன.

இவ்விரு முத்திரைகளில் காளையின் கொம்புகளையும் கால் வட்ட வடிவ வடிவத்தையும் மகுடமாகவும், காப்பு என்பதைக் குறிக்கும் கைக் காப்பு வளையல்களை அணிந்த திருவுருவம் ஒன்று, ஆறு இலைகளைக் கொண்ட அரச மரத்தில் நின்ற கோலத்திலுள்ளன.

அத்திருவுருத்தின் வலது புறக் கீழப் பகுதியில் (அநேகமாக வியோமா எனும்) ஆகாயத்தைக் குறிக்கும் நான்கு கட்டங்களைக் கொண்ட சதுர வடிவம் ஒன்றுள்ளது.

அத்திருவுருத்தை மண்டியிட்டு வணங்கும் கோலத்தில் மற்றொரு திருவுருவமும், அத்திருவுருத்தின் மிக அருகாமையில் மனித முகமுடைய எருமைக் கிடாவின் உருவமும், பீடத்தின் மீது கயிற்றால் சுற்றப்பெற்ற சிவலிங்க அருவுருவமும் உள்ளன. கீழ்ப் பகுதியில் பாவாடை சட்டை அணிந்தும் ஒருவர் கரத்தை மற்றொருவர் பிடித்தவாறு ஏழு கன்னியமார்கள் நின்ற கோலத்திலுள்ளனர்.

எம்.டி.கே.- 6847 என்ற அடையாள எண்ணுடைய முத்திரையிலுள்ள ஆறு எழுத்துக்கள் இடமிருந்து வலமாக, அன் + பு + சா + (உ + ய்) + ய. **அன்பு சாஉய்ய** எனப் படிக்கப்பெறுகின்றன.

(அன்பு - பாசம், தொடர்புடையோர் மாட்டு உண்டாகும் பற்று / நேயம் / அருள் / **பக்தி.** சாஉய்ய - (அநேகமாக) இறப்புக்குப் பின் ஆன்மா கடவுளுடன் ஒன்றும் நிலை என்பதைக் குறிக்கும் சாயுச்சியம்.)

இந்த முத்திரை இறப்புக்குப் பின் ஆன்மா கடவுளுடன் ஒன்றும் நிலை என்பதைக் குறிப்பிடுவதாகவோ அல்லது என்றும் நீண்ட ஆயுளுடைய சிரஞ்சீவியாக வாழ்வதையோ குறிப்பிடுவதாகவோ கருதலாம்.

அடையாள எண்ணில்லாத முத்திரையிலுள்ள நான்கு எழுத்துக்கள் இடமிருந்து வலமாகப், பா + சு + ள்+ ள. **பாசுள்ள. பாசு உள்ள** எனப் படிக்கப்பெறுகின்றன.

(பாசு -அன்பு / பாசம் / தொடர்புடையோர் மாட்டு உண்டாகும் பற்று / நேயம் / அருள் / **பக்தி.** உள்ள - உண்டாகியுள்ள / உண்மையான. இந்த முத்திரை இந்த முத்திரை **பக்தி உண்மையானது** எனக் குறிப்பிடுவதாகக் கருதலாம்.

ஒரே மாதிரியான இவ்விரு முத்திரைகளில் பொறிக்கப்பெற்றுள்ள இறப்புக்குப் பின் ஆன்மா கடவுளுடன் ஒன்றும் நிலை அல்லது நீண்ட ஆயுளுடைய சிரஞ்சீவியாக வாழ்வதைப்பற்றிய பக்தி மார்க்கத்துடன் தொடர்புடைய சொற்களும், அரசமரத்தில் நின்ற கோலத்திலுள்ள சிவபெருமான் திருவுருவமும், ஆகாயத்தைக் குறிக்கும் வடிவமும், மண்டியிட்டு வணங்கும் எமதர்மரின் திருவுருவமும் அவருடைய ஊர்தியான எருமையும், கயிறு சுற்றப்பட்ட சிவலிங்கமும், ஏழு கன்னிமார்களும் பதினெண் புராணங்களில் ஒன்றான மார்க்கண்டேயன் சரிதையையும், திருக்கடையூர் தலபுராணத்தையும் நினைவு கூறுகின்றன.

## மார்க்கண்டேயன் சரிதையும் திருக்கடையூர் தலபுராணமும்

மிருகண்டு முனிவர் மருத்துவவதியைத் திருமணம் செய்தார். நீண்டகாலமாக அத்தம்பதியர்க்கு குழந்தைப் பாக்கியம் இல்லாமல் இருந்தனர். எனவே சிவபெருமானை நோக்கி மனமுருகித் தவமிருந்தனர். அவ்விருவரின் தவத்தை ஏற்றுச் சிவபெருமான் காட்சியளித்து நீங்கள் இருவரும் தவமிருந்து வேண்டுவது யாது என வினவினார். ஐயனே! பல ஆண்டுகளாயினும் எங்களுக்குக் குழந்தைப் பாக்கியமில்லை. எங்களுக்குக் குழந்தை பிறக்க ஆசி வழங்க வேண்டுமென யாசித்தனர்.

உங்களுக்குப் பலகாலம் வாழும் தீய குணங்களுடைய மகன் வேண்டுமா? அல்லது பதினாறு ஆண்டுகள் மட்டுமே வாழக் கூடிய நற்குணமுடைய மகன் வேண்டுமா? என வினவினார். ஐயனே! நற்குணமுடையதொரு மகனே வேண்டுமென்றனர். அவ்வாறே ஆகட்டும் என அருளி சிவபெருமான் மறைந்தார்.

சிவபெருமானின் அருளால், அவர்களுக்கு ஆண்குழந்தை ஒன்று பிறந்தது. அக்குழந்தைக்கு மார்க்கண்டேயர் எனப் பெயர் சூட்டினர். தங்களது மகன் நற்குணமுடைய சிறந்த சிவபக்தனாக வளர்ந்து வருவதைக்கண்டு மனம் மகிழ்ந்தனர். மார்க்கண்டேயர் வளர்ந்து பதினாறு வயது அடையும் காலம் நெருங்கியது. தங்களது மகன் பதினாறு வயதில் இறந்துவிடுவான் என்பதை உணர்ந்த அத்தம்பதியர் மனவேதனைக்கு ஆளாயினர்.

தம் பெற்றோரின் மனவேதனைக்கான காரணத்தைக் கேட்டறிந்த மார்க்கண்டேயன் பதினாறு வயது நிறைவு பெரும் தருணத்தில் சிவபெருமானிடம் பூரணமாகச் சரணாகதி அடைந்தான். அதனால், குறிப்பட்ட காலத்தில் அவனது உயிரை எடுக்க எருமைக்கடா மீது அமர்ந்து வந்த எமதர்மன் மார்கண்டேயன் அருகில் நெருங்கமுடியவில்லை.

வேறுவழியின்றி இறுதியில் அவனது உயிரை எடுக்கப் பாசக் கயிற்றினை மார்கண்டேயன் மீது வீசினார். அப்பாசக் கயிறு தவறாக ஆவுடைமீது பட்டு இறுக்கியது. அதனால் சிவபெருமான் சினம் கொண்டு உக்கிரமூர்த்தியாக வெகுண்டெழுந்து எமதர்மரை உதைத்துத் தள்ளி வதம் செய்தார். இவ்வாறாக மார்க்கண்டேயனை மரணத்திலிருந்து காத்தும் தன் மடியில் அமர்த்தியும் கொண்டார்.

நற்குணமுடைய மார்க்கண்டேயன் சிவபெருமானை நோக்கி இறைவா! எமர்தர்மரை மன்னித்து உயிர்பெற்று எழ அருளவேண்டினார். அவ்வேண்டுகோளுக்கிணங்க எமதர்மனை, சிவபெருமான் மன்னித்து உயிர்பெறச் செய்தார். உயிர்பெற்று எழுந்த எமதர்மர் சிவபெருமானை மண்டியிட்டு வணங்கி ஐயனே! யாம் செய்த தவறு யாது என வினவினார்.

எமதர்மரே! யாம் மார்க்கண்டேயனின் பெற்றோருக்கு அளித்த வரத்தை நீங்கள் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. பதினாறு ஆண்டுகள் வரை சிறந்த சிவபக்தனாக வாழ்ந்து முடித்த பின்னர், மார்க்கண்டேயன் சிரஞ்சீவியாக வாழ்வான் என்பதே யாமளித்த வரம் என்றார். சிவபெருமான் அளித்த வரத்தை அறியாமல் தாம் செய்த தவறை உணர்ந்த எமதர்மர் சிவபெருமானை மண்டியிட்டு வணங்கினார் என்பது பக்தி மார்க்கத்தின் சிறப்பை உணர்த்தும் மார்க்கண்டேயன் புராணம் என்பர்.



மார்க்கண்டேயன் சரிதை உணர்த்தும் சான்றொன்று தமிழகத்தில் திருக்கடையூரில் உள்ளதென்பதும், சிந்து நதியின் ஐந்து உபநதிகளில் மார்க்கண்டேயன் நதியும் ஒன்றெனப்து குறிப்பிடத்தக்கது.

மார்க்கண்டேயன் சரிதையில் **அவனவன் உரிமையோடும் அவனவன் விருப்பத்தோடும் வாழி** என எமதர்மனுக்கும், மாக்கண்டேனுக்கும் சிவபெருமான் அருளிய அருளாசி என்பர். மார்க்கண்டேயன் சரிதை ஒரு புராணமல்ல, அதுவோர் வரலாற்றுண்மை.

## ஏழு கன்னியமார்கள்

இந்த முத்திரையில் பாவாடை சட்டை அணிந்தும் ஒருவர் கரத்தை மற்றொருவர் பிடித்தவாறு ஏழு கன்னிமார்கள் நின்ற கோலத்திலுள்ள காட்சி, மார்கண்டேயன் சரிதை வட இந்தியா முதல் தென்னிந்தியா வரை வாழ்ந்த மக்கள் அறிந்தும், வருங்காலச் சந்ததியர் அனைவரும் அறியும் வகையில் அறிவித்துள்ளனர் என்பது பருருபம் என்ற தலைப்பில் ஓரையான் (எ) தலைப்பில் முன்கண்டதும் தெரியவருகிறது.




மார்கண்டேயன் புராணம் கூறும் நிகழ்வு ஆதித்தன் (எ) சூரியன் தட்சணாயணத்தில் பயணிக்கும் செப்டம்பர் மாதம் 21ஆம் (அ) 22ஆம் தேதி முதல் மார்ச் மாதம் 21ஆம் (அ) 22ஆம் தேதி வரையிலான ஆறுமாத காலத்திற்கு இடைப்பட்டதொரு நாளில் நிகழ்ந்திருக்கக் கூடுமெனக் கருதலாம்.

மார்க்கண்டேயன் சரிதையை அறிந்ததை-யடுத்து **ஓம்** எனும் தீர்க்கப் பிரணவமந்திரத்தைப் பற்றிக் காணலாம்.

# ஓம்


C-35a

சி-35எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் மூன்று எழுத்துக்கள் பொறிக்கப் பெற்றுள்ளன. இம்மூன்று எழுத்துக்கள் இடமிருந்து வலமாக ஓ + ம் + உ. **ஓம் உ** எனப் படிக்கப்பெறுகிறது.

(ஓம்- பிரணவம் (எ) தீர்க்கப் பிரணவ மந்திரம் / ஆமென்னும் உடன்பாட்டை உணர்த்தும் ஓரிடைச்சொல் / தன்மைப் பன்மை விகுதி. உ - இரண்டு / சிவபெருமான் / உமையம்மை / சுட்டெழுத்துக்களில் ஒன்று / செய்து / பண்புப்பெயர் விகுதியுள் ஒன்று.) (பிரணவம் என்பதற்கு புதிது புதிதாகப் படைக்கும் அறிவு எனவும் பொருள்படும்.)

**தொல்வாச்சியம் : ஓம் சிவபெருமான் / உமையம்மை.**

அதற்கொரு சான்றாக, திருமந்திரப் பாடல் கூறுவதைக் காணலாம்.

ஓமென் றெழுப்பித்தன் உத்தம நந்தியை
நாமென றெழுப்பி நடுவெழு தீபத்தை
ஆமென்று எழுப்பி அவ்வாறு அறிவார்கள்
மாமன்று கண்டு மகிழ்ந்திருந் தாரே. (944)

பொருள்: ஓம் என்ற பிரணவத்தை (தீர்க்க பிரணவத்தை மந்திரத்தை) முதலில் உச்சரித்து, மேன்மை தரும் நந்தியெம் பெருமானைச் சிந்தித்து, அதனோடு கலந்து (உத்தமன் நந்தியை நாம் என்று எழுப்பி) புருவ நடுவில் ஒளிச் சுடராய்த் தோன்றும் **சிவக்காட்சியைக்** காணும் வழி அறிந்தவர்கள், தங்கள் மனமேடையே இறைவன் (சிவபெருமான்) ஓயாது நடனமிடும் திருச்சிற்றம்பலமாக, அதில் சிவ நடனம் கண்டு களித்திருப்பார்கள்.

(உத்தம நந்தி - முதன்மையான / மேன்மையான சிவபெருமான். மாமன்றம்-சிற்றம்பலம்)


M-2020A


M-2020B


H-2053A

எம்-2020எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையின் இருபுறங்களிலும் இரண்டு எழுத்துக்களும், **எ** புறத்தில் (அநேகமாக எருது, காளை எனும் நந்தியின் உருவமும்), **பி** புறத்தில் எழுந்து நிற்குமொரு காளை எனும் நந்தியின் உருவத்தை அடையாளம் காணமுடிகிறது. இந்த வில்லையை இடமிருந்து வலமாக ஓ+ம்+நந்தி. **ஓம் நந்தி** எனப் படிக்கப்பெறுகிறது. (ஓம்- பிரணவம் (எ) தீர்க்கப் பிரணவ மந்திரம் / ஆமென்னும் உடன்பாட்டை உணர்த்தும் ஓரிடைச்சொல் / தன்மைப் பன்மை விகுதி. நந்தி- நந்தித் தேவன் / சிவபெருமான்). இந்த வில்லையில் எழுந்து நிற்கும் நந்தியின் உருவத்தையும் முன்கண்ட 944ஆம் திருமந்திரப் பாடலடிகளில் ஒன்றான **உத்தம நந்தியை நாமென் றெழுப்பி** என்பதுடன் ஒப்பிடலாம்.

எச்-2053எ என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் ஓ, ம் ஆகிய இரண்டும் ஒரு கூட்டெழுத்துப் போன்றும், ஒன்றோடு ஒன்றாக இணைந்துள்ளவாறும் அதாவது **ஓரெழுத்துப்** போன்றும் உள்ளன. இந்த வில்லையை ஓ + ம். **ஓம்** எனப் படிக்கப் பெறுகிறது. (ஓம்- பிரணவம் (எ) தீர்க்கப் பிரணவ மந்திரம், ஆமென்னும் உடன்பாட்டை உணர்த்தும் ஓரிடைச்சொல், தன்மைப் பன்மை விகுதி.

**தொல்வாச்சியம் : ஓம் - தீர்க்கப் பிரணவ மந்திரம்.**

ஓம்என்னும் **ஓர்எழுத்துக்குள்** நின்ற ஓசைபோல்

மேல்நின்ற தேவர் விரும்பும் விழுப்பொருள்

செய்கின்ற செஞ்சுடர் எம்பெருமான் அடி

ஆய்நின்ற தேவர் அகம்படி ஆமே. ( -திருமந்திரம் 2824.)

**பொருள்:** ஓம் எனும் **ஓரெழுத்துக்குள்ளே** ஒலிக்கின்ற நாதம் போல் மேலுலகத் தேவர் தேடி அடையும் மேலான பொருள் சிவமே ஆகும். இந்தச் சிவம் எட்டாத நெடுந் தொலைவில் சோதிச் சுடராகத் திகழ்கின்றவன். இச்சிவப் பரம்பொருளின் திருவடிகளைத் தேடி அடைந்து இன்புற விரும்பும் தேவர்கள் உள்ளத்துள்ளே பரம்பொருள் நிலைத்திருக்கின்றான். (விழுப் பொருள் - உன்னதமான உயர்ந்த பொருள்.)

இவ்வில்லை, திருமந்திரப் பாடலின் படி ஓம் எனும் தீர்க்கப் பிரணவ மந்திரம் என்பது உன்னதமான உயர்ந்த பொருளை உணர்த்தும் **ஓரெழுத்துச் சொல்** எனக் கூறுகிறது.



எச்-1876எ,பி மற்றும் எச்-1877எ,பி ஆகிய அடையாள எண்களுடைய வில்லைகளின் 'எ' புறத்தில் இரண்டு எழுத்துக்கள், 'பி' புறத்தில் இரண்டு எழுத்துக்கள் என நான்கு எழுத்துக்கள் உள்ளன.

இவ்விரு வில்லைகள் ஓ + ம் + ப + ண். **ஓம் பண்** எனப் படிக்கப்பெறுகின்றன.

(ஓம்- பிரணவம் (எ) தீர்க்கப் பிரணவ மந்திரம் / ஆமென்னும் உடன்பாட்டை உணர்த்தும் ஓரிடைச்சொல் / தன்மைப் பன்மை விகுதி. பண் - ஓங்காரம் (எ) ஓசை / இசைப் பாட்டு / தகுதி / அமைவு.

**தொல்வாச்சியம் : ஓம் - ஓங்காரம் (எ) ஓசை.**



எச்-1878எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையின் **எ** புறத்தில் இரண்டு எழுத்துக்கள், **பி** புறத்தில் இரண்டு எழுத்துக்கள் என நான்கு எழுத்துக்கள் உள்ளன. இவ்விரு வில்லைகள் ஓ + ம் + ப + ன். **ஓம் பன்** எனப் படிக்கப்பெறுகின்றன.

(ஓம்- பிரணவம் (எ) தீர்க்கப் பிரணவ மந்திரம் / ஆமென்னும் உடன்பாட்டை உணர்த்தும் ஓரிடைச்சொல் / தன்மைப் பன்மை விகுதி. பன் -அரிவாட்பல்.)

**தொல்வாச்சியம் : ஓம் (எ) ஓங்காரம் அரிவாட்பல் (எ) சிவபெருமானால் பலவானது.**

முன் கண்ட செந்தமிழ் எழுத்துக்களின் வெளிப்பாடுகள் என்ற தலைப்பில், மொழிமுதல் ஓமென் றுரைத்தல் வழக்கே (ஐந்திறம் பா.எண் 4), அணுத்திரள் ஒலியே எழுத்தொலிச் சிறப்பாம் (ஐந்திறம் பா.எண் 5), எண்ணில் பல் கோடி சேவடி முடிகள், எண்ணில் பல் கோடி திண் தோள்கள், எண்ணில் பல் கோடி திருவுரு பெயர்கள், ஏர்கொண்ட முக்கண் முகம் இயல்பும் எண்ணில் பல் கோடி எல்லைக்குப்பாலாய் நின்றைஞ்நூற்றந்தணரேத்தும் எண்ணில் பல் கோடி குணத்தர்ஏர் வீழி இவர்நம்மை ஆளுடையாரே என்கிறது திருவீழிமிழலை (5) திருவிசைப்பா (9). ஆகிய பாடல்களும் அவற்றின் பொருளும் நினைவுக் கூறத்தக்கவை.

ஓம் எனும் ஓங்காரம் அ, உ, ம் ஆகிய மூன்றை விழிப்பு, கனவு, உறக்கம் ஆகிய ஆன்மாவின் அவத்தை (எ) நிலைப்பாடுகளுடன் ஒப்பிட்டும், அதனை மூன்று அட்சரங்களை அதாவது எழுத்துக்களைக் கொண்ட ஓங்காரத்வனி என்பர்.

ஓம் என்பதைச் சிவன் என்றும், அ - உருத்திரன் (எ) பதி, உ - விட்டுணு (எ) உயிர், ம் - பிரம்மா (எ) மாயை (அ) பாசம் என்றும் பகுத்தும் கூறுவர்.

ஓம் என்பது சிவன் எனச் சற்றுமுன் கண்ட **சி-35எ** என்ற அடையாள எண்ணுடைய முத்திரை கூறுவது நோக்கத்தக்கது.

அ, உ, ம் ஆகிய மூன்று அட்சரங்களைக் கொண்ட ஓம் (எ) பிரணவ மந்திரத்தை ஜபித்து யோகியானவன் ஜன்ம சம்சார பந்தத்திலிருந்து விடுபட்டு முக்தியடைகிறான் என ஆத்மப்ரபோத மறையில், ஈற்றில் கூறப்பெற்றுள்ளது.

ஓ (எ) சித்தாகிய உயிரும், ம் (எ) சடமாகிய உடலும் கூடியது ஓம். **ம்** (எ) மகர மெய்யுடன் **அ** (எ) உயிர் கூட **ம** எனும் உயிர்மெய்யும், **ம்** (எ) மகர மெய்யுடன் **உ** (எ) உயிர் கூட **மு** எனும் உயிர்மெய்யும் பிறக்கும். அவ்வாறு கூடுவதனால் உலகில் அனைத்தும் இயங்கும்.

ஓம் என்பதோர் அட்சரம். அந்த அட்சரமே பரமம். அதுவே மேலானது. அந்த மேலான பரமம் என்பதை ஓம் என ஓரெழுத்தாகச் சேர்த்துப் பார்ப்பது நிர்குண நிலை (எ) சமஷ்டி அதாவது **மேல் நிலை**. ஓம் என்பதை அ + உ + ம் எனப் பிரித்துப் பார்ப்பது சகுண நிலை (எ) வியஸ்டி (வியட்டி) அதாவது பருவுடலான, தனிப்பட்டதானதொரு **கீழ் நிலை**.

ஓம் என ஓரெழுத்தாகச் சேர்த்துப் பார்ப்பது நிர்குண நிலை (எ) சமஷ்டி அதாவது மேல் நிலை எனச் சற்று முன்கண்ட **எச்-2053எ** என்ற அடையாள எண்ணுடைய வில்லை கூறுவது குறிப்பிடத்தக்கது

பெருமையான வியக்தம் (எ) சகளம் வெளிப்பட்ட நிலை. தூய்மையான நிட்களம் (எ) அவ்யத்தம் வெளிப்படாத நிலை. பெருமையான (எ) சகளம், தூய்மையான (எ) நிட்களம் ஆகிய இரண்டுக்கும் அப்பாற்பட்ட நிலை அகள நிலை. அந்நிலையில் ஓர் அசைவு ஏற்பட்டு நான் என்ற உணர்வு உண்டாயிற்று.

அவ்வுணர்வு ஏன், எங்கே, எப்படி, எப்போது, எவரால் ஏற்பட்டது என்பது யாரும் அறிந்திலர். அதையே பரமம் என்பதின் பரம இரகசியம் என்பர். இந்தப் பரம இரகசியத்தையே திருவுந்தியார் பாடல் (1) கூறுகிறது.

அகளமாய் யாரும் அறியாதப் பொருள்

சகளமாய் வந்ததென்றுந் தீபற

தானாகத் தந்தது தன்று உந்தீபற. (திருவுந்தியார் பாடல் 01)

பொருள்: தோற்றமில் காலமாகத் தூய்மைப் பொருளாய் எத்தகையோராலும் இன்ன தன்மையென அறியவொண்ணாதாய் உள்ள சிவமாகிய அம்முழுமுதற் பொருளே நம்பொருட்டுத் திருமேனி கொண்டு குருவாக எழுந்தருளியது என்று உந்திபறப்பாயாக. அறிந்தற்குரிய அம்முதற் பொருள் தானே வலியவந்து மெய்யுணர்வை வழங்கியுள்ளதென்று உந்தி பறப்பாயாக. (உந்தீபற (எ) உந்தி பறப்பாயாக - யோக மார்க்கத்தில் மூச்சுக்காற்றை மூலாதாரத்திலிருந்து உந்தி எழுப்பி சுழுமுனை வழியாகத் துரிய நிலைக்குப் பறத்தல்.)

ஓங்காரத்து உள்ளே உதித்த ஐம்பூதங்கள்

ஓங்காரத்து உள்ளே உதித்த சராசரம்

ஓங்கார அதீதத்து உயிர் மூன்றும் உற்றன

ஓங்காரம் சீவ பரசிவ ரூபமே. ( திருமந்திரம் 2677)

பொருள்: ஓங்காரம் எனும் ஓசையிலிருந்தே ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலம் ஆகிய ஐந்தும் வெளிப்பெற்றன. அண்ட சராசரமும் வெளிப்பெற்றுள்ளது. உயிர்கள் மூன்றும் உற்றன. ஓங்காரமே சீவனாகவும், பரசிவ உருமாகினவே.

ஓம் என்ற தலைப்பில் ஆராய்ந்து அறியப்பெற்ற ஆறு சிந்து சமவெளி நகர நாகரிகச் சான்றுகள் ஓம் என்பது ஓங்காரம் எனுமோர் ஓசை. அவ்வோசை **'ஓ'** எனும் உயிரும், **'ம்'** எனும் மகரமெய்யும் இணைந்ததொரு சொல். **அச்சொல் அ, உ, ம் என்ற மூன்றெழுத்துச் சொல்லல்ல** என்பது தெரியவருகிறது. ஓம் என்பது சிவபெருமானையும், நந்தியம் பெருமானையும், ஓம் (எ) ஓங்காரம் அரிவாட்பல் (எ) சிவபெருமானால் பலவானதாகியவை என்பதையும் குறிக்கும் என்பதும் தெரியவருகின்றன.



பிற்காலத்தில் இமயமலைகளில் ஒன்றான ஓம் பர்வதம் (எ) மலையின் மீது படர்ந்துள்ள பனிப்படலத்தின் வடிவம் **'ஓம்'** எனக் கருதப்பெற்றுள்ளது. 8ஆம் நூற்றாண்டில் அதன் வடிவம் **எண் ஒன்பதானதையும்** திருச்சி, திருவெள்ளறை மார்ப்பிடுகு பெருங்கிணற்றில் காணலாம்.

# திரு அநேகன்



M-1108a



H-1032a

எம்-1108எ, எச்- 1032எ ஆகிய அடையாள எண்களுடைய முத்திரைகளில் நான்கு எழுத்துக்களும், **அன்** என்பதைக் குறிக்கும் தீக்குச்சி வடிவக் கோட்டுருவமும், அதனுடன் **நே** என்ற எழுத்து இணைந்துள்ளன.

எம்-1108எ, (எ) முத்திரையில் எருது (எ) காளையின் உருவமும், எச்- 1032எ (எ) முத்திரையில் ஒத்தக்கொம்பன் (எ) ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இவ்விரு முத்திரைகள் இடமிருந்து வலமாகப் பா + அன் + நே + க + ன். **பா அநேகன்** எனப் படிக்கப் பெறுகிறது.

(பா - பாட்டு, பாம்பு, பரவுதல், தூய்மை, பரப்பு, காப்பு, அழகு. (அன் - அவன். நேக - மிகப் பொடியான. நேகன் - மிகப் பொடியானவன். அநேகன் - ஒன்றாக நின்று பலவானவன்).

**தொல்வாச்சியம் : தூய்மையாகவும் ஒன்றாகவும் நின்று பலவானவன்.**

அந்தத் தூய்மையாகவும் ஒன்றாகவும் நின்று பலவானவன் என்பதை திரு என்ற சொல்லோடு எம்-1725 என்ற அடையாள எண்ணுடைய முத்திரைக் கூறுவதையும் காணலாம்.


M-1725a

எம்-1725எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஐந்து எழுத்துக்களும், **அன்** என்பதைக் குறிக்கும் தீக்குச்சி வடிவக் கோட்டுருவமும் அதனுடன் **நே** என்ற எழுத்து இணைந்துள்ளன. ஒத்தக்கொம்பன் (எ) ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாகச் சீ + பா + அன் + நே + க + ன். **சீ பா அநேகன்** எனப் படிக்கப் பெறுகிறது.

(சீ- திரு. பா - பாட்டு, பாம்பு, பரவுதல், தூய்மை, பரப்பு, காப்பு, அழகு. (அன் -அவன். நேக - மிகப் பொடியான. நேகன் - மிகப் பொடியானவன். அநேகன் - ஒன்றாக நின்று பலவானவன்).

**தொல்வாச்சியம் : திருத்தூய்மையாகவும் ஒன்றாகவும் நின்று பலவானவன்.**

அன் + நே ஆகிய இரண்டு சொற்கள் இணைந்து அநே எனவும், அநே + கன் அநேகன் எனும் சொல்லாவதற்கோர் ஆதாராச் சான்றாக, தொல்காப்பியம் எழுத்ததிகாரம் தொகைமரபு நூற்பா (150), **லகர னகர ஈற்றின் முன்னர்த் தகர நகரங்கள் திரிதல்** என்பதையும், நன்னூல் மெய்யீற்றுப் புணரியல் குறிலணை வில்லா ணகர னகரங்களுக்குச் சிறப்பு விதி **குறிலணை வில்லா ணனாக்கள் வந்த நகரம் திரிந்துழி நண்ணும் கேடே** (210) என்பதையும் கருதுகோள்களாகச் சுட்டிக்காட்டலாம்.

சிந்து சமவெளி நாகரிகச் சொற்களில் அரிவாட்பல் எனப் பொருள் பெறும் **பன்** என்ற சொல் அதிக அளவில் காணப்படுவதால் சிவபெருமான் திருத்தூய்மையாகவும் ஒன்றாகவும் நின்று பலவானவன் என்பதைக் கூறுவதாகக் குறிப்பிடலாம்.

சிவபெருமானை, மாணிக்கவாசகர் **ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க** எனக் திருவாசகம் (1.5) கூறுவதை அதற்கோர் உதாரணமாகவும் எடுத்துக்காட்டலாம்.

# ஊஞ்சல் பாட்டு


H-2189A H-2189B

எச்-2189எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் 13 எழுத்துக்கள் பொறிக்கப்பெற்றுள்ளன. **அன்** என்பதைக் குறிக்கும் தீக்குச்சி வடிவக் கோட்டுருவமும் அதனுடன் **'னே'** என்ற எழுத்து இணைந்தும், 'ஞ், ச, ல், ஆ' ஆகிய நான்கு எழுத்துக்கள் இணைந்துள்ளன. இந்த வில்லை இடமிருந்து வலமாகச் சீ + பு + (அன் + னே) + சோ இட்ட உ (ஞ் +ச + ல் +ஆ) + பா. **திரு புவனேசோ இட்ட ஊஞ்சல் ஆ பா** எனப் படிக்கப்பெறுகிறது.

(சீ - திரு. புவனே சோ - புவனேசுவரி. இட்ட - இட்ட - உஞ்சல் - ஊஞ்சல் பாட்டு. ஆ- நினைவுக்குறிப்பு. பா - பாட்டு / அழகு / தூய்மை)

**தொல்வாச்சியம் : திரு புவனேசுவரி இட்ட ஊஞ்சல் பாட்டு. பாட்டின் நினைவுக் குறிப்பு அழகு அல்லது திரு புவனேசுவரி இட்ட ஊஞ்சல் பாட்டு பாட்டின் நினைவுக் குறிப்பு தூய்மை.**


H-2193A H-2193B

எச்-2193எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் 13 எழுத்துக்கள் பொறிக்கப்பெற்றுள்ளன. **அன்** என்பதைக் குறிக்கும் தீக்குச்சி வடிவக் கோட்டுருவமும் அதனுடன் **னே** என்ற எழுத்தும், 'உ, ஞ், ச' ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்துமுள்ளன.

இந்த வில்லை இடமிருந்து வலமாகச் சீ + பு + (அன் + னே) + சி இட்ட (உ + ஞ் +ச) + ல் + ஆ + பா. **திரு புவனேசி இட்ட ஊஞ்சல் ஆ பா** எனப் படிக்கப்பெறுகிறது. (சீ - திரு. புவனேசி - புவனேசுவரன் இட்ட - இட்ட - உஞ்சல் - ஊஞ்சல் பாட்டு ஆ- நினைவுக்குறிப்பு பா - பாட்டு / அழகு / தூய்மை).

**தொல்வாச்சியம் : திரு புவனேசுவரன் இட்ட ஊஞ்சல் பாட்டின் நினைவுக் குறிப்பு அழகு அல்லது திரு புவனேசுவரன் இட்ட ஊஞ்சல் பாட்டின் நினைவுக் குறிப்பு தூய்மை.**

பரமசிவனைப் புவனம் எனும் இவ்வுலகத்தின் நாயகன் (அ) ஈசுவரன் என்றும் அவனே புவனேசுவரன் என்றும், பரமேசுரியைப் புவனம் எனும் இவ்வுலகத்தின் நாயகி (அ) ஈசுவரி என்றும் அவளே புவனேசுவரி என்றும் சிற்றிலக்கிய நூல்களில் கூறப்படும் உஞ்சல்பாட்டைப் பற்றிய சிந்து சமவெளி நகர நாகரிக மக்கள் பதிவிட்டுள்ளனர்.

பரமசிவத்தைக் **காரணம்** எனவும், பராசக்தியைக் **காரியம்** எனவும் இரண்டும் இணைந்த அருரூபத்தைக் **காரணகாரியம்**, பிரகாசவிமர்சன உருபியாக அதாவது அர்த்தநாரியாகப் பிற்காலத்தில் அடையாளப்பட்டுள்ளனர் என்பது தெரியவருகிறது.

தமிழ் நூல்களில் ஒன்றான சிற்றிலக்கியமும் ஒன்றும், அதில் ஊஞ்சல் பாட்டும் உள்ளடங்கும் என்றும், ஊஞ்சல் என்ற சொல் பழமையில் உஞ்சல் என்ற சொல்லால் அடையாளப்படுத்தப் பெற்றதாகவும் கூறுவர்.

அவ்விரு வில்லைகளிலுள்ள உஞ்சல் என்ற சொல் 7,500 ஆண்டுகளுக்கும் முற்பட்டதென்பதும் பிற்காலத்தில் ஊஞ்சல் என மறுவியுள்ளதாகத் தெரியவருகிறது.

புவனேசுவரி, புவனேசுரன் ஆகியயோரின் உஞ்சல் பாடல்கள் தமிழ்ச் சங்கக்கால இலக்கிய நூல்களில் ஒன்றான சிற்றிலக்கிய உஞ்சல் பாடல்கள் பற்றிய செய்தி சிந்து சமவெளி நாகரிகப் பதிவுகளின் வாயிலாகத் தெரியவருகின்றன எனலாம்.

சிந்து சமவெளி நகர நாகரிகப் பகுதிகளில் **காளிபங்கன்** (உமை (எ) காளியை இடமொரு பாகமாகக் கொண்ட பங்கன்) என்றதொரு நகரமுண்டு. அந்நகரத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகளின் போது அதிக அளவிலான இலிங்கத்தின் உருவங்கள் வெளிக்கொணரப்பெற்றுள்ளன. பங்கன், பங்கனாழி போன்ற தமிழ்ச் சொற்கள் சிந்து சமவெளி நகர நாகரிகப் பானை ஓடுகளிலும், முத்திரைகளிலும் காணமுடிகின்றன. அவற்றைப் **பங்கன் நாழி சி** என்ற தலைப்பில் காணலாம்.

# பங்கன் நாழி சி


M-1601A

எம்-1601எ என்ற அடையாள எண்ணுடைய பானை ஓட்டில் நான்கு எழுத்துக்கள் கீறப்பெற்றுள்ளன. இந்தப் பானை ஓட்டை இடமிருந்து வலமாகப் ப + ங்க + னா +ழி. **பங்கன் ஆழி** எனப் படிக்கப் பெறுகிறது.

(பங்கன் - பாகமுடையவன் / இறைவன் / ஒன்றும் கெடாதவன். ஆழி (எ) ஆளி - ஆள்வோன் / தூய்மையான கருத்து / வைப்பகம்)

**தொல்வாச்சியம் : பாகமுடையவன் ஆள்வோன்.**


H-46a

எச்- 46எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஐந்து எழுத்துக்களும், முத்திரையில் ஒத்தக்கொம்பன் (எ) ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இந்த முத்திரையை இடமிருந்து வலமாகப் ப + ங்க + நாழி + சி. **பங்கன் நாழி சி** எனப் படிக்கப்பெறுகிறது.

(பங்கன் - பாகமுடையவன் / இறைவன் / ஒன்றும் கெடாதவன். நாழி - ஒரு கால அளவு / தூய்மையான கருத்து / வைப்பகம். சி - சிவன் / சிரஞ்சீவி)

**தொல்வாச்சியம் : பாகமுடையவன் காலஅளவு சிரஞ்சீவி (எ) சிவன்.**


M-380a

எம்-1601எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பானை ஓட்டில் எட்டு எழுத்துக்கள் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து அன் + ப + னோ + ட + ப + ங்க + னா +ழி. **அன்பனோட பங்கன் ஆழி** எனப் படிக்கப் பெறுகிறது.

(அன்பனோட - பக்தனோட. பங்கன் - பாகமுடையவன் / இறைவன் / ஒன்றும் கெடாதவன். ஆழி (எ) ஆளி - ஆள்வோன் / தூய்மையான கருத்து / வைப்பகம்)

**தொல்வாச்சியம் : பக்தனோட பாகமுடையவன் என்பது தூய்மையான கருத்து.**

குறிப்பு: இறைவன் உமை (எ) காளியோடு மட்டுமின்றி சிவபக்தனின் பாகமாகவும் உள்ளான் என்பது இந்த முததிரையின் சிறப்பு. ங்க -


H-248A&B

எச்-248எ,பி என்ற அடையாள எண்ணுடைய வட்ட வடிவிலான வில்லையின் ‘எ’ புறத்தில் எட்டு எழுத்துக்களும், ‘பி’ புறத்தில் இரண்டு எழுத்துக்களும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாகச் சீ + பா + ங்கு + (நா +ழ் )+ ச் + சா + யா + ப + ன். சீ பாங்கு நாழ்ச்சாயாபன். **சீ பாங்கு நாழ்ச் சாயாபன்** எனப் படிக்கப் பெறுகிறது.

(சீ - திரு. பாங்கு - அழகு / பக்கம் / இடம் / நன்மை / தகுதி / நலம் / துணையானவர். நாழ் - நாள் / திறமை / செருக்கு (மகிழ்ச்சி) / குற்றம் / இல்லாதது சொல்லுதல். சாயாபன்(தி) - சாயா என்பவளின் அன்பன் (எ) கணவனான ஆதித்தன் (எ) சூரியன்.

**தொல்சாச்சியம் : திரு இடத்தின் (எ) திருவிடத்தின் திறமை சாயாபன் (எ) ஆதித்தன்.**

ஆதித்தன் (எ) சூரியன் அறியாமை (எ) இருளை அகற்றி ஞானத்தை அருள்பவன் என எப்பொருட்கும் இறைவனோடு ஒப்பிட்டு அவனை வணங்கி வழிபடுபர். அவன், மனவுறுதியையும், பெயரையும், புகழையும், அதிகாரத்தையும் அளிகும் சர்வவல்லமைப் படைத்தவன் என்பர். அவனுக்குச் சாயாபுருடன் - நிழல் வடிவாகத் தோன்றும் சாயா என்பவளின் தலைவன் (அ) கணவன் என்ற பெயருண்டு.

# சூலாயுதன் பதினாறு அரிவாட்பல்


H-2197A


H-2197B

எச்- 2197எ,பி என்ற அடையாள எண்ணுடைய வில்லையில் ஆறு எழுத்துக்களும், அன் என்பதைக் குறிக்கும் தீக்குச்சி வடிவ மனிதக் குறியீடும், சண்டேசன் திருவுருவமும், சூலக் குறியீடும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இந்த வில்லை இடமிருந்து வலமாகச் சீ + அன் + பு + சண்டேசன் + **சூலம் +(சூலாயுதன்) சோ + ட + ப + ன்.** சீ அன்பு சண்டேசன் சூலம் சோட பன் எனப் படிக்கப்பெறுகிறது. (சீ - திரு. அன்பு - தொடர்புடையோர் மாட்டு உண்டாகும் பற்று. சண்டேசன் - சண்டேசன். சூலம் - சூலாயுதன். சோட - பதினாறு. பன் - அரிவாட்பல்.) இந்த வில்லையில் இரண்டு வாக்கியங்கள் உள்ளன.

**தொல்வாக்கியங்கள் : திரு அன்பு சண்டேசன். சூலாயுதன் பதினாறு அரிவாட்பல்.**

பரசு எனும் மழுவை ஏந்திய பரசுபதியாகிய சண்டேசன் சிவபெருமானின் 16 வெளிப்பாடுகளில் ஒன்று என்கிறது மயமதம் (சூ.36. 43பி - 46எ). **ஒரு மழு எனும் கோடாரியை வலது புறத்தோளில் சாத்தியும், தனது முன்கரங்களால் மார்பில் அணைத்தவாரும் காட்சியளிக்கும் திருமேனியைக் கொண்டவன் சண்டேசன்** எனவும் மயமதம் (சூ.36. 92எ - 93எ) கூறுகிறது. சிவபெருமான் தன்னைத் தானாகவே **சுகாசனன், விவாகன், உமாகண்டன், விருக்கருத்திரன், புராரி, நிருத்தன், சந்திரசேகரன், அர்த்தநாரீசுவரன், விசனவர்த்தன், சண்டேசன், காமாரி, காலநாசன், தெட்சணாமூர்த்தி, பிச்சாடன், முகலிங்கன், இலிங்கசம்பூதன் ஆகிய பதினாறு திருவுருவம் ஏற்றதாக மயமதம் சூ.36.43பி-46எ கூறுகிறது.** சிவபெருமானின் படைகளை, **மருமலர்க் கொன்றையார்க்கு வாகனமிடபமாகும், பரசோடுகூடிய சூலம் பினாகவில் படைகளாமே** - எனச் சூடாமணி நிகண்டு (12.140) கூறுகிறது என முன் கண்டது நினைவுக் கொள்ளத்தக்கது.

**குறிப்பு: இந்த முத்திரையில் காணப்படும் சூலத்தின் வடிவம் மிகப்பழமையானது என்பதொரு, சிறப்புச் செய்தியாகும்.**

# வேலாயுதன்



K-50a



B-9a

கே-50எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் இரண்டு எழுத்துக்களும், உமையம்மமையின் வெளிப்பாடுகளில் ஒன்றானதுமான ஒரு புலியை ஊர்தியாகக் கொண்டவளுமான காளி (எ) துர்க்கையின் உருவமும் உள்ளன.

பி - 9எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் இரண்டு எழுத்துக்களும், எருமைக் கிடாவின் உருவமும் உள்ளன.

செந்தமிழ் இலக்கண முறைப்படி இடையின **ரகரம்** மொழிக்கு முதலாக வராது என்பதனால் **அ, இ, உ** ஆகிய மூன்று சுட்டெழுத்துக்களில் ஒன்றான **அ** எனும் உயிரெழுத்துடன் இவ்விரு முத்திரைகளிலுள்ள இரண்டு எழுத்துக்களை இடமிருந்து வலமாக **அரண்** எனப் படிக்கப்பெறுகின்றன.

(அரண் - பாதுகாப்பு, கோட்டை, மதில், அழகு, வேலாயுதம்).

**தொல்வாச்சியம் : வேலாயுதன் (எ) முருகப் பெருமான்.**

குறிப்பு : வேலாயுதன் எனும் முருகப்பெருமானுக்கு அழகன், பாதுகாவலன் போன்ற பெயர்கள் உண்டென்பர்.


H-335a


H-337a

எச்- 335எ என்ற அடையாள எண்ணுடைய முயல் வடிவிலான வில்லையில் இரண்டு எழுத்துக்களும், எச்- 337எ என்ற அடையாள எண்ணுடைய வேல் வடிவிலான வில்லையில் இரண்டு எழுத்துக்களும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இவ்விரு வில்லைகளிலுள்ள இரண்டு எழுத்துக்களும் செந்தமிழ் இலக்கண முறைப்படி இடையின **ரகரம்** மொழிக்கு முதலாக வராது என்பதனால் **அ, இ, உ** ஆகிய மூன்று சுட்டெழுத்துக்களில் ஒன்றான **அ** எனும் உயிரெழுத்துடன் இவ்விரு முத்திரைகளிலுள்ள இரண்டு எழுத்துக்கள் இடமிருந்து வலமாக **அரண்** எனப்படிக்கப் பெறுகின்றன.

(அரண் - பாதுகாப்பு, கோட்டை, மதில், அழகு, வேலாயுதம்)

**தொல்வாச்சியம் : வேலாயுதம்(ன்)**

முயல் போர்க் குணத்தைக் குறிக்குமென்பர். முருகப்பெருமான் போர்க் குணம் கொண்டவன் என்றும் வீரசேனாதிபதி என்றும் கூறுவர்.

வேல் வடித்தை அறிவுடன் ஒப்பிட்டும், அறிவானது அகலமாகவும், கூர்மையயாகவும் இருக்கவேண்டுமென்பர். அகலமாகவும், கூர்மையானதாகவும் உள்ள அறிவை ஞானத்துடன் ஒப்பிடுவர். ஓம் மந்திரத்தின் உட்பொருளைத் தன் தந்தையாகிய ஈசனுக்குப் போதித்தவன் என்பதனால் முருகபெருமானுக்கு **ஞானி** என்றபெயருமுண்டென்பர்.

அறிவானது அகலமாகவும், கூர்மையாகவும் இருக்கவேண்டும் என்பதை வேல் சின்னத்துடன் ஒப்பிட்டு அது ஞானத்தின் அடையாளச் சின்னம் என்பர். அதனால் முருகப்பெருமான் தன் கரத்தில் ஏந்தியுள்ள வேலாயுதத்தை **ஞானவேல்** என்பர். உமையம்மை தன் மைந்தனாகிய முருகப்பெருமானுக்கு அளித்த காரணத்தால் அதனை வீரவேல் என்பர். **வேலிருக்கப் பயம் ஏன்? ஞான வேல்! வீரவேல்! வெற்றிவேல்!** என முருகபக்தர்கள் முழங்குவர். எனவே இவ்விரு வில்லைகளிலுள்ள **அரண்** என்ற சொல் பாதுகாவலன் எனவும், வேலாயுதன் எனவும் அன்புடன் அழைக்கப்பெறும் முருகப்பெருமானைக் குறிப்பிடுவது உறுதியாகிறது.



M-283a

எம் - 283எ எனும் அடையாள எண்ணுடைய முத்திரையில் மூன்று எழுத்துக்களும் ஒரு யானையின் உருவமும் பொறிக்கப்பெற்றுள்ளன. இந்த முத்திரை இடமிருந்து வலமாக **(அ) ர+ ணா + ண். அரணாண்.** அரண் ஆண் எனப் படிக்கப் பெறுகின்றன.

(அரண் - பாதுகாவலன், வேலாயுதன். ஆண் - ஆண்பால் பொது, **தலைமை**, வீரன், வீரியம்.)

**தொல்வாச்சியம : வேலாயுதன் தலைமை.**

குறிப்பு: எட்டுத் திசைகளை எட்டு யானைகள் பாதுகாப்பதாகவும் ஆண்யானைகள் **ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பந்தம், சார்வபமம், சுப்ரதீகம்** எனவும் பெண் யானைகள் **சுபபிரமை, கபிலை, பிங்கலை, அனுமை, தாமிரபரணி, சுபதந்தை, அங்கலை, அஞ்சனாவதி** என்பர்.



M-103a

எம்-103எ எனும் அடையாள எண்ணுடைய முத்திரையில் மூன்று எழுத்துக்களும் ஆழி என்பதைக் குறிக்குமொரு குறியீடும், ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானம் (பரத்தை அறிந்தவன்) குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக (அ) ர+ ணி + ட் + ட + ஆழி.. அரணிட்ட ஆழி. **அரண் இட்ட ஆழி** எனப் படிக்கப்பெறுகிறது.

(அரண் - பாதுகாவலன், வேலாயுதன். இட்ட- இட்ட. ஆழி - வட்டம், சக்கரம், ஆனைச் சக்கரம், கட்டளை, அரசானை.)

**தொல்வாச்சியம் : வேலாயுதனிட்ட வட்டம்.**

குறிப்பு : இவ்விடத்து வட்டம் என்ற சொல் மக்கள் கூட்டத்தையும், ஒரு குறிப்பிட்ட எல்லைக்கு உட்பட்ட நிலப்பகுதியையும் குறிப்பிடுவதுமுண்டு.


M-1844a

எம் - 1844எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஐந்து எழுத்துக்களும், ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் (பரத்தை அறிந்தவன்) குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, (அ) ர+ ணி + ட் + ட + ஆ. அரணிட்ட ஆ. **அரண் இட்ட ஆ** எனப் படிக்கப் பெறுகிறது.

(அரண் - பாதுகாவலன் / வேலாயுதன். இட்ட- இட்ட. ஆ - ஆவது / ஆகுகை / சிற்றுயிர்.)

**தொல்வாச்சியம் : பாதுகாவலன் (எ) வேலாயுதன் இட்டதாகுகை.**


H-82a

எச்-82எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பத்து எழுத்துக்களும் எருமை மாடு உருவமும் ஓர் உணவுத் தொட்டியும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, **அ + ர + ண + னி + ட் + ட + சா + (உ + யா) (ட் + ப).** அரணனிட்ட சா உயாட்ப. **அரண் இட்ட சா உயாட்ப** எனப் படிக்கப் பெறுகிறது.

(அரண் - பாதுகாவல். வேலாயுதம். இட்ட- இட்ட. சா - சாதல் (இறத்தல்). உயாட்ப - உயர்நிலையடைதல்.)

**தொல்வாச்சியம் : பாதுகாவலன் இட்ட இறத்தல் உயர்நிலையடைதல்.**

குறிப்பு: இந்த முத்திரை முருகப் பெருமான் தன் வேலாயுதத்தால் சூரபத்மனை வதம் செய்த செயல் அவனை உயர்நிலை அடையசெய்வதற்கே எனக் கருதலாம்.


M-1838a

எம்-1838எ எனும் அடையாள எண்ணுடைய முத்திரையில் நான்கு எழுத்துக்களும், ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் (பரத்தை அறிந்தவன்) குறியீடும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக (அ) ர+ ங் + ணா + ழி.. அரங்கணாழி. **அரங்கண் (ன்) ஆழி** எனப் படிக்கப்பெறுகின்றன.

(அரங்கன் - திருமால், அவைத்தலைவன். பாதுகாவலன், வேலாயுதன். ஆழி - வட்டம், சக்கரம், ஆணைச் சக்கரம், கட்டளை, அரசாணை.)

**தொல்வாச்சியம் : திருமால் சக்கரம் (அ) அவைத்தலைவன் கட்டளை.**


M-1831a

எம்-1831எ எனும் அடையாள எண்ணுடைய முத்திரையில் இரண்டு எழுத்துக்களும், குக்குடம் (எ) வேலின் உருவமும், ஒத்தக் கொம்பன் எனும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் (பரத்தை அறிந்தவன்) குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக (அ) ர+ ண்+ குக்குடம். **அரண் குக்குடம்** எனப் படிக்கப் பெறுகிறது

( (அரண் - பாதுகாவலன், வேலாயுதன். திருமால், அவைத்தலைவன். பாதுகாவலன், வேலாயுதன். குக்குடம் - சேவல்)

**தொல்வாச்சியம் : சேவல் கொடியோன்.**

குறிப்பு: வேலாயுதன் எனும் முருகப்பெருமானுக்கு மயில் வாகனன், சேவல் கொடியோன் என்ற சிறப்புப் பெயர்களுண்டு.


M-1795a

எம்-1795எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் மூன்று எழுத்துக்களும், ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் (பரத்தை அறிந்தவன்) குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, (அ) ரு+ ளா + ள். **அருளாள்.** அருள் ஆள் எனப் படிக்கப்பெறுகிறது.

(அருள் - சிவசக்தி, கருணை, நல்வினை எனவும் ஆள் - திறமையுடையவன்)

**தொல்வாச்சியம் : சிவசக்தியின் திறமை உடையவன்.**

(குறிப்பு: தொல்காப்பியம் சிறப்புப்பாயிரம் வரிகளில் **செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தோடு முந்து நூல் கண்டு முறைப்பட எண்ணி** – (அந்த ஆராய்ச்சியிற் குறைபாடுடையவற்றைச்) செந்தமிழினது இயல்பு பொருந்தின் செந்தமிழ் நிலத்தின் வலத்தொடு முதற்நூற்களிற் சொன்னவற்றைக் கண்டு, அவ்விலக்கணம் முறைப்பட ஆராய்ந்து..... எனக் கூறுகிறது.

தொல்காப்பியர் காலத்துக்கு முன் வடவேங்கடம் (எ) இமயம் முதல் தென்குமரி வரை வாழ்ந்த மக்கள் ஒரே மொழியைப் பேசி வந்துள்ளனர் எனலாம். ஆனாலும் சிந்து சமவெளியின் எழுத்து முறைக்கும் தென்நிலத்தின் எழுத்து முறைக்கும் சில வேறுபாடுகள் இருந்துள்ளதென்பது தெரியவருகிறது. அவ்வேறுபாடுகளை முறைப்பட ஆராய்ந்து அவற்றைத் தொல்காப்பியர் முறைப்படுத்தியுள்ளார் என்பதும், அவர் சிந்து சமவெளி நாகரிகக் காலத்தில் வாழ்ந்தவர் என்பதும் தெரியவருகிறது.

அவ்வேறுபாடுகளில் குறிப்பாகச் சிந்து சமவெளி நகர நாகரிகத்தில் **யகர, ரகர, லகர** ஆகியவை, மொழிக்கு (சொற்களுக்கு) முதலாக வந்துள்ளன. (எ.கா. (அ)ரண், (அ)ரன், யா) அவை மொழிக்கு (சொற்களுக்கு) முதலாக வராது எனத் தொல்காப்பியர் **அ,இ,உ** ஆகிய மூன்று சுட்டெழுத்துக்களில் ஒன்றுடன் வருமென முறைப்படுத்தியுள்ளார் என்பதும், அதையே நன்னூலாசிரியரும் குறிப்பிட்டுள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கது. ஆனால் சமசுகிருதம் மொழியில் அம்மூன்றும் மொழிக்கு (சொற்களுக்கு) முதலாக வருகிறது. (எ.கா. ருக் வேதம், ருத்திரன்.)

சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் செந்தமிழ் மொழியின் உயிரெழுத்துக்களையும், மெய்யெழுத்துக்களையும் சமசுகிருதம் மொழி அப்படியே தமதாக்கிக் கொண்டுள்ளதும் தெரியவருகிறது.

# துளசி


H-53a


M-1359a

எச்-53எ, எம்-1369எ ஆகிய அடையாள எண்களுடைய இரண்டு முத்திரைகளில் மூன்று மூன்று எழுத்துக்களும், எச்-53எ என்ற முத்திரையில் மட்டும் ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் (பரத்தை அறிந்தவன்) குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இவ்விரு முத்திரைகளிலுள்ள மூன்று எழுத்துக்கள் இடமிருந்து வலமாக, வ + ன +ம், **வனம்** எனவும் வா + ன + ம், **வானம்** எனவும் இரண்டு சொற்களாகப் படிக்கலாம்.

(வனம் - காடு / ஊர் சூழ்ந்த சோலை / சுடுகாடு / உறைவிடம் / துளசி / அழகு. வானம் - விண் / உயிரோடு இருக்கை / மலை / மேகம்.)

**தொல்வாச்சியம் : துளசி**

இந்தியத் திருநாட்டில் அதிக அளவில் வளரும் தாவர வகையில் துளசி செடி மிக முக்கியமானது. பிராணவாயுவை வெளியிடும் இச்செடிப் புனிதத்தன்மைக்கும், தூய்மைக்கும் ஓர் உதாரணமாகும்.

குழிமிட்டான், திருத்துழாய், துளபம் (எ) துளசிச்செடி அனைத்தும் இறைசக்திகளின் உறைவிடம் என்பதொரு நம்பிக்கை. இச்செடி உடல், மனம் நோய்களைக் குணப்படுத்தும் சக்தியுடையதால் குடியிருப்பு வீடுகளில் வளர்த்து வணங்கி வழிபடுவது பன்னெடுங்காலமாக ஒரு மரபாகத் தொடர்கிறது. அம்மரபு வைணவத்திருத்தலங்களில் துளசி நீரைப் புனித நீராக வழங்குவது குறிப்பிடத்தக்கது. எனவே இவ்விரு முத்திரைகள் துளசி செடியின் மகத்துவத்தைக் குறிப்பிடுவதாகக் கருதலாம். இக்கருத்தைச் சில முத்திரைகள் உறுதி செய்கின்றன.


M-860a

எம்-860எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் நான்கு எழுத்துக்களும், ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் (பரத்தை அறிந்தவன்) குறியீடும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இம்முத்திரையிலுள்ள நான்கு எழுத்துக்கள் இடமிருந்து வலமாக, வ + ன + ம் + சோ. **வனம் சோ** எனப் படிக்கப்பெறுகிறது.

வனம் - காடு / ஊர் சூழ்ந்த சோலை / சுடுகாடு / உறைவிடம் / துளசி / அழகு. சோ- உமை.)

**தொல்வாச்சியம் : துளசி உமை எனும் பார்வதி தேவி.** .


M-135a

எம்-135எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் நான்கு எழுத்துக்களும், ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் (பரத்தை அறிந்தவன்) குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இம்முத்திரையிலுள்ள நான்கு எழுத்துக்கள் இடமிருந்து வலமாக, வ + ன + ம் +உ **வனம் உ** எனப் படிக்கப்பெறுகிறது.

(வனம் - காடு / ஊர் சூழ்ந்த சோலை / சுடுகாடு / உறைவிடம் / துளசி / அழகு. உ- உமையம்மை, சிவபெருமான், இரண்டு.)

**தொல்வாச்சியம் : துளசி சிவபெருமான்.**

குறிப்பு : துளசிச் செடியில் அனைத்து இறைசக்திகளின் உறைவிடம் என்பது நம்பிக்கை என முன் கண்டதை, இவ்விரு முத்திரைகள் **துளசி செடி சிவபெருமான், துளசி செடி உமையம்மை எனும் பார்வதி தேவி** என உறுதிசெய்கின்றன.


M-757a

எம்-755எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் எட்டு நான்கு எழுத்துக்களும், ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் (பரத்தை அறிந்தவன்) குறியீடும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இம்முத்திரையிலுள்ள எழுத்துக்களை இடமிருந்து வலமாக, வ + ன + ம் + சோ + சி. + (உ + ள் + ளு). **வனம் சோ சி உள்ளு** எனப் படிக்கப்பெறுகிறது.

(வனம் - காடு, ஊர் சூழ்ந்த சோலை, சுடுகாடு, உறைவிடம், துளசி அழகு. சோசி - அம்மையப்பன் (எ) உமையம்மையும் சிவபெருமானும். உள்ளு - உள்ளான் பறவை.

**தொல்வாச்சியம் : துளசி அம்மையப்பன் (எ) உமையம்மையும் சிவபெருமானும் உள்ளான் பறவை (உள்ளாகப் பயிலும் பறவை (எ) உற்றவர்.** .


H-456a

எச் - 56எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஒன்பது எழுத்துக்களும், ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் (பரத்தை அறிந்தவன்) குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இம்முத்திரையிலுள்ள எழுத்துக்கள் இடமிருந்து வலமாக, வ + ன + ம் + (இ)ட் + ட + ஆ + (உ+ள்+ளு). **வனம் இட்ட ஆ உள்ளு** எனப் படிக்கப்பெறுகிறது.

(வனம் - உறைவிடம், துளசி. இட்ட- இட்ட. ஆ. - சிற்றுயிர். உள்ளு - உள்ளான் பறவை.)

**தொல்வாச்சியம் : துளசி இட்ட சிற்றுயிர் உள்ளான் பறவை (உள்ளாகப் பயிலும் பறவை).**


H-388a

எச்-388எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பத்து எழுத்துக்களும், ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் (பரத்தை அறிந்தவன்) குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இம்முத்திரையிலுள்ள எழுத்துக்கள் இடமிருந்து வலமாக, வ + ன + மா + (ட் + ச) + (ரு + ள்) + **இட் + ட + ஆ. வனமாட்சருள் இட்ட ஆ. வனம் மாட்ச(சி)** அருள் இட்ட ஆ எனப் படிக்கப்பெறுகின்றன.

(வனம் - உறைவிடம், துளசி அழகு. மாட்ச(சி) - பெருமை. அருள் - சிவசக்தி, பொழிவு. இட்ட - இட்ட. ஆ. சிற்றுயிர்.

**தொல்வாச்சியம் : துளசியின் பெருமை சிவசக்தி இட்ட சிற்றுயிர்.**


M-631a

எம்-631எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஆறு எழுத்துக்களும், சோகம் குறியீடும், ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் (பரத்தை அறிந்தவன்) குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இம்முத்திரையிலுள்ள எழுத்துக்கள் இடமிருந்து வலமாக, வ + ன + ம் + சோ + ச + ன + சோகம்) . **வனம் சோ சன சோகம்** எனப் படிக்கப்பெறுகின்றன.

(வனம் - உறைவிடம், துளசி அழகு. சோ - உமையம்மை. சன - மக்கட்கூட்டம். சோகம் - பரமாத்மாவும் சீவாத்மாவும் ஒன்றெனப் பாவிக்கை.)

**தொல்வாச்சியம் : துளசி உமையம்மையின் மக்கட் கூட்டம், பரமாத்மாவும் சீவாத்மாவும் ஒன்றெனப் பாவிப்பவர்.**


M-781a

எம்-7810எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஆறு எழுத்துக்களும், ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் (பரத்தை அறிந்தவன்) குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இம்முத்திரையிலுள்ள எழுத்துக்கள் இடமிருந்து வலமாக, வ + ன + மி + ட் + ட + ஆ. **வனமிட்ட ஆ. வனம் இட்ட ஆ** எனப் படிக்கப்பெறுகின்றன.

(வனம் -உறைவிடம், துளசி. இட்ட- இட்ட. ஆ- ஆகுக, ஆகுகை, சிற்றுயிர் )

**தொல்வாச்சியம் : துளசி இட்டதாகுகை.**

இந்த முத்திரை துளசிச் செடியின் பெருமையையும், அதன் மருத்துவக் குணங்களைச் சிறப்பித்துக் கூறுவதாகக் கருதலாம்.


M-670a

எம்-670எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் பா என்ற எழுத்துடன் கூடிய பிச்சாடன் திருவுருவமும், ஐந்து எழுத்துக்களும், ஒத்தக்கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் (பரத்தை அறிந்தவன்) குறியீடும் பொறிக்கப் பெற்றுள்ளன.

இம்முத்திரையிலுள்ள எழுத்துக்கள் இடமிருந்து வலமாக, பா + பிச்சாடன் + உ + ட + வ + ன +ம். **பா பிச்சாடன் உட(ல்) வனம்** எனப் படிக்கப்பெறுகின்றன.

(பா- தூய்மையான. பிச்சாடன் - பிச்சாடன். உட(ல்) உடம்பு. வனம் -உறைவிடம், துளசி )

**தொல்வாச்சியம் : தூய்மையான பிச்சாடன் உறைவிடம் துளசி.**

குறிப்பு: வைணவத்தில் தூய்மையான மகாவிட்டுணுவின் உறைவிடம் துளசி என்பர்.



M-303a

எம்-303எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் ஐந்து எழுத்துக்களும், ஆழிக் குறியீடும், புருடாமிருகத்தின் உருவமும், பொறிக்கப்பெற்றுள்ளன.

இம்முத்திரையிலுள்ள எழுத்துக்கள் இடமிருந்து வலமாக, வ + ன + ம் + (இ)ட் +ட + டை + ஆழி . **வனம் (இ)ட்டடை ஆழி** எனப் படிக்கப்பெறுகின்றன.

(வனம் - உறைவிடம், துளசி அழகு. இட்டடை (இட்டிடை) - இலேசு. ஆழி- வட்டம்.)

**தொல்வாச்சியம் : துளசி இசோன வட்டம்.**

குறிப்பு: புருடாமிருகத்தின் பக்தியின் சிறப்பை உணர்த்தும் பொருட்டு அதன் முகத்தைக் கீர்த்தி முகம் என்றும் அதனை வணங்கி வழிபட்ட பின்னர் பக்தர்கள் தம்மை வழிபடுவர் எனச் சிவபெருமான் அளித்த வரம் பற்றிப் புருடாமிருகம் என்ற தலைப்பில் முன் கண்டது நினைவுக் கொள்ளத்தக்கது.

எனவே, சிந்து சமவெளி நகர நாகரிக மக்கள் துளசிச் செடியினை அம்மையப்பராகவும் (அ) உமையொரு பாகனாகவும், பின்னர் வைணவத்தில் மகாவிட்டுணுவாகவும், இலக்குமியாகவும் ஏற்றுக் கொண்டுள்ளதும் தெரியவருகின்றன.

சைவத்திலிருந்து வைணவம், சாக்தம், காணாபத்தியம், சௌமாரம் ஆகிய நான்கும் நான்கு கிளைகளாயின என முன்கண்டதும் நினைவுக் கொள்ளத்தக்கது.

# வானதி, ஆனந்தி, சீனாப், மேலான (சிந்து) நதி


H-2151A&B

எச்-2151எ,பி என்ற அடையாள எண்களுடைய வில்லையின் எ புறத்தின் ஓரெழுத்தும் பி புறத்தில் இரண்டு எழுத்துக்களும் பொறிக்கப்பெற்றுள்ளன. இந்த வில்லை இடமிருந்து வலமாக வா + ன + தி. **வானதி** எனப் படிக்கப்பெறுகிறது. (வானதி - கங்கை)

**தொல்வாச்சியம் : வானதி (எ) கங்கை**

இந்த முத்திரை இமயமலையில் உற்பத்தியாக கலிங்கசாகர் (எ) வங்கக் கடலில் சங்கமிக்கும் கங்கை நதியைக் குறிப்பிடுகிறது.


M-134a

எம்-134எ என்ற அடையாள முத்திரையில் நான்கு எழுத்துக்கள் பொறிக்கப்பெற்றுள்ளன. அவற்றுள் முதலாவது, இரண்டாவது ஆகிய இரண்டு எழுத்துக்கள் இணைந்துள்ளன. ஒத்தக் கொம்பன் (எ) ஒத்தக் கோடு நந்தியின் உருவமும், பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக (ஆ+ ன )+ ந் + தி. **ஆனந்தி** எனப் படிக்கப்பெறுகிறது. (ஆனந்தி - தாமிரபரணி, பார்வதிதேவி, மகிழ்ச்சியுடையவள், அரத்தை).

**தொல்வாச்சியம் : தாமிரபரணி, பார்வதிதேவி, மகிழ்ச்சியுடையவள், அரத்தை.**

இந்த முத்திரை மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகிக் கலிங்கசாகர் (எ) வங்கக் கடலில் சங்கமிக்கும் பொருநை (எ) தாமிரபரணி ஆற்றைக் குறிப்பிடுகிறது.



அடையாள எண்ணில்லாத வில்லையில் எட்டு எழுத்துக்களில் ஏழாவது, எட்டாவது ஆகிய இரண்டு எழுத்துக்கள் இணைந்தும், ஒத்தக்கொம்பன் (எ) ஒத்தக்கோடு நந்தியின் பெண்ணின உருவமும், பரம்மஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த வில்லை இடமிருந்து வலமாகப் பா +உ+ டு + இட் + ட +சீ + (னா+ ப்). பா உடு சீனாப் எனப் படிக்கப்பெறுகிறது. (பா - பரப்பு, தூய்மை, உடு -இவ்விடத்துக் கோட்டையைச் சுற்றியுள்ள ஆழமான நீர்நிலை (எ) அகழி. இட்ட - இட்ட. சீனாப் - நதியின் பெயர்.)

**தொல்வாச்சியம் : பரந்த அகழியை இட்ட சீனாப் (நதி).**

சீனாப் எனும் நதி இமயமலையின் மேற்குத் திசையிலிருந்து சந்தரா, பாகா ஆகிய உபநதிகளுடன் உருவாவதனால் (பொதுவாக 5,000 ஆண்டுகளுக்கும் முன் துவாபர யுகத்தில் நிகழ்ந்தாகக் கருதப்படும்) மகாபாரதம் இந்நதியைச் சந்தராபாகா எனக் குறிப்பிடுகிறது.

சீலம், இரவி, சத்லச் ஆகிய மூன்று நதிகள் இணைவதோடு பஞ்சநாடு எனுமிடத்தில் சிந்து நதியோடு கூடுகிறது. இருக்குவேதம் இந்தச் சீனாப் நதியை அசிகினி என்றும், அதர்வன வேதம், கிருட்டிணா நதி என்றும் கூறுகிறது.

இந்நதிகரையில் வரலாற்றுத் தொகுப்புக்கள் நிறைந்த மிகப்பழமையான அக்கனூர் கோட்டை ஒன்றும் இருந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

இந்த வில்லையின் வாயிலாக, 7,500 ஆண்டுகளுக்கும் முற்பட்ட சிந்து சமவெளி நகர நாகரிகக் காலத்தின் சில வரலாற்றுப் பதிவுகள் தெரியவருகின்றன.

முதலாவாக இமயமலையின் மேற்குத் திசையிலிருந்து உருவாகும் நதியின் பெயர் சீனாப். அந்நதி பெண்பால் பெயரிட்டழைப்பது ஒரு பழைமையான மரபு. அம்மரபு வேதகாலத்தில் அசிகினி என்றும், கிருட்டிணா என ஆண்பால் பெயரிடப் பெற்றுள்ளது.

இரண்டாவதாக, சிந்து சமவெளி நகர நாகரிக மக்கள் நதிக்கரைகளில் பாதுகாப்புக்காகக் கோட்டைகள் கட்டி வாழ்ந்துள்ளதையும், அக்கனூர் கோட்டையின் வரலாற்றுச் செய்தியையும் அறியமுடிகிறது.



அடையாள எண்ணில்லாத வில்லையில் பத்து எழுத்துக்களில் முதலாவது, இரண்டாவது ஆகிய இரண்டு எழுத்துக்கள் இணைந்தும், ஒத்தக்கொம்பன் (எ) ஒத்தக்கோடு நந்தியின் பெண்ணின உருவமும், பரம்மஞானக் குறியீடும் பொறிக்கப்பெற்றுள்ளன.

இந்த வில்லை இடமிருந்து வலமாக, பொ +தி + ப +ஞ்ச + சோ + யா + இட் + ட + ஆ எனப் படிக்கப்பெறுகிறது.

(பொதி - நிறைவு, அம்பலம், பருமன், மூட்டை, பஞ்ச -ஐந்து. சோ - உமையம்மை (எ) பார்வதிதேவி. யா -யாவை. இட்ட - இட்ட. ஆ - சிற்றுயிர், ஆகுக, ஆகுகை.)

**தொல்வாச்சியம் : அம்பலம் ஐந்தும் பார்வதிதேவி யாவையும் இட்டதாகுக.**


H-8a

குறிபிபு : சிந்து வெளியில் குறிப்பாகச் சீனாப், சட்லஜ், இரவி, சீலம், சிந்து ஆகிய ஐந்து நதிக் கரைகளில் **அம்பலங்கள் இருந்தாகக் கருதலாம்.**

எச்-8எ என்ற அடையாள எண்ணுடையதும் உடைந்த பகுதியைக் கொண்டதுமான முத்திரையில் 13 எழுத்துக்களும், ஒத்தக்கோடு நந்தியின் உருவத்துடன் பரமஞானக் குறியீடும் பொறிக்கப்பட்டுள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, சீ+ ணா + நீ + டு + ப + ர + மே + ன + மி + ட் + ட + தி + ங(கு). சீணா நீடு பரமேனம் இட்டதிங்கு. சீணா நீடு பரமேனம் இட்டது இங்கு எனப்பகுத்துப் படிக்கப்பெறுகிறது. (சீணா - அழிவில்லாத, நீடு - நிலத்திருக்கை, பரமேனம் - மேலான நதி, இட்டது - கொண்டது, இங்கு - இவ்விடம்.)

**தொல்வாச்சியம் : அழிவில்லாமல் நிலைத்திருக்கும் மேலான நதியைக் கொண்டது இவ்விடம்.**

குறிப்பு: இந்த முத்திரை, இமயமலை மீது படிந்துள்ள பனிப்படலங்கள் உருகிய நீர் நதிகளாக உருவாகிய சீனாப், சட்லஜ், இரவி, சீலம், சிந்து ஆகிய ஐந்து நதிகளும் வற்றாத (சீவநதிகள்) மேலான நதிகள் எனக் கூறுவதாகக் கருதலாம்.

# ஒற்றுமை மண்டலம்


M-1103a

சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் வரலாற்றுச் சான்றுகளில் ஒரே மாதிரியான நான்கு முத்திரைகளை உற்று நோக்கினால் எழுத்துக்கள், எண்கள் ஆகியவற்றில் சிலவேறுபாடுகளைக் காணமுடிகின்றன.

அந்நான்கு முத்திரைகளில், எம்-1103எ என்ற அடையாள எண்ணுடைய முதலாவது முத்திரையில் ஒன்று, ஆறு, பத்து ஆகிய மூன்று எண்களும், ஓர் ஆழிக் குறியீடும், பத்து எழுத்துக்களும், எருது (எ) காளையின் உருவமும் பொறிக்கப்பெற்றுள்ளன. அவற்றுள் **ருரூப** எனும் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது ஆகிய மூன்று எழுத்துக்களும், **லாலிலாலி** எனும் ஏழாவது, எட்டாவது, ஒன்பதாவது, பத்தாவது எழுத்துக்கள் (எருதின் கழுத்துப்பகுதியில்) இணைந்துள்ளன. எண் ஆறு **மே** எனும் முதலாவது எழுத்தினுள்யேயும், எண் பத்து **பா** எனும் ஆறாவது எழுத்தினுள்ளேயும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, ஒரு +ஆழி +(ஆறு + மே) (ரு + ரூ + ப) +ம் + (பத்து +பா) + (லா + லி + லா + லி). **ஒரு ஆழி ஆறு மேருருபம் பத்து பா லாலி லாலி** எனப் படிக்கப் பெறுகிறது.

(ஒரு- ஒற்றுமை (அ) ஒன்று என்பதைக் குறிக்மோர் அசைச் சொல். ஆழி- வட்டம் (எ) மண்டலம், அரசாணை, ஆணைச் சக்கரம். ஆறு - நதி, வழி, சமயம், பக்கம், அறம், பயன், நூல். பருரூபம் - மலை (அ) கடல் போன்ற உருவம். பத்து - ஓரெண், கடவுள். பா - பரப்பு, தூய்மை, பாட்டு. லாலி லாலி - தாலாட்டுப் பாடல்)

**தொல்வாச்சியம் : ஒற்றுமை மண்டலத்தின் அறம் மலை (அ) கடல் போன்ற உருவக் கடவுள் பாட்டு லாலி லாலி (எ) தாலாட்டு.**



இரண்டாவது முத்திரையில் **ஒன்று, ஐந்து, பத்து ஆகிய எண்களும்,** ஆழிக் குறியீடும் **பதினோர் எழுத்துக்களும்,** எருது (எ) காளையின் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் **ருரூப** எனும் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது ஆகிய மூன்று எழுத்துக்களும், **ட்ட ம்** எனும் ஐந்தாவது, ஆறாவது ஏழாவது எழுத்துக்களும், **லாலிலாலி** எனும் எட்டாவது, ஒன்பாதாவது, பத்தாவது, பதினோராது எழுத்துக்கள் (எருதின் கழுத்துப்பகுதியில்) இணைந்துள்ளன. எண் ஒன்று முதலாவதாகவும், எண் ஐந்து முதலாவது எழுத்தினுள்ளேயும், எண் பத்துதானது பா எனும் ஆறாவது எழுத்தினுள்ளேயும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, ஒரு +ஆழி +(ஐந்து + மே) (ரு + ரூ + பி) + (ட் +ட் + ம்) + (பத்து +பா) + (லா + லி + லா + லி). ஒரு ஆழி ஐந்து மேருருபிட்டம் பத்து பா லாலி லாலி. **ஒரு ஆழி ஐந்து மேருருப (இ)ட்டம் பத்து(ப்) பா லாலி லாலி.** எனப் படிக்கப் பெறுகிறது.

(ஒரு- ஒற்றுமை (அ) ஒன்று என்பதைக் குறிக்குமோர் அசைச் சொல். ஆழி- வட்டம் (எ) மண்டலம், அரசாணை, ஆணைச் சக்கரம். ஐந்து - ஓரெண். பருரூப - மலை (அ) கடல் போன்ற உருவ. இட்டம் - விருப்பம். பத்து - ஓரெண், கடவுள். பா - பரப்பு, தூய்மை, பாட்டு. லாலி லாலி - தாலாட்டு )

**தொல்வாச்சியம் : ஒற்றுமை மண்டலத்தின் ஐந்தும் மலை (அ) கடல் போன்ற உருவ விருப்பம் பத்துப் பாட்டு தாலாட்டு.** .

மூன்றாவது முத்திரையில் **ஒன்று, ஆறு, எட்டு ஆகிய எண்களும்,** ஆழிக் குறியீடும் **ஆறு எழுத்துக்களும்,** எருது (எ) காளையின் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளன.



அவற்றுள் **ருரூப** எனும் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்துள்ளன. எண் ஆறு முதலாவது எழுத்தினுள்ளேயும், எண் எட்டுப் பா எனும் ஆறாவது எழுத்தினுள்ளேயும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, ஒரு +ஆழி +(ஆறு + மே) (ரு + ரூ + ப) +ம் + பத்து +பா). **ஒரு ஆழி ஆறு மேருருபம் பத்து(ப்) பா** எனப் படிக்கப் பெறுகிறது.

(ஒரு- ஒற்றுமை (அ) ஒன்று என்பதைக் குறிக்குமோர் அசைச் சொல். ஆழி- வட்டம் (எ) மண்டலம், அரசாணை, ஆணைச் சக்கரம். ஆறு - நதி, வழி, சமயம், பக்கம், அறம், பயன். பருருபம் - மலை (அ) கடல் போன்ற உருவம் எட்டு - ஒரெண், கடவுள். பா - பரப்பு, தூய்மை, பாட்டு.)

**தொல்வாச்சியம் : ஒற்றுமை மண்டலத்தின் வழி மலை (அ) கடல் போன்ற உருவத்தின் பத்துப் பாட்டு.**



நான்காவது முத்திரையில் நான்கு எனும் மூன்று எண்களும், ஆழிக் குறியீடும், ஆறு எழுத்துக்களும், எருது (எ) காளையின் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் **ருருப** எனும் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்துள்ளன. எண் ஒன்று முதலிலும், எண் நான்கு மே எனும் முதலாவது எழுத்தினுள்ளேயும், மற்றொரு எண் நான்கு **'பே'** எனும் ஆறாவது எழுத்தினுள்ளேயும் உள்ளன.

இந்த முத்திரை இடமிருந்து வலமாக, ஒரு +ஆழி +(நான்கு+ மே) (ரு + ரு + ப) + மா) + (ண் + பே). ஒரு ஆழி நான்கு மேருருப மாண்பே எனப் படிக்கப் பெறுகிறது.

(ஒரு - ஒற்றுமை. ஆழி- - வட்டம் (எ) மண்டலம், அரசாணை, ஆணைச் சக்கரம். நான்கு - ஒரெண். பருருப - மலை (அ) கடல் போன்ற உருவ. மாண்பே- பெருமையே, தன்மையே அழகே, மாட்சிமையே)

**தொல்வாச்சியம் : ஒற்றுமை மண்டலம் நான்கும் மலை (அ) கடல் போன்ற உருவ மாட்சிமையே**

முன்கண்ட மூன்று முத்திரைகள் போல இந்த முத்திரையில் முதலில் ஒன்று என்பதைக் குறிக்குமோர் எழுத்து இருக்க வாய்ப்புண்டு எனக் கருதுவோமாயின் இந்த முத்திரையும் **ஒற்றுமை மண்டலம் நான்கும் மலை (அ) கடல் போன்ற உருவத்தின் மாட்சிமையே** எனக் கூறுகிறது.

குறிப்பு: சிந்து சமவெளி நகர நாகரிகச் சொற்களில் **பஞ்ச (ஐந்து)** என்ற சொல் அதிக அளவில் காணப்படுவதாலும், **பஞ்ச நாடு** என்ற பெயருடைய நாடு ஒன்று இருந்துள்ளதாலும், தமிழகத்தில் செம்பியன் கண்டியூரில் சண்முகநாதன் கண்டெடுத்த கற்கோடாரியில் **பஞ்ச** என்ற சொல் பொறிக்கப்பெற்றுள்ளதாலும், **ஐந்திணைகள்** பற்றித் தொல்காப்பியம் கூறுவதாலும், இந்நான்கு முத்திரைகளில் உள்ள **ஒற்றுமை மண்டலத்தின் அறம் தாலாட்டுப் பாட்டு, ஒற்றுமை மண்டலத்தின் ஐந்தும் மலை (அ) கடல் போன்ற உருவ விருப்பம், பத்துப் பாட்டு தாலாட்டு, ஒற்றுமை மண்டலத்தின் வழி மலை (அ) கடல் போன்ற உருவத்தின் பத்துப் பாட்டு., ஒற்றுமை மண்டலம் நான்கும் மலை (அ) கடல் போன்ற உருவத்தின் மாட்சிமையே** ஆகிய தொல்வாச்சியங்கள் மேலும் ஆய்வுக்குரியவை.

# தன்னுணர்தல் குறியீடுகள்



சிந்து சமவெளி நாகரிகக் குறியீடுகள்

இந்தியத் தொல்பொருள் துறை, தமிழகத் தொல்லியில் துறை, முனைவர் இராசன், ஆகியோரால் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் மேற்கொள்ளப்பட்ட தொல்பொருள் அகழாய்வுகளின் போது குறியீடுகளும், எழுத்துக்களும் கீறப்பட்டுள்ள பானை ஓடுகள் வெளிக்கொணரப் பெற்றுள்ளது. அவற்றுள் கீழடி, கொடுமணல், ஆதிச்சநல்லூர் குறியீடுகளில் ஒரே வகையான குறியீடு ஒன்றைக் காணமுடிகிறது. அக்குறியீடு சிந்து வெளியிலும் வெளிக்கொணரப் பெற்றுள்ளது.

கீழமண்டி-0090

கீழடி, கொடுமணல் குறியீடுகளின் மையத்தில் ஒரு மேல் நோக்கும் செங்குத்துக்கோடும், அதன் இருபுறங்களில் இரண்டு சாய்வு கோடுகளும், ஒரு பாம்பு போன்ற வளைந்து வளைந்து மேழெும் கோடும் ஒரே ஒரு புள்ளியில் சங்கமிக்கின்றன. அக்குறியீடு முதுமக்கட்டாழியின் (பானையின்) கழுத்துப் பகுதியிலும், அதன் மூடியிலும் கீறப்பெற்றுள்ளதைக் காணலாம்.

அவ்வாறு சங்கமிக்கும் புள்ளி இரு புருவங்களுக்கு இடையிலான **புருவமத்தி** என ஆதிச்சநல்லூர் குறியீடு குறிப்பிடுகிறது. செங்குத்துக்கோடு சூக்குமம் (சூட்சுமம்) நாடியையும், இரண்டு சாய்வு கோடுகள் இட, பிங்கள நாடிகளையும், வளைந்து வளைந்துள்ள கோடு மூலாதாரச் சக்கரத்திலிருந்து முதுகுத் தண்டின் சூக்குமம் நாடி வழியாக மேலெழுந்து புருவமத்தியை அடையும் குண்டலினி சக்தி என யோக சாத்திர நூல்கள் கூறுகின்றன.

அந்தப் புருவமத்தியை யோகமார்க்கத்தில் இரண்டு தாமரை இதழ்களைக் கொண்ட ஆறாவது சக்கரமான **ஆக்ஞா சக்கரம்** அதாவது ஆறாவது அறிவான மனம் **தன்னுணரும் மையம் (எ) உணர்தல் மையம்** என யோக சாத்திர நூல்கள் கூறுகின்றன.

அந்தத் தன்னுணரும் மையம் (எ) உணர்தல் மையத்திற்கு, நெற்றிக்குறி, அவிமுத்தம், குருசேத்திரம், **திரிகுடி, திரிவிடம், சிற்றம்பலம்** போன்ற பெயர்கள் எனப் பல்வேறு யோகசாத்திர நூல்கள் குறிப்பிடுகின்றன.

அப்பெயர்களில் குறிப்பாகச் **சிற்றம்பலம்** என்பது **புகழ், கல்வி, அறிவு, துணிவு, அழகு, வலிமை, வாழ்நாள், இளமை, பெருமை, நோயின்மை, வெற்றி, பொன், புகழ், நெல், நல்லூழ், நுகர்ச்சி** ஆகிய பதினாறு பேறுகளை அருளும் இடம் எனவும் கூறுகின்றன.

**அச்சிற்றம்பலத்தின்** சிறப்பைப் பற்றி, **"நெற்றிக்கு நேரே புருவத்து இடைவெளி உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடு மந்திரம் பற்றுக்குப் பற்றாற் பரமன் இருந்திடம் சிற்றம்பலம் என்று சேர்த்து கொண்டேனே"**–எனத் திருமந்திரம் (2770) கூறுகிறது.

பொருள்: மூக்கின் நுனிக்கு நேராக இருபுருவங்களின் இடைவெளியின் மத்தியில் ஓம் எனும் மந்திரத்தை உச்சரித்து யோகமார்க்கத்தில் மனதை ஒடுங்கச் செய்தால் ஞானஒளி வெளிப்படும். அகப்பற்றால் பரமன் இருப்பிடமான சிற்றம்பலம் சென்றடையும் என்பதைத் **தன்னுணர்ந்து** அத்துடன் இணைத்துக் கொண்டேனே எனத் திருமூலர் பேரானந்தப் பரவசநிலையில் பாடியுள்ளார். இந்த உணர்தல் மையத்தில் கவனம் செலுத்துபவர் கடந்த கால கர்மாக்கள் அனைத்தையும் அழிக்கப்பெறுவர். இந்த மையத்தில் பயிற்சி செய்பவர் ஒரு சீவ முக்தர் (வாழும் போதே பிறப்பு -இறப்பு என்ற சுழற்சியிலிருந்து விடுபட்டவர். யோகியரும், ஞானியரும்) ஓம் தீர்க்கப் பிரணவ மந்திரத்தை உச்சரிப்பர் என்பர்.

மேற்கண்டவற்றின் அடிப்படையில் தமிழர்கள் யோக மார்க்கத்தைக் கடைபிடித்து மனதை இருபுருவ மத்தியில் ஒடுங்கச் செய்து மனஅழுத்தும், மனஉலைச்சல் போன்ற மனநோய்கள் ஏதுமில்லாமல் சீவமுக்தர்களாக வாழ்ந்துள்ளனர் என்பது தெரியவருகிறது, இத்தன்னுணர்தல் (எ) **உணர்தல் மையம்** என்பதே **திரிகுடி, திருவிடம்** ஆகிய குறியீடுகள்.

அக்குறியீடுகளே தமிழகப் பாறை ஓவியங்களில் கருஞ்சிவப்பு, வெள்ளை ஆகிய நிறங்களில் வரையப்பட்டுள்ளதும், பானை ஓடுகளில் கீறியாற்றப்பெற்றுள்ளதும், பாறைகளின் மேற்பரப்பில் கோட்டுருவங்களாகப் பொறிக்கப் பெற்றுள்ளதுமாகும். சிந்து சமவெளி நகர நாகரித்தின் பகுதிகளான **அறப்பா, அமரி, காளிபங்கன்** போன்ற இடங்களில் மேற்கொள்ளப்பெற்ற தொல்பொருள் அகழாய்வுகளின் போது வெளிக்கொணரப்பட்ட பானை ஓடுகளிலும் கீறப்பட்டுள்ளதும் அதன் சிறப்புமாகும். அச்சிறப்பையே, **" தன்னையறிதல் அறிவுதனை அறிதல் பின்னைப் பிறப்பில்லை வீடு - என்றார் ஔவை பிராட்டியார்".**

# முன்னாய்வுச் சுருக்கம்

முன்னொரு காலத்தில் சிந்து சமவெளி முதல் குமரி வரை பேசப் பெற்ற ஒரே மொழி செந்தமிழ் மொழி என இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் எனும் தமிழ் மன்னன் புகழ்பாடும் தமிழ்ச் சங்ககால இலக்கிய நூல்களில் ஒன்றான பதிற்றுப்பத்து 11ஆம் பாடலடிகள் (20-25) குறிப்பிடுகின்றன.

பலர்புகழ் செல்வம் இனிது கண்டிகுமே-

கவிர்ததை சிலம்பில் துஞ்சும் கவரி

பரந்துஇலங்கு அருவியொடு நரந்தம் கனவும்,

ஆரியர் துவன்றிய, பேர்இசை இமயம்

தென் அம் குமரியோடு ஆயிடை

மன்மீக் கூறுநர் மறம்தபக் கடந்தே

அவ்வாறு பேசப்பெற்றும் எழுதப்பெற்றதான செந்தமிழ் மொழியின் எழுத்துக்கள் முதலில் குறியீடுகளாக அதாவது படச் சொற்களாகவும், பின்னர் அப்படச் சொற்கள் எழுத்துருவங்கள் பெற்றுமுள்ளன. அதனைத் தொடர்ந்து அப்படச் சொற்களும் எழுத்துருவங்களும் கலந்த சொற்களாக அதாவது ஓரடி தொல்வாச்சியங்களுமாயின.

அவ்வாறு ஓரடி தொல்வாச்சியங்களாக எழுதப்பெற்றுள்ளதற்கு ஒரு சான்றாக, சிந்து சமவெளி நகர நாகரிகக் காலத்தில் விருச்சி கூறுதலில் முன் கண்ட எம்-482எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **சுவ அத்தி சீ பருள்** என எழுதப்பெற்றுள்ளதைச் **சுவத்தி சீ பொருள்** எனப் படிக்கப்பெற்றதைச் சுட்டிக்காட்டலாம்.

அவற்றுள் **சீ** என்ற ஓரெழுத்துச் சொல் ஒரு சீப்பு வடிவமாகவே தொடர்ந்துள்ளது. அவ்வடிவம் **திரு** என்பதைத் **திரு அன்பன்** எனப் படிக்கப்பெற்ற ஒரே ஒரு முத்திரையின் வாயிலாக அறியமுடிகிறது.

அதே போல **அவன்** என்பதைக் குறிக்கும் **அன்** என்ற சொல் ஒரு குச்சி வடிவ மனித உருவமாகவே அதாவது ஒரு படச் சொல்லாகவே தொடர்ந்துள்ளது.

சைவ சமயத்தின் முக்கிய கோட்பாடான **பசு - பாசம் - பதி** எனும் முப்பொருள் உண்மையைக் குறிப்பிடும் மூன்று குறியீடுகள் தமிழகத்தில் கொடுமணலில் இராசன் அவர்களால் வெளிக்கொணரப்பெற்ற **கே.டி.எல்- ஜி 119 என்ற அடையாள எண்ணுடைய பனை ஓடு ஒன்றில் கீறப்பெற்றுள்ளது** குறிபிடத்தக்கது.

அம்மூன்று குறியீடுகளில் **பசு** எனும் உயிரைக் குறிக்கும் குறியீடுகளை மதுரை மாவட்டம் கொங்கர் புளியங்குளம் இரண்டாவது, மூன்றாவது ஆகிய இரண்டு (பொ.ஆ.மு. 2ஆம் நூற்றாண்டைச் சார்ந்தத்) தமிழிக் கல்வெட்டுக்களிலும், விக்கிரமங்கலம், அழகர் மலை தமிழிக் கல்வெட்டுக்களிலும் காணமுடிகிறது.

**பாசம் (அ) பந்தம்** என்பதைக் குறிக்கும் சிந்து சமவெளி குறியீடு தற்போதைய பெரம்பலூர் மாவட்டம் இலால்குடி எனும் திருத்தவத்துறை எனும் ஊருக்கு அருகாமையிலுள்ள சாத்தமங்கலம் திரு மகாவிட்டுணு ஆலயத்தில் பிற்காலத்தைச் சேர்ந்த கோட்டுருவமாகக் காணமுடிகிறது.

**பதி** என்பதைக் குறிக்கும் சிந்து சமவெளி குறியீடு மதுரை மாவட்டம் கொங்கர் புளியங்குளம் பொ.ஆ.மு. 2ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இரண்டாவது, மூன்றாவது ஆகிய இரண்டு தமிழிக் கல்வெட்டுக்களிலும், தமிழகத் திருக்கோயில்களிலும் பிற்காலத்தைச் சேர்ந்த கோட்டுருவாகவும் பொறிக்கப்பெற்றுள்ளன.

பொன்னிறமான பசு எனும் உயிரின் தலைவன் என்பதைப் **பொன்னுயிர் கோன்** எனக் கொங்கர் புளியங்குளம் தமிழிக் கல்வெட்டுக் கூறுவதில் உயிரின் நிறம் பொன்னிறம் என்பதைச் சிந்து சமவெளி (அறப்பா) எச்-2548எ என்ற அடையாள எண்ணுடைய வில்லை உறுதி செய்கிறது.

சிந்து சமவெளி நகர நாகரிகப் பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் குறிப்பாகப் **பரம் (அ) பரமே** என்ற சொல்லிலுள்ள ப எனும் வல்லின எழுத்தும், ர எனும் இடையின எழுத்தும், **ம் (அ)** மே எனும் மெல்லின எழுத்துமுள்ளன. அம்மூன்று எழுத்துக்களில் **பகர வல்லின எழுத்து மொழிக்கு முதலாகவும், ரகர இடையின எழுத்து மொழிக்கு இடையிலும், மகர மெல்லின எழுத்து மொழிக்கு ஈராகவும் அதாவது முடிவாகவும்** வரும் எனும் செந்தமிழ்த் தொல்லிலக்கணம் முறைப்படி அமைந்துள்ளது.

பரம் என்ற சொல் தமிழகத்தில் சாணூர் என்னுமொரு இடத்தில் வெளிக்கொணரப் பெற்ற பானை ஓட்டில் கீறப்பெற்றுள்ளதைப் பகர , மகர எழுத்துக்களின் வடிவமைப்புப் பற்றித் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் **உட்பெறும் புள்ளி உருவாகுமே** எனும் நூற்பா -14 கூறுவதுடன் ஒப்பிட்டு அவற்றின் வடிவத்தை உறுதிசெய்கிறது.

அரண், அரன் ஆகிய இரண்டு பெயர்ச் சொற்களில் **ரகர** இடையினம் மொழிக்கு முதலாகத் துவங்குகிறது. ப-21எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **ணகர** மெல்லினம் மொழிக்கு முதலாகத் துவங்குகிறது. எச்-645எ என்ற அடையாள எண்ணுடைய முத்திரையில் **யகர** இடையினம் மொழிக்கு முதலாகத் துவங்குகிறது. பசு இட்ட **பதியான்** எனவும் **யாபனன் பனமே** எனவும், அட்ட அட்ட **யான்**, அட்ட அட்ட **யானருள்** எனவும் படிக்கப்பெற்றவற்றில் **ஆவோ டல்லது யகர முதலாது** (நூற்பா 65) என்பதற்கிணங்க படிக்கப்பெற்றது போன்ற மேலும் பல செந்தமிழ் இலக்கணச் சான்றுகளுண்டு.

**சீ புவனேசுவரி இட்ட உஞ்சல் பாட்டு, சீ புவனேசுவரன் இட்ட உஞ்சல் பாட்டு** எனப்படிக்கப்பெற்ற வில்லைகள் இரண்டில் **உஞ்சல்** என்ற சொல்லிலுள்ள **ல்** என்ற எழுத்திற்குப் பதிலாக **ள்** என்ற எழுத்துப் பொறிக்கப்பெற்றுள்ளது. இது போன்ற எழுத்துப்பிழைகள் சிலவற்றைக் காணமுடிந்தாலும், **அ** எனும் உயிரும் **ன்** எனும் மெய்யும் கூடும் போது **ன** எனும் உயிர்மெய்ப் பிறக்கும் என்பதற்கோர் சான்றாக, **எம்-1429எ** வில்லையை அன்புள்ள பாசனருள் என இலக்கண முறைப்படி படிக்கும்படி பதிவிடப்பெற்றுள்ளதைச் சுட்டிக்காட்டலாம். செந்தமிழ் மொழிக்கே உரித்தான **சிறப்பு ழகரம்** ஏணிமரத்தின் வடிவிலுள்ளது சிந்து சமவெளி எழுத்துக்களின் தனிச் சிறப்பு.

மேற்கண்ட எழுத்து முறையை நன்கு அறிந்ததையும், அவற்றிலுள்ள சில குறைபாடுகளை முறைப்படுத்தியதாகவும், தொல்காப்பியர் பெருமான் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் சிறப்புப் பாயிரத்தில் கீழ்க்கண்டவாறு பதிவிட்டுள்ளார்.

செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தோடு முந்நூல் கண்டு முறைப்பட எண்ணிப் புலந்தொகுத்தோனே போக்கறு பனுவல் எனும் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் சிறப்புப் பாயிரம் அடிகளுக்கு, தமிழ் மொழியினைக் கூறும் நன்மக்களால் வழங்கும் **வழக்கும் செய்யுளும்** ஆகிய இருகாரணத்தானும் எழுத்திலக்கணத்தையும், சொல்லிலக்கணத்தையும், பொருளிலக்கணத்தையும் ஆராய்ந்து. அவ்வாராய்ச்சியிற் குறைபாடுகளுடையவற்றிற்குச் செந்தமிழினது இயல்பு பொருந்தின செந்தமிழ் நிலத்து வழக்கோடு முதல் நூல்களிற் சொன்னவற்றினைக் கண்டு அவ்விலக்கணம் முறைப்படி ஆராய்ந்து எனத் தொல்காப்பியர் பொருள் கூறினார் என்பர். எனவே தொல்காப்பியம் இயற்றப்பெற்றக் காலம் 7,000 ஆண்டுகளுக்கும் முன் என்பது உறுதியாகிறது.

சமசுகிருதம் மொழியில் **ப்ரம்மம்** போன்ற ஏராளமான சொற்களில் மெய்யெழுத்தோடு துவங்குகின்றன. **உயிர்மெய் அல்லன மொழிமுதல் ஆகா** (தொல். எ. நூற்பா- 60) என்பது இலக்கணவிதி. அதன்படி சிந்து சமவெளி நகர நாகரிகத் தொல்வாச்சியங்களில் எந்தவொரு வாச்சியமும் மெய்யெழுத்தை முதலாகக் கொண்டதில்லை என்பதும் தெரியவருகிறது. எனவே, சிந்து சமவெளி நகர நாகரிக மக்களின் மொழி சமசுகிருதமல்ல என்பதும், அம்மொழி செந்தமிழ் மொழியே என்பதும் உறுதியாகிறது.

# முடிவுரை

ஏ! சிந்து சமவெளிச் செந்தமிழ் மொழியே! என்ற தலைப்புடைய இந்நூலின் முதலாம் பாகத்தில் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய மூன்று பொருட்களை அடிப்படையாகக் கொண்டு 7,500 ஆண்டுகளுக்கும் முற்பட்டதும், கடந்ததொரு நூறு ஆண்டுகளுக்கு மேலாகப் படித்துப் பொருளறியாத நிலையிலுள்ளதுமான சிந்து சமவெளி நகர நாகரிகத்தைச் சார்ந்த பானை ஓடுகள், வில்லைகள், முத்திரைகள் ஆகியவற்றில் பதிவிடப்பெற்றுள்ள தொல்வாச்சியங்களைப் படித்துத் தமிழ் அகராதியின் உதவியுடன் பொருளறியப்பெற்றுள்ளன.

திருக்குறள், திருமந்திரம், சிவஞான போதம், சிவஞான சித்தியார் சுபபக்கம் பரபக்கம் போன்ற மேலும் சில நூல்களின் பதிவுகளை எடுத்துக்காட்டிச் சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் மொழி செந்தமிழ் மொழியே என்பதைப் பல்வேறு வரலாற்று ஆதாரச் சான்றுகளுடன் ஒப்பிட்டுப் பழந்தமிழகத்திற்கும் சிந்து சமவெளிக்கும் இடையிலான வரலாறு, பண்பாடு தொடர்புகள் தொகுத்தளிக்கப்பெற்றுள்ளன.

அவ்வாறு தொகுத்தளிக்கப் பெற்றுள்ளவற்றில் முக்கியமாக, செந்தமிழ் மொழியின் எழுத்துக்களின் வகை, எண்ணிக்கை ஆகியவற்றின் மூலம் பரவெளியிலுள்ள பரமாணு என்பது பதிவு செய்யப்பெற்றுள்ளது.

அவ்வெழுத்துக்கள் சங்குத் தாபனம் எனும் எண் திசையறிதல், வியாபித்தில் முறையில் வெளிப்பட்ட எட்டெட்டு அறுபத்திநான்கு கூறுகளைக் கொண்ட மாண்டுக வரைபடத்தின் அதாவது பிரபஞ்ச குறியீட்டின் நடுநாயகமாக உள்ள மகா பிதா வரைபடத்திலிருந்து ஒளியும், ஒலியும் உடையதாகக் கட்புலனுக்கு நன்கு புலனாகும் வகையில் குறியீடுகளாக அதாவது படச்சொற்களாகவெளிப்பட்டவை என விவரிக்கப்பெற்றுள்ளன.

படச்சொற்களாக வெளிப்பட்டவையே பின்னர் ஒலியும், ஒளியுமுடைய செந்தமிழ்த் தொல்லெழுத்துக்களாகவும் தொல்வாச்சியங்களாகவும் பரிணாம வளர்ச்சியடைந்துள்ளன என்பது எடுத்துக்காட்டப்பெற்றுள்ளன.

பன்னெடுங்காலமாக ஒற்றுமை மண்டலமாக விளங்கிய பண்டைய இந்தியத் திருநாட்டில் வாழ்ந்த பெருங்குடி மக்கள் தங்களைக் காண்டாமிருகம், எருமை மாடு, யானை, புலி, வரையாடு ஆகிய ஐந்து மிருகங்களை அடையாளச் சின்னமாகக் கொண்டு எந்தவிதமான கருத்து வேறுபாடுகள் இல்லாமலும், அமைதியாகவும், சகோதரத் தத்துவத்துடன் வாழ்ந்துள்ளனர்.

பசுபதி எனும் சிவபெருமானைத் தலைவனாக ஏற்றுக் கொண்டு சைவ சமயத்தின் ஓரங்கமான யோகமார்க்கத்தைக் கடைபிடித்துச் சீவமுத்தியும், ஆறுவிதமான கர்மாக்களை எந்தவிதமான குற்றம் குறையும் இன்றி செய்து முடித்துக் கர்மமுத்தியும், இறுதியில் இறைநிலையையும் அடைந்துள்ளனர் என்பதைச் சர் ஜான் மார்சல் குறிப்பிட்டுள்ளதைச் சுட்டிக்காட்டலாம்.

'Among the many revelations that Mohenjo-Dara and Harappa have had in store for us, none perhaps is more remarkable than this discovery that Saivism has a history going back to the chalcolithic age or perhaps even further still and it thus takes its place as the most ancient living faith in the world.' – Sir John Marshall in his preface to Mohenjo-Daro and the Indus civilization. vol.1, p.vii.

மொழிபெயர்ப்பு: மோஹென்ஜோ-தாரா மற்றும் அறப்பா நமக்குக் காட்டியிருக்கும் பல வெளிப்பாடுகளில், சைவ மதம் கல்கோலிதிக் யுகம் ( புதியகற்காலம் (அ) செப்பு யுகம்) அல்லது அதற்கும் மேலான வரலாற்றைக் கொண்டுள்ளது.

இதனால் அது உலகின் மிகப்பழமையான வாழும் நம்பிக்கையாக அதன் இடத்தைப் பிடித்துள்ளது என்ற இந்தக் கண்டு பிடிப்பைவிட வேறு எதுவும் இல்லை என்பதும் குறிப்பிடத்தக்கது - சர் ஜான் மார்ஷல் மோஹென்ஜோ-தாரா மற்றும் சிந்து நாகரிகம் முன்னுரை (தொகுதி-01.ப.7.).

பண்டைய இந்தியத் திருநாட்டின் வரலாறு மற்றும் கலாச்சாரம் மட்டுமின்றி செந்தமிழ் மொழியின் சிறப்பையும், சைவ சமயத்தின் சிறப்பை (எம்-304எ என்ற முத்திரையை) **பசுபதி முத்திரை** என உலகுக்கு உணர்த்திய பெருமை, சர் ஜான் மார்ஷல் அவர்களுக்கு மட்டுமே உண்டு.

தமிழகத்தின் தலைநகரான சென்னை மாநகரில் சர் ஜான் மார்ஷல் அவர்களது திருவுருவச் சிலையை நிறுவிய பெருமை தமிழக அரசுக்கு மட்டுமே உண்டு என்றாலது மிகையாகாது.



H-645a

எச் 645எ எனும் அடையாள எண்ணுடைய முத்திரையில் ஏழு எழுத்துக்கள் பொறிக்கப்-பெற்றுள்ளன. மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்துள்ளன. ஆறாவது, ஏழாவது ஆகிய மூன்று எழுத்துக்கள் இணைந்துள்ளன. இந்த முத்திரை இடமிருந்து வலமாக, யா + ப + ன + ன் + ப + ன + மே. **யாபனன் பனமே** எனப் படிக்கப் பெறுகிறது. (யாபனன் - பொழுதுபோக்குபவன், தாமதிப்பவன், இகழ்பவன் பனமே - பருமையே, செவ்வன்மையின்மையே (எ) நேர்மையில்லாதவனே.)

**தொல்வாச்சியம் : இகழ்பவன் நேர்மையில்லாதவனே.**

பொ.ஆ.மு. 5,500 முதல் பொ.ஆ.மு. 1,500 வரை (4,000 ஆண்டுகள்) ஒற்றுமை மண்டலமாகத் திகழ்ந்த சிந்து சமவெளி நகர நாகரிகப்பகுதியில் வாழ்ந்த பழம்பெருங்குடி மக்கள் அறிந்ததை அறிந்த பிறதேசத்தவர், வருங்காலத்தில் அவற்றை யாரும் அறியாதபடி மறைக்கப்பட்ட உண்மைகள் உள்ளது உள்ளபடியே இந்நூலின் வாயிலாகத் தமிழ்க் கூறும் நல்லுலகம் அறியும் வகையில் தரப்பெற்றுள்ளன.

சிந்து சமவெளி நகர நாகரிகத்தின் மொழி செந்தமிழ் மொழி என்ற உண்மையை மறைக்க முயற்சி செய்தோரும், செந்தமிழ் மொழி சமசுகிருதம் மொழியிலிருந்து தோன்றியதாகப் பொய்யுரைப்போரும், செந்தமிழ் மொழி ஒரு காட்டுமிராண்டி மொழி என்றோரும், தமிழ் மொழி கீழ்த்தரமான மொழி என இகழ்ந்தோரும் நேர்மையில்லாதவரே என்பது எமது தனிப்பட்டக் கருத்தாகும்.

செந்தமிழ் மொழியின் ஒவ்வொரு சொல்லுக்கும் ஒன்றுக்கும் மேற்பட்ட பொருளுண்டு. எனவே இந்நூலை ஒரு கருதுகோளாகக் கொண்டு சிந்து சமவெளி தொல்வாச்சியங்களை மறுஆய்வு செய்வதற்கு வாய்ப்புக்கள் அதிகம் உள்ளன.

சிந்து சமவெளி தொல்வாச்சியங்களை மறுஆய்வு செய்வது அறிவியலையும் மெய்யியலையும் இணைக்குமொரு பாலத்தின் கட்டுமானப் பணிக்கு ஒப்பாகும். அப்பணியை வருங்காலச் சந்ததியர் விருப்பு, வெறுப்பின்றி, பொறுப்போடு தொடரவேண்டும் என்பது அடியேனின் தாழ்மையான வேண்டுகோளாகும்.

சிந்து சமவெளி நகர நாகரிகப்பகுதியில் வாழ்ந்த பழம்பெருங்குடி மக்கள் அறிந்தவையும், அவர்களால் அறிவிக்கப் பெற்ற அகப்புற ஒழுக்கங்கள் பற்றிய உரிப்பொருளை இந்நூலின் இரண்டாம் பாகத்தில் காணலாம்.

# தற்சிறப்புப்பாயிரம்

பஞ்சநதம் வடக்கே பொருநை நதி தெற்கே
பஞ்சநதி இடையே வைகை நதி அதனடுத்தே
முப்பஃது தமிழ் எழுத்தொலி செப்பியதிங்கே
ஐந்தியல் நெறியில் எழுத்தொளி கண்டதிங்கே - என (4)

ஒலியும் ஒளியும் பெற்ற தமிழ்மொழி என்பதனால்
தொல்தமிழர் அருளிய தொல்வாச்சியமெனும் பேரிட்டனன்
வடமொழி சாரா செந்தமிழ் அமுதவெழுத்துணர்வால்
பெருவெழுத்தின் புகழைப் போற்றினன். (8)

தொல்லோர் அறிவித்த தொல்லறியுணர்வால்
சிறப்பு ழகரத்தை ஏணிமரமென அடையாளம் கண்டனன்
ஐயாறப்பனே அறப்பன் எனும் சொல்லறிவால்
அம்மையப்பனை சோ சி என மொழிந்தனன். (12)

இறையடியார்க்கு அடியேன் எனும் சிறப்புணர்வால்
சிவனடியாரைத் திரு அன்பனெனச் சிறப்பிக்கக் கண்டனன்
ஆசில் ஐந்து குற்றெழுத்தின் அன்பினருளுணர்வால்
சிவயநம எனச் செவ்வாயால் முணுமுணுக்கச் செய்தனன். (16)

முப்பொருள் உண்மை உணர்த்திய முன்னோர் அருளால்
பசு இட்ட பதியான் என இவ்வேட்டில் பதிவிட்டனன்
பதியின் போக, கோர யோக மும்முகங்களைக் கண்டதனால்
அரனின் புகழ் பாரெங்கும் ஓங்க அறைந்தனன். (20)

ஏழுதலைமுறைத் தலைவன் சீயோன் எனும் உண்மையால்
சிவனும் சீவனும் ஒன்றே சோகமென உணர்த்தினன்
சிரம் தாழ இருகரம் குவியும் பழந்தமிழர் மரபால்
பொய்யுரைத்த பொய்யரை மெய்யுரை வைத்தனன் (24)

திருசிரபுரம் கீழக்குறிச்சி நல்லம்மாள் மருதமுத்து வழிவந்தோன்
வாலாம்பாள் இலக்குமணன் மகன் தனசு மூலத்தில் பிறந்தோன்
பிச்சையூர் பிச்சாண்டார் சன்னதியில் சந்திராவை மணந்தோன்
சுபாசு சந்திரபோசு எனும் பெயரோன் ஆடவல்லான் அருளாலே (28).

(ஐந்தியல் நெறி - மூலம், காலம், கோலம், சீலம், ஞாலம். பெருவெழுத்து - சி, தொல்வாச்சியம் - தொன்மைகள் சொல்லப்படத்தக்கவை.)

# துணை நூல்கள்


01. Asko Parpola, Pande B.M. and Petteri Koskikallio 2019,**Corpus of Indus Seals & inscriptions Vol.3.2,** Shahr-1, Mundigak, Mehrgarh, Nausharo, Sibri, Dauda -Dumb, Chanhu -dara, Ahar, Balathal, Gilund, Kalibangan, Rojodi. Suomalaimen Tiedeakatemia, Finland.

02. Asko Parpola,Pande B.M. and Petteri Koskikallio 2010,**Corpus of Indus Seals & inscriptions Vol.3.1, New material, untraced objects and collection made outside India andPakistan.** Suomalaimen Tiedeakatemia, Finland.

03. Asko Parpola & Sayad Ghulam Mustafa Shah 1991, **Corpus of Indus Seals & inscriptions Vol.2, collections in Pakistan,** Suomalaimen Tiedeakatemia, Finland.

04. Asko Parpola & Jagat Pati Joshi 1987,**Corpus of Indus Seals & inscriptions Vol.1, collections in India,** Suomalaimen Tiedeakatemia, Finland.

05. Balakrishnan. R., 2012, **The High-West; Low-East Dichotomy of Indus Cities: A Dravidian Paradigm**, Indus Research Centre, Rosa Muthiah Library, Chennai-113.

06 Burno Dagens> 1985, Mayamata, An Indian tresise of housing architecture and iconography> Sitaram Bharata insititute of science& research, New Delhi.

07. Hunter. G.R.,1934, **The Script of Harappa and Mohenjo -daro and its connection with other Scripts**, Kegan Paul, Trench,Trubner & Co.ltd. London.

08. Iyravatham Mahadevan, 1977, **Concordance of The Indus Scripts- Texts &Tables**. Archaeological Survey of India, New Delhi.

09. Jagdev Singh,1993, **Kangra the Katoch Saga**, Rachana Publication, Himachal Pradesh.

10. Jayakaran. S.C., The Land and Myth of Kumari Kandam, Indian Folklore Research Jounel, vol.1. No.4. 2004: 94-109, National Folklore Support centre.

11. SubashChandira Bose. T.L.,Veerasekaran.TM R. &Dr.Lakshmana Perumal. M., 2016,**The Kilzhvalai Rock Art**, Published by: A Center for Ultimate Studies, Tiruchirapalli-1.

12. SubashChandira Bose.T.L.. Er.Anitha Kumar, Pandurangan. M., Dr.Ramkumar.V., Veerasekaran.TM R., 2018, **Ancient Thamizh-The Faculty of Harappan Symbols and Scripts,** A Center for Ultimate Studies, Tiruchirapalli.

13. Swami Sivananda, 1991, **Kundalini Yoga**, The Divine Life Society, Himalayas.

14. Rajan. K., 2015, **Early Writing System,** : Pandya Nadu Center for Historical Research, Madurai -10.

15. Vettam Mani, 1979, **Puraanic Encyclopedia**, Motilal Banarasidas, Delhi.

16. ஆறுமுக நாவலர், 2006, **சூடாமணி நிகண்டு,** கோல்டன் அச்சகம், சென்னை.

17. இளம்பூரணனார் உரை, 2005, **தொல்காப்பியம்** - எழுத்ததிகாரம், சாரதா பதிப்பகம், சென்னை.

18. கோவிலூர் மடாலயம், 2003, **அகநானூறு,** கோவிலூர் மடாலயம், கோவிலூர்.

19. கோவிலூர் மடாலயம், 2003, **புறநானூறு,** கோவிலூர் மடாலயம், கோவிலூர்.

20. கோவிந்தராசனார்.எஸ். 1991, **திருவையாறுப் புராணம்,** சரசுவதி மகால், தஞ்சை.

21. சட்டாம்பி சுவாமிகள், 2015, **ஆதி மொழி,** வித்தயாதிராஜ தர்ம சாலை, சென்னை.

22. சபாஇரத்தினம். எஸ்.பி. 1997, **மாயன் ஐந்திறம்,** வாஸ்து புருடன் வெளியீடு, சென்னை-23

23. சுப்ரமணியன். எஸ்.வி. 1999,**மெய்யப்பன் தமிழ் அகராதி,** மாணிக்கவாசகர் பதிப்பகம்,சென்னை.

24. சிவத்தியாநாதந்த மகரிசி, 1937, **இருக்குவேத சம்கித்தை** சாது அச்சகம், சென்னை.

25. சுபாஸ் சந்திர போஸ். தி.லெ., வை. இராம்குமார், இராவீசேகரன்,2020, **சிந்து சமவெளி நாகரிக முத்திரைகளும் பழந்தமிழ்க் குறியீடுகளும் எழுத்துக்களும்,** தொ(ல்)லியல் ஆய்வு மையம், திருச்சி-01.

26. சுபாஸ் சந்திர போஸ்.தி.லெ.,சு.சந்திரா,அனிதாகுமார்,மா.பாண்டுரெங்கன்,2019, **சிந்து சமவெளி நாகரிக முத்திரைகள் கூறும் சிவபெருமான் மகிமைகள்,** தொ(ல்)லியல் ஆய்வு மையம், திருச்சி-01.

27. சுபாஸ் சந்திர போஸ். தி.லெ., 2022, **சிந்து சமவெளி நாகரிக முத்திரைகளில் செந்தமிழ்த் தொல்லிலணக்கண இலக்கியச் சுவடுகள்,** தொ(ல்)லியல் ஆய்வு மையம், திருச்சி-01.

28. சுபாஸ் சந்திர போஸ். தி.லெ., 2020, **சிந்து சமவெளி பழந்தமிழியல் உயிருரு இலக்கணம்,** தொ(ல்)லியல் ஆய்வு மையம், திருச்சி-01.

29. சுபாஸ் சந்திர போஸ். தி.லெ., 2020, **ஏ! செந்தமிழ் எழுத்தே!** தொ(ல்)லியல் ஆய்வு மையம், திருச்சி-01.

30. சுவாமி விவேகானந்தர், 1902, **ஞானயோகம்,** அத்துவைத ஆசரமம், கல்கத்தா-14

31. ஞா.மாணிக்கவாசகன், 2013, **திருமந்திரம்,** உமா பதிப்பகம், சென்னை.

32. சிரிமத் சுவாமி சித்பானந்தார், **திருவாசகம்,** 2013, இராமகிருட்டிண தபோவனம், திருச்சி.

33. சிவஞான சுவாமிகள், 1940, **சிவஞான சித்தியார் சுபபக்கம்,** சைவசித்தாந்த மகாசமாஜம், சென்னை.

34. பவானந்தன் பிள்ளை.ச., 1912, **பேரகத்தியத் திரட்டு** (மூலமும் உரையும்). தி.எஸ்.பி.சி.கே. பிரஸ், வேப்பேரி. சென்னை.

35. பழ.முத்தப்பன், 2003, **சிவஞான சித்தியார் பரபக்கம்,** சிரீ அகோர சிவாச்சியார் டிரஸ்ட், சென்னை.

36. மணக்குடவர் உரை, 2004, **திருக்குறள்,** சாரதா பதிப்பகம், இராயப்பேட்டை, சென்னை.

37. முரளி.வி.எஸ்., 2008ப, **பன்னிருதிருமுறை** (1-6) மூலமும் உரையும், சாத்ரா பதிப்பகம், சென்னை.

38. வில்வபதி. கோ., 2003, **நன்னூல்,** பழனியப்பா பிரதர்ஸ், சென்னை -14.





உன்னை யறியேன் உன்னெழுத்தும் மொழியு மறியேன்
உள்ளங் கவர்கள்வ! அதுபெரு வெழுத்தென் றுணர்த்தி
உரைத்தா யதுசிந்து தமிழ்மொழி யென்றுன் னடியேன்
உதிர்தேன் தொல்வாச் சியமென் றுனதரு ளாலே!







விலை: 1000/=